உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிதம்பரபுராணம்.

தில்லைவாழந்தணருள் ஒருவரும் திருக்கைலாசபரம்பரைச்
சைவசித்தாந்த குரவர்களுள் ஒருவருமாகிய
கொற்றவன்குடி
உமாபதிசிவாசாரியர்
மாணாக்கர்பரம்பரையிலுள்ள ஒருவர்
அருளிச்செய்தது.

இஃது
யாழ்ப்பாணத்து நல்லூர்
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள்
மாணாக்கர்களுள் ஒருவராகிய
சிதம்பரம் உபாத்தியாயர்
பே. இராமலிங்கபிள்ளையவர்கள்
செய்த புத்துரையுடன்

மேற்படியூர்
அ. தங்கவேலுப்பிள்ளையால்
சென்னபட்டணம்
மகாலக்ஷ்மிவிலாச அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.
விசுவாவசு௵ மார்கழி௴.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிதம்பரபுராணம்

மூலமும் உரையும்.

## காப்பு.

வானநாடர்கண் மாதவர் நாடரு
மோன ஞான முழுது முணர்ந்திடத்
தான மேவுந் தடவி கடா சலத்
தானை மாமுகத் தண்ணலை யேத்துவாம்.

(இதன் பொருள்) வான நாடர்கள் மாதவர் நாடரும் மோன ஞானம் முழுதும் உணர்ந்திட—சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்களும், பெரிய தவத்தையுடைய முனிவர்களுந் தேடுதற்கரிய மௌன நிலையோடுகூடிய ஞானமுழுமையும் (ஆன்மாக்களாகிய நாம்) அறியும்பொருட்டு,—தானம் மேவும்—மதஜலம் பொருந்திய,—விகடதட அசலத்து மா ஆனை முகத்து அண்ணலை எத்துவாம்—விகடக்கூத்தைவிரும்பிய விசாலமாகிய மலைபோன்ற பெரிய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளைத் துதிப்பாம்.— என்றவாறு.

அசலத்து என்பதற்கு அசைவற்ற எனப்பொருள் கொள்ளினு மமையும். விகடக்கூத்தைவிரும்பிய சரித்திரம் காஞ்சி புராணத்திற் கண்டுகொள்க. விகடம் என்பதற்கு மாறுபாடெனப் பொருள் கொள்ளினுமமையும்.

வானநாடரு மாதவநாடரும் எனவும் பாடம். அதற்குப்பொருள் வானநாடர்களாகிய தேவர்களும் பெரிய தவத்தினாலுந் தேடுதற்கரிய என்பது.

# பாயிரம்.



நீர்தாங்கும் பார்தாங்கு நெடுமாலு மலரயனு நிரந்து போற்ற, வார்தாங்கு புளகமிகு களபமுலை மலைவனிதை மகிழ்ந்து காணத், தார்தாங்கு சடாமவுலி நிலவெறிப்பப் பொதுவினடந் தயங்கா நிற்குஞ், சீர்தாங்கு வேதாந்த நாதாந்த பரஞ்சுடரைச் சிந்தை செய்வாம்.

(இ—ள்) நீர் தாங்கும் பார் தாங்கும் நெடுமாலும் மலர் அயனும் நிரந்து போற்ற—ஜலத்தினாற் சூழப்பட்ட பூமியைக் (கூர்மாவதாரங்கொண்டு) தாங்கிய விஷ்ணு மூர்த்தியும் தாமரையாசனராகிய பிரமதேவரும் நெருங்கி நின்றுதுதிக்கவும்,—வார் தாங்கு புளகம் மிகு களபமுலை மலைவனிதை மகிழ்ந்து காண—கச்சணிந்து புளகமிகுந்து கலவைச்சாந்தையணிந்த தனங்களையுடைய சிவகாமியம்மையார் மகிழ்ந்து நின்று தரிசிக்கவும்,—தார் தாங்கு சடாமௌலி நிலவு எறிப்பகொன்றைப்பூமாலையைத்தரித்த ஜடா முடியினிடத்தே (சந்திரன்) நிலவை வீசவும்,—பொதுவில் நடம் தயங்காநிற்கும்—கனகசபையினிடத்தே திருநிருத்தஞ்செய்தருளாநின்ற,—சீர்தாங்கும் வேதாந்த நாதாந்த பரஞ்சுடரைச் சிந்தை செய்வாம்—சிறப்புப்பொருந்திய வேதமுடிவிலும் நாதமுடிவிலும் விளங்குகின்ற மேலான சோதிசொரூபராகிய நடேசப்பெருமானைத் தியானிப்பாம்.—எ. று. (க)

உருவமொரு நாலாகி யுருவருவத் திருவுருவ மொன்றேயாகி, யருவமொரு நாலாகி யப்பாலா யப்பாலு மளவிடாத, பொருவிகந்த வுயிர்கடோறும் புணராமற் புணர்ந்தருளே பொழிந்தெல்லோர்க்குங், கருதரிய திருச்சிற்றம் பலத்திலகு பேரொளியைக் கருத்துள் வைப்பாம்.

(இ—ள்) உருவம் ஒரு நாலாகி—நான்கு உருவத்திருமேனியுடையவராகியும்,—உரு அருவத் திருவுருவம் ஒன்றேயாகி—ஒரு அருவுருவத் திருமேனியுடையவராகியும்,—அருவம் ஒரு நாலாகி—நான்கு அருவத் திருமேனியுடையவராகியும்,—அப்பாலாய்—அந்நவந்தருபேதத்தைக்கடந்தவராகியும்,—அப்பாலும் அளவிடாதபொ

ருவு இகந்த உயிர்கள் தொறும் புணராமல் புணர்ந்து—அதற்கு மேலும் அளவிடப்படாதனவாகிய ஒப்பில்லாத ஆன்மாக்கள்தோறுங் கூடாமற்கூடி,—எல்லோர்க்கும் அருளே பொழிந்து—யாவர்களுக்குங் கிருபையைப்பாலித்து,—கருது அரிய திருச்சிற்றம்பலத்து இலகு பேர் ஒளியைக் கருத்துள் வைப்பாம்—நினைத்தற்கரிய திருச்சிற்றம்பலத்தின் கண்ணே விளங்காநின்ற பெரிய சோதி சொரூபராகிய நடேசப்பெருமானை மனத்துள் வைத்துத் தியானிப்பாம்.—எ. று. (௨)

உருவத்திருமேனி நான்காவன:—பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன்.

அருவுருவத்திருமேனி ஒன்றாவது:—சதாசிவம்.

அருவத்திருமேனி நான்காவன:—விந்து, நாதம், சத்தி, சிவம்.

**அருமறையின் சிரத்தொளியா யனந்தமாய்ப் பூரணமா யசலமாகி, யொருமுதலா யுண்மையா யுணர்வாகி யானந்த வுருவமாகி, யிருமலமற் றிருப்போர்கள் விருப்பாகி மணிமன்று ளென்றுஞானத், திருமகிழ நின்றாடுஞ் சிதம்பரத்தை யெந்நாளுஞ் சிந்தை செய்வாம்.**

(இ—ள்) அருமறையின் சிரத்து ஒளியாய்—அருமையாகிய வேதமுடிவில் விளங்குகின்ற சோதி சொரூபராயும்,—அனந்தமாய்-முடிவில்லாதவராயும்,—பூரணமாய்—பரிபூரணராயும்,—அசலமாகி-சலனமில்லாதவராயும்,—ஒரு முதலாய்—ஒப்பில்லாத முதல்வராயும்,—உண்மை ஆய் உணர்வு ஆகி ஆனந்த உருவம் ஆகி—சச்சிதானந்தவடிவராயும்,—இருமலம் அற்று இருப்போர்கள் விருப்பு ஆகி—இருமலம் நீங்கிய விஞ்ஞானகலர்களால் விரும்பப்படும் பொருளாயும்,—மணி மன்றுள் என்றும் ஞானத்திரு மகிழ நின்று ஆடும் சிதம்பரத்தை—அழகிய கனகசபையினிடத்தே எப்பொழுதும் ஞானச்செல்வியாகிய சிவகாமியம்மையார் சந்தோஷிக்கும்படி நின்று ஆனந்த தாண்டவஞ்செய்தருளாநின்ற சிதாகாசரூபராயும் எழுந்தருளியிருக்கும் நடேசப்பெருமானை,—எந்நாளும் சிந்தை செய்வாம்—எப்பொழுதுந் தியானிப்பாம்.—எ. று. (௩)

இருபதமுந் துடியிடையுந் திகழுடையுந் தனதடமு மிய ற்பொற் பூணுங், கருவிழியுஞ் செவ்வாயும் வெண்ணகையும்

பசுந்தோளுங் கழுநீர்க் கையும், பொருவருமங் கலநாணுங் கந்தரமும் புரிகுழலும் புனிதன் கண்ணுந், திருவருளு முலாவுமெழிற் சிவகாம சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம்.

(இ—ள்) இருபதமும் — இரண்டு திருவடிகளையும்,— துடி இடையும் — உடுக்குப்போன்ற இடையையும்,— திகழ் உடையும்— விளங்குகின்ற பீதாம்பரத்தையும் — இயல் பொன் பூணும் தடதனமும்— இயல்பாகப் பொருந்திய பொன் போன்ற தேமல் படரப்பெற்ற பெருத்த தனங்களையும்,— கருவிழியும்— கரியகண்களையும்,— செவ்வாயும் — சிவந்தவாயையும், — வெள்நகையும்— வெள்ளிய பற்களையும்,— பசும் தோளும்- பசிய தோள்களையும்,— கழுநீர்க் கையும்- செங்கழுநீர்மலர்பிடித்த திருக்கரத்தையும்,— பொருவு அரும் மங்கலம் நாணும் கந்தரமும்— ஒப்பில்லாத திருமங்கலிய சூத்திரந் தொங்குகின்ற திருக்கண்டத்தையும்,— புரிகுழலும்— முறுக்குப் பொருந்திய கூந்தலையும்,— புனிதன் கண்ணும் திருவருளும் உலாவும் எழில்— பரிசுத்தராகிய நடேசப் பெருமானது திருநோக்கமுந் திருவருளும் பொருந்துகின்ற அழகையுமுடைய,— சிவகாமசுந்தரி தாள் சென்னி சேர்ப்பாம்— சிவகாமசுந்தரியம்மையாருடைய திருவடிகளைச் சிரமேற் சூட்டிக்கொள்வாம்.—எ. று. (ச)

பொன்பூணும் என்றதற்கு பொன்னாலாகியஆபரணத்தையணிந்த எனப் பொருள் கூறினுமமையும்.

நெடியவெழு பவக்கடலை யுழக்கிவினைக் கிரிநூறி நீங்காதோங்கும், கொடியகுணம் புலன்கரண முதலான பகைப்படையைக் குலையமோதி, யடியவர்தங் கருத்தளிசூழ்ந் தாலிக்கக்கருணைமத வாறுபாயும், படிபுகழுந் தில்லைவனக் கற்பகக் குஞ்சரத்திருதாள் பணிதல் செய்வாம்.

(இ—ள்) நெடிய எழு பவக்கடலை உழக்கி—நீண்ட எழுவகைப்பட்ட பிறவியாகிய கடலைக் கலக்கி,—வினைக்கிரி நூறி—இருவினைகளாகிய மலையை யழித்து,—நீங்காது ஓங்கும் கொடிய குணம் புலன் கரணம் குலைய மோதி—(எப்பொழுதும்) நீங்காது உயர்கின்ற கொடுமையாகிய முக்குணம் ஐம்புலன் திரிகரணங்களாகிய (மரங்களைச்) சிதறும்படி முறித்து,—அடியவர்தம் கருத்து அளி சூழ்ந்து அலிக்க—அடியவர்களது மனமென்னும் வண்டுகள் சூழ்

ந்து ஆரவாரிக்க,—கருணை மத ஆறு பாயும்—கிருபையாகிய மத ஜலம் ஆறு போலப் பாய்கின்ற,—படி புகழும் தில்லை வனக் கற்பகக் குஞ்சரத்து இரு தாள் பணிதல் செய்வாம்—பூலோகத்தாராற்றுதிக்கப்படுந் தில்லைவனத்தில் எழுந்தருளியிருக்கின்ற கற்பக விநாயகக் கடவுளாகிய யானையினது இரண்டு திருவடிகளையும் வணங்குவாம்.—எ. று. (ரு)

விடலரிய பெருந்தெய்வச் சிறைமீள மறைமுனிவர் விண்ணோர் வாழ, மடலவிழ்கற் பகநிழலு மரசிருப்பு மமருலகு மகவா னெய்தக், கடலுததி யோலமிடக் கிரிவீழச் சூரனுரங் கலங்கச் செங்கை, யடலயில்வேற் பணிகொண்ட வொருகுமர னிருசரண மகத்துள் வைப்பாம்.

(இ—ள்) தெய்வ விடல் அரிய பெரும் சிறை மீள—தேவர்கள் நீங்குதற்கரிய பெரிய சிறைச்சாலையினின்று மீளவும்—மறைமுனிவர் விண்ணோர் வாழ—வேதங்களை யறிந்த முனிவர்களும் தேவர்களும் வாழவும்,—மகவான் மடல் அவிழ் கற்பகநிழலும் அரசிருப்பும் அமருலகும் எய்த—தேவேந்திரனானவன் இதழ்விரியப்பெற்ற பூக்களையுடைய கற்பகத்தருவினிழலையும் அரசாக்ஷி செய்தற்குரிய அத்தாணி மண்டபத்தையும் தேவலோகத்தையும் அடையவும்,—உததிக்கடல் ஓலம்இட—(சூரபத்மன்மாமரவடிவமாய்நின்ற இடமாகிய) பெருக்கையுடைய கடலானது ஓலமிட்டு அலறவும்,—கிரிவீழ—கிரௌஞ்ச கிரியிரண்டாகப்பிளந்து விழவும்,—சூரன் உரம் கலங்க—சூரபத்மாவினது மார்பு கலங்கவும்,—செங்கை அடல்அயில்வேல் பணி கொண்ட ஒரு குமரன்—தமது சிவந்த திருக்கரத்தினிடத்தேயுள்ள வலிமையுங் கூர்மையும் பொருந்திய வேலாயுதத்தை யேவற்றொழில் செய்யும்படி கொண்டருளிய ஒப்பில்லாத குமாரக்கடவுளினது,—இருசரணம் அகத்துள் வைப்பாம்—இரண்டு திருவடிகளையும் மனதில் வைத்துத் தியானிப்பாம்.—எ. று. (சு)

புரிசடையெம் பரனருளாற் சடைமுடியு நுதல்விழியும் புயங்க ணான்குஞ், சுரிகைபிரம் புழைமழுவும் படைத்தரிய கணதிபர்க டொழுதுபோற்ற, வரியபர மானந்தச் சிவஞான போதமெனு மருநூ றன்னைத், தெரியவிரித் தருணந்தி தேவனரு ணினைந்துவினை தீர்து மன்றே.

(இ—ள்) புரி சடை எம் பரன் அருளால்—முறுக்குப்பொருந்திய சடையையுடைய எமது சிவபெருமானது திருவருளால்,—சடைமுடியும்—ஜடாமுடியையும்,— நுதல்விழியும்—நெற்றிக்கண்ணையும்,—புயங்கள்நான்கும்—நான்குபுயங்களையும்,—சுரிகை பிரம்பு உழை மழுவும் படைத்து—உடைவாளும் பிரம்பும் மானும் மழுவுமாகிய இவைகளையுந்தரிக்கப்பெற்று,--உரியகணாதிபர்கள் தொழுது போற்ற—சிவபெருமானிடத் துரிமைபூண் டொழுகுகின்ற கணநாதர்கள் வணங்கித்துதிக்க,—அரிய பரமானந்தச் சிவஞானபோதம் எனும் அருநூல் தன்னை—அடைதற்கரிய சிவானந்தத்தைத் தரத்தக்கதாகிய சிவஞானபோதம் என்னும் அருமையாகிய சாஸ்திரத்தை,—தெரிய விரித்து அருள்—(சனகர் முதலியமுனிவர்களுக்குத்) தெரிய விரித்துபதேசித்தருளிய,—நந்திதேவன் அருள் நினைந்து—திருநந்திதேவருடைய திருவருளைத் தியானித்து,—வினைதீர்தும்—இருவினைகளினின்று நீங்குவாம்.—எ. று. அஃது-எ. அசைகள். (எ)

அருமறையி னெறிவிளக்குந் திருஞானசம்பந்த ராழி மீது, மருவுமொரு கன்மிதப்பின் வந்தநா வுக்கரையர் மங்கை பாகத், தொருவனம தடிமையிவ னெனவாண்ட வாரூ ருல வா தோங்குந், திருவருள்கூர் திருவாத வூரரிவர் பதமலர்கள் சிரத்தின் வைப்பாம்.

(இ—ள்) அரு மறையின் நெறி விளக்கும் திருஞானசம்பந்தர்—அருமையாகிய வேதமார்க்கத்தை விளக்கியருளிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனர்,—ஆழிமீது மருவும் ஒரு கல்மிதப்பில் வந்த நாவுக்கரையர்—சமுத்திரத்தின்மேலே (சமணர்கள் சேர்த்துக் கட்டிய) ஒப்பில்லாத கருங்கல் (தெப்பமாக) மிதப்ப அதில் மிதந்து வந்த திருநாவுக்கரசு நாயனர்,—மங்கைபாகத்து ஒருவன் நமது அடிமை இவன் என ஆண்ட ஆரூரர்—உமாதேவிபாகராகிய சிவபெருமான் நமது அடியவன் இவன் என்று சொல்லித்தடுத்தாட்கொண்டருளிய நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திநாயனர்,—உலவாது ஓங்கும் திருவருள் கூர் திருவாதவூரர்—நீங்காது உயர்ந்த திருவருள் மிகுந்த திருவாதவூரராகிய மாணிக்கவாசகசுவாமிகள்,—இவர் பதமலர்கள் சிரத்தின் வைப்பாம்—இச்சமயாசாரிய சுவாமிகள் நால்வருடைய திருவடித் தாமரைமலர்களைச் சிரசின்மேற் சூடிக்கொள்வாம்.—எ. று. (அ)

எல்லைகாண் டற்கரிய விறைவனிவர் தம்மில்யா னொருவ னென்னுந், தொல்லைமா மரபுடையோர் மன்றுடையா னருச்சனையாற் றூய்மை பூண்டோர், மல்லலா கமவிதியு மகச்சடங்கு மாமறையும் வரம்பு கண்டோர், தில்லைமூ வாயிரமா முனிவரருட் பதங்கருதிச் சிறந்து வாழ்வாம்.

(இ—ள்) எல்லை காண்டற்கு அரிய இறைவன் இவர் தம்மில் யான் ஒருவன் என்னும் தொல்லை மா மரபு உடையோர்—அளவிட்டறிதற்கரிய நடேசப்பெருமான் இவர்களுள் யாமும் ஒருவர் என்று திருவாய் மலர்ந்தருளிய பழமையாகிய வமிசத்தில் உதித்தவர்களும்,—மன்று உடையான் அருச்சனையால் தூய்மை பூண்டோர்—கனகசபையையுடையவராகிய நடேசமூர்த்தியின் பூசையினாலே பரிசுத்தமுடையவர்களும்,—மல்லல் ஆகமவிதியும் மகச்சடங்கும் மாமறையும் வரம்பு கண்டோர்—வளப்பம் பொருந்திய சிவாகம விதியும் யாகச்சடங்கும் பெரிய வேதங்களுமாகிய இவைகளின் முடிவை அறிந்தவர்களுமாகிய,—தில்லை மூவாயிரம் ஆம் முனிவர் அருள்பதம் கருதிச் சிறந்து வாழ்வாம்—தில்லை மூவாயிர முனிவர்களுடைய திருவருள் மயமாகிய திருவடிகளைத் தியானித்துச் சிறப்புற்று வாழ்வாம்.—எ. று. (௬)

மோதுமிரு வினையகலத் தாதைபிரு தாளெறிந்து முடிவிலாத, வாதியிரு தாளடைந்த வண்டர்புகழ்ச் சண்டேச ரகில மேத்தும், வேதநெறி சைவநெறி வழுவாது சிவஞானம் விளங்காநிற்கும், போதமுடை யுருத்திரபல் கணத்தவர்தந் திருப்பதங்கள் போற்றி செய்வாம்.

(இ—ள்) மோதும் இருவினை யகலத்தாதை இருதாள் எறிந்து-பிறவியிற்றள்ளுகின்ற இருவினைகளும் நீங்கச் (சிவாபராதஞ் செய்த) பிதாவினுடைய இரண்டுகால்களையும் மழுவால் வீசி,—முடிவு இலாத ஆதி இருதாள் அடைந்த அண்டர் புகழ்ச்சண்டேசர்-முடிவில்லாத முதல்வராகிய சிவபெருமானது இரண்டு திருவடிகளையும் அடைந்த தேவர்களாற்றுதிக்கப்படுகின்ற சண்டேசுரநாயனாருடையவும்,—அகிலம் எத்தும்—உலகத்தாராற் றுதிக்கப்படுகின்ற,—வேதநெறிசைவநெறிவழுவாது—வேதமார்க்கமுஞ் சைவமார்க்கமுந் தவறாது,—சிவஞானம் விளங்காநிற்கும் போதம் உடை பல்

உருத்திர கணத்தவர்தம்—சிவஞானம் விளங்குகின்ற அறிவை யுடைய பலவகைப்பட்ட உருத்திர கணத்தவர்களுடையவும்,—திருப்பதங்கள் போற்றி செய்வாம்-திருவடிகளைத் துதிசெய்வாம்.—எ. று. (௧0)

பரிதிகுலந் தனிலுதித்துப் பரசமைய விருளகற்றிப் பரமனாடும், பொருவருபே ரம்பலமுங் கோபுரமு மாலயமும் பொன்வேய்ந் துண்மைச், சுருதியுடன் சைவநெறி தழைத் தோங்கத் திருநீற்றுச் சோழ னென்னுங், குருமணிமா முடிபுனைந்த குலோத்துங்க வளவனருள் குறித்து வாழ்வாம்.

(இ—ள்) பரிதிகுலந்தனில் உதித்து—சூரியகுலத்திலே பிறந்து,—பரசமய இருள் அகற்றி--புறச்சமயங்களாகிய இருளை நீக்கி,—பரமன் ஆடும் பொருவரும் பேர்அம்பலமும் கோபுரமும் ஆலயமும் பொன் வேய்ந்து—நடேசப்பெருமான் திருநிருத்தஞ் செய்தருளா நின்ற உவமைசொல்லுதற்கரிய பெரிய சபைகளையும், கோபுரங்களையும், கோயில்களையும் பொன்னாற்செய்து,—உண்மைச் சுருதியுடன் சைவநெறி தழைத்து ஓங்க—உண்மையாகிய வேதமாக்கமும் சைவமார்க்கமுஞ் செழித்துவளரவும்,—திருநீற்றுச் சோழன் என்னு குருமணி மா முடி புனைந்த—திருநீற்றுச்சோழன் என்று பெயர் பெற்று நிறம்பொருந்திய இரத்தினங்களாற் செய்யப்பட்ட பெரிய மகுடத்தைத் தரித்த,—குலோத்துங்க வளவன் அருள் குறித்து வாழ்வாம்—குலோத்துங்க சோழ ராஜனது திருவருளைத் தியானித்து வாழ்வாம்.—எ. று. (௧௧)

நெறியென்பதனைச்சுருதி யென்பதோடுங் கூட்டுக.

கனகநெடு வரைச்சிகரத் திலகியசிற் றம்பலத்துக் காதல் கூர, வனவரத முமைகாண வானந்தத் தாண்டவஞ்செய் யமலற் கன்பாய், மனமொழிமெய் யொருமைபெறப் பணியவளவில் கிளைஞருடன் மகிழ்ந்து செய்யுந், தினமுநெறி வளர்த்த திருவேகம்படிமைப் பரிசனர்தாள் சிரமேற்கொள்வாம்.

(இ—ள்) கனக நெடு வரைச் சிகரத்து இலகிய சிற்றம்பலத்துக் காதல் கூர-பொன்மயமாகிய நீண்ட மகாமேருமலை போன்ற சிகரங்களால் விளங்கிய திருச்சிற்றம்பலத்தினிடத்து விருப்ப மிக,—அனவரதம் உமைகாண ஆனந்த தாண்டவம் செய் அமலற்கு அன்

பாய்—என்றும் சிவகாமியம்மையார் தரிசிக்கும்படி ஆனந்ததாண்டவஞ்செய்தருளாநின்ற மலமுத்தராகிய நடேசமூர்த்தியினிடத்து அன்புடையவர்களாய்,—மனம் மொழி மெய் ஒருமை பெற—மனம் வாக்குக் காயங்கள் ஒருவழிப்பட,—கிளைஞருடன் அளவு இல் பணி மகிழ்ந்து செய்யும்—சுத்றத்தார்களோடு அளவிறந்த திருத்தொண்டுகளை மகிழ்ச்சியோடு செய்கின்ற,--தினமும் நெறி வளர்த்த திருவகம்படிமை பரிசனர் தாள் சிரமேல் கொள்வாம்—நாடோறுந் திருத்தொண்டுநெறிக்கத்தை வளரச்செய்த, திருவகம்படியார்களுடைய திருவடிகளைச் சிரசின்மேல் தரித்துக்கொள்வாம்.—எ. று. (கஉ)

முற்றுமுணர் மெய்கண்ட சந்ததிக்கோர் தீபமென முதன்மை கொண்ட, கொற்றவன்றன் குடிமருவு குலவுமுமா பதிசிவன்பொற் கோயிலுண்மை, சொற்றபுரா ணமுமிருக்கப் பின்னுமொரு வகையானுஞ் சொல்வான் புக்கேன், மற்றவன்றன் றிருவடியின் வழிவந்தோர்க் கடியனெனும் வழக்கான் மன்னோ.

(இ—ள்) முற்றும் உணர் மெய்கண்ட சந்ததிக்கு ஓர் தீபம் என முதன்மைகொண்ட—முற்றறிவினையுடைய மெய்கண்டசிவாசாரியரது சந்ததிக்கு ஓர் தீபம் போல் முதன்மை பெற்ற,—கொற்றவன்றன் குடிமருவும் குலவும்உமாபதிசிவன்—கொற்றவன் குடியில் எழுந்தருளியிருக்கின்ற உமாபதி சிவாசாரியர்,—உண்மைசொற்ற பொன் கோயில் புராணமும் இருக்க—உண்மையாகச் சொல்லியருளிய அழகிய கோயிற்புராணமும் ஒன்றிருக்க,—அவன் திருவடியின் வழிவந்தோர்க்கு அடியன் என்னும் வழக்கால்,—அவ்வுமாபதிசிவாசாரியருடைய திருவடித் தொண்டின் சந்ததியில் வந்தவர்களுக்கு (அடியேனும்) அடியவன் என்னும் வழக்கால்,—யானும் பின்னும் ஒரு வகை சொல்வான் புக்கேன்—அடியேனும் பின்னும் ஒரு விதம் சொல்லத் தொடங்கினேன்.—எ. று. மன், ஓ, அசைகள். (கங)

தேவாதி தேவனரு ணந்திபாற் சனற்குமரன் றெளிந்து வேத, மோவாத வியாதற்குப் புகலவவன் சூதமுனிக் குரைத்த தெய்வ, மூவாறு புராணத்துட் சிதம்பரத்தின் பெருமை பல முறைமைத் தாகுந், தாவாத பெருஞ்சைவ புராணத்தின் வந்துளது சாற்று மீதால்,

(இ—ள்) தேவாதி தேவன் அருள் நந்தி பால்—தேவாதி தேவனாகிய சிவபெருமானுடைய திருவருளைப்பெற்ற திருநந்தி தேவரிடத்தில்—சனற்குமரன் தெளிந்து—சனற்குமாரமுனிவர் அறிந்து—, வேதம் ஓவாத வியாதற்குப் புகல-வேதமோதுதலொழியாத வியாசமுனிவருக் குபதேசித்தருள,—அவன் சூதமுனிக்கு உரைத்த தெய்வ புராணம் மூவாறுள்,—அவர் சூத முனிவர்க்குபதேசித் தருளிய தெய்வத்தன்மை பொருந்திய பதினெண் புராணங்களுள்,—சிதம்பரத்தின் பெருமை பல முறைமைத்தாகும்—சிதம்பரத்தின் மகிமை பலவிதப்பட்டிருக்கும்,—சாற்றும் ஈது— சொல்லப்பட்ட இச்சரித்திரம்,—தாவாத பெருஞ் சைவபுராணத்தில் வந்தது— கெடுதலில்லாத பெருமை பொருந்திய சைவ புராணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.—எ. று. ஆல் அசை. (௧௪)

## வேறு.

ஆற்றல் சான்றமூ வாயிர மறையவ ரானுக்
கேற்றதொண்டர்கண் மறைநெறி யெதிகளா யுள்ளோர்
போற்றருஞ்சி தம்பரத்தி னற்புக ழினைத் திகழச்
சாற்றுவாய்வட மொழிவழி தமிழினு லென்றார்.

(இ—ள்) ஆற்றல் சான்ற மூவாயிரமறையவர்—சாஸ்திரவலிமை நிறைந்த தில்லைமூவாயிரமுனிவர்களும்,—அரனுக்கு ஏற்ற தொண்டர்கள்-சிவபெருமானுடைய திருத்தொண்டுக் கிசைந்த அடியார்களும்.—மறைநெறி எதிகளாய் உள்ளோர்—வேதமார்க்கத்தை யனுட்டிக்கின்ற சந்நியாசிகளாயுள்ளவர்களும்—போற்றரும் சிதம்பரத்தின நல் புகழினை—துதித்தற்கரிய சிதம்பரத்தினது நல்ல மகிமையை,—வடமொழி வழி தமிழினால் திகழ்ச் சாற்றுவாய் என்றார்—வடமொழியிற் சொல்லிய பிரகாரம் தமிழினால் விளங்கும் படி சொல்லுவாயாக என்று திருவாய் மலர்ந்தருளினார்கள்.—எ. று. (௧௫)

களங்க மற்றபொற் பொதுவின்முன் காதலா லோங்க
வளர் திகழ்ந்தபே ரறிஞர்நான் மாசொழித் தன்பா
லுளம்பரிந்திடச் சருக்கமு மொன்பதா வகுத்து
விளங்குமா றுரைசெய்தனன் விருத்தயாப் பதனால்.

(இ—ள்) களங்கம் அற்ற பொன் பொதுவின் முன்—குற்றமற்ற கனகசபையின் முன்னேநின்று,—காதலால் ஓங்க-விருப்பத்தி

னால் (இந்நூல்) மேன்மையடையும்படி,—வள்ந் திகழ்ந்த நூல் மாசு ஒழித்து—சொல்வளம் பொருள்வளங்களால் விளங்கிய இப்புராணத்திலுள்ள குற்றங்களை நீக்கி,--உளம்பரிந்திட-மனதிலன்புண்டாக,-சருக்கமும் ஒன்பதா வகுத்து—ஒன்பது சருக்கமாக வகுத்து,—விருத்த யாப்பு அதனால் விளங்குமாறு உரை செய்தனன்-விருத்தப்பாவினால் (யாவருக்கும்) விளங்கும்படி சொல்லுகின்றனன்.--எ.று. (கசு)

மறுவிலிங்கிது கூறயான் வல்லனோ புலத்தைச்
செறுநர் கேட்டிடச் சிதம்பர புராணமென் றருட்பேர்
நிறுவி யிப்பவ நீத்தற்கு நிமித்த மெய்ஞ் ஞானம் [தும்.
பெறுது மென்பதோர் கருத்தினாற் றுணிந்தனன் பெரி

(இ—ள்) மறவு இல் இது இங்கு யான் கூற வல்லனோ—குற்றமற்ற இப்புராணத்தை இவ்விடத்தில் யான் சொல்ல வல்லமையுடையவனோ?-(அன்று). (அங்ஙனமாயினும்),—இப்பவம்நீத்தற்கு நிமித்த மெஞ்ஞானம் பெறுதும் என்பது ஓர் கருத்தினால்—இப்பிறவியை நீக்குதற்குக் காரணமாகிய உண்மை ஞானத்தை யடைய வேண்டும் என்னுங்கருத்தால்,—புலத்தைச் செறுநர் கேட்டிட-ஐம்புலன்களையும் வென்ற பெரியோர்கள் கேட்கும்படி,—சிதம்பரபுராணம் என்று அருள் பேர் நிறுவி பெரிதும் துணிந்தனன்—சிதம்பரபுராணம் என்று சொல்லப்பட்ட திருவருட் பெயரை நிறுத்தி (யான்) மிகவும் (பாடத்) துணிந்தேன்.—எ று. (கஎ)

சூழமா கடற் புடவியான் சுடர்முடிச் சகற்கீ
ரேழு நூறுடன் முப்பஃ தியைந்தவாண் டெல்லைத்
தாழு மாமதிச் சடைமுடித் தனிமுத லென்றும்
வாழு மம்பலப் பெருமையை வழுத்து லுற்றனன் யான்.

(இ—ள்) மாகடல் சூழும் புடவியான் சுடர் முடி சகற்கு—பெரியகடலாற் சூழப்பட்ட பூமியையுடையவனாகிய ஒளிபொருந்திய முடியையுடைய சாலிவாகன சகனுக்கு,—ஈரேழு நூறுடன் முப்பஃது இயைந்த ஆண்டெல்லை—ஆயிரத்து நானூற்று முப்பது வருஷ அளவில்—மாமதி தாழும் சடைமுடித் தனி முதல் என்றும் வாழும் அம்பலப்பெருமையை—பெருமை பொருந்திய சந்திரனையணிந்து தொங்குகின்ற ஜடாமுடியை யுடைய ஒப்பற்ற முதல்வராகிய நடேசப்பெருமான் எப்பொழுதும் எழுந்தருளியிருக்கும் கனக

சபையினது மகிமையை—யான் வழுத்தல் உற்றனன்,—அடியேன் சொல்லத் தொடங்கினேன்.—எ. று. (கஅ)

மொய்த வங்களான் முதிர்தவர் மொழிப்படி யாய்ந்து
செய்த செய்யுள்சேர் சிதம்பர புராணமென் றொருக்
கைதவங் களைந்தோதிய கணக்கிலா நலத்தோர் [காற்
றெய்துகின்றபேற் றெல்லையை யிசைக்குமா றெளிதோ.

(இ—ள்) மொய் தவங்களால் முதிர்தவர் மொழிப்படி—பெரிய தவங்களால் மிகுந்த தில்லைமூவாயிரமுனிவர்கள் கட்டளையிட்டருளியபடி,—ஆய்ந்து செய்த செய்யுள் சேர் சிதம்பரபுராணம் என்று—அடியேனால் ஆராய்ந்து செய்யப்பட்ட செய்யுள்நடையாகப் பொருந்திய (இப்புராணத்தைச்) சிதம்பரபுராணம் என்று—கைதவங் களைந்து ஒருக்கால் ஓதிய கணக்கு இலா நலத்தோர்—(பொறாமை முதலிய) குற்றங்களினீங்கி உள்ளபடி ஒருமுறை உச்சரித்த அளவில்லாத நன்மையையுடையவர்கள்,—எய்துகின்ற பேற்று எல்லைய இசைக்குமாறு எளிதோ—அடைகின்ற பேற்றின் அளவை இவ்வளவென்று சொல்லும்படியான எளிமையையுடையதோ? (அன்று). எ. று. (கக)

தீர்த்த ராமுதற் கடவுளர் செய்தகா ரியம்போற்
கூத்த ராடல்கண் டிகழ்ந்ததோ குவலய மெவரு
மேத்து சூதரா லிசைத்தவிப் புராணத்தி னியல்பைப்
பார்த்தி யான்புகல் கின்றவிப் பரிசுமப் படியால்.

(இ—ள்) தீர்த்தர் ஆம் முதற்கடவுளர் செய்த காரியம் போல்—பரிசுத்தர்களாகிய முதன்மையையுடைய தேவர்கள் செய்த செய்கையைப்போல,—கூத்தர் ஆடல் கண்டு குவலயம் இகழ்ந்ததோ—கூத்தாடிகள் நடித்தலைப் பார்த்து இப்பூமியிலுள்ளோர்கள் இகழ்ந்தார்களோ? (இல்லை) (அதுபோல),—எவரும் ஏத்து சூதரால் இசைத்த இப்புராணத்தின் இயல்பை—எவர்களும் துதிக்கின்ற சூதமுனிவரால் சொல்லப்பட்ட இச்சிதம்பரபுராணத்தின் தன்மையை,—யான் பார்த்துப் புகல்கின்ற பரிசும் அப்படியே—அடியேன் ஆராய்ந்து பாடுகின்ற தன்மையும் அவ்விதமேயாகும்; [ஆதலின், இதனை யாவரும் இகழ்வார்களோ? இகழார்]—எ. று. (உ0)

## பாயிரம்

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# சிதம்பர

# மான்மியச்சருக்கம்.



சிவபரம் பரன் றிருவடித் தாமரை மறவாத்
தவ மிகுந்தருள் சூதரைத் தகவுற நோக்கி
நவ மிலங்கிய நலங்கிளர் நைமிசா ரணியத்
துவமை யொன்றிலா மாதவ ருரைத்தன்மே யினரால்.

(இ—ள்) நவம் இலங்கிய நைமிசாரணியத்து—புதிதாக விளங்கிய நைமிசாரணியத்தில் வாழ்கின்ற,—உவமை ஒன்றும் இலா மாதவர்—ஒப்பில்லாத பெரிய தவத்தையுடைய சவுனகாதி முனிவர்கள்,—சிவபரம்பரன் திருவடித்தாமரை மறவர்-சிவபெருமானுடைய திருவடித்தாமரை மலர்களை மறவாத,—தவம் மிகுந்து அருள் சூதரைத் தகவுற நோக்கி—தவத்தினால் மேம்பட்டருளிய சூத முனிவரைத் தகுதியோடு பார்த்து,—உரைத்தல் மேயினர்—சொல்லத்தொடங்கினார்கள்,—எ. று. ஆல்-அசை. (௧)

தெள்ளு மாமறை முதற்கலை தேர்ந்துநற் பொருள்க
ளுள்ள தன்மையீ தெனவுண ருணர்வினா லுயர்ந்தோய்
கள்ள வல்வினை கடந்தருள் கருணையங் கடலே
யெள்ள லொன்றிலா யாமுனக் கியம்புவ துண்டால்.

(இ—ள்) தெள்ளு மா மறை முதல் கலை தேர்ந்து—தெளிந்த பெரிய வேதமுதலாகிய சாஸ்திரங்களை அறிந்து,—நல் பொருள்கள் உள்ளதன்மை ஈது என உணர் உணர்வினால் உயர்ந்தோய்—உண்மைப்பொருள்களின் நிச்சயம் இது வென்று அறியும் அறிவினால் உயர்ந்தவரே,—கள்ள வல்வினை கடந்தருள் கருணையங்கடலே—மாறுபாடு பொருந்திய வலிய வினைகளைச் செயித்த கிருபா சமுத்திரமே,—எள்ளல் ஒன்று இலா உனக்கு யாம் இயம்புவது ஒன்று

உண்டு—இகழக்கப்படுவதாகிய யாதொரு குற்றமுமில்லாத தேவரீருக்கு அடியேங்கள் செய்யும் விண்ணப்பம் ஒன்றுண்டு.—எ. று. ஆல் அசை. (உ)

பொன்ன லந்திகழ் புண்டரீ கப்புரப் பெருமை [டோ
முன்ன ருந்தொகை பெறத்தவ முயற்சியாற் கேட்
டின்ன மும்மதன் பெருமைகள் விரிவுற வின்பந்
துன்னு மாறுகேட் குதுமெனு மாசையோ தொலையா.

(இ—ள்) நலம் திகழ் பொன் புண்டரீகப் புரப்பெருமை—அழகினால் விளங்காநின்ற பொன்மயமாகிய புண்டரீக புரமென்னும் சிதம்பரத்தின் மகிமையை,—முன்னரும் தவமுயற்சியால் தொகை பெறக் கேட்டோம்,—முன்னமே (யாங்கள் செய்த) தவமுயற்சியால் தொகுத்துச் சொல்லக் கேட்டோம்,—இன்பம் துன்னுமாறு—இன்பமுண்டாகும்படி,—இன்னமும் அதன்பெருமைகள் விரிவுறக் கேட்குதும் எனும் ஆசையோ தொலையா—இன்னமும் அச்சிதம்பரத்தினது மகிமைகளை விரிவாகக்கேட்கவேண்டுமென்னும் ஆசையோ எங்களைவிட்டு நீங்கவில்லை.—எ. று. (ங)

தான மெண்ணில வற்றினுட் டலைமைமீக் கொண்ட
தேன லம்புதண் பொழிலணி தில்லையின் பெருமை
ஞான தேசிக நவிற்றினு னயந்துடன் கேட்டற்
கான பக்குவ ராகின மருளினு லருள்வாய்.

(இ—ள்) ஞான தேசிக—ஞானாசாரியரே,—தானம் எண்ணில—இப்பூமியினிடத்தே அளவில்லாத சிவஸ்தலங்கள் உண்டு,—அவற்றினுள்—அச்சிவஸ்தலங்களில்,—தலைமைமீக்கொண்ட தேன் அலம்பு தண் பொழில் அணி தில்லையின் பெருமை நவிற்றினால்,—முதன்மை பொருந்திய வண்டுகள் ஒலிக்கின்ற குளிர்ச்சியையுடைய சோலைகளாற் சூழப்பட்ட அழகுபொருந்திய தில்லைவனமாகிய சிதம்பரத்தின் பெருமையைச்சொல்லி யருளினால்,—நயந்து உடன் கேட்டற்கு ஆன பக்குவர் ஆகினம்—விரும்பி உடனேகேட்டற்குரிய பக்குவர்களாயினோம்,—அருளினால் அருள்வாய்—(ஆகையால் தேவரீர்) கிருபையோடு திருவாய் மலர்ந்தருள்வீராக.—எ. று. (ச)

உடலழிந் திடா வகை கடலமு தத்தை யுண்டு
தொடரு மாசையோ ரெனமதி துளக்கறச் சோதி

விட லருந் திருமுகத் துரையமு தினை மேன்மே [தால்,
லடரு மன்பினு லயின்றுநெஞ் சமைதி கொண் டில

(இ—ள்) உடல் அழிந்திடாவகை—சரீரம் அழியாதிருக்கும்படி,—கடல் அமுதத்தை உண்டு தொடரும் ஆசையோர் என—திருப்பாற் கடலிற்றோன்றிய அமிர்தத்தையுண்டு தெவிட்டாது இன்னும் உண்ணவேண்டு மென்று பின் தொடர்ந்து செல்லும் ஆசையையுடையவர்கள்போல,--மதி துளக்கறச்சோதி விடல் அரும் திரு முகத்து உரை அமுதினை—சந்திரனைப்போன்ற அசைதலில்லாமல் ஒளியை வீசுகின்ற அருமையாகிய திரு முகத்தினின்றும் உண்டாகாநின்ற சொல்லாகிய அமிர்தத்தை,—மேல் மேல் அடரும் அன்பினுல் அயின்றும்—மேலும் மேலும் அதிகரித்துண்டாகாநின்ற அன்பினுல் உண்டும்,—நெஞ்சு அமைதி கொண்டிலது—மனம் அடங்கவில்லை.—எ. று. ஆல்-அசை. (ரு)

என்று கூறலுஞ் சூதனு மெதிர்முக மலர்ந்து
நன்று சொல்லினீ ரிறைபத நளினமே லன்பு
துன்று நற்றவ ரவனருட் டுகளிலாப் புகழ்மே
னின்ற காதலோ ரென்பது புதுமையோ நிகழ்த்தின்.

(இ—ள்) என்று கூறலும்—(சௌனகாதிமுனிவர்கள்) இந்தப்பிரகாரஞ்சொல்லவும்,--சூதனும் எதிர் முகமலர்ந்து--சூதமுனிவரும் அவர்களுக்கு எதிரே முகமலர்ச்சியை யடைந்து,—நன்று சொல்லினீர்—நீங்கள் நல்ல வார்த்தை சொன்னீர்கள்,—இறைபத நளினமேல் அன்பு துன்றும் நல் தவர்—சிவபெருமானுடைய திருவடித்தாமரைமலர்களின் மேல் அன்பு பொருந்திய நல்ல தவத்தோர்களே,—அவன் அருள் துகள் இலாப் புகழ்மேல் நின்ற காதலோர் என்பது---அச்சிவபெருமானது திருவருளாகிய குற்றமில்லாத கீர்த்தியின்மேற் பதிந்த விருப்பமுடையவர்களென்று சொல்லுவது,—நிகழ்த்தின் புதுமையோ—சொல்லுமிடத்து ஆச்சரியமாகுமோ? (ஆகாது).—எ. று. (சா)

வேத நான்முக னாதியாம் விண்ணவர்க் கமலன்
காதை கேட்குமால் கிடைக்குமோ கனகமன் றகச்சீ
ரோதல் கேட்பவ ருருமைநீர் விரும்பினீ ருமைப்போன்
மாத வப்பெரி யோரெவர் வகுத்துரைக் குங்கால்.

(இ—ள்) வேத நான் முகன் ஆதியாம் விண்ணவர்க்கு—வேதங்களையறிந்த நான்கு திருமுகங்களையுடைய பிரம தேவர் முதலிய தேவர்களுக்கு,—அமலன் காதை கேட்கும் மால் கிடைக்குமோ—மலமுத்தராகிய சிவபெருமானுடைய சரித்திரத்தைக் கேட்கும் ஆசை உண்டாகுமோ,—கனகமன்றகச் சீர் ஓதல் கேட்பவர் அருமையை நீர் விரும்பினீர்—அச்சிவபெருமான் எழுந்தருளியிராநின்ற கனகசபையினுடைய சிறப்பைச் சொல்லக் கேட்பவர்களுடைய பெருமையை நீங்கள் விரும்பிக்கேட்கின்றீர்கள்,—வகுத்து உரைக்குங்கால் உமைப்போல் மாதவப் பெரியோர் எவர்—வகுத்துச் சொல்லுமிடத்து உங்களைப்போல் மகா தவத்திற் சிறந்த பெரியோர்கள் யாவர்கள்.—எ. று. (எ)

உரக வேந்தனு மித்தலத் துண்மையை விரித்துப்
பரவ வல்லனோ வரிதநின் பரிசினைத் தொகுத்து
விரத மாதவப் பெருமையீர் விளம்புவன் மிகவும்
வர மிகுந்தவா தரவுடன் மகிழ்ந்துகேட் டிடுவீர்.

(இ—ள்) உரகவேந்தனும் இத்தலத்து உண்மையை விரித்துப் பரவ வல்லனோ அரிது—நாகர்களுக்கு அரசனாகிய ஆதிசேடனும் (தனது இரண்டாயிரம் நாவினாலும்) இச்சிதம்பரதலத்தின் உண்மையை விரித்துச் சொல்லுதற்கு வல்லனோ? (இல்லை);—விரத மாதவப் பெருமையீர்--விரதத்தை யநுஷ்டிக்கின்ற மகாதவசிரேஷ்டர்களே,—அதன் பரிசினைத் தொகுத்து விளம்புவன்-அச்சிதம்பரத்தின் தன்மையைத் தொகுத்துச் சொல்லுகின்றேன்,—வர மிகுந்த ஆதரவுடன் மிகவும் மகிழ்ந்து கேட்டிடுவீர்—மேன்மை பொருந்திய மிகுந்த ஆசையுடன் மிகவும் சந்தோஷத்துடன் கேட்பீர்களாக.—எ. று. (அ)

தரும தேசிகன் வாதரா யணன்றனித் தெனக்கீ
தருளி யின்னது கேட்குநீ ளன்பிலோர்க் கின்பம்
பெருகு மாறுவெண் பிறைநறுங் கண்ணியோற் பேணு
மொருமை யில்லவர்க் கியம்பலே யென்றுமுன் னுரைத்
[தான்.

(இ—ள்) தருமதேசிகன் வாதராயணன்—தருமங்களையுபதேசிக்கின்ற ஆசாரியராகிய வியாசமுனிவர்,—எனக்குத் தனித்து அருளி-அடியேனுக்கு (இச்சிதம்பரத்தின் மகிமையை) இரகசியமாக

உபதேசித்தருளி—இன்னது கேட்கும் நீள் அன்பு இலோர்க்கு—இப்புராணத்தைக் கேட்கவேண்டும் என்னும் மிகுந்த விருப்பம் இல்லாதவர்களுக்கும்,—இன்பம் பெருகுமாறு வெள் நறும் பிறைக் கண்ணியோன் பேணும் ஒருமை இல்லவர்க்கு—சந்தோஷமானது அதிகரிக்கும்படி வெள்ளிய நல்ல மூன்றாம் பிறைச் சந்திரனைத் தரித்தருளிய சிவபெருமானைப் பத்திசெய்கின்ற ஒற்றுமையாகிய நிச்சய குணம் இல்லாதவர்களுக்கும்,—இயம்பலை என்று முன் உரைத்தான்-(இப்புராணத்தைச்) சொல்லாதே என்று முன்னமே திருவாய் மலர்ந்தருளினார்.—எ. று. (கூ)

அன்ன வாறு கொண் டருமறைக் கொழுந்தி லானந்தந்
துன்னு பேரவைப் பெருமையைச் சொற்றில னெவர்க்கு
மன்னு மீங்கிதி லாதர மருமறை முதல்வ
னென்னு மெய்வழக் கிசைந்துளீர்க் கிசைத்திடத் தகுமால்.

(இ—ள்) அன்னவாறு கொண்டு—அத்தன்மையாய மனதுட்கொண்டு,--அருமறைக் கொழுந்தில் ஆனந்தம் துன்னும் பேர் அவைப் பெருமையை எவர்க்கும் சொற்றிலன்—அருமையாகிய வேத சிரசில் விளங்காநின்ற ஆனந்த சொரூபராகிய நடேசப்பெருமான் எழுந்தருளி யிராநின்ற பெருமை பொருந்திய கனகசபையின் மகிமையை எவர்களுக்கும் நான் சொல்லவில்லை,—மன்னும் ஈங்கு இதில் ஆதரம் அரு மறை முதல்வன் என்னும் மெய் வழக்கு இசைந்துளீர்க்கு இசைத்திடத் தகும்—நிலைபெற்று விளங்காநின்ற இக்கனகசபையில் ஆதாரமாக வீற்றிருப்பவன் அருமையாகிய வேதத்துக்கு முதல்வனாகிய சிவபெருமானே என்று சொல்லப்பட்ட உண்மை வழக்குக்கு உடன்பட்டவர்களாகிய உங்களுக்கு இதைச் சொல்லத்தகும்,—எ. று. ஆல் அசை. (௰)

வாத ராயணன் சயிமினி மாமுனிக் குரைக்கும்
போது பெற்றனன் னீவிருங் கேண்மெனப் புகல
வேத காலமீ தெவ்விடத் திசைத்ததவ் வடைவே
சூத மாதவ வோதெனச் சொற்றனர் முனிவர்.

(இ—ள்) வாதராயணன் சைமினி மா முனிக்கு உரைக்கும் போது பெற்றனன்—வியாசமுனிவர் சைமினிமுனிவர்க்கு உபதேசிக்கும்போது யானும் கூட இருந்து அறிந்தேன்,—நீவிரும் கேண்ம்

எனப் புகல—நீங்களும் அதனைக் கேளுங்கள் என்று சூதமுனிவர் சொல்ல,—முனிவர்—(அப்பொழுது) அந்நைமிசாரணிய முனிவர்கள்,—சூத மாதவ—சூத முனிவரே,—எது காலம் எவ்விடத்து ஈது இசைத்தது—எந்தக்காலத்திலே எவ்விடத்திலே இச்சிதம்பரத்தின் மகிமையைச் சொல்லியருளினார்,—அவ்வடைவே ஓது எனச் சொற்றனர்—அந்த முறைப்படி எங்களுக்குச் சொல்லியருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.—எ. று. (கக)

தனது தேசிகன் றன்னையுந் தக்கவாக் கினையு
மனனிடைக் கொளா மதிநதி வணிந்தவள் ளலையுங்
கனக மன்றையு நினைந்துகட் கமலநீர் பொழிய
வனக மெய்ப்புள கத்துடன் பரவசத் தடைந்தான்.

(இ—ள்) தனது தேசிகன் தன்னையும்—(அச்சூதமுனிவர்) தனதாசாரியராகிய வியாசமுனிவரையும்,—தக்க வாக்கினையும்—(அவர் சொல்லிய) தகுதிபொருந்திய வாக்கியத்தையும்,—மனன் இடைக் கொளா—மனதில் தியானித்துக் கொண்டு,—மதி நதி அணிந்த வள்ளலையும்—சந்திரனையும் கங்கையையுந் தரித்தருளிய சிவபெருமானையும்,—கனக மன்றையும் நினைந்து—(அச்சிவபிரான் எழுந்தருளியிருக்கின்ற கனகசபையையுந் தியானித்து,—கண் கமலம் நீர் பொழிய—தாமரை மலர் போன்ற கண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சொரிய,—அனக மெய்ப் புளகத்துடன் பரவசத்து அடைந்தான்—ஆணவ மில்லாத சரீரத்தில் உண்டாகிய புளகத்தோடு பரவசமடைந்தார்.—எ. று. (கஉ)

ஒரு முகூர்த்தமங் கிடைவிடா துண்மையா னந்தம்
பருகி யின்புற விழித்துமெய்ம் முனிவரைப் பாரா
வருள்சுரந் துளங்களித் தருளரிவை பாக னையுந்
தரும தேசிகன் றன்னையுந் தகவுடன் வணங்கா.

(இ—ள்) ஒரு முகூர்த்தம் அங்கு இடைவிடாது உண்மை ஆனந்தம் பருகி இன்புற விழித்து—ஒரு முகூர்த்தகாலம் அவ்விடத்தில் இடைவிடாமல் உண்மையாகிய ஆனந்தத்தேனை உண்டு மகிழ்ச்சி யுண்டாகும்படி (கண்களை) விழித்துப் பார்த்து,—அருள் சுரந்து உலகு அளித்து அருள் அரிவை பாகனையும்—கிருபைமிகுந்து உலகங்களைப் பெற்றருளிய உமாதேவி பாகராகிய சிவபெருமானையும்,—தரும தேசிகன் தன்னையும்—தருமங்களைப் போதிக்கின்ற ஆசாரிய

ராகிய வியாசமுனிவரையும்,—தக்வுடன் வணங்கா—தகுதியோடு நமஸ்கரித்து.—எ. று. (கங)

நன்று நல்லறி வுடையநீர் நசைமிக வளர
வின்று கேட்டலாற் கனகமன் றிடத்துள பெருமை
யொன்று காதலி னினைந்திடப் பெற்றன னுண்மை
துன்று தேசிகன் மொழிப்படி சொல்வனென் றறை
[வான்.

(இ—ள்) நன்று—(முனிவர்களே) நல்லது—நல் அறிவு உடைய நீர் நசை மிக வளர இன்று கேட்டலால்—நல்லறிவுடையவர்களாகிய நீங்கள் மிகவும் விருப்ப முண்டாகும்படி இப்பொழுது (இச்சிதம்பரத்தினது) மகிமையைக் கேட்கின்றபடியால்,—உண்மை துன்று தேசிகன் மொழிப்படி--உண்மை பொருந்திய ஆசாரியராகிய வியாசமுனிவர் எனக் குபதேசித்தபடி,—கனக மன்று இடத்து உள பெருமை ஒன்று காதலின் நினைத்திடப் பெற்றனன்—கனகசபையினிடத்துள்ள மகிமைகளைப் பொருந்திய விருப்பத்தோடு தியானித்தேன்,—சொல்வன் என்று அறைவான்—அதனை உங்களுக்குச் சொல்லுகின்றேன் என்று (நைமிசாரணிய முனிவர்களுக்குச் சூத முனிவர்) சொல்லுகின்றார்.—எ. று. (௧௪)

உளங் குவிந்தரு மறைச்சிகை யுணர்ந்த மெய்த்தவர்கள்
வளங் குலாவிய தவத்தினால் வாழ்வதங் கடைந்தோர்
களங்க வல்வினை நீக்கிய கங்கையங் கரைமேல்
விளங்கு கின்றது தனைநிகர் வதரிகாச் சிரமம்.

(இ—ள்) அங்கு அடைந்தோர் களங்க வல்வினை நீக்கிய அம் கங்கைக் கரைமேல்—அவ்விடத்து வந்து ஸ்நானஞ் செய்தவர்களுடைய குற்றம் பொருந்திய வலிய வினைகளை நீக்குகின்ற அழகிய கங்காநதிக் கரையின்மேல்,—உளம் குவிந்து அரு மறைச் சிகை உணர்ந்த மெய்த்தவர்கள்-மனம் அடங்கி அரிய வேத சிரசுகளாகிய உபநிடதங்களை யறிந்த உண்மையாகிய தவத்தினை யுடைய முனிவர்கள்,—வளம் குலாவிய தவத்தினால் வாழ்வது—மாட்சிமை பொருந்திய தவத்தினால் வாழக்கடவதாகிய,—தனை நிகர் வதரிகாச்சிரமம்—தனக்குத்தானே ஒப்பாகிய வதரிகாச்சிரம மென்னும் ஒரு வனம் விளங்கிக் கொண்டிருக்கின்றது.—எ. று. (௧௫)

விரி பசுந்தழை விளங்கிய வதரியென் றுரைத்தற்
குரிய செங்கனி யிலந்தையங் கானநின் றொளிர
வரி யிலங்கிய கற்பக மளவில் பன்மரங்க
டெரிவரும் பல பறவைமாத் திகழ்ந்திடா நிற்கும்.

(இ—ள்) விரி பசும் தழை விளங்கிய வதரி என்று உரைத்தற்கு உரிய—விரிந்த பசிய தழைகள் விளங்குகின்ற வதரியென்று சொல்லுதற்குரிய,—செம் கனி இலந்தை அம் கானம் நின்று ஒளிர—சிவந்த பழங்களையுடைய அழகிய இலந்தை வனமானது (அக்கங்கைக் கரைமேல்) நின்று பிரகாசிக்கும்படி,—அரி இலங்கிய கற்பகம்—வண்டுகள் மொய்க்கின்ற கற்பக விருக்ஷங்களும்,—அளவு இல் பல் மரங்கள்—அளவில்லாதனவாகிய பலவகைப்பட்ட மரங்களும்,—தெரிவரும் பல பறவை—ஆராய்ந்தறியத்தக்க பலவகைப்பட்ட பக்ஷிகளும்,—மா—மிருகங்களும்,—திகழ்ந்திடா நிற்கும்—(அவ்வனத்தில்) விளங்கிக் கொண்டிருக்கும் —எ. று. (கசு)

கங்கைபா னறுங் கொன்றையாற் காமரு வல்லி
தங்கலா லுழைவிளங் கலாற் றவக்குழாஉச் செறிவாற்
பொங்கு மாமறை யாகமப் பொலிவினு னெற்றிச்
செங்க ணானெனத் திகழ்வுறுஞ் சிறந்தவாச் சிரமம்.

(இ—ள்) சிறந்த ஆச்சிரமம்—சிறப்புப் பொருந்திய அவ்வதிரி யாச் சிரமமானது,—கங்கையால்—கங்காநதி யிருத்தலாலும்,—நறும் கொன்றையால்—வாசனை பொருந்திய கொன்றைமலர்க ளிருத்தலாலும்,—காமரு வல்லி தங்கலால்-காமவல்லியென்னுங் கொடி படர்ந்துகொண் டிருத்தலாலும்,—உழைவிளங்களால்—மான்கள் விளங்கிக்கொண் டிருத்தலாலும்,—தவக் குழாஉச் செறிவால்—தவத்தோர்கள் கூட்டம் நெருங்கி யிருத்தலாலும்,—பொங்கு மா மறை ஆகமப் பொலிவினால்-பொலிவு பொருந்திய பெரிய வேதாகம கோஷ்டமிகுதியாலும்,—நெற்றிச் செங்கணான் எனத் திகழ்வுறும்-சிவந்த நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானை யொத்து விளங்கும்.—எ. று. (கஎ)

மலர்ந்த செம்மலர்ப் பலாசமு மருவி வீழ்சருபுட்
குலங்க ளும்மவை விழவெழுங் குரையளித் தொகையு
மலர்ந்த மாமறை யங்கியு மதன்றிர வியமுங்
கலந்த போதெழுங் கருங்கொடித் தூமமுங் காட்டும்.

(இ-ள்) மலர்ந்த செம்மலர்ப் பலாசமும்-மலர்ந்த சிவந்த பூக்களையுடைய புரசும்,—மருவி வீழ்தரு புள் குலங்களும்-(அப்பூக்களை விரும்பி வந்து வீழ்கின்ற பறவைக் கூட்டங்களும்,—அவை விழ எழும் ஞிமிறு அளித் தொகையும்-அப்பறவைகள் விழுதலினால் மேலெழும்புகின்ற ஒலித்தலையுடைய வண்டுக் கூட்டங்களு மாகிய இவைகள்,—அலர்ந்த மா மறை அங்கியும்-விரிந்த பெரியவேதவிதிப்படி செய்கின்ற யாகாக்கினியையும்,—அதன் திரவியமும்-அந்த யாகத்துக்குரிய திரவியங்களையும்,—கலந்த போது எழும் கருங்கொடித் தூமமும் காட்டும்-அவ்வக்கினியுந் திரவியமுங் கலந்து எரிகின்றபோது மேலெழும்புகின்ற கரிய கொடிபோன்ற புகையையுங் காண்பிக்கும்.—எ. று. (கஅ)

அங்கி வேட்பவர் வேடையை யகற்றுமா போலப்
பொங்கு பன்மலர் வாசமுந் தாதுமுன் பொதிந்து
கங்கை யந்துறைத் தரங்கசீ கரங்களுங் கலந்து
தங்கு மென்னடை மாருதந் தந்துலா வருமால்.

(இ-ள்) மெல் நடை தங்கும் மாருதம்-மிருதுவாகி உலாவுகின்ற இளந் தென்றற் காற்றானது,—பொங்கு பன் மலர் வாசமும் தாதும் முன் பொதிந்து-மிகுதியாகிய பலவகைப்பட்ட மலர்களின் வாசனையையும் மகரந்தங்களையும் முன்னே அளைந்து,—கங்கை அம் துறை தரங்க சீகரங்களும் கலந்து,—கங்கையாற்றினது அழகிய துறையின் அலைகளினது துளியிற் படிந்து,—அங்கி வேட்பவர் வேடையை அகற்றுமா போலத் தந்து உலாவரும்—அவ்வக்கினி காரியஞ் செய்கின்றவர்களுடைய வெப்பத்தைத் தணிப்பது போலக் (குளிர்ச்சியைக்) கொடுத்துக் கொண்டு சஞ்சரிக்கும்.—எ. று. (கக)

கங்கை யந்துறை பாற்கட லாடுயர் களிறு
துங்க மந்தரந் துதைந்தெழு தரங்கம்வா சுகிகோட்
டங்க ளாகமு மதனிறை யரும்புமுன் கடையுஞ் [ளும்.
செங்கண் மாறன்மேற் சிதைத்துளி தெறித்தலை சிவு

(இ-ள்) அம் துறைக் கங்கை பாற்கடல்-(அவ்வதிரி காச்சிரமத்தில் உள்ள) அழகிய துறைகளையுடைய கங்காநதியானது திருப்பாற்கடலாகவும்,—ஆடு உயர் களிறு துங்க மந்தரம்-அக்கங்காநதியில் முழுகுகின்ற பெரிய யானையானது உயர்ச்சி பொருந்திய மந்தரகிரியாகிய மத்தாகவும், —துதைந்து எழு தரங்கம் வாசுகி—நெருங்கி

எழுகின்ற அலையானது வாசுகியாகிய நாணாகவும்,—அங்கண் கோட்டு நாகமும் அதன் நிறை யரும்பும்—அக்கங்கைக் கரையினிடத் துள்ள கொம்புகளையுடைய புன்னை மரமும் அப்புன்னை மரத்தில் நிறைந்திருக்கின்ற அரும்புகளும்,—முன் கடையும் செங்கண் மால் தன்மேல் சுதைத்துளி தெறித்தமை சிவணும்—முன் அத் திருப்பாற்கடலைக் கடைந்த விஷ்ணு மூர்த்தி யாகவும் அவ்விஷ்ணு மூர்த்தியின்மேல் அமிர்தத்துளி தெறித்தலாகவும் ஒத்துத் தோன்றும்.—எ. று. (உ0)

விண்ட வல்வினை யுளத்துமெய் விளக்கினுன் முனிவோர்
குண்ட வங்கியாற் றீபமா மரப்பொலி குழுவான்
மண்டு முட்புறம் புளவெனு மாரிருள் வடிவங்
கண்ட றிந்தவ ரிலையவண் காதலித் தோருள்.

(இ-ள்) அவண் காதலித்தோருள்-அவ்வனத்தில் விரும்பி வசிப்பவருள்,—வல்வினை விண்ட உளத்து மெய் விளக்கினுல்-வலிய வினையி னீங்கிய மனதினிடத்துள்ள மெய்ஞ்ஞானமாகிய தீபத்தினுலும்,—முனிவோர் குண்ட அங்கியால்—முனிவர்கள் செய்கின்ற யாகாக்கினியினுலும்,—தீப மா மரப்பொலி குழுவால்-பெரிய சோதி விருக்ஷத்தின் பிரகாசத்தினது கூட்டத்தினுலும்,—உள் புறம்பு உள எனும் ஆர் இருள் வடிவம் கண்டறிந்தவர் இலை-அகத்தும் புறத்தும் உள்ளனவென்று சொல்லப்படும் நிறைந்த அஞ்ஞான விருளின் உருவத்தைப் பார்த் தறிந்தவர்களில்லை.—எ று. (உக)

அகத்திருள்-அஞ்ஞானம். மேற்கண்ட ஒளியால் அஞ்ஞான விருள் நீங்கலால், கண்டவ ரில்லை என்ருர்.

கணங்கொள் மாதவர்க் கயலிடைக் காற்றினுற் பசுமை
யிணங்கு பிண்டியின் செம்மல ரிடையிடை வீழ்ந்தாங்
குணங்கு மாறுவே ளுதவிய சிலீமுக மவரை
யணங்கு செய்வதற் கஞ்சின வாடின வனைய.

(இ-ள்) கணங் கொள் மாதவர்க்கு அயலிடை-கூட்டமாகிய பெரிய தவத்தையுடைய முனிவர்களுக்குப் பக்கத்திலே,—காற்றினுல் பசுமை இணங்கு பிண்டியின் செம்மலர் இடை இடை வீழ்ந்து உணங்குமாறு-காற்றினுலே பசுமை பொருந்திய அசோக மரத்தினது பழம் பூக்கள் இடை இடையே விழுந்து வாடிக் கிடக்குந் தன்மையானது,—வேள் உதவிய சிலீமுகம்-மன்மதனுல் விடப்பட்ட

(அவ்வசோகமலராகிய) பாணமானது,—அவ்வர அணங்கு செய்தற்கு அஞ்சின வாடினன் அனைய-அம்முனிவர்களை யடைந்து வருத்துதற்குப்பயந்து பக்கத்தே வாட்டமுற் றிருத்தலை யொத்திருந்தன.—எ. று. (உஉ)

சடையர் தண்டினர் குண்டிகைத் தடக்கையர் சீரை
யுடையர் நீறணி மேனிய ருயிர்வருந் தாத
நடைய ரைம்புலப் பகைஞரை வென்றருண் ஞானப்
படைய ரெண்ணிலர் மாதவர் பதியதவ் வனமே.

(இ-ள்) அவ்வனம்-அவ்வதரிகாச்சிரமமானது,-சடையர்-சடையை யுடையவர்களும்,-தண்டினர்-தண்டை யுடையவர்களும்,--குண்டிகைத் தடக்கையர்-கமண்டலம் பொருந்திய பெரிய கையையுடையவர்களும்,—சீரை உடையவர்-மரவுரியாகிய வஸ்திரத்தை யுடையவர்களும்,—நீறு அணி மேனியர்-விபூதியைத் தரித்த திருமேனியையுடையவர்களும்,-உயிர் வருந்தாத நடையர்-உயிர்களுக்கு இடையூறடையாதனவாகிய கொல்லாவிரத முடையவர்களும்,—ஐம்புலப்பகைஞரை வென்றருள் ஞானப் படையர்,—ஐம்புலன்களாகிய பகைவர்களைச் செயிக்கின்ற ஞானஸ்திரத்தை யுடையவர்களுமாகிய,—எண்ணிலர் மாதவர் பதியது---அளவில்லாதவர்களாகிய மகா தவத்தையுடைய முனிவர்களுக்கு இருப்பிடமாக உள்ளது.—எ. று. ஏ அசை. (உ௩)

தருப்பை கொய்பவர் சமித்துடன் கொணர்பவர் செவ் [வி
மருப்பொ திந்திடு மலரிலை யெடுப்பவர் வன்னி
விருப்பின் வேட்பவ ரருச்சனை வியப்பினர் ஞானத்
திருப் பொலிந்திட விருப்பவர் காட்சியாற் சிறக்கும்.

(இ-ள்) தருப்பை கொய்பவர்-தருப்பைப்புல்லை யரிந்து கொண்டு வருபவர்களும்,—உடன் சமித்து கொணர்பவர்-உடனே சமித்துகள் கொண்டு வருபவர்களும்,-செவ்வி மருப் பொதிந்திடு இலைமலர் எடுப்பவர்-காலந்தோறும் வாசனை நிறைந்த பத்திர புட்பங்கள் எடுப்பவர்களும்,—விருப்பின் வன்னி வேட்பவர்-விருப்பத்தோடு அக்கினிகாரியஞ் செய்கின்றவர்களும்,—அருச்சனை விருப்பினர்-பூசை செய்தலிலே விருப்பமுடையவர்களும்,—ஞானத் திருப் பொலிந்திட இருப்பவர் காட்சியால்-ஞானச் செல்வம் விளங்கும் படி இருக்கின்ற பெரியோர்களுமாகிய இவர்களது தோற்றத்தால்,—சிறக்கும்-(அவ்வனம்) சிறப்படையும்.—எ. று. (உ௪)

அளிகொ டேசிக ரிடத்து நூல் கேட்பவ ரையந்
தெளியு மாறெதிர் வினவினுற் றெளிந்திடு மாறு
கிளிகளோ வயற் பூவையுங் கிளத்திடு மென்று		[பார்.
லொளிகொ ளவ்வனத் துள்ளவர் பெருமையா ருரைப்

(இ-ள்) அளி கொள் தேசிகர் இடத்து நூல் கேட்பவர்-கிருபையை யுடைய ஆசாரிய ரிடத்துச் சாஸ்திரபாடங் கேட்கின்ற மாணுக்கர்கள்,--ஐயம் தெளியுமாறு எதிர் வினவினுல்-சந்தேகந் தெளியும்படி ஆசாரியரெதிரே நின்று சந்தேகத்தைக் கேட்டால்,-தெளிந்திடும் ஆறு-அம்மாணுக்கர்கள் தெளியும்படி,—அயல் கிளிகளோ பூவையும் கிளத்திடும் என்றுல்-பக்கத்திலுள்ளகிளிகள் மாத்திரமல்லாமல் நாகணவாய்ப் பறவையும் சொல்லுமேயானுல்,—ஒளிகொள் அவ்வனத்து உள்ளவர் பெருமை யார் உரைப்பார்--ஒளிபொருந்திய அவ்வதிரிகாச்சிரமத்தி லுள்ளவர்களது பெருமையை யாவர் எடுத்துச் சொல்ல வல்லவர்.—எ. று.	(உ௫)

வேறு.

ஆறிருது மைம்பொழுது நன்குதரு தன்பருவ மன்றி
விளை யாதவிளைவும், பேறனைய சாகமொடு மூலநிறை காய்க
னிகள் பேதமிகு வாசமலருங், கூறிவைக ளெப்பருவ மெப்
பொழு தெனுதருள் கொழுப்புடன் விழுப்ப மிகுமான், மாறு
படு மைம்புலனை வென்றதவ மன்னவர்கள் வைகியுறை
தெய்வ வனமே.

(இ-ள்) மாறு படும் ஐம்புலனை வென்ற தவ மன்னவர்கள் வைகி யுறை தெய்வ வனம்-பகைமையாகிய பஞ்சேந்திரியங்களைச் செயித்த தவசிரேஷடர் களாகிய முனிவர்கள் வாசஞ் செய்கின்ற தெய்வத்தன்மை பொருந்திய அவ்வதரிகாச்சிரமமானது,—ஆறு இருதும் ஐயபொழுதும்-வசந்தருது கிரீஷ்மருது வருஷருது சரருது ஏமந்தருது சிசிருது என்னும் ஆறருதுகாலமும, விடியல் காலை உச்சி மாலை யாமம் என்னும் ஐந்து பொழுதும்,—நன்கு தரும் தன் பருவம் அன்றி விளையாத விளைவும்-பலனைத் தருகின்ற தனக்குரிய பக்குவகால மல்லாத காலத்தில் விளையக் கூடாத விளைவும்,—பேறு அனைய சாக மொடு மூலம்-செல்வப்பேற்றை யொத்த இலைகளும் கிழங்குகளும்,--நிறைகாய் கனிகள்-நிறைந்தகாய்களும் கனிகளும்,--பேதமிகு வாச மலரும்-பலவேறு வகைப்பட்ட மிகுந்த வாசனை

பொருந்திய புட்பங்களும்,—கூறும் இவைகள்-சொல்லப்பட்ட இவைகள்,—எப்பருவம் எப்பொழுது எனாது-இது என்ன பருவம் என்ன காலம் என்று நோக்காது,—அருள் கொழுப்புடன் விழுப்பம் மிகும்—(எக்காலமும்) கொடுக்கத் தக்க செழுமை யோடு கூடி மேன்மை மிகுந்திருக்கும்.—எ. று. ஆல் ஏ அசைகள். (உசு)

ஆதப மிகுங்கொடிய வேனிலிம மாரிமுத லாறுபருவங் கள் புரியும், வேதனை நயப்பிலர் விருப்பிலர் வெறுப்பிலர் வினைப்பகை தனைப்பொடி செய்தோர், பூதல வியக்கிலர் மல ர்க்கணை யுருவடிவர் போதமுற வேதமுடிவிற், காதல்கொ டிருப்பதல தொன்றுமுண ராமுனிக ணம்பயி னலம்பெரு குமால்.

(இ-ள்) ஆதபம் மிகும் கொடிய வேனில் இமம் மாரி முதல் ஆறு பருவங்கள் புரியும வேதனை நயப்பு இலர்-வெய்யில் மிகுந்த கொடிய வேனிற்காலம் பனிக்காலம் மழைக்கால முதலிய ஆறுருது காலங்களில் உண்டாகும் துன்பத்தையும் இன்பத்தையும் அடையா தவர்களும்,—விருப்பு இலர் வெறுப்பு இலர்-விருப்பு வெறுப்பு இல் லாதவர்களும்,—வினைப் பகைதனைப் பொடி செய்தோர்-நல்வினை தீவினையாகிய பகைகளை அழித்தவர்களும்,—பூதல வியக்கு இலர் பிரபஞ்ச ஆசையில்லாதவர்களும்,—மலர்க்கணை உரு வடிவினர்-(மன்மதனது) புட்ப பாணம் படாத சரீரத்தை யுடையவர்களும்,—போதம் உற வேத முடிவில் காதல் கொடு இருப்பது அலது ஒன்றும் உணரா முனிகணம்—ஞானத்தை யடையும்படி வேதமுடிவில் விருப்பத்தைக் கொண்டு இருப்பதல்லாமல் வேறொன்றையும் அறி யாத முனிவர் கூட்டங்களும்,—பயில் நலம் பெருகும்-சஞ்சரிக்கும் படியான நன்மை மிகுந்திருக்கும்.—எ. று. ஆல் அசை. (உஎ)

ஆசினி யரம்பைபல சூதமுறு நற்கனியி லாறுநிகர் சாறு பெருகா, வீசியொரு பாலடைய வேழமத தாரைநெடு வெள் ளமொரு சார்பின் மருவத், தேசுடைய கங்கைநதி யெவ்வு கை சிறந்ததுகொ றேவர்புகழ் வாணிநதியு, மாசில்யமு னாநதி யும் வந்திடை கலந்ததுறை மானுமலை தேதுரை செய்வாம்.

(இ-ள்) பல ஆசினி அரம்பை சூதம் உறு நல் கனியில்- பலவ கைப் பட்ட பலா வாழை மா என்னும் மரங்களிற் பொருந்திய

நல்ல பழங்களி லிருந்து,—ஆறு நிகர் சாறு பெருகா வீசி ஒரு பால் அடைய-ஆறு போல் அப்பழச்சாறுகள் பெருக்கெடுத்து அலைகளை வீசிக் கொண்டு ஒரு பக்கத்தில் அடைதலாலும்,—மத தாரை நெடு வெள்ளம் ஒரு சார்பின்மருவ(யானையினது) மதஜல மானது பெரிய மழை வெள்ளம்போல் ஒரு பக்கத்தில் அடைதலாலும்,—தேசு உடைக் கங்கை நதி எவ்வகை சிறந்தது கொல்-அழகு பொருந்திய கங்கா நதியானது எவ்விதம் சிறந்ததோ, என்றால்,—தேவர் புகழ் வாணி நதியும் மாசு இல் யமுனை நதியும் வந்து இடை கலந்த துறை மானும் அலது-தேவர்களாற் றுதிக்கப்படுகின்ற சரஸ்வதி நதியும் குற்றமில்லாத யமுனாநதியுஞ் வந்து மத்தியில் ஒன்றாகக் கலந்த துறையை யொக்குமே யல்லது,—எது உரை செய்வாம்-வேறு எவற்றை இதற்கொப்பாகச் சொல்லுவோம்.—எ. று. (உஅ)

கொண்டலை யுழக்கியெழு தாழையிளநீர் பலவு கொக்கி னுறுநெக்கு கனிசேர், தண்டலைக ளண்ட மிசை சென்றளவு கண்டெதிர் தயங்குவ வியந்து முனிவோர், மண்டலம் விளக்குமறை கொண்டவவி யன்றியு மருந்தென வருந்து மெனவா, னண்டர்கள் பெறும்படி தினந்தொறும் விருந்தெதி ரளிப்பன நிகர்த் துடையவால்.

(இ-ள்) கொண்டலை உழக்கி எழு இளநீர் தாழை-மேகத்தைக் கலக்கி மேலெழும்புகின்ற இளநீரையுடைய தென்னமரங்களையும் பலவும்-பலாமரங்களையும்,-நெக்கு கனி உறு கொக்கு சேர் தண்டலை-கனிந்த பழங்கள் பொருந்திய மாமரங்களையும் உடைய சோலைகளானவை,—அண்டம் மிசை சென்று அளவுகண்டு எதிர் தயங்குவ-அண்டங்களுக்கு மேலே போய் அளவு பார்த்து எதிரே விளங்குவனவாம். முனிவோர் வியந்து மண்டலம் விளக்கும் மறை கொண்ட அவி அன்றியும்-முனிவர்கள் பாராட்டிப் பூமியைப் பிரகாசிப்பிக்க விரும்பி வேதவிதிப்படி செய்கின்ற யாகத்திலிருந்து கொடுக்கும் அவிர்ப்பாகமே யல்லாமல்,—மருந்து என அருந்தும் என-தேவாமிர்தம் என்று சொல்லி இதனையும் நீங்கள் உண்ணுங்கள் என்று,—வான் அண்டர் பெறும்படி-தேவருலகத்திலுள்ள தேவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி,—தினந்தொறும் விருந்து எதிர் அளிப்பன நிகர்த்து உடைய-நாடோறும் விருந்தாகப் பழங்களை எதிர் கொண்டு வந்து கொடுப்பனவற்றை ஒத்திருக்கும்,—எ. று. (உ௯)

தேவருர காதிபர்கள் சித்தர்பல கிம்புருடர் சேணில வும் வாச முடையோர்,யாவர்களும் வந்திலகு கங்கைநதி மூழ்கி யருளெய்துதவ மாமு னிவர்தம், மேவரு மொழுக்கமும் விழுப்பமு மதிக்கரிய மெய்த்தவமு மெய்த்தகை மையா, லாவது நமக்கென வொருப்படும் விருப்பினை யளித்திடும் வனத்தி னியல்பே.

(இ-ள்) வனத்து இயல்பு-அவ்வதரிகாச்சிரமத்தின் தன்மை யானது,—பல தேவர் உரகாதிபர்கள் சித்தர் கிம்புருடர்-பலவகைப் பட்ட தேவர்களும் நாகராஜாக்களும் சித்தர்களும் கிம்புருடர் களும்,—சேண் நிலவு வாசம் உடையோர்-ஆகாயத்தில் விளங்கும் படி வாசஞ் செய்கின்றவர்களும்,—யாவர்களும்-மற்றுள்ள யாவர் களும்,—இலகுகங்கை நதி வந்து மூழ்கி-விளங்காநின்ற கங்காநதியி னிடத்தே வந்து, ஸ்நானஞ் செய்து,—அருள் எய்து தவ மா முனிவர்தம் மேவரும் ஒழுக்கமும் விழுப்பமும்-திருவருளைப் பெறுதற்கேதுவாகிய தவத்தைச் செய்கின்ற பெரிய முனிவர்களது அடைதற்கரிய சீலத்தையும் மேன்மையையும்,—மதிக்கஅரியமெய்த் தவமும்-மதித்தற்கரிய உண்மையாகிய தவத்தையும் (கண்டு),— மெய்த் தகைமையால் நமக்கு ஆவது என-உண்மை பொருந்திய தகுதியோடு இவைகள் நமக்கு உண்டாக வேண்டுமென்று,—ஒருப் படும் விருப்பினை அளித்திடும்-ஒற்றுமை பொருந்திய விருப்பத்தைக் கொடுக்கும்.—எ. று. (௩௦)

மதங்கொடு வருங்களி றருந்தவ ரெதிர்ந்திடின் மகிழ் ந்தெதிர் விலங்கி யிலகும், பதங்களின் விழுந்துட னெழுந்து சுவை துன்றிய பலம்பல கொணர்ந்தவை, கொடா, விதம் பெற வரும்பணி யறிந்தன புரிந்துறை வியன்றல மடைந்த வர்கள்சந், ததம்புக லறங்களி னுளங்களி மிகுந்தரு டயங்க வய றங்கு வனவால்.

(இ-ள்) மதம் கொடு வரும் களிறு-(அவ்வனத்தில்) மதங்கொ ண்டு வருகின்ற யானைகளானவை,—அருந்தவர் எதிர்ந்திடின்-அரிய தவத்தை யுடைய முனிவர்கள் எதிர்ப்பட்டால்,—மகிழ்ந்து எதிர் விலகி-சந்தோஷித்து எதிரே விலகி,—இலகு பதங்களில் விழுந்து- (அம்முனிவர்களது) விளங்காநின்ற திருவடிகளில் விழுந்து நமஸ் கரித்து,—எழுந்து-பின்பு எழுந்து,—அவை சுவை துன்றிய பல

பலம்கொணர்ந்து கொடா-அவ்வியானைகள் மதுரம் பொருந்திய பல வகையான பழங்களைக் கொண்டு வந்து (அம்முனிவர்களுக்குக்) கொடுத்து,—இதம் பெற அரும் பணி அறிந்தன புரிந்து-(அவர் களுக்கு) இன்பமுண்டாகும்படி அருமையாகிய பணிவிடைகளை அறிந்து செய்து,—உறை வியன் தலம் அடைந்து-(அவர்கள்) வசிக்கின்ற விசாலமாகிய பன்னகசாலையை அடைந்து,—அவர்கள் சந்ததம் புகல் அறங்களின் உளம் களி மிகுந்து-அவர்கள் நாடோறுஞ் சொல்லுகின்ற தருமங்களால் மனச் சந்தோஷமிகுந்து,—அருள் தயங்க அயல் தங்குவன-கிருபை விளங்கும்படி பக்கத்திலே வசித்துக் கொண்டிருப்பனவாம்.—எ. று. (௩௧)

யாகமலி சாலை தொறு மங்கல விளக்கமென வெல்லைக ளறிந்து குறுகு, நாகமுமிழ் மாமணிகள் கொண்டுபல தீப மிட நண்ணியத ஞேடு பயிலுந், தோகையை விரித்தமர வீசு சிறு கால்கொடவர் துங்கமறை யங்கி தனைநின், ஞேகை யொடு கேகய மெழுப்புவன கண்டவ ருவப்புறு நிவப் புடையதே.

(இ-ள்) எல்லைகள் அறிந்து குறுகும் நாகம்-(அவ்வனத்தின்) எல்லைகளை அறிந்து வந்து சேருகின்ற சர்ப்பங்களானவை,— யாக சாலை தொறும் மலி மங்கல விளக்கம் என-யாக சாலைகள் தோறும் நிறைந்திருக்கின்ற சுபகரம் பொருந்திய தீபங்கள் போல,—உமிழ் மா மணிகள் கொடு பல தீபம் இட-(அச்சர்ப் பங்கள்) கக்குகின்ற பெரிய இரத்தினங்களைக் கொண்டு பல தீபங்கள் ஏற்றவும்,—அதனோடு நண்ணிப் பயிலும் கேகயம்-அச்சர்ப்பங்களோ டு பகை யில்லாமற் பொருந்திப் பழகுகின்ற மயில்களானவை,— தோகையை விரித்து அமர வீசு சிறு கால் கொடு (தங்கள்) கலா பத்தை விரித்து மெல்ல வீசுகின்ற சிறிய காற்றைக் கொண்டு,— அவர் துங்க மறை அங்கிதனை நின்று எழுப்புவன-அம்முனிவர்கள் உயர்ச்சி பொருந்திய வேத விதிப்படி செய்கின்ற யாகாக்கினியைச் சுவாலிக்கும்படி, செய்வன,—கண்டவர் உவப்பு உறும் நிவப்பு உடையது—பார்த்தவர்கள் சந்தோஷிக்கும்படியான மேன்மையை யுடையதாகும்.—எ. று. (௩௨)

ஈரமன மாமுனிவர் கங்கையிடை மூழ்கியுட னேறி விலகுஞ், சீரைகள் கொடுத்தவர்கள் பின்னலுகிர் கொண்டு

வகிர் செய்தரு அருச்சனை செயு, நேரம தறிந்து பசு நேடியெதி ரெய்து மவைநேயமுறு கன்றை வெரினிற், பேர்வற வெடுத் துரிய சாலைதனி லுய்த்துழுவை பேதமற நீதி பெருகும்.

(இ-ள்) உழுவை-(அவ்வனத்திலுள்ள) புலிகளானவை,—ஈர மன மா முனிவர் கங்கையிடை மூழ்க உடன் மூழ்கி-அன்பு பொரு ந்திய மனதையுடைய பெரிய முனிவர்கள் கங்கையிலே ஸ்நானஞ் செய்யத் தாங்களு முடனே ஸ்நானஞ் செய்து,—உடன் எறி-அவர் கள் கரையேறும்போது தாங்களும் அவர்களோடு கரையேறி,— விலகு சீரைகள் கொடுத்து-மரங்களிலிருந்து விலகிய மரவுரிகளை (அம்முனிவர்களுக்கு) எடுத்துக்கொடுத்து,— அவர்கள் பின்னல் உகிர் கொண்டு வகிர் செய்து-அம்முனிவர்களுடைய ஜடைகளை நகங்களால் வகிர்ந்து,—அருள் அருச்சனை செயும் நேரமது அறிந்து-அம்முனிவர்கள் கிருபையோடு பூசைசெய்யுங் கால மறிந்து,— பசு நேடி எதிர் எய்தும் அவை நேயம் உறும் கன்றை-பசுக்களைத்தேடி தனக்கு எதிரே வருகின்ற அப்பசுக்களுடைய விருப்பம் பொருந் திய கன்றுகளை,—வெரினில் பேர்வு அற எடுத்து (அப்புலிகள் தங்கள் முதுகில் வேற்றுமையில்லாமல் எடுத்துக்கொண்டு போய்,—உரிய சாலைகளில் உய்த்து-அப்பசுக்கன்று கட்டுதற்குரிய சாலைகளில் விட்டு,—பேதம் அற நீதி பெருகும்-அப்புலிகளும் பசுக்களும் பகை யின்றி ஒத்து வாழும்,—எ. று. (கூகூ)

கெழலுழ வந்தெழு மணித்திரள் வெடித்துகு கிளைத்த ரள மந்தநெறியின், சூழனிறை யப்பரலி னேகு முயர் மாத வர் துணைப்பதம் வருத்துவ தெனுக்,காழுடை யகிற்றழைகள் சந்தன நறுந்தழைகள் கைக்கொடவை முழ்று மகல, வேழ மரி யாளிகள் விளக்கியவ ரைப்பணி வியப்பினை யுரைப்ப தெவனே.

(இ-ள்) கேழல் உழ வந்து எழும் மணித்திரள்-பன்றிகள் பூமி யைக் கிண்ட அதிலிருந்து உண்டாகும் இரத்தினக்கூட்டங்களும்,— கிளை வெடித்து உகு தரளம்-மூங்கில் களிலிருந்து வெடித்து உதிர் கின்ற முத்துக்களும்,—அந்த நெறியின் சூழல் பரலின் நிறைய- அவ்வனத்தின் வழியினிடத்துப் பருக்கைக் கற்களைப்போல நிறை ந்து கிடக்க,--வேழம் அரி யாளிகள்-(அவ்வனத்திலுள்ளயானைகளும் சிங்கங்களும் யாளிகளும்,—ஏகும் உயர் மாதவர் துணைப்பதம் வருத்

துவதுஎனு-அந்த வழியிற் செல்லுகின்ற உயர்ந்த பெரிய தவத்தை யுடைய முனிவர்களது இரண்டு பாதங்களையும் வருத்துகின்றது என்று எண்ணி,—காழ் உடை அகில் தழைகள் நறுஞ் சந்தனத் தழைகள் கைக்கொடு-வயிரம் பொருந்திய அகிற்றழைகளையும் வாச னை பொருந்திய சந்தனத் தழைகளையும் கையிற்கொண்டு,—அவை முற்றும் அகல் விளக்கி-இரத்தினங்களு முத்துக்களுமாகிய அவை கள் முழுதும் அவ்வழியை விட்டு விலகும்படி பெருக்கி,—அவரைப் பணி வியப்பினை உரைப்பது எவன்-அம்முனிவர்களை (அம்மிரு கங்கள்) வணங்குகின்ற ஆச்சிரியத்தைச் சொல்வதுஎப்படி.—எ. று ஓ—அசை (௩௪)

இகம்பர முணர்த்துமறை யாகம முழக்கமு மிசைத்த வழி யர்ச்சனை யுடன், மகம்புரி சடங்கினெழு பேரொலியு மீர முடன் வந்தெதிர் விருந்தெதிர்கொளு, முகம்பொலி நயப்பு ரையி னார்வமுடன் மாநதியின் மூழ்குமவ ரோசையு மெழுந், தகங்களக லப்புணரி யஞ்சமுகி லஞ்சவக லண்ட மிசை மண்டி யெழுமால்.

(இ-ள்) இகம்பரம் உணர்த்தும் மறை ஆகம முழக்கமும்-இம் மைப்பயன் மறுமைப்பயன்களை அறிவிக்கின்ற வேதாகம ஓசையும்,- இசைத்த வழி அர்ச்சனை யுடன் மகம் புரி சடங்கின் எழும் பேர் ஒலியும்-அவ்வேதாகமங்களிற் சொல்லிய முறைப்படி பூசைசெய்த லோடு யாகச்சடங்குகள் செய்கின்ற காலத்தில் உண்டாகின்ற பெரிய ஓசையும்,—ஈரம் உடன் எதிர் வந்து விருந்து எதிர் கொள்ளும் முகம் பொலி நயப்பு உரையின் ஆர்வம் உடன்-அன்போடு எதிரே வந்து விருந்தினர்களை எதிர் கொள்ளும் பொழுது முகத்தினிடத்தே விளங்காநின்ற உபசார வார்த்தையினது ஓசையுடனே,—அக ங்கள் அகல மா நதியின் மூழ்குமவர் ஓசையும் எழுந்து-பாவங்கள் நீங்கும்படி பெரிய நதியில் ஸ்நானம் பண்ணுகின்றவர்களுடைய ஓசையும் எழுந்து,—புணரி அஞ்ச முகில் அஞ்ச அகல் அண்டம் மிசை மண்டி எழும்-சமுத்திரவொலி அஞ்சும்படிக்கும் மேகவொலி யஞ்சும்படிக்கும் பரந்த ஆகாயத்திற்கு மேலே மிகுந்தெழுந்து ஒலிக்கும்.—எ. று. ஆல் அசை. (௩௫)

வேறு.

தன்னிகரா நெறிபடைத்த திகழ்வதிரி காச்சிரமந் தன்னின் முன்னந், துன்னுதுவா பரயுகத்து முடிவின்மட

லவிழ்வாசத் துழாயலங்கன், மின்னவிருந் திருமாறன் கலையான வியாதனென விளம்பு மேலோன், பன்னெடு நாளினிதி ருந்தா னிமையோரு முனிவோரும் பணிந்து போற்ற,

(இ-ள்) தன் நிகராம் நெறி படைத்த திகழ் வதரிகாச்சிரமம் தன்னில்-தனக்குத்தானே ஒப்பாகிய நன்மார்க்கத்தைப் பெற்று விளங்காநின்ற வதரிகாச்சிரமத்தில்,—முன்னும் துன்னும் துவாபர யுகத்து முடிவில்-முன்னே பொருந்திய துவாபர யுகாந்தத்தில்,—மடல் அவிழ் வாசத் துழாய் அலங்கல் மின் அவிரும் திருமால்தன்-இதழ் விரியப் பெற்ற துளப மாலையை அணிந்த ஒளி விளங்காநின்ற விஷ்ணுமூர்த்தியினுடைய,—கலையாண வியாதன் என விளம்பும் மேலோன்-ஒருகலையான வியாசரென்று சொல்லும்படி அவதரித்த பெரியோர்,--இமை யோரும் முனிவோரும் பணிந்து போற்ற-தேவர்களும் முனிவர்களும் வணங்கித் துதிக்கும்படி,—பல் நெடு நாள் இனிது இருந்தான்-அனேக நாள் (அவ்வனத்தில்) இனிதாக வீற்றிருந்தருளினர்.—எ, று. (௬௬)

சீதமா மதிவேணி யமலனுயர் திருவருளைச் சிறப்பா லெய்தி, வேதமெலா மளவிட்டுப் பிறித்துடைய குறிப்பினால் வியாத னென்று, மேதமிலா மாதவஞ்சூர் வதிரிகாச் சிரமத்தி னிருத்த றன்னால், வா தரா யணனென்றும் பெயருடையோ னவன் பெருமை வழுத்தற் பாற்றே.

(இ-ள்) சீத மா மதி வேணி அமலன் உயர் திருவருளைச் சிறப்பால் எய்தி-குளிர்ச்சியும் பெருமையும் பொருந்திய சந்திரனைத் தரித்த சடையை யுடைய மலமுத்தராகிய சிவபெருமானது மேலாகிய திருவருளைச் சிறப்போடு பெற்று,—வேதம் எலாம் அளவு இட்டு பிறித்து உடைய குறிப்பினால் வியாதன் என்றும்-வேதங்களெல்லா வற்றையும் அளவு செய்து நான்காக வகுத்த படியால் வியாசரென்றும்,—ஏதம் இலா மாதவம் சூர் வதரிகாச்சிரமத்தில் இருத்தல் தன்னால் வாதராயணன் என்றும் பெயர் உடையோன்-குற்றமில்லாத பெரிய தவஞ் செய்தற்குரிய வதரிகாச்சிரமத்தி லிருக்கின்றமையால் வாதராயணர் என்றும் பெயருடையவ ராயினர்,—அவன் பெருமை வழுத்தற் பாற்றே-அவ்வியாச முனிவருடைய பெருமை துதிக்குந் தன்மை யுடையதாகுமோ? (ஆகாது).—எ. று. (௬௭

பொங்குதிரைக் கடல் புடைசூழ் புடவியிடைப் பிற
ந்திறந்துழலு மாக்க, டங்கண்மதி யோசிறிது வாணாளு மிகு
தியிலை சாற்றுகின்ற, விங்கிவர்க ளிம்முறையா லெஞ்ஞான்
றும் பரகதியி லெய்த மாட்டா, ரங்கதுகொண் டவருய்யு
நெறிவேண்டி யுலப்பிலா வருண்மீக் கொண்டு.

(இ-ள்) பொங்கு திரைக் கடல் புடை சூழ் புடவி இடை-மேலெழும்புகின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பட்டபூமியினிடத்தில்,—பிறந்து இறந்து உழலும் மாக்கள் தங்கள் மதியோ சிறிது-பிறந் திறந் துழலுகின்ற மனிதர்களது புத்தியோ அற்பமாகும்,—வாணாளும் மிகுதி இலை-(அம்மனிதர்களுக்கு) ஆயுளும் அதிகமில்லை,—சாற்றுகின்ற இவர்கள் இங்கு இம்முறையால் எஞ்ஞான்றும் பரகதியில் எய்த மாட்டார்-சொல்லுகின்ற இம்மனிதர்கள் இவ்விடத்தில் மேற் சொல்லிய காரணத்தால் எந்நாளும் மோக்ஷத்தை யடைய மாட்டார்கள்,—அங்கு அது கொண்டு-அவ்விடத்தில் அவ்விஷயங்களைக்கொண்டு.—அவர் உய்யும் நெறி வேண்டி-அம்மனிதர்கள் கடைத்தேற மார்க்கத்தை விரும்பி,—உலப்பு இலா அருள் மீக்கொண்டு-கெடுதலில்லாத கிருபையை (அம்முனிவர்) மேற்கொண்டு.
வி. று. (௩அ)

பெருக்கமிகு மொழிவேதப் பருப்பதத்திற் றிருவருளின்
பெருமைதன்னு, லிருக்கியசு சாமமதர் வணந்திகழிம் ம
றை நான்கு மெடுத்தி சைத்து, வருக்கமிகுபுராணமிதி காச
மிவை தாமைந்தா மறையாச் சேர்த்துத், திருக்கிளரு முணர்
வுடைய முனிவர்க்கும் போதித்தான் றெளிவு கூர.

(இ-ள்) திருவருளின் பெருமை தன்னால் (அவ்வியாசமுனிவர்) சிவபெருமானுடைய திருவருளின் மகிமையால்,—பெருக்கம் மிகு மொழி வேதப் பருப்பதத்தில்-மிகவுமதிகமாகிய வாக்கியங்களையுடைய வேதமாகிய மலையி லிருந்து.—இருக்கு யசுர் சாமம் அதர்வணம் திகழ் இம் மறை நான்கும் எடுத்து இசைத்து-இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்று விளங்கா நின்ற இவ்வேதங்கள் நான்கையும் எடுத்துச் சொல்லி,—வருக்க மிகு புராணம் இதிகாசம் இவை தாம் ஐந்தாம் மறையாச் சேர்த்து-வகைவகையாக மிகுந்திருக்கின்ற புராணம் இதிகாசம் என்னும் இவைகளை ஐந்தாம் வேதமாகச் சேர்த்து,—திருக்கிளரும் உணர்வு உடைய முனிவர்க்குத் தெளிவு கூரப்

போதித்தான்-ஞானச் செல்வத்தால் விளங்குகின்ற அறிவையுடைய முனிவர்களுக்குத் தெளிவுண்டாகும்படி உபதேசித் தருளினர்.— எ. று. (௩௯)

பகரிருக்குப் பயிலற்கு மியசுவைசம் பாயனற்கும் பரவி ஞோர்தந், துகளொழிக்குந் திகழ்சாமஞ் சைமினிக்கு மதர்வ மறை சுமந்து வுக்கு, மகமகிழ வருவித்துப் புராணமிதிகாச மிவை யடியேற்கீந்து, புகழ்மருவ வியாவர்க்கு மிகலொழியப் புகலென்று புகன்ற பின்னர்.

(இ-ள்) பகர் இருக்குப் பயிலற்கும்-மேற்சொல்லிய இருக்கு வேதத்தைப் பயிலமுனிவர்க்கும்,—இயசு வைசம்பாயினற்கும்-யசுர் வேசத்தை வைசம்பாயன முனிவர்க்கும்,—பரவினோர்தம் துகள் ஒழிக்கும் திகழ் சாமம் சைமினிக்கும்-துதிக்கின்றவர்களது குற்றத்தை நீக்குகின்ற பிரகாசம் பொருந்திய சாமவேசத்தைச் சைமினி முனிவர்க்கும்,—அதர்வமறைசுமந்துவுக்கும்-அதர்வணவேதத்தைச் சுமந்து முனிவர்க்கும்,—அகம் மகிழ வருவித்து-மன மகிழும்படி உபதேசித்து,—புராணம் இதிகாசம் இவை அடியேற்கு ஈந்து-புராணங்களும் இதிகாசங்களுமாகிய இவைகளை அடியேனுக்குஉபதேசித்து,—யாவர்க்கும் புகழ் மருவ இகல் ஒழிய புகல் என்றுபுகன்ற பின்னர்-எல்லாருக்கும் புகழுண்டாகவும் (காமகுரோதமுதலிய) பகைகள் நீங்கவும் உபதேசிக்கக்கடவாய் என்று(அவ்வியாசமுனிவர்) அடியேனுக்கு உபதேசித் தருளிய பின்பு,—எ. று. (௪0)

எத்தரிய நால்வேதப் பயனளவு படாவவற்றி னியல்பு தன்னைப், பார்த்தறிய யாவோருஞ் சிற்றறிவோ ரெனக்கருணைப் பரவை போலு, மாத்தவமா முனியிறைவன் றிருவருளான் மறைப்பயனின் வரம்பீ தென்னச், சூத்திரமு மினிதினுரைத் தறிஞர்பெற வருள் செய்தான் றுளக்க நீங்க.

(இ-ள்) கருணைப் பரவை போலும் மாதவ மாமுனி இறைவன்-கிருபாசமுத்திரம் போலும் பெரிய தவத்தையுடைய முனிவர்களுக்குத் தலைவராகிய வியாசமுனிவர்,—எத்து அரிய நால் வேதப் பயன் அளவு படா-துதித்தற் கரிய நான்கு வேதங்களின் பொருள் அளவுபடாதனவா யிருக்கின்றன,—யாவோரும் அவற்றின் இயல்பு தன்னைப் பார்த்து அறிய சிற்றறிவோர் என-எல்லோரும் அவ்வேதப் பொருளின் தன்மையைப் பார்த்து அறிதற்குச் சிற்றறிவுடையவர்

களா யிருக்கின்றார்கள் என்று எண்ணி,—திருவருளால்-(சிவபெருமானிடத்துப் பெற்ற) கிருபையால்,—மறைப்பயனின் வரம்பு ஈது என்ன-வேதப்பொருளின் எல்லை இது என்று,—அறிஞர் பெற-அறிவுடையோர்கள் ஏற்றுக் கொள்ளும்படி,—சூத்திரமும் இனிது உரைத்து-வேதாந்த சூத்திரத்தையும் இனிதாக உபதேசித்து,—துளக்கம் நீங்க அருள் செய்தான்-மனக் கலக்கம் நீங்கும்படி கிருபை செய்தருளினார்.—எ. று. (௪௧)

பொருவரிய கருமகாண் டத்துமறை மொழியினுள பொருளி னுண்மை, யருளுடைய சைமினிநீ மொழிதி யெனத் தேசிகன்ற னருளு மீசன், கருணையுமுற் கொண்டதனை யீராறு காண்டமாக் கழறி ஞானக், குருபரனைத் தொழு திறைஞ்சி யருத்தியுடன் றெரித்துரைத்தான் குணக்குன் றன்னான்.

(இ-ள்) குணக் குன்று அன்னான்-குணமலையாயுள்ள அவ்வியாசமுனிவர்,—அருள் உடைய சைமினி நீ-கிருபையையுடைய சைமினிமுனிவரே,—பொருவு அரிய மறை மொழியின் கரும காண்டத்து உள் பொருளின் உண்மை மொழிதி என-ஒப்பில்லாத வேதத்தினது கருமகாண்டத்திலுள்ள பொருளின் உண்மையைச் சொல்லுவாயாக என்று திருவாய்மலர்ந்தருள,—தேசிகன் தன் அருளும் ஈசன் கருணையும் முன் கொண்டு-(அச்சைமினிமுனிவர்) அவ்வாசாரியராகிய வியாசமுனிவரது அனுக்கிரகத்தையுஞ் சிவபெருமானது திருவருளையு முதன்மையாகக் கொண்டு,—அதனை ஈராறு காண்டமாக் கழறி-அக்கருமகாண்டப் பொருளைப் பன்னிரண்டு காண்டமாக வகுத்துச் சொல்லி,—ஞானக் குருபரனைத் தொழுது இறைஞ்சி-ஞானாசாரியராகிய(அவ்வியாசமுனிவரை)வணங்கி,—அருத்தி உடன் தெரித்து உரைத்தான்-அன்போடு தெளிவாகச் சொல்லினார்.—எ. று. (௪௨)

அன்னவனுன் மொழிகரும காண்டத்தி னியல்பதனை யடைவிற் கேட்டு, நன்னலத்த தென்வுரைத்துச் சிரந்துளக்கி யாங்கவற்கு நயப்பா லங்ஙன், முன்னியமா ணாக்கர்க்குந் தானுரைத்த வேதாந்த சூத்திரங்க, டன்னருளா லளித்துவிரித் துரைத்தருளிப் பின்னொன்று சாற்று கின்றான்.

(இ-ள்) அன்னவனுல் மொழி கருமகாண்டத்தின் இயல்புதனை அடைவில் கேட்டு—அச்சைமினிமுனிவராற் சொல்லப்பட்ட கருமகாண்டத்தின் தன்மையை (அவ்வியாசமுனிவர்) கிரமமாகக் கேட்டு,—நல் நலத்தது என உரைத்து-நீ சொல்லிய இச்சூத்திரமானது மிகவும் நன்ருக இருக்கின்றது என்று சொல்லி,—சிரம் துளக்கி-சிரக்கம்பஞ் செய்து,—ஆங்கு அவற்கும் அளித்து-அவ்விடத்திலிருந்த அச்சைமினிமுனிவர்க்கும்சொல்லி,—அங்கண் துன்னிய மாணுக்கர்க்கும்-அவ்விடத்தினிறைந்திருந்த மற்றுள்ள மாணுக்கர்களுக்கும்,—நயப்பால்-விருப்பத்தோடு,—தான் உரைத்த வேதாந்த சூத்திரங்கள் தன் அருளால் விரித்து உரைத்தருளி-தான் சொல்லிய வேதாந்தசூத்திரங்களைத் தாம் கிருபையோடு விரித்துச் சொல்லியருளி,—பின் ஒன்று சாற்றுகின்றுன்-அதன் பின்பும் ஒன்று சொல்லுகின்றுர்.—எ. று, (௩௩)

முத்தியனைவருமடையத் தோன்றினமங் கதுகொண்டு முடிவிலாத, நித்தமறைகளையெல்லாம் பிறித்துவகுத் திசைத்தன மந்நெறியினில்லாச், சித்தமுடை வேதியர்சூத் திரர்மாதர் வீடடைவான் றெளிந்து கேட்க, வுத்தமமாம் புராணமிதி காசமிவை நேசமுற வுரைத்தோ மன்பால்.

(இ-ள்) அனைவரும் முத்தி அடையத் தோன்றினம்-யாவரும் மோக்ஷமடையும் படியாக (யாம் இப்பூமியிற்) பிறந்தோம்,—அது கொண்டு-அக்காரணத்தை முன்னிட்டு,—முடிவு இலாத நித்த மறைகளை எல்லாம் பிறித்து வகுத்து இசைத்தனம்-முடிவில்லாத நித்தியமாகிய வேதங்களை யெல்லாம்பிரித்து வெவ்வேருகவகுத்துச் சொன்னேம்,— அந்நெறியின் நில்லாச் சித்தம் உடைவேதியர் சூத்திரர் மாதர்-அவ்வேதவழியில் நில்லாத மனமுடையர்களாகிய பிராமணர்களும் சூத்திரர்களும் பெண்களும்—வீடு அடைவான்-மோக்ஷ மடையும் பொருட்டு,—உத்தமம் ஆம் புராணம் இதிகாசம் இவை தெளிந்து கேட்க-உத்தமமாகிய புராணங்களும் இதிகாசங்களுமாகிய இவைகளை மனம்தெளிந்து கேட்கும்படி,—நேசம் உற அன்பால் உரைத்தோம்—விருப்பமுண்டாகும்படி அன்போடு (யாம்) சொன்னேம்.—எ. று. (௩௪)

கருமநெறி ஞானநெறி யிவை யிரண்டும் விளங்கிய மெய்க் காதல்கூர, வொருமைதிகழ் சயிமினியா லெம்மானின் றுயர்ந்திங் குரைக்கப் பெற்ற, பொருவரிய சூத்திரங்க

டம்மாலெம் முடைத்தோற்றம் பொலிந்த திங்ஙன், றரு மொழிக்கோ ரையமிலை நங்கருத்துச் சமாதியிலே சார்ந்த தன்றே.

(இ-ள்) மெய்க் காதல் கூர ஒருமை திகழ் சைமினியால் எம்மால்—உண்மையாகிய விருப்பமிகும்படி ஒற்றுமையோடு விளங்குகின்ற சைமினி முனியாலும் எம்மாலும்,—கருமநெறி ஞானநெறி இவை இரண்டும் விளங்கிய-கிரியாமார்க்கம் ஞானமார்க்கம் என்று சொல்லப்பட்ட இவ்விருமார்க்கமும் '(உலகத்தில்) நிலைபெறுகின்றன,—நின்று ஆராய்ந்தி இங்கு உரைக்கப் பெற்றபொருவரிய சூத்திரங்கள் தம்மால்—நிலைபெறும்படி ஆராய்ந்து இவ்விடத்திற் சொல்லிய ஒப்பில்லாத வேதாந்த சூத்திரம் சைமினிசூத்திரம் என்னு மிவைகளால்,—எம்முடைய தோற்றம் பொலிந்தது-எங்களுடைய ஜெனனமானது பிரகாசித்தது,—இங்ஙனம் தரும் மொழிக்கு ஓர் ஐயம் இலை-இவ்விடத்தில் யாம் சொல்லிய வார்த்தைக்கு யாதொரு சந்தேகமு மில்லை,—நம் கருத்துச் சமாதியிலே சார்ந்தது-நம்முடைய மனமானது இனிமேல் சமாதி கூடுதற்குப் பொருந்தியது.—எ. று. அன்று ஏ அசைகள். (௩௫)

நீங்களுநங் கற்பனையை நீங்காம லோங்கிவளர் நெறிகளென்றுந் தேங்குமறை வழிதன்னை வருந்தியு மெவ்வுலகத்துஞ் சிறந்து நிற்கும் பாங்குபெற நிறுத்துமென வருள்செய்து மோனத்தின் பரிசுசார்ந்தான், வாங்கரிய தீவினையி னெறிமாற்றி மெய்ஞ்ஞான வரம்பு கண்டோன்.

(இ-ள்) வாங்கரிய தீவினையின் நெறி மாற்றி மெய்ஞ்ஞான வரம்பு கண்டோன்-நீக்குதற் கரிய பாவமார்க்கங்களைநீக்கி உண்மை ஞானத்தின் முடிவை யறிந்த அவ்வியாசமுனிவர்,—நீங்களும் நம் கற்பனையை நீங்காமல்-நீங்களும் நம்மால் கற்பிக்கப்பட்ட சன்மார்க்கத்தைக் கடவாமல்,—என்றும் ஓங்கி வளர் நெறிகள் தேங்கும் மறை வழி தன்னை—எப்பொழுதும் உயர்ந்து வளருகின்ற சன்மார்க்கம் நிறைந்த வைதிக மார்க்கத்தை,—எ உலகத்தும் சிறந்து நிற்கும் பாங்கு பெற-எந்தவுலகங்களிலுஞ் சிறந்து நிலை நிற்கும் படியான தன்மையைப் பொருந்த,—வருத்தியும் நிறுத்தும் என அருள் செய்து—வருத்த முற்றாயினும் நிலை நிறுத்துங்க ளென்று (அச்சைமினிமுதலிய முனிவர்களுக்கு) அனுக்கிரகஞ் செய்து விட்டு,—மோனத்தின் பரிசு சார்ந்தான்—மௌன நிலையை யடைந் தருளினார்.—எ. று. (௩௬)

பின்னரெழுந் தருளுடைய சயிமினிவன் றேசிகன்றன் பெருமை நோக்கிப், பன்னிருகா லட்டாங்க முறப்பணிந்து மகிழ்ந்திருகைப் பதுமங் கூட்பிச், சென்னியிறைஞ் சுதலொடுக்கத் துடனின்று நேசமெழச் சிந்தையூறு, மின்னமிர்த நிகரையா நீயுரைத்த தெலாந்தேற்ற மெம்மனோர்க்கே.

(இ-ள்) அருள் உடைய சைமினிவன் பின்னர் எழுந்து-கிருபையையுடைய சைமினிமுனிவர் பின்பு எழுந்து,—தேசிகன்றன் பெருமை நோக்கி-ஆசிரியராகிய வியாசமுனிவருடைய மகிமையையுற்றுப் பார்த்து,—பன்னிருகால் அட்டாங்கம் உறப் பணிந்து-பன்னிரண்டுமுறை எட்டங்கங்களும் (பூமியிலே) பொருந்தும்படி நமஸ்கரித்து,--மகிழ்ந்து-சந்தோஷித்து,--இருகைப்பதுமம் சென்னி கூப்பி-இரண்டு கைகளாகிய தாமரை மலர்களைச் சிரசின் மேற் குவித்து,—இறைஞ்சுதல் ஒடுக்கத்துடன் நின்று-வணங்கும் வணக்கத்தோடு நின்று,—நீ உரைத்தது எல்லாம்-தேவரீர் திருவாய் மலர்ந்தருளினவைகளெல்லாம்,—நேசம் எழச் சிந்தையூறும் இன் அமிர்தம் நிகர் ஐயா-விருப்பமிகும்படி மனதிற் சுரக்கின்ற இனிய அமிர்தத்தையொப்பாகும் ஐயரே,—எம்மனோர்க்குத் தேற்றம்-இது எம்போலிகளுக்குத் தெளிவுடையதாகும்.—ஏ. று. ஏ அசை. (௩௭)

அரந்தையிலா வறிவுடைய பெரியோர்தந் தோற்றங்களகில மெங்கும், புரந்தருள்கைப் பொருட்டன்றோ வப்படி நின் றுலகம் பொலிவு பெற்ற, வுரந்திகழுன் மாணாக்கனெனநின்றற் போதிக்கு முணர்வாலுய்ந்தே, னிரந்தரமு நன்குடையே னனுநினக்கொன்று நிகழ்த்த லுண்டால்.

(இ-ள்) அரந்தை இலா அறிவு உடைய பெரியோர்தம் தோற்றங்கள்-துன்பமில்லாத அறிவையுடைய பெரியோர்களது ஜனனங்கள்,—அகிலம் எங்கும் புரந்தருள்கைப் பொருட்டு அன்றே-உலகங்களெல்லாம் இரக்ஷித்தருளும் பொருட்டு அல்லவா,—அப்படி நின்றால் உலகம் பொலிவு பெற்ற-அவ்விதமே தேவரீரால் உலகங்கள் பிரகாசத்தை யடைந்தன,—போதிக்கும் உணர்வால் உரம் திகழ் உன் மாணாக்கன் என உய்ந்தேன்-(தேவரீரால்) உபதேசிக்கப்பட்ட, ஞானத்தினால் (தவ) வலிமை விளங்குகின்ற தேவரீரது மாணாக்கன் என்னும் பெயர் பெற்று உய்ந்தேன்,—

நிரந்தரமும் நன்கு உடையன் ஆனாலும் நினக்கு ஒன்று நிகழ்த்தல் உண்டு-எப்பொழுதும் (அடியேன்) நன்மையையுடையவனாயினும் தேவரீரிடத்திற் செய்ய வேண்டிய விண்ணப்ப மொன்றுண்டு.—
எ. று. ஆல் அசை. (௪அ)

மறைமுதலா கியகலையிற் பொருளுணர்மெய்ஞ் ஞானங்
கைவந்த தெங்கு, நிறைபரம சிவத்திலுணர் வுறுஞான மென்
னிடத்தி னிகழ்ந்த தில்லை, குறைவகல முத்திதனைக் கூடுவ
தெப் படியென்னக் குரவன் றானும், பொறையுடைய
சைமினியோ டென்னையுமந் தணத்திருத்திப் புகலுகின்றான்.

(இ-ள்) மறை முதலாகிய கலையில் பொருள் உணர் மெய்ஞ் ஞானம் கைவந்தது-வேதமுதலாகிய சாஸ்திரங்களைக் கற்றதினால் வஸ்து நிச்சயம் பண்ணத்தக்க உண்மையான அபரஞானமுண்டாயிற்று,— எங்கும் நிறை பரசிவத்தில் உணர்வு உறும் ஞானம் என்னிடத்து நிகழ்ந்தது இல்லை-சர்வவியாபியாகிய சிவபெருமானை அறியும்படியான பரஞானம் அடியேனிடத்து உதிக்கவில்லை,—குறைவு அகல முத்திதனைக் கூடுவது எப்படி என்ன-குறைவுநீங்க அடியேன் மோக்ஷத்தை அடைவதுவெவ்வாறு என்று கேட்க,—குரவன் தானும்-அவ்வாசாரியராகிய வியாசமுனிவர்,—பொறை உடைய சைமினியோடு என்னையும் மந்தணத்து இருத்தி-பொறுமையையுடைய சைமினி முனிவரோடு அடியேனையும் இரகசிய ஸ்தானத்தில் இருத்தி,—புகலுகின்றான்-உபதேசித்தருளுவாராயினார்—எ. று. (௪௯)

மைந்தநீ கேட்டவுரை பல்லுயிரின் பொருட்டன்றே
வருந்தி யார்க்குஞ், சிந்தைமகி ழுன்றனக்கும் வீடடையு நெறி
யுளது செய்யவேணி, யெந்தைதிரு வருளுடையே னாதலா
லியானறியா யாவுமில்லை, முந்துசிவ ஞானமலாற் கன்ம
கோடிகூ டருமோ முடியா முத்தி.

(இ-ள்) மைந்த வருதி-மைந்தனே வருக்கடவாய்,—நீ கேட்ட உரை பல உயிரின் பொருட்டு அன்றோ-நீ கேட்ட விஷயம் பல வகைப்பட்ட ஆன்மாக்கள் உய்யும் பொருட்டல்லவா?—யார்க்கும்-யாவர்களுக்கும்,—சிந்தை மகிழ் உன் தனக்கும்-மனமகிழ்ச்சியையுடைய உனக்கும்,—வீடு அடையும் நெறி உளது-மோக்ஷமடையும் படியான மார்க்க மொன்றிருக்கின்றது,—யான் செய்ய

வேணி எந்தை திருவருள் உடையேன்-நான் சிவந்த ஜடையை யுடைய எமது பரமபிதாவாகிய சிவபெருமானது திருவருளை யுடையேன்,—ஆதலால் யான் அறியா யாவும் இல்லை-ஆகையால் நான் அறியாதது ஒன்று மில்லை,—மூந்து சிவஞானம் அலால் கன்ம கோடிகள் முத்திதருமோ-முற்பட்டதாகிய சிவஞானமல்லாமல் கோடி கர்மங்களைச் செய்தாலும் அவைகள் மோக்ஷத்தைக் கொடுக்குமோ?—முடியா-(அவைகள் கொடுக்க) முடியா.—எ. று. (௫௦)

வேதமுடி வுரைப் பதுவே மெய்ஞ்ஞான மற்றையவை மிகுமஞ்ஞான, மோதலுறு மெய்ஞ்ஞான மாவதுயிர் பரம சிவத் துற்று வாழ்த, னாதனரு ளாற்குரவ னேயத்தான் மறை யந்த நாடா நின்ற, போதமுடை யவர்பெறுவ ரல்லாதோர் பெறுரெம்மாற் புகன்ற துண்மை.

(இ-ள்) வேத முடிவு உரைப்பதுவே மெய்ஞ்ஞானம்-வேத முடிவாகிய உபநிடதங்களிற் சொல்வதுவே மெய்ஞ்ஞானமாகும்,—மற்றை அவை மிகும் அஞ்ஞானம்-மற்றவைகளெல்லாம் மிகுந்த அஞ்ஞானமாகும்,—ஓதல் உறும் மெய்ஞ்ஞானம் ஆவது உயிர் பரசிவத்தை உற்று வாழ்தல்-(அவற்றுள்) சொல்லப்படுகின்ற மெய்ஞ்ஞானமானது ஆன்மாக்கள் பரசிவத்தைப் பொருந்தி வாழ்வதாம்,—நாதன் அருளால் குரவன் நேயத்தால் மறை அந்தம் நாடாநின்ற போதம் உடையவர் பெறுவர்-சிவபெருமானது திருவருளாலும் ஆசாரியருடைய அன்பினாலும் வேதமுடிவை யறிகின்ற மெய்ஞ்ஞானத்தையுடையவர்கள் (மோக்ஷத்தை) யடைவார்கள்,—அல்லாதோர் பெறுர் - அவர்களல்லாதவர்கள் அடையமாட்டார்கள்,—எம்மால் புகன்றது உண்மை-(ஆதலின்) எம்மாற் சொல்லப்பட்ட இவ்விஷயம் சத்தியமாகும்.—எ. று. (௫௧)

அந்தணர்சூத் திரர்நீச ரரிவையர்சங் கரசாதி யாயினோர்க்கும், கந்தருவ ரியக்கரிமை யவருரகர் முனிவர்முதற் கணத்தி னோர்க்குமீ, வெந்திறல்கூர் புள்விலங்கு கிருமிகீ டங்களுக்கும் விளம் பவைக்குஞ், சந்திரசே கரனருளுண் டாமாகிற் சிவஞானந் தானுண் டாகும்.

(இ-ள்) அந்தணர் சூத்திரர் நீசர் அரிவையர் சங்கரசாதி ஆயினோர்க்கும்-பிராமணர் சூத்திரர் நீசர் பெண்கள் சங்கரசாதியார் ஆகிய இவர்களுக்கும்,—கந்தருவர் இயக்கர் இமையவர் உரகர் முனி

வர் முதல் கணத்தினோர்க்கும்-கந்தருவர் இயக்கர் தேவர் நாகர் முனிவர் முதலிய கணங்களுக்கும்,—வெம்திறல் கூர் புள் விலங்கு கிருமி கீடங்களுக்கும்-கொடிய வலிமை மிகுந்த பக்ஷி மிருகம் கிருமி புழுக்களுக்கும்,—விளம்பு எவைக்கும்-சொல்லப்பட்ட மற்றெவைகளுக்கும்,—சந்திரசேகரன் அருள் உண்டாம் ஆகில்-சந்திரசேகரனாகிய சிவபெருமானுடைய கிருபையுண்டாகுமானால்,—சிவஞானம் உண்டாகும்-சிவஞானம் உண்டாகும்.—எ. று. தான் அசை. (௫௨)

அன்றியுரைக் கருமனந்த கோடிபிறப் பிடைக்கரும மாற்றினாலுந், துன்றரிது பரகதியைச் சைமினிவ வேதாந்தச் சொற்க டேர்ந்து, நன்று திகழ் பொருட்டெளிவாஞ் சிவ ஞானஞ் சிவனருளா னண்ணின்முத்தி, யொன்றலெளி தாத லான் மூதுணர்வா லிதற்கேற்ற வுறுதி யோர் வாய்.

(இ---ள்) சைமினிவ-சைமினி முனிவனே,—அன்றி-இவைகளேயன்றி,—உரைக்கரும் அனந்த கோடி பிறப்பிடைக் கருமம் ஆற்றினாலும்-சொல்லுதற்கரிய அளவில்லாத கோடிஜன்மங்களில் (யாகாதி)கர்மங்களைச் செய்தாலும்,—பரகதியைத் துன்றரிது-மோக்ஷத்தை அடைதல் அரிதாகும்,—வேதாந்தச் சொற்கள் தேர்ந்து-வேதமுடிவாகிய உபநிஷதப் பொருளை யறிந்து,—சிவன் அருளால்-சிவபெருமானுடைய திருவருளால்,—நன்று திகழ் பொருள் தெளிவாம் சிவஞானம் நண்ணின்-நன்மைவிளங்குகின்ற உண்மைப்பொருளைத் தெளிதற் கேதுவாகிய சிவஞானத்தை யடைந்தால்,—முத்தி ஒன்றல் எளிது-மோக்ஷத்தை யடைதல் எளிதாகும்,—ஆதலால்-ஆகையால்,—மூது உணர்வால் இதற்கு ஏற்ற உறுதி ஓர்வாய்-பேரறிவினால் இதற்குச் சாதனமாகிய உறுதியை நீ அறிந்து கொள்ளக் கடவாய்.—எ. று. (௫௩)

இந்நிலையி னல்லன்றிக் கலையறிவி னன்முத்தி யெய்த லாமோ, மன்னுமனு பவஞான மடையுநெறி வினவுதியேன் மாசொன்றில்லா, மின்ன விருஞ் சடாடவிமா தவநாத மிகுஞ் சாம வேதந்தன்னிற், றன்னிகரா மொருதகர வித்தையுள தனிலைமை சாற்றற் பாற்றே.

(இ-ள்) மாசு ஒன்று இல்லா மின் அவிரும் சடாடவி மாதவ-குற்றமில்லாத மின்னலைப்போல் விளங்காநின்ற ஜடைக்காட்டையுடைய பெரிய தவசிரேஷ்டராகிய சைமினியே,—இந்நிலையினால்

அன்றிக் கலை அறிவினால் முத்தி எய்தல் ஆமோ-மேற்சொல்லிய இத்தன்மையினா லல்லாமல் சாஸ்திர ஞானத்தினால் மோக்ஷமடையக் கூடுமோ? (கூடாது);—மன்னும் அனுபவ ஞானம் அடையும் நெறி வினவுதியேல்-நிலைபெற்ற அனுபவ ஞானம் அடையும் மார்க்கத்தைக் கேட்பாயாயின், (சொல்லுகின்றோம்),—நாதம் மிகும் சாம வேதம் தன்னில்—இசை மிகுந்துள்ள சாமவேதத்தில்,—தன் நிகராம் ஒரு தகர வித்தை உளது-தனக்குத் தானே ஒப்பாகிய ஒரு தகரவித்தை சொல்லப்பட்டிருக்கின்றது,—அதன் நிலைமை சாற்றற் பாற்றோ—அதன் நிலைமை சொல்லுந் தன்மை யுடையதோ? (அன்று).—எ. று. (ருச)

ஒருபிரம புரந்தன்னி னுண்ணியபுண் டரிகவகத் துணர்வுக் கெய்தா, வருளிடமா கியநுண்பே ராகாய முண்டஃதே யறிஞர் தம்மால், கருதவிரும் புதுமதுவா நேடுவதும் புறப்பூத ககனந் தன்னின், மருவியவெல் லையினுமிகுந் தெஞ்ஞான்றுங் குறைவின்றி வயங்கா நிற்கும்.

(இ-ள்) ஒருபிரமபுரம் தன்னின் நுண்ணிய புண்டரிக அகத்து-ஒப்பில்லாத பிரம புரத்திலுள்ள நுட்பமாகிய புண்டரீக வீட்டில்,—உணர்வுக்கு எய்தா அருள் இடம் ஆகிய நுண் பேர் ஆகாயம் உண்டு-அறிவுக் கெட்டாததாயும் அருளுக் கிடமாயு முள்ள சித்து என்னும் பெயரையுடைய ஆகாச மொன்றுண்டு,—அஃதே அறிஞர் தம்மால் கருத விரும்புதும்—அச்சிதாகாசமே அறிவுடைய பெரியோர்களால் தியானிக்கும்படி விரும்பத்தக்கது,—நேடுவதும் அதுவாம்—யாவராலுந் தேடப்படுவதும் அவ்வாகாயமே யாம்,—புறப்பூதக் ககனந் தன்னில் மருவிய் எல்லையினும்-புறப் பூதமாகிய சடாகாசத்திற் பொருந்திய முடிவிலும்,—எஞ்ஞான்றும் குறைவு இன்றி மிகுந்து வயங்கா நிற்கும்-எப்பொழுதுங் குறைவில்லாமல் மேம்பட்டு விளங்கிக் கொண்டிருக்கும்.—எ. று. (ருரு)

விண்ணுலக மண்ணனல்கா லிரவிமதி தாரகணா மின்களாதி, யெண்ணுமுள திலதென்னப் படும்பொருள்க ளைத்துணைக்கு மிருப்பா மந்த, நுண்ணியவந் தரமெங்கு நிறைந்துசிறந் தெவரறிவு நோக்கிக் காண, நண்ணரிதாய் மூப்பிறப்புச் சோகந்தா ரகந்தாக நண்ணு தோங்கும்.

(இ—ள்) விண்— அவ்வாகாயமானது,— உலகம்—உலகத்தி னிடத்துள்ள,—மண் அனல் கால் இரவி மதி தாரகணம் மீன்கள் ஆதி எண்ணும்-பிருதுவி அக்கினி வாயு சூரியன் சந்திரன் இருபத் தேழு நக்ஷத்திரங்கள் மற்றுள்ள நக்ஷத்திரங்கள் முதலாக எண்ணப் படுகின்ற,—உளது இலது எனப்படும் பொருள்கள் எத்துணைக் கும் இருப்பாம்-நிலையுள்ளதும் நிலையில்லாததும் மாகச்சொல்லப்ப டும் பொருள்க ளெல்லாவற்றிற்கும் இருப்பிடமாகும்,—அந்த நுண் ணிய அந்தரம் எங்கும் நிறைந்து-அச்சிதாகாசமானது எங்கு நிறை ந்து,—எவர் அறிவும் சிறந்து நோக்கிக் காண நண் அரிதாய்-எவர் களுடைய அறிவினாலும் சிறப்புற்று உற்றுப்பார்த்துக் கிட்டுதற் கரி தாய்,—மூப்பு இறப்புச் சோகம் தாரகம் தாகம் நண்ணாது ஓங்கும்- வயோதிகம் இறப்பு சோகம் ஆகாரம் தாகம் ஆகிய இவைகளையடை யாமல் உயர்ந்து விளங்கும்.—எ. று. (ருசு)

கூறியவப் பொருணியமித் ததுவும்விரும் பியதுமொரு குறைவுண் டாகா, தேறவகி லாண்டமெலா நிற்குநிலை தனி னிறுத்துந் திர மாகு, மாறிலது தனையுணர்ந்தோர் முத்தரனு பவஞான மருவி வாழும், பேறிதெனச் சாமமறை மொழி தகர வித்தை யிதுவேபேசுங் காலே.

(இ—ள்) கூறிய அப்பொருள்—சொல்லப்பட்ட அச்சிதாகா சமாகிய பொருளினிடத்து,—நியமித்ததும் விரும்பியதும் ஒரு குறைவு உண்டாகா-நியமிக்கப்பட்டதும் இச்சிக்கப்பட்டதுமாகிய ஒரு குறைவும் உண்டாகாவாம்,—அகில அண்டம் எலாம் தேற நிற்கும் நிலைதனில் நிறுத்தும் திரமாகும்-உலகங்களும் அண்டங்களு மாகிய எல்லாவற்றையுந் தெளியும்படி அதுஅது நிற்கும் நிலைகளில் நிறுத்தும்படியான வலிமையுடையதாகும்,—மாறு இல் அது தனை உணர்ந்தோர் முத்தர்-மாறுபடுதலில்லாத அச்சிதாகாசத்தை யறிந்த வர்களே ஜீவன்முத்தராவார்கள்,—பேசுங்கால்-சொல்லுமிடத்து,— அனுபவஞானம் மருவி வாழும் பேறு இது என-அனுபவஞானத் தைப் பொருந்தி வாழ்தலாகிய பயன் இது என்று,—சாம மறை மொழி தகரவித்தை இது-சாமவேதத்திற் சொல்லுகின்ற தகர வித்தையு மிதுவேயாம்.—எ. று. ஏ அசை. (ருஎ)

மலைவகல வுணர்வுதர வரியதெனச் சைமினியும் வணங்கி ஞானத், தலைவதிக பூருந்தகர வித்தைதனை நன்குபெறத்

தக்க வன்பா, லலைவகல வுரைத்திடவும் புன்மதியே ஞதலிஞ லடிய னேற்கந், நிலைமைதனி லியல்பறிவி னிடைச்சிறிதுந் தெளிவு பெற நிகழ்ந்த தில்லை

(இ—ள்) சைமினியும் சைமினிமுனிவரும்,—மலைவு அகல உணர்தரவும் அரியது என வணங்கி—மயக்க நீங்கும்படி அத் தகரவித்தையை அறியத்தக்க ஞானம் உண்டாகுதலும் தனக்கு அருமையாக இருக்கின்றதென்று (ஆசாரியராகிய வியாசமுனிவரை) நமஸ்கரித்து,—ஞானத் தலைவ—ஞான சிரேஷ்டரே,—திகழ் அரும் தகர வித்தைதனை-விளங்குகின்ற அருமையாகிய தகரவித்தையை,— தக்க அன்பால் நன்கு பெற அலைவு அகல உரைத்திடவும்- (தேவரீர்) தகுதிபொருந்திய கிருபையோடு செவ்வையாக விளங்கும் படியாயும் மனத்திரிபு நீங்கும்படியாயும் திருவாய்மலர்ந்தருளியும்,— புன்மதியேன் ஆதலினல்-சிற்றறிவுடையஞதலினல்,—அடியேற்கு- அடியேனுக்கு,—அந்நிலைமைதனில்—அத்தகரவித்தையின் தன்மை யில்,—இயல்பு அறிவின் இடைச் சிறிதுந் தெளிவு பெற நிகழ்ந்தது இல்லை-அடியேனுடைய இயற்கையறிவாகிய சிற்றறிவினிடத்தே கொஞ்சமுந் தெளிவுண்டாகும்படித் தோன்றவில்லை.—எ. று.(ருஅ)

புகலரிய பிரமபுர மப்பிரம புரந்தன்னிற் புண்டரீக,வக மகத்து ணுண்ணியபே ராகாய மென்வருளா லறையா நின்ற, திகழ்வுறுமிவ் விவற்றியல்பு தெளிவுறநீ செப்புகெனச் சென்னி தாழ்த்தான், முகமலரா வகமலர வாதரா யணன்விரித்து மொழிவ தானன்.

(இ-ள்) புகல் அரிய பிரம புரம் அப்பிரம புரம் தன்னில் புண்டரீக அகம்-சொல்லுதற்கரிய பிரமபுரமும் அப்பிரமபுரத்திலுள்ள புண்டரீகவீடும்,—அகத்துள் நுண்ணிய பேர் ஆகாயம் என அருளால் அறையாநின்ற திகழ்வுறும் இவற்றியல்பு—அப்புண்டரீக வீட்டிலுள்ளசிதாகாசமென்று தேவரீர் கிருபையோடுசொல்லுகின்றதாய் விளங்குகின்றதுமான இவைகளின் தன்மைகளை,—இங்குதெளிவுற நீ செப்புக எனச் சென்னி தாழ்ந்தான்—இப்பொழுது அடியேனுக் குத் தெளிவுண்டாகும்படித் தேவரீர் திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று சைமினிமுனிவர் நமஸ்கரித்தார்,—வாதராயணன் முகமலர அகமலர விரித்து மொழிவது ஆனன்-(அதைக்கேட்ட) வியாச முனிவர் முகமலர்ச்சியோடும் மனமகிழ்ச்சியோடும் விரித்துச் சொல்லுவாராயினர்.—எ. று. (ருகூ)

புரிகரணந் தனைக்கடந்து நிற்றலாற் சொற்றகைய புவ னத் தியார்க்குந், தெரிவரிதா யுண்மையாய்ச் சித்தாயா னந்த மாய்த் திரியா தோங்கற், குரியபரி பூரணமா யிருக்கின்ற பரப் பிரம முள்ளே காணும், பெரியநலத் தாலிந்த வுடல்பிரம புரமெனப்பேர் பெற்ற தம்மா.

(இ-ள்) புரி கரணம் தனைக் கடந்து நிற்றலால்-மாறுபாடு பொருந்திய மனம் வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களையுங் கட ந்து நிற்கின்ற படியாலும்,—சொல் தகைய புவனத்து யார்க்குந் தெரிவரிதாய்-சொல்லத்தக்க தகுதி பொருந்திய உலகத்தின் கணு ள்ள யாவர்களுக்கு மறிதற் கரிதாயும்,—உண்மையாய்-உண்மைப் பொருளாயும்,—சித்தாய் - அறிவாயும்,—ஆனந்தமாய் - மகிழ்ச்சியுள் ளதாயும்,—திரியாது ஓங்கற்கு உரிய பரிபூரணமாய்-மாறுபடாமல் உயர்தற்குரிய பரிபூரணமாயும்,—இருக்கின்ற பரப்பிரமம்-இவ்வி தமாயிராநின்ற பரப்பிரமமாகிய சிவம்,—உள்ளே காணும் பெரிய நலத்தால்-(பிண்டமாகிய சரீரத்தி) னுள்ளே விளங்குகின்ற பெரிய நன்மையாலும்,—இந்த உடல் பிரமபுரம் எனப் பேர் பெற்றது- இந்தச்சரீரம் பிரமபுரம் எனப் பெயர் பெற்றது.—எ. று. அம்மா வியப்பிடைச்சொல். (சு0)

சொற்றவுடற் கமலநிக ருளக்கமலம் பிரமமுறை தொ ன்மை தன்னு, னற்றகைய புண்டரிக வகமாயிற் றந்தவக நண்ண லானூன், பற்றுடலம் புரமெனப்பேர் படைத்தது புண் டரிகவகம் பற்றி நிற்றல், பெற்றபிர மங்ககன வுவமை யாற் ககனமெனப் பேசிற் றும்மால்.

(இ-ள்) சொற்ற உடல் கமலம்நிகர் உள்க்கமலம்-சொல் லப்பட்ட சரீரத்திலுள்ள தாமரைமலரை யொத்த இருதயகமலத் தில்,—பிரமம் உறை தொன்மை தன்னால்-அப்பிரமமாகிய சிவம் வசிக்கின்ற முறைமையால்,—நற்றகைய புண்டரிக அகம் ஆயி ற்று-நல்ல தகுதி பொருந்திய புண்டரீக வீடாயிற்று,—அந்த அகம் நண்ணலால் ஊன் பற்று உடலம் புரம் எனப்பேர் படைத் தது-அப்புண்டரீகவீடாகிய மனம் பொருந்தியிருத்தலால் மாமிச ப்பற்றையுடைய சரீரம் பிரமபுரமெனப்பேர் பெற்றது,—புண்டரிக அகம் பற்றி நிற்றல் பெற்ற பிரமம்-அப்புண்டரீக வீட்டைத்தனக் குச் சுதந்தரமாகப் பற்றி நிலைபெற்று எழுந்தருளியிருக்கின்ற பிர

மம்,—ககன உவமையால்-ஆகாசத்துக் கொப்பாயிருத்தலால்,—ககனம் எனப் பேசிற்று-(அப்பிரமத்தை) ஆகாசம் என்று சொல்லப்பட்டது.—எ. று. (சுக)

தனைநிகராம் பேரருளே மூப்பிறுதி முதற்குணங்கடயக்கு மென்னு, நினைவொடுநீ பலகாலும் பாவித்தா லனுபவத்தி னிலைவந் தெய்து, மனையதென வருந்தகர வித்தையிது காயம்போ லண்டத் துள்ளு, மினையமுறை மையினிற்குங் காயத்தின் பரிசுனக்கிங் கிசைத்தோ மிப்பால்.

(இ-ள்) தனை நிகராம் பேர் அருளே-தனக்குத் தானே ஒப்பாகிய பெரிய திருவருளே,—மூப்பு இறுதி முதல் குணங்கள் தயங்கும் என்னும் நினைவொடு—வயோதிகம் இறப்பு முதலிய குணங்கள் உண்டாகும் என்னும் நினைவுடனே,—பலகாலும் பாவித்தால் அனுபவத்தின் நிலை வந்து எய்தும்—நீ பலமுறையும் பாவனை செய்வையாயின் அனுபவஞானத்தின் றன்மை வந்து கூடும்,—அனையது என வரும் தகர வித்தை இது—அப்படிப்போல வருகின்ற தகரவித்தையும் இதுவாகும்,—காயம் போல் அண்டத்துள்ளும் இனைய முறைமையின் நிற்கும்-சரீரம்போல் அண்டத்துள்ளும் இந்த முறைமையாகவே நிற்கும்,—காயத்தின் பரிசு இங்கு உனக்கு இசைத்தோம்-சரீரமாகிய (பிண்டத்தின்) றன்மையையும் இப்பொழுது உனக்குச் சொன்னோம்,—இப்பால்-இனிமேல்.—எ. று. (சுஉ)

அண்டமதிற் பாவிக்கு முறைமைகே ளண்டமருள் பிரமற்கண்டம், வண்டகைய வடிவதனாற் பிரமபுர மவ்வண்ட வடிவினோர்க்குக், கொண்ட வுளப் புண்டரிகம்பு லியூரென் றருமறைகள் கூறலாலே, யெண்டருபுண் டரிகவக மெனப்படுமப் பதியினு மிசைப்பக் கேட்டி.

(இ-ள்) அண்டமதிற் பாவிக்கும் முறைமை கேள்-சைமினியே அண்டத்தில் பாவனை செய்கின்ற முறைமையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக,—அண்டம் அருள் பிரமற்கு அண்டம் வண்தகைய வடிவு-அண்டங்களைச் சிருஷ்டிக்கின்ற பிரமாவுக்கு அவ்வண்டமானது அழகிய சரீரமாகும்,—அதனால் பிரமபுரம்-அக்காரணத்தால் (அப்பிரமாவினுடைய சரீரமாகிய அண்டம்) பிரமபுரமாகும்,—அவ்வண்ட வடிவினோர்க்கு உளம் கொண்ட

புண்டரிகம் புலியூர் என்று-அவ்வண்ட வடிவினராகியபிரமாவுக்கு இருதயகமலம் புலியூராகுமென்று,—அருமறைகள் கூறலாலே-அரியவேதங்கள் சொல்லுதலினாலே,—எண் தரு புண்டரிக அகம் எனப்படும்-(அப்புலியூர்) யாவர்களாலும் மதிக்கத்தக்க புண்டரீக வீடு என்று சொல்லப்படும்;—அப்பதி இன்னம் இசைப்பக் கேட்டி-அப்புலியூரின் மகிமையை இன்னமுஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக.—எ. று. (௬௩)

அப்பெருஞ்சிற் றம்பலத்து ளானந்த தாண்டவநின் றாடா நின்ற, மெய்ப்பொருளை நண்ணியவந் தரமலின மடையாளம் விகாரமின்றி, யொப்பிகந்து நிறைந்திருக்கு மம்பரத்தோ டுடன்மிகவு முவமை யெய்து, மிப்பரிசா னுண்ணியவா காயமென வேதமெலா மிசையா நிற்கும்.

(இ-ள்) அப்பெரும் சிற்றம்பலத்துள் நின்று ஆனந்த தாண்டவம் ஆடாநின்ற மெய்ப் பொருளை நண்ணிய அந்தரம்-அப்புலியூரிலுள்ள பெரிதாகிய திருச்சிற்றம்பலத்துள் நின்று ஆனந்த தாண்டவம் செய்தருளாநின்ற உண்மைப் பொருளாகிய சிவமே சிதாகாசமாகும்,—மலினம் அடையாளம் விகாரம் இன்றி-அழிவும் அடையாளமும் விகாரமுமில்லாமலும்,—ஒப்பு இகந்து-ஒப்பில்லாமலும்,—நிறைந்து இருக்கும் அம்பரத்தோடு-நிறைந்திருக்கின்ற அச்சிதாகாசத்தோடு,—உடல் உவமை மிகவும் எய்தும்-சரீரஉவமையை மிகவும் பொருந்தி நிற்கும்,—இப்பரிசால்-இத்தன்மையால்,—நுண்ணிய ஆகாயம் என வேதம் எலாம் இசையா நிற்கும்-(இப்புலியூரைச்) சிதாகாசம் என்று வேதங்களெல்லாஞ் சொல்லும்.—எ. று. (௬௪)

பூதவா காயம்போற் சடமாகா தருட்சித்தாய்ப் பொலிதலாலே, யோதருமம் பரமான சபாபதியைச் சிதம்பரமென் றுரைத்த தந்தத், தீதகன்ற சிதம்பரமெந் நாளுமில காநிற்குஞ் செயலா லென்று, மேதமிலாம் பதியதற்குஞ் சிதம்பரமென் றருணாம மெய்திற் றாமால்.

(இ-ள்) பூத ஆகாயம் போல் சடமாகாது-பூதாகாயம் போலச் சடமாகாது,—அருள் சித்தாய்ப் பொலிதலாலே-கிருபை பொருந்திய ஞானமயமாய் விளங்குகின்றமையாலே,—ஓதரும் அம்பரமான சபாபதியைச் சிதம்பரம் என்று உரைத்தது-சொல்லுதற்கரிய ஆகா

சரூபராய் விளங்காநின்ற சபாபதியைச் சிதம்பரம் என்று (வேதங்கள்) சொல்லியது,—அந்தத் தீது அகன்ற சிதம்பரம் எந்நாளும் இலகா நிற்கும் செயலால்-அக்குற்றமில்லாத சிதாகாசரூபராகிய சபாபதி அவ்விடத்தில் எந்நாளும் நீக்கமின்றி விளங்கிக் கொண்டிருக்கின்ற தன்மையால்,—என்றும் ஏதம் இலாப் பதியதற்குச் சிதம்பரம் என்று அருள் நாமம் எய்திற்று-எப்பொழுதும் குற்றமில்லாத அந்த க்ஷேத்திரத்திற்குச் சிதம்பரம் என்று சொல்லப்படும் திருநாம முண்டாயிற்று.—எ. று ஆம் ஆல் அசைகள். (௫௫)

திகழ்ந்தவருட் சிதம்பரமாந் திருச்சிற்றம் பலத்துறை யுந் தேவுன்னாலே, புகழ்ந்திடவுந் தியானத்திற் புணர்ந்திடவும் பணிந்திடவும் பூசை செய்து, மகிழ்ந்திடவும் பெறக் கடவ னிப்படிநீ நடத்தியேன் மலமா யாதி, யகழ்ந்தரிய பர ஞான வெளிவீட்டி லடைவதற்கோ ரைய முண்டோ.

(இ-ள்) திகழ்ந்த அருள் சிதம்பரம் ஆம் திருச்சிற்றம்பலத்து உறையும் தே-விளங்காநின்ற கிருபையையுடைய சிதாகாசமாகிய திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுளாகிய சிவபெருமான்,—உன்னால்-(சைமினியே) உன்னால்,—புகழ்ந்திடவும்-துதிக்கவும்,—தியானத்திற் புணர்ந்திடவும்-தியானத்தில் வைக்கவும்,—பணிந்திடவும்-வணங்கவும்,—பூசை செய்து மகிழ்ந்திடவும்-பூசை செய்து ஆனந்திக்கவும்,—பெறக்கடவன்-பெறத்தக்கவனாவான்,—நீ இப்படி நடத்தியேல்-நீ இந்தப்படி நடத்தி வருவாயாயின்,—மலம் மாயாதி அகழ்ந்து-மலம் மாயை முதலாகிய பாசங்களைக் களைந்து,—அரிய பர ஞான வெளி வீட்டில் அடைவதற்கு ஓர் ஐயம் உண்டோ-கிடைத்தற் கரிய பரஞான வெளியாகிய மோக்ஷத்தை அடைவதற்குச் சந்தேகம் உண்டோ? (இல்லை)—எ. று. (௫௬)

அத்தலத்தி லுறையுமெவ ருந்தகர வித்தைதனை யறிந்து வந்தித், துத்தமநன் னெறியடைந்தோ ராவரிது நிச்சயமிவ் வுடலம் பெற்ற, மெய்த்தகைய பயன்பெறுவோர் யாவோரும் பணிந்திறைஞ்சு மேன்மை யோர்க், ணித்தமுறு நலமுடையோ ரவர்பெருமை யெவரா லுநிகழ்த்த லாமோ.

(இ-ள்) அத்தலத்தில் உறையும் எவரும்-அச்சிதம்பரஸ்தலத்தில் வசிக்கின்ற யாவர்களும்,—தகரவித்தைதனை அறிந்து வந்தித்து

உத்தம நன்னெறி அடைந்தோர் ஆவர்-தகரவித்தையை யறிந்து வழிபட்டு மேலான வழியை யடைந்தவராவர்,—இது நிச்சயம்-இது நிச்சயமாகும்,—இவ்வுடலம் பெறமெய்த் தகைய பயன் பெறுவர்-இச்சரீர மெடுத்ததனு லுண்டாகிய உண்மைப் பிரயோசனத்தை யடைவார்கள் ;—யாவோரும் பணிந்து இறைஞ்சும் மேன்மையோர்கள்-அவர்கள் எல்லாராலும் கீழ்ப்படிந்து வணங்கத்தக்க மேன்மையை யுடையவர்க ளாவார்கள்,—நித்தம் உறும் நலம் உடையோர்-அவர்கள் நித்தியத்துவத்தை யடையும் நன்மை யுடையவர்களாவார்கள்,—அவர் பெருமை எவராலும் நிகழ்த்தலாமோ-அவர்கள் பெருமையை எவர்களாலுஞ் சொல்ல முடியுமோ? (முடியாது).—எ. று. (சுஎ)

தக்கவுட லண்டத்தி னிருவகையாய் விளங்குமெனச் சாமவேத, மிக்கபரி சாலுரைத்த வருந்தகர வித்தைதனை விளம்பி னேமாற், றொக்குடைய காத்திரத்திற் பாவிக்க வரிதெவர்க்குந் துளங்க முத்தி, புக்குறுதி பெறவண்டத் தருந்தகர வித்தைதனைப் போற்றிக் காண்பாய்.

(இ-ள்) தக்க உடல் அண்டத்தில் இருவகையாய் விளங்கும் என-தகுதியாகிய பிண்டத்திலும் அண்டத்திலும் இரண்டு வகையாய் விளங்கும் என்று,—சாம வேதம் மிக்க பரிசால் உரைத்த அரும் தகர வித்தைதனை விளம்பினேம்-சாமவேதமானது மேன்மையோடு சொல்லிய அருமையாகிய தகர வித்தையை யெடுத்துச் சொன்னோம்,—எவர்க்கும் தொக்கு உடைய காத்திரத்தில் பாவிக்க அரிது-யாவர்க்குஞ் சருமத்தையுடைய சரீரத்தில் பாவனை செய்வது அரிதாகும்,—துளங்க முத்தி புக்கு உறுதி பெற-விளங்கும்படி மோக்ஷத்தை யடைந்து உறுதியைப் பெறுதற்கு,—அண்டத்து அரும் தகரவித்தைதனை போற்றிக்காண்பாய்-அண்டத்திலுள்ள அருமையாகிய தகரவித்தையைச்சாவதானமாகக் கண்டு கொள்ளக்கடவாய்.—எ. று. ஆல் அசை. (சுஅ)

அத்தகர வித்தையென் விங்குரையா னின்றது நுண்ணறிவர் மென்று, முத்தலைவேற் கைத்தலத்து முக்கணரு ளானந்த முதல்வ னெனநுஞ், சித்தவைபின் ஞானநா டகங்காண்டல் பேறென்றுந் தேறுவன்மால், வித்தகமா யுணாத்தனம்யா மிவ்வளவோ வின்னமுநீ விளம்பக் கேண்மோ.

(இ-ள்) அத் தகர வித்தை என இங்கு உரையாநின்றது நுண் அறிவாம் என்றும் - அந்தத் தகரவித்தையென்று இவ்விடத்துயாம் சொல்லியது நுட்பமாகிய ஞானமாகுமென்றும்,— முத்தலைவேல் கைத்தலத்து முக்கண் அருள் ஆனந்தம் முதல்வன் என்றும்-மூன்று தலையையுடைய சூலப்படையை யேந்திய திருக்கரத்தையும் மூன்று கண்களையும் கிருபையையும் ஆனந்தத்தையும் உடைய சிவமே முதல்வன் என்றும்,—சித் அவையின் ஞான நடம் காண்டல் பேறு என்றும் - சிற்சபையினிடத்திற் செய்யப்படுகின்ற ஞானமயமாகிய திருநிருத்தத்தைத் தரிசித்தலே அடையக் கூடிய பேறு என்றும்,—யாம் தேரு - நாம் (அதனைத்) தெளிந்து,—அன்பால் வித்தகமாய் உரைத்தனம்-அன்போடு உனக்கு ஞானமுண்டாகத் தக்கதாய்ச் சொன்னோம்,—இவ்வளவோ - இம்மட்டோ,—நீ இன்னமும் விளம்பக் கேண்மோ - (சைமினியே) நீ இன்னமும் யாம் சொல்லுகின்றோம் கேட்பாயாக.—எ.,று.                                        (சுகூ)

விற்கதுவும் விராட்புருடன் மனப்புண்டரீகத்து விழிகண் மூன்று, மற்களமு மிலகவுமை காணநிலை யாய் நிலைய மடைந்த வானுச், சிற்கனமா யானந்தத் திறமான தலைவனை முன் சென்று கண்டோர், நற்கதியோ ரெனக்கைவல் லியமறையன் பான்முனிவ நவிற்றல் காண்டி.

(இ-ள்) முனிவ - சைமினிமுனிவனே,—வில் கதுவும் விராட்புருடன் மனப் புண்டரீகத்து - ஒளிபொருந்திய விராட்புருடனுடைய இருதயகமலத்தினிடத்து,--விழிகள் மூன்றும் அல் களமும் இலக-மூன்று திருக்கண்களும் இருள் போன்ற கரிய திருக்கண்டமும் விளங்கவும்,—உமை காண - சிவகாமியம்மையார் தரிசிக்கவும்,—நிலையாய் - நிலைநிற்பதாய்,—நிலையம் அடைந்த ஆனுச் சிற்கனமாய்-நிலைமை பொருந்திய கெடுதலில்லாத ஞானுகாச ரூபமாய்,--ஆனந்தத் திறமான தலைவனை - ஆனந்தமே ஸ்திரமாயுள்ள தலைவராயெழுந்தருளியிராநின்ற நடேசப்பெருமானை,—முன் சென்று கண்டோர்-சந்நிதியிற் போய்த் தரிசித்தவர்கள்,—நல் கதியோர் என-நன்மையாகிய மோக்ஷத்தை யடைவார்களென்று,—கைவல்லிய மறை நவிற்றல் அன்பாய் காண்டி - கைவல்லியோபநிடதத்தில் சொல்லியிருத்தலை அன்போடு அறியக்கடவாய்.—எ. று.                                        (எ0)

ஏதமிலாக் கடவுளர்க ளெல்லார்க்குங் காரணமா யிருப் போ னந்தச், சீதமா லுக்கப்பா லாயினேன் மலர்த்தவிசிற்

சிறந்தவேத, மாதவனைப் படைத்தருள்வோன் யாதொருவன் மலமாயை கரும நீக்கிச், சாதல்பிறப் பிவை யொழிக் குஞ் சிவஞானம் யாவோர்க்குந் தருவோ னென்றும்.

(இ-ள்) ஏதம் இலாக் கடவுள்கள் எல்லார்க்கும் காரணமாய் இருப்போன்-குற்றமில்லாத தேவர்களெல்லார்க்குங் காரணமாயிருப் பவனும்,—அந்தச் சீத மாலுக்கு அப்பால் ஆயினோன்-அந்தக்கிருபை பொருந்திய விஷ்ணு மூர்த்திக்கு அதீதப்பட்டவனும்,—மலர்த் தவி சிற் சிறந்த வேத மாதவனைப் படைத்தருள்வோன்-தாமரை யாசனத் திற் சிறந்து விளங்காநின்ற வேதத்தை யறிந்த மகா தவசிரேஷ்ட ராகிய பிரமதேவரைச் சிருஷ்டித்தருளினவனுமா யுள்ளவன்,— யாதொருவன் - எவ்வொருவனோ (அவனே),—யாவோர்க்கும் மலம் மாயை கர்மம் நீக்கி-எல்லாருக்கும் ஆணவம் மாயை கர்மம் என்னும் மும்மலங்களையு நீக்கி,—சாதல் பிறப்பு இவை ஒழிக்கும் சிவஞானம் தருவோன் என்றும் - இறத்தலும் பிறத்தலுமாகிய இவைகளை நீக்கு கின்ற சிவஞானத்தைக் கொடுத்தருள்வோன் என்றும்.—எ. று.(எக)

இது முதல் மூன்று பாட்டு குளகம்.

உருத்தெரியா மலமிகந்து காத்திரத்து ளருளகமா யொளிரா நின்ற, திருந்தகு மெய்ம் மனக்கமலத் துட் பொலியு நுட்ககனஞ் சிறந்திலங்கும், வருத்தமுறும் பிறப் பிறப்பு மாமாயை கருமமும்போய் மருங்கு சாய, வருத்தி யுடன் யாவோரு நாடோறும் வழிப்படுவ ததுவே யென்றும்.

(இ-ள்) உருத் தெரியா மலம் இகந்து காத்திரத்துள் அருள் அகமாய் ஒளிராகின்ற - உருவந் தோன்றாதனவாகிய மலங்களை யொழித்துச் சரீரத்தினுள் அருளிடமாகக் கொண்டு விளங்குகின்ற தும்,—திருத்தகு மெய்ம் மனக் கமலத்துள் பொலியும் நுண் ககனம் சிறந்து இலங்கும்-அழகு பொருந்திய உண்மையாகிய இருதய கமல த்துள் விளங்குகின்ற நுட்பமாகிய ஆகாசத்தினிடத்துச்சிறப்புற்று விளங்குகின்றதுமான,—அதுவே - அச்சிவமே,— வருத்தம் உறும் பிறப்பு இறப்புமா மாயை கருமமும் போய் மருங்கு சாய-துன்பம் பொருந்திய பிறப்பும் இறப்பும் பெரிய மாயையும் கருமமும் போய்ப் பக்கத்தில் விலகும்படி,—யாவோரும் நாடோறும் அருத்தி யுடன் வழிபடுவது என்றும்-எல்லாருந் தினந்தோறும் அன்போடு வழிபடுவது என்றும்.—எ. று. (எஉ)

அருமறைகண் முதலினடு வினின்முடிவி னறைவது ருத்திரனை யென்று, மொருமைதிக ழுண்மையறி வானந்த மேயுருவா யொப்பி லாத, மருவருமவ் வுருத்திரனே யிதைய கம லந்தன்னில் வந்தித் தேத்தும், பொருவரு ஞா னாகாய மென்று மிய லியசுமறை புகன்ற தன்றே.

(இ-ள்) அரு மறைகள் முதலில் நடுவினில் முடிவின் அறைவது உருத்திரனை என்றும்-அரிய வேதங்கள் முதலிலும் நடுவிலும் முடிவிலும் எடுத்துச் சொல்வது உருத்திரனே என்றும்,—ஒருமை திகழ் உண்மை அறிவு ஆனந்தமே உருவமாய் - ஒன்றாக விளங்குகின்ற சச்சிதானந்தமே வடிவமாய்,—ஒப்புஇலாத மருவரும் அவ்வுருத்திரனே-ஒப்பில்லாதவனாய் யாவராலுங் கிட்டுதற்கரியவனாய் உள்ள அச்சிவபெருமானே,—இதய கமலம் தன்னில் வந்தித்து எத்தும் பொருவரும் ஞானாகாயம் என்றும் - இருதய கமலத்திற் பதித்து வழிபட்டுத்துதிக்கும் ஒப்பில்லாத ஞானாகாசமாகு மென்றும்,— இயல் யசு மறை புகன்றது - இயல்பு பொருந்திய யசுர் வேதம் சொல்லிற்று.—எ. று. அன்று ஏ அசைகள். (௭௫)

மற்றுமுள பலமுறையி னிப்பரிசு வருமிடங்கண் மதியான் மிக்கோர், யுற்றபொரு ளிப்படியே கோடிசிதம் பரப் பெருமை யுணர்ந்து சென்று, முற்றறிய காதலுடன் சிற்சபையி னற்புயங்க முயங்கு கூத்தன், றுற்றகதி ருதயநிகர் பத மலர்கண் டருண்முத்திச் சூழல் சேர்வாய்.

(இ-ள்) மதியான் மிக்கோய்-அறிவினால் மேம்பட்ட சைமினியே,—மற்றும் உள பல மறையின்-மற்றுமுள்ள பலவேதங்களிலும்,--இப்பரிசு வரும் இடங்கள் உற்ற பொருள் இப்படியே கோடி-இத்தன்மையாக வருமிடங்கள் தோறு முள்ள பொருள்களையும் இவ்விதமாகவே அறிந்து கொள்ளக் கடவாய்,—சிதம்பரப் பெருமை உணர்ந்து - (இதுவரையுங்கூறிய) சிதம்பரத்தினது மகிமையை அறிந்து,—முற்று அரிய காதலுடன் சென்று-முடிவில்லாத விருப்பத்தோடு போய்,—சிற்சபையில் முயங்கும் நல் புயங்கக் கூத்தன்-திருச்சிற்றம்பலத்தினிடத்திற் செய்யப்படும் நல்ல புயங்க நிருத்தத்தையுடைய நடேசமூர்த்தியினது,—துற்ற கதிர் உதயம் நிகர் பத மலர் கண்டு-நெருங்கிய கிரணங்களையுடைய சூரியனை யொத்த திருவடித் தாமரை மலர்களைத் தரிசித்து,—அருள் முத்திச் சூழல்

சேர்வாய் - கிருபை பொருந்திய மோக்ஷ இடத்தை அடையக் கடவாய்.—எ. று. (எச)

சுடர்பரவு சுராட்புருட னுளக்கமல மாகியவத் தொல் லைத் தில்லை, யிடமதனு ளருவுருவச் சிற்சபையிற் சிற்ககன மெவரு முய்ய, கடமருவு திருவுருவோ டெதிர்நின்று கண் டோர்க்கு நாடற் கொண்ணுத், தடமருவு பரமுத்தி தருமெ ன்று லத்தலத்திற் றலங்கள் யாதோ.

(இ-ள்) சுடர் பரவு சுராட் புருடன் உளக்கமலம் ஆகிய - ஒளி பரந்த விராட்புருடனுடைய இருதய கமலமாகிய,—அத் தொல்லைத் தில்லை தன்னுள் - அந்தப் பழமையாகிய தில்லை வனத்திலுள்ள,— அரு உருவ சிற்சபையில் - அருவுருவமாகிய திருச்சிற்றம்பலத்தி லெழுந்தருளியிராநின்ற,—சித் ககனம்-சிதாகாசரூபராகிய நடேசப் பெருமான்,—எவரும் உய்ய நடம் மருவு திரு உருவொடு-சர்வான்மா க்களும் உய்யும் பொருட்டுத் திருநிருத்தத் திருவுருவத்தோடு எழுந் தருளி யிருந்து,—எதிர்நின்றுகண்டோர்க்கு - சந்நிதானத்தினின்று (தன்னைத்) தரிசித்தவர்களுக்கு,—நாடற்கு ஒண்ணு தடம் மருவு பர முத்தி தரும் என்றால் - தேடுதற்கரிதாகிய பெரிய பரமுத்தியைக் கொடுத்தருளுவன் என்றால்,—அத்தலத்தில் தலங்கள் யாதோ-அந்த ஸ்தலத்தைப் பார்க்கினும் (விசேஷமாகிய) ஸ்தலம் வேறு எவை இருக்கின்றன.—எ. று. (எரு)

சித்தநெறி திரியாத சைமினிவ யாமுரைத்த திறங்க ளெல்லாஞ், சத்தியமே யையமிலை வாழியெனப் பேரருளாற் சாற்றி னுல், வித்தகநல் லறிவதனு லளவிலா வேதங்கள் விளங்கக்கிட்டா, முத்திநெறி யாவோரு மடையவவ தாரஞ் செய் முனிவர் கோமான்.

(இ-ள்) சித்த நெறி திரியாத சைமினிவ-மனமானது நல்வழி யினின்றுந் தவறுத சைமினி முனிவனே,—யாம் உரைத்த திறங்கள் எல்லாம் சத்தியமே-நாம் உனக்குச் சொல்லிய உறுதியாகிய இவ் விஷயங்களெல்லாஞ் சத்தியமே யாகும்;—ஐயம் இலை - இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை;—வாழி என-நீ வாழக்கடவாய் என்று,— வித்தக நல் அறிவு அதனுல்-ஞானத்தையுடைய நல்லறிவினுல்,— அளவு இலா வேதங்கள் விளங்க-அளவில்லாதனவாகிய வேதங்கள் விளங்கவும்,—கிட்டா முத்திநெறி யாவோரும் அடைய - கிடைத்

துற்கரிய மோக்ஷமார்க்கத்தை எல்லாரும் அடையவும்,—அவதாரஞ் செய் முனிவர் கோமான் பேர் அருளால் சாற்றினன்-திருவவதாரஞ் செய்தருளிய முனிவேந்தராகிய சூதமுனிவர் பெரிய கிருபையோடு திருவாய் மலர்ந்தருளினர்.—எ. று. ஆல் அசை. (எகூ)

மான்மியச்சருக்கம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

பாயிரமுள்பட சருக்கம் 2-க்கு திருவிருத்தம் (கூரு.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

இ ர ண் டா வ து

# து ன் ம த ச் ச ரு க் க ம்.

---

மதம்பரவை யெனப்பெருக வருகரடக் கரியுரித்தவள்ள லேயிச், சிதம்பரமென் றறியுநெறி சைமினிக்கு முனியுரைத்த திறத்தி னன்னேன், பதம்பரவி யறிந்தவா றுரைத்திப் பாற் றுன்மதன்றான் பழநூல்வேத, விதம்பரமென் றுரைமன்றிற் றாள்கண்டு வீடுற்ற விளக்கஞ் சொல்வாம்.

(இ—ள்) மதம் பரவை எனப் பெருக வரு கருடக் கரி உரித்த வள்ளலே - (தாருகாவன முனிவர்களால் விடுக்கப்பட்ட) மதஜலமானது சமுத்திரம்போலப் பெருகுகின்ற சுவட்டையுடைய யானையையுரித்தருளிய சிவபெருமானே,—இச் சிதம்பரம் என்று அறியும் நெறி-இச்சிதாகாச வடிவமாயிருக்கின்றானென்று அறியும்படியான மார்க்கத்தை,—சைமினிக்கு - சைமினிமுனிவருக்கு,—முனி உரைத்த திறத்தின்-வியாசமுனிவர் (தனக்கு) உபதேசித்த பிரகாரம்,—அன்னோன் பதம் பரவி-அவ்வியாசமுனிவருடைய திருவடிகளைத் துதித்து,—அறிந்தவாறு உரைத்து - தெரிந்தபிரகாரஞ் சொல்லி,—இப்பால்-அதற்குப்பின்,—துன்மதன்-துன்மதனெனவன்,—பழவேதநூல் விதம் பரம் என்று உரை மன்றில் தாள் கண்டு - பழமை

யாகிய வேத சாஸ்திரங்களெல்லாம் மேலான தென்று சொல்லு கின்ற கனகசபையினிடத்தே (திருநிருத்தஞ் செய்தருளா நின்ற நடேசப்பெருமானது) திருவடிகளைத் தரிசித்து,—வீடு உற்ற விளக்கம் சொல்வாம் - மோக்ஷமடைந்த சரித்திரத்தைச் சொல்வோம்.—எ. று. தான் அசை. (௧)

குருபரனங் குரைத்தமொழி யமுதுசெவி நாவாகக் குலவு மன்பாற், பருகுசை மினியொடுக்கத் துடனிறைஞ்சி மிகுங்கருணைப் பகவமுத்தி, தருமரிய விருந்தகர வித்தை யருள் செய்தனையென் றனக்கோரைய, மருவியது தெளிய வுரைத் தருள்புரிதி யெனமிகவும் வழுத்திச் சொல்வான்.

(இ-ள்) குருபரன் அங்கு உரைத்த மொழி அமுது-ஆசாரியரா கிய சூதமுனிவர் அப்பொழுது சொல்லியருளிய சரித்திரமாகிய அமிர்தத்தை,—குலவும் அன்பால் செவி நாவாகப் பருகு சைமினி-பொருந்திய அன்பினால் காதே நாவாகக் கொண்டு பானம் பண்ணு கின்ற சைமினி முனிவர்,—ஒடுக்கத்துடன் இறைஞ்சி - வணக்கத் தோடு நமஸ்கரித்து,—மிகும் கருணைப் பகவ - மிகுந்த கிருபையை யுடைய சூதமுனிவரே,—என் தனக்கு முத்தி தரும் அரிய தகர வித்தைதனை அருள் செய்தனை - அடியேனுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கின்ற அரிய தகரவித்தையை உபதேசித்தருளினீர்,—ஓர் ஐயம் மருவியது-(அதில்) ஓர் சந்தேக முண்டாயிருக்கின்றது,—தெரிய உரைத்து அருள் புரிதி என மிகவும் வழுத்திச் சொல்வான்-(அதை அடியேனுக்குத்) தெரியும்படி உபதேசித்தருள்செய்க என்று மிகவுந் துதித்து விண்ணப்பஞ் செய்வார்.—எ. று. (௨)

அடைவுபெறு மறைப்பொருண்முன் பின்கூட்டி யாராய்ந்த வளவி லிந்த, வுடலினுறப் பெறுந்தகர வித்தையொழிந் தண்டத்தி னுள்ள தாகத், திடமருவ வென்னிதயத் துதித் ததிலை யென்னறிவு தெளியும் வண்ணஞ், சடைமவுலி முனி வேந்த வருளென்றான் மெய்ம்முனியுஞ் சாற்றுகின்றான்.

(இ-ள்) சடை மௌலி முனி வேந்த - ஜடாமுடியையுடைய முனிசிரேஷ்டராகிய சூத முனிவரே,—அடைவு பெறும் மறைப் பொருள் முன் பின் கூட்டி ஆராய்ந்த அளவில் - முறைமை பொருந் திய வேதப்பொருளை முன்னும் பின்னுஞ்சேர்த்து ஆராய்ந்து பார்த்த அளவில்,—இந்த உடலின் உறப் பெறும் தகரவித்தை ஒழிந்து-

(பிண்டமாகிய) இந்தச்சரீரத்திற் பொருந்திய தகரவித்தை தவிர,— அண்டத்தின் உள்ளதாகத் திடமருவ என் இதயத்து உதித்தது இலை - அண்டத்தினுள்ளும் (அத்தகரவித்தை) இருப்பதாக உறுதி பொருந்த என் மனதில் தோன்றவில்லை,—என் அறிவு தெளியும் வண்ணம் அருள் என்றான்-அடியேனுடைய புத்தி தெளியும்படி அனுக்கிரகஞ் செய்தருளுக என்று சைமினிமுனிவர் விண்ணப்பஞ் செய்தார்,—மெய்ம் முனியுஞ் சாற்று கின்றான்-அதைக்கேட்ட உண்மைப் பொருளை யறிந்த சூதமுனிவருஞ் சொல்லத் தொடங்கினார்.—எ. று. (சு)

நந்துமறைப் பொருளாய்ந்த மிகப்பெரியோய் வினவியது நன்று சால, மந்தணமீ தாயினுநீ யென்பாலன் பிலையதனுன் மகிழ்ந்து கேட்டி, யந்தமிலா வேதங்கட் கவற்றினுறும் பொருடெரியா வளவிலாத, விந்தவகை தெரிந்து விரித் தனர்தவத்தி னுயர்ந்தருளே யெய்தினோர்கள்.

(இ-ள்) நந்தும் மறைப் பொருள் ஆய்ந்த மிகப்பெரியோய்-கெடுதலில்லாத வேதப் பொருளை ஆராய்ந்தறிந்த மேன்மையையுடைய சைமினியே,—வினவியது சால நன்று - நீ கேட்டது மிகவும் நல்லது,—ஈது மந்தணம் ஆயினும்-இது இரகசியப் பொருளாயினும்,— நீ என்பால் அன்பினை -நீ எம்மிடத்து அன்புடையவனாயினாய்,—அதனால் மகிழ்ந்து கேட்டி—அதனாலே நீ சந்தோஷத்துடன் கேட்பாயாக,—அந்தம் இலா வேதங்கட்கு அவற்றின் உறு பொருள் தெரியா - முடிவில்லாதனவாகிய வேதங்களுக்குந் தன்னிடத்துள்ள பொருள் தனக்குந் தெரியமாட்டா,—அளவு இலாத இந்தவகை-அளவு இல்லாத இத்தகரவித்தையின் தன்மையை,—தவத்தின் உய்ந்து அருளே எய்தினோர்கள் தெரிந்து விரித்தனர் - தவத்தினாலுயர்ந்து கிருபையை அடைந்த பெரியோர்கள் ஆராய்ந்து விரித்துச் சொல்லினார்கள்.—எ. று. (எ)

அண்டமுீட லவைதனக்கங் கதுபொதுவென் றருமறைகளறையாநிற்குங், கொண்டவுட லகத்துளதென் றியாவோரும் வெளிப்படையாக் கூறுநிற்ப, ரெண்டருமண் டத்தினது மறைந்தபொரு ளாயிருப்ப தியாதோ வென்னில், விண்டலரா திமையோர்கண் மறைந்தபொருண் மேல்விருப்ப மேவலாலே.

(இ-ள்) அண்டம் உடல் அவைதனக்கு அது பொதுவு என்று அரு மறைகள் அறையாநிற்கும் - பிரமாண்டமாகிய சரீரத்திலுள்ள தகர வித்தையானது கனகசபையாகுமென்று அருமையாகிய வேதங்கள் சொல்லும்,—கொண்ட உடல் அகத்து உளது என்று யாவோரும் வெளிப்படையாக் கூறு நிற்பர்-தாம் எடுத்த சரீரத்தினிடத்தும் (அத்தகர வித்தையாகிய சபையானது) உள்ளது என்று எல்லாரும் வெளிப்படையாகச் சொல்லுவர்,—எண் தரும் அண்டத்தின் அது மறைந்த பொருளாய் இருப்பது யாதோ என்னில்- அளவைத் தருகின்ற அண்டங்களினிடத்து அத்தகரவித்தை இரகசியப்பொருளாயிருப்பது எதனாலென்றால்,—விண் தலராம் இமையோர்கள் மறைந்த பொருள்மேல் விருப்பம் மேவலால்-சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்களுக்கு இரகசியப் பொருண்மேல் விருப்பமுண்டாகும். ஆதலால்.—எ. று. ஏ அசை. (௫)

மன்னியவண் டத்தினிடை யருட்டகர வித்தையது மயக்கு மாயை, தன்னியல்பான் மறைக்கப்பட் டியாகாதி கருமங்க டவங்க ளோங்கு, நன்னியம முடையோர்க்குந் தெரிவரிதா யரவுமதி நதியம் பூத்த, பொன்னவிர்செஞ் சடையண்ண லருளுடையோ ருணர்ந்தின்பப் புணரி சேர்வார்.

(இ-ள்) மன்னிய அண்டத்தின் இடை அருள் தகரவித்தை யது-நிலைபெற்ற அண்டத்தினிடத்திலுள்ள திருவருள் மயமாகிய அத்தகரவித்தையானது,—யாகாதி கருமங்கள் தவங்கள் ஓங்கும் நல் நியமம் உடையோர்க்கும் - யாகாதி கருமங்களுந் தவங்களுஞ்செய்தலினால் உயர்ந்த நல்ல நியமங்களையுடைய கிரியாவான் களுக்கும்,—மயக்கும் மாயை தன் இயல்பால் மறைக்கப்படுத் தெரிவரிது- மயக்குகின்ற மாயையின் குணத்தால் மறைக்கப்பட்டு அறிதற்கரிதாயிருக்கும்,—அரவு மதி நதியம் பூத்த பொன் அவிர் செஞ்சடை அண்ணல் அருள் உடையோர் - சர்ப்பத்தையும் சந்திரனையும் கங்கையையுந் தரித்த பொற்பிரகாசம் பொருந்திய சிவந்த சடையை யுடைய சிவபெருமானது திருவருளைப் பெற்றவர்கள்,— உணர்ந்து - (அத்தகரவித்தையை) அறிந்து,—இன்பப் புணரி சேர்வார் - பேரின்பக்கடலை யடைவார்கள்.—எ. று. (௬)

பரம்பிரமம் பரமசிவம் பரமபதம் பரமுத்தி பகருமின்ன, வரம்பில் பெயர் புனைந்துசராட் புருடனுளப் புண்

டரீக மலரி லென்றுந், திரந்திகழ்மெய்ஞ் ஞானவரு ளிடங் கொண்ட சிதம்பரமே செந்தீ நாகங், கரம்பயில நடமருவு கடவுளென மறைகளெலாங் கழறு மன்றே.

(இ-ள்) பரம் பிரமம் பரமசிவம் பரம பதம் பரமுத்தி பகரும் இன்ன வரம்பு இல் பேர் புனைந்து - பரப்பிரமம் பரமசிவம் பரம பதம் பரமுத்தி என்று சொல்லப்படுகின்ற இத்தன்மையுனவாகிய அளவில்லாத பேர்களைத் தரித்து,—சுராட் புருடன் உளப்புண்டரிக மலரில் - விராட் புருஷனுடைய இருதய கமலத்தில்,—திரம் திகழ் மெய்ஞ்ஞான அருள் இடம் கொண்டு சிதம்பரமே—ஸ்திரமாக விளங்குகின்ற உண்மை யறிவாகிய கிருபையே இடமாகக் கொண்ட சிதாகாசரூப மாகிய சிவமே,—செந்தீ நாகம் கரம் பயில் நடம் மருவு கடவுள் என மறைகள் எலாம் கழறும் - சிவந்த அக்கினியும் சர்ப்பமும் திருக்கரங்களிற் பொருந்த திருநிருத்தஞ் செய்தருளு கின்ற நடேசமூர்த்தி என்று வேதங்க ளெல்லாஞ் சொல்லும்.—
எ. று. அன்று ஏ அசைகள். (எ)

படர்கின்ற தடுமென்று மான்முதலோ ரபயமெனப் பரவை தந்த, விடமுண்ட வொருபெரிய கடவுடிரு வருள்புரி யும் விளக்கத் தாலே, யடரண்ட முறுதகர வித்தையது நுண் ணியபே ரறிவிற் கென்று, மிடமிந்த வானந்த கனகசபை யெனவுணர்ந்தே னின்பங் கூர.

(இ-ள்) பரவை தந்த விடம் படர்கின்றது அடும் என்று மால் முதலோர் அபயம் என-திருப்பாற்கடலாற் றரப்பட்ட விஷமானது பரந்து வருகின்றது அது எங்களைக் கொல்லுமென்று விஷ்ணு மூர்த்திமுதலிய தேவர்கள் அபயம் கொடுத்தருளு மென்று பிரார்த் திக்க,—விடம் உண்ட ஒரு பெரிய கடவுள் திருவருள் புரியும் விளக்கத்தாலே-அவ்விஷத்தை யுண்டருளிய ஒப்பில்லாத பெரு மை பொருந்திய சிவபெருமான் திருவருள் செய்தருளிய பிரகாசத் தாலே,—அண்டர் அண்டம் உறுதகரவித்தை யது நுண்ணிய பேர் அறிவிற்கு-தேவர்களுடைய அண்டத்திற் பொருந்திய தகரவித்தை யானது நுட்பமாகிய பெரிய ஞானத்திற்கு;—இந்த ஆனந்த கனக சபை என்றும் இடம் என—இந்த ஆனந்தத்தைத் தரத்தக்கதாகிய கனக சபையானது எப்பொழுதும் இடமாகு மென்று சொல்ல,—இன்பம் கூர உணர்ந்தேன்-சந்தோஷமிகும்படி (யான்) அறிந்தேன்.—
எ. று. (அ)

நித்தமுடன் சுத்தமுறு மானந்த வம்பலத்து ணிருத்
தஞ் செய்யுஞ், சித்துருவ வித்துருமச் சடையாளன் பதங்க
ண்ணாற் றிளைக்கப் பெற்ற, வெத்தகைய வுயிரேனு முத்திய
டைந் திடுமைய மின்றா லிச்சொற், சத்தியமீ துத்தமநீ தேறு
தியென் றனன்பின்னுஞ் சாற்று கின்றான்.

(இ-ள்) நித்தம் உடன் சுத்தம் உறும் ஆனந்த அம்பலத்துள் - அழிவில்லாத தோடு பரிசுத்தத்தையும் பொருந்திய ஆனந்த மயமாகிய கனக சபையில் நின்று,—நிருத்தஞ் செய்யும் சித்துருவ வித்துருமச் சடையாளன் பதம் - திருநிருத்தஞ் செய்தருளாநின்ற ஞானவடிவினனாகிய பவளம் போன்ற சிவந்த சடையை யுடைய நடேசப் பெருமானது திருவடிகளை,—கண்ணால் திளைக்கப் பெற்ற எத்தகையரேனும் முத்தி அடைந்திடும்-கண்களாற் றரிசிக்கப் பட்டவர்கள் எப்படிபட்டவர்களாயினும் மோக்ஷத்தை யடைவார்கள்,—ஐயம் இன்று - சந்தேகமில்லை,—இச் சொல் சத்தியம் - இவ்வார்த்தை சத்தியமாகும்,—உத்தமம் ஈது நீ தேறுதி என்றனன் பின்னுஞ் சாற்றுகின்றான்-உத்தம குணத்தை யுடைய சைமினியே நீ இதனைத் தெளிந்து கொள்ளுக என்றுசொன்னவராய்ப்பின்னுஞ் சொல்லுகின்றார்.—எ. று. (௬)

உருவருவங் கடந்ததிரு வுருவுடைய பரம்பரனை யுச்சி
நெற்றி, யிருபுருவ நடுச்செவிகண் களமார்ப மிதயமுட னுந்தி
கொப்பூழ், மருவருமூ லாதார முன்பின்ன ரிருபாற்றம் வடி
விற், சிந்தித், தருளுடன்வந் தனைபுரிவோ ரியாவர்சிலர் திரு
வருளை யடைவ ரன்றே.

(இ-ள்) உருவு அருவம் கடந்த திருவுருவு உடைய பரம்பரனை - உருவத்தையும் அருவத்தையுங் கடந்த திருவுருவத்தையுடைய சிவபெருமானை,—உச்சி நெற்றி இருபுருவநடு செவி கண் களம் மார்பம் இதயம் உடன் உந்தி கொப்பூழ் மருவரும் மூலாதாரம் முன் பின் இருபால் தம் வடிவில் சிந்தித்து-சிரம் நெற்றி இரண்டு புருவ மத்தி காது கண் கழுத்து மார்பு இருதயம் சுழியாகப் பொருந்திய கொப்பூழ் அடைதற்கரிய மூலாதாரஸ்தானம் முற்பக்கம் பிற்பக்கம் வலப்பக்கம் இடப்பக்கம் என்னும் தமது அவயவங்களில் வைத்துத் தியானித்து,— அருளுடன் வந்தனை புரிவோர் சிலர் ஆவர்-அன்போடு வழிபடுகின்றவர்கள் சிலராவார்,—திருவருளை அடைவர்-

அவர்கள் (சிவபெருமானது) திருவருளை அடைவார்கள்.— எ. று. அன்று ஏ அசைகள். (கம)

அப்பரிசு போலளவி லெவ்வுயிர்க்கு மருள்புரிவா னகிலந் தந்தாள், மெய்ப்படரு மொருபாகன் விடைப்பாகன் மதிப்பாக மிலைந்த சென்னிப், பொய்ப்பகைவன் முப்பகையுங் கடந்தவருட் போதமுறை புனித னென்று, மிப்புவனத் திடங்கொண்ட பதிகளுக்கோ ரளவில்லா லெண்ணுங் காலே.

(இ-ள்) அப்பரிசு போல் - அத்தன்மை போல்,— அளவு இல் எவ்வுயிர்க்கும் அருள் புரிவான்-அளவில்லாதனவாகிய சர்வான் மாக்களுக்குங் கிருபை செய்யும் பொருட்டு,—அகிலம் தந்தாள் மெய்ப்படரும் ஒருபாகன்-உலகங்களைப் பெற்றருளிய உமாதேவியாகிய (கொடி) படரப் பெற்ற ஒரு பாகத்தையுடையவரும்,—விடைப் பாகன்-ரிஷபத்தை வாகனமாகச் செலுத்துகின்ற பாகரும்,—மதிப்பாகம் மிலைந்த, சென்னிப் பொய்ப் பகைவன் - சந்திரனது ஒரு கூறாகிய மூன்றாம் பிறையைத் தரித்தருளிய திருமுடியையுடைய அசத்திய விரோதியும்,—முப்பகை கடந்தருள் போதம் உறை புனிதன்-ஆணவம் மாயை கர்மம் என்று சொல்லப்பட்ட மும்மலப் பகையைச் செயித்தருளிய ஞானத்துக்கு இருப்பிடமா யெழுந்தருளியிராநின்ற பரிசுத்தருமாகிய சிவபெருமான்,—இப்புவனத்து என்றும் இடம் கொண்ட பதிகளுக்கு-இவ்வுலகத்துள் எப்பொழுதும் இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்தலங்களுக்கு,— எண்ணும் கால் ஓர் அளவு இல்லை - ஆராய்ந்து பார்க்கிமிடத்து ஓர் அளவு இல்லை.—எ. று. ஆல் ஏ அசைகள். (கக)

சொற்கமையா தெனவுரைத்த வளவிலாப் பதியவற்றுட் சுரர்களேத்து, மெற்கதிர்சூ ழுலகமொரு வடிவான விராட்புருட னிதய மான, பொற்கமலம் பொற்பொதுவே யவ்வெல்லை யளவையாற் போற்றற் கெட்டாச், சிற்கருணை முதனிலையா யுறையுமென மறையிடுமத் தெய்வ வேதம்.

(இ-ள்) சொற்கு அமையாது என உரைத்த அளவு இலாப் பதி அவற்றுள் - சொல்லுதற்கு அளவு படாது என்று சொல்லப்பட்ட அளவில்லாத உலகங்களுள்,—சுரர்கள் ஏத்தும் எல் கதிர் சூழ் உலகம் ஒருவடிவான விராட்புருடன் இதய மான பொன்கமலம் பொன் பொதுவே-தேவர்களாற் றுதிக்கப்பட்ட சூரிய கிரணம்

சூழ்ந்த உலகமே ஒருவடிவாகக் கொண்ட விராட்புருடனுடைய அழகிய இருதய கமலமான து கனகசபையேயாகும்,—அவ்வெல்லை அளவையால் போற்றற்கு எட்டா-அக்கனகசபையின் பிரமாணம் அளவைகளாலு மளவிட்டுச் சொல்ல முடியா,—சித் கருணை முதல் நிலையா உறையும் என அத்தெய்வ வேதம் முறையிடும்-ஞானத்தை யுந் திருவருளையு முடைய சிவபெருமான் நிலையாக எருத்தருளி யிருப்பார் என்று அத்தெய்வத் தன்மை பொருந்திய வேதங்கள் முறையிடும்.—எ. று. (கஉ)

ஆதலினு லெத்தலமு மித்தலத்துக் கொவ்வாதா லாவி யுள்ளப், போதினுட லிடத்தளவா யிருந்தாலும் விசேடித் துப் புணரு மாபோர், லோதலுஞ் மற்றையவை யவந்தன்னி லுறுதுநா னென்போ ருள்ள, மீதுகரம் வைத்துரைப்பக் கண்டனமான் மற்றுறுப்பின் வியப்பா முள்ளம்.

(இ-ள்) ஆவி உடல் இடத்து அளாய் இருந்தாலும்-உயிரானது சரீரத்தினிடத்து வியாபித்திருந்தாலும்,—உள்ளப் போதில் விசேடித்துப் புணருமா போல்-இருதய கமலத்தில் விசேஷமாகப் பொருந்தி யிருத்தல்போல்,—ஓதல் உறும் மற்றை அவயவந்தன்னில் உறுது-சொல்லப்படுகின்ற மற்றையவையவங்களில் அவ்வாறு பொருந்தியிராது ;—நான் என்போர் உள்ளமீது கரம் வைத்து உரைப்பக் கண்டனம்-நான் என்று (அகங்காரத்தோடு) பேசுகின்றவர்களும் இருதயத்தின்மீது கைவைத்துப் பேசப் பார்த்தோம்,—உள்ளம் மற்று உறுப்பின் வியப்பாம்-(ஆதலால்)இருதயமானது மற்றை யவயவங்களினும் மேலானதாகும்,—ஆதலினால் எத்தலமும் இத்தலத்துக்கு ஒவ்வாது - ஆதலினால் எந்தஸ்தலமும் இச்சிதபரம்பரஸ்தலத்துக்கு ஒப்பாக மாட்டாது.—எ. று. ஆல் இரண்டும் அசைகள்.(கரு)

ஆங்கதுபோற் பரம்பரனு நிரந்தரமு மண்டத்துக் கப்பா லிப்பா, னீங்கரிய நிறைவுடைய னாயிடினும் விராட்புருட னிலவு முள்ளப், பூங்கமல மானசிதம் பரந்தன்னி லனவரதம் புகறற் கொண்ணு, வோங்கிவளர் பெருங்கருணை யுடன்மிகவு மதிகமா யுறைவ னன்றே.

(இ-ள்) அதுபோல்-அதுபோல்,—பரம் பரனும்-மேலானவராகிய சிவபெருமானும்,—நிரந்தரமும் அண்டத்துக்கு அப்பால் இப்பால் நீங்கு அரிய நிறைவு உடையன் ஆயிடினும்-எப்பொழுதும் அண்ட

ங்களுக்கு அப்பாலும் இப்பாலும் நீங்குதற்கரிய வியாபகமுடைய்வனு யிருக்கினும்,—விராட்புருடன் நிலவும் உள்ளப் பூங்கமலம் ஆன சிதம்பரந்தன்னில்-விராட்புருடனுடைய விளங்காநின்ற இருதய கமலமாகிய சிதம்பரத்தில்,—புகல் தற்கு ஒண்ணு ஓங்கி வளர் பெருங் கருணையுடன் - சொல்ல முடியா தோங்கி வளருகின்ற பெருங் கருணையோடு,—அனரதம் மிகவும் அதிகமாய் உறைவன் - எப்பொழுதும் விசேஷமாக வீற்றிருந்தருளுவன்.—எ. று. ஆங்கு அன்று எ அசைகள். (கச)

உறைவதுவு மனாதியே மனாதிதனக் கெய்தாத வொருவ்னெங்கு, நிறைபிறைவ னித்தலத்து ளனவரத தாண்டவமு நீங்கா னென்றாற், பொறையுடைய புடவிதனி லெப்பதியு மிப்பதிபோற் பொலிவுண்டாகா, குறைவறவா னந்தநட மிவ ணொழிய வெவணுளது கூறுங் காலே.

(இ-ள்) மனாதி தனக்கு எய்தாத ஒருவன்-மனமுதலியகரணங்களுக்கெட்டாத ஒப்பில்லாத சிவபெருமான்,—உறைவதும் அநாதியே-(அச்சிதம்பரஸ்தலத்தி) லெழுந்தருளியிருப்பதும் அநாதியேயாம்,—எங்கும் நிறை இறைவன் - எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற அச்சிவபெருமான்,—இத்தலத்துள் அனவரத தாண்டவமும் நீங்கான் என்றால்-இச்சிதம்பரத்தில் எப்பொழுதும் நிருத்தஞ் செய்தலைவிட்டு நீங்கான் என்றால்,—பொறையுடைய புடவிதனில் எப்பதியும் இப்பதிபோல் பொலிவு உண்டாகா பொறுத்தலையுடைய பூமியினிடத்துள்ள எந்த ஸ்தலங்களு மிச்சிதம்பரஸ்தலம் போல் பிரகாசிக்க மாட்டா,—கூறுங்கால் குறைவற ஆனந்த நடம் இவண் ஒழிய எவண் உளது - சொல்லுமிடத்துக் குறைவில்லாமல்ஆனந்த தாண்டவஞ் செய்தல் இந்தஸ்தலமே யல்லாமல் வேறெந்த ஸ்தல முள்ளது.—எ. று. எ அசை. (கரு)

கண்டவர்கட் கியாவோருங் காணுத முத்தியினைக் காட்ட வென்றே, யண்டர்பிரா னனவரத மானந்த தாண்டவநின் றுட லாலிம், மண்டலத்து ளெத்தலத்து மதிகமிக வதிகமென வயங்கா நிற்கும், புண்டரிக புரந்தனக்கிங் கொப்பிரமப் புண்டரிக புரந்தான் மன்னோ.

(இ-ள்) கண்டவர்கட்கு யாவோரும் காணாத முத்தியினைக் காட்டஎன்றே-(அச்சிதம்பரஸ்தலத்தை) தரிசித்தவர்களுக்கு எவர்களாலுங் காணமுடியாத மோக்ஷத்தைக் கொடுத்தற்குஎன்றே,— அண்டர்பிரான் அனவரதம் நின்று ஆனந்த தாண்டவம் ஆடலாலே-தேவநாயகனாகிய அச்சிவபெருமான் எப்பொழுதும் நிலை பெற்று நின்று ஆனந்த தாண்டவஞ் செய்கின்றபடியால்,—இம் மண்டலத்துள் எத்தலத்தும் மிக அதிகம் அதிகம் என வயங்காநிற்கும்-இப்பூமியினிடத்துள்ள எந்தஸ்தலத்திலும் (இச்சிதம்பரஸ்தலம்) விசேஷ முடையது விசேஷ முடையது என்று சொல்லும்படி விளங்கிக் கொண்டிருக்கும்,—புண்டரிக புரந்தனக்கு அப்புண்டரிக புரந்தான் இங்கு ஒப்பாகும்-அப்புண்டரீகபுரமாகிய சிதம்பரத்துக்கு அச்சிதம்பரமே இங்கு ஒப்பாகும்.—எ. று. மன் ஓ அசைகள். (கசு)

அருட்காமக் கொடிபாகன் றிருவாணை சிதம்பரங்கண் டவர்க்கு முத்தி, யொருக்காலன் றிருக்காலுமுக்காலு முண் மையி துண்மை யாமென், செருக்காலீ துரைத்தேனேற் கணப்போதிற் சிரமிற்றுச் சிதைக முன்னை, யிருக்காதி மறை மொழிந்த திப்பரிசென் றான்சுருதி யெல்லாம் வல்லான்.

(இ-ள்) சுருதி எல்லாம் வல்லான் - வேதங்களெல்லாவற்றினும் வல்லவராகிய வியாசமுனிவர்,—அருள் காமக் கொடி பாகன் திருவாணை-திருவருளைப்பாலிக்கின்ற சிவகாமவல்லியம்மையாரை ஓர்பாகத்திலுடைய நடேசமூர்த்தியின் மேல் வைத்த திருவாணைப்படி,—சிதம்பரம் கண்டவர்க்கு முத்தி ஒருக்கால் அன்றி இருக்காலும் முக்காலும் உண்மை-சிதம்பர ஸ்தலத்தைத் தரிசித்தவர்களுக்கு மோக்ஷமுண்டாகுமென்று ஒருமுறை அன்றி இருமுறை மும்முறையும் சத்தியமாகச் சொல்லுகிறேன்;-ஈது உண்மையாம்-(யாம்சொல்லிய) இது சத்தியமாகும்,—என் செருக்கால் ஈது உரைத்தேனேல்-என்னுடைய கர்வத்தால் இப்படிச் சொல்லுவேனாயின்,—கணப் போதில் சிரம் இற்றுச் சிதைக - ஒருக்ஷணகாலத்துள் என் சிரசு அறுந்து அழியக்கடவது;—முன்னை இருக்காதி மறை மொழிந்தது இப்பரிசு என்றான் - பழமையாகியஇருக்குமுதலிய வேதங்கள் சொல்லியதும் இத்தன்மையே யென்று சொல்லினர்.—எ. று. (கஎ)

அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரர்சண் டாளார்தவ மடைந்து நீத்தோ, ரிந்தமர பிலர்க்கென்னாத் தன்மையோ

ரன்பினரன் பில்லோர்யாருஞ், சந்ததமு மானந்த சபையி னடம் புரிசலசத் தாள்கண் டோரேன், முந்தைவினைப் பாச மெலா முடித்துமுடி யாமுத்தி முதல்வராவர்.

(இ-ள்) அந்தணர் மன்னவர்வணிகர் சூத்திரர் சண்டாளர்-பிரா மணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் சண்டாளர்களும்,—தவம் அடைந்து நீத்தோர்-தவஞ் செய்து தவறினவர்களும்,—இந்த மரபு இவர்க்கு என்னாத தன்மையோர்-இவர் இன்னஜாதி என்று அறியப் படாத சங்கர ஜாதியர்களும், —அன்பினர்-அன்புடையவர்களும்,— அன்பு இல்லோர் - அன்பில்லாதவர்களுமாகிய,—யாரும் - எல்லோ ரும்,—சந்ததமும் சபையின் ஆனந்த நடம்புரியும் சலசத்தாள் கண் டோரேல் - சதாகாலமுங் கனகசபையினிடத்தே ஆனந்த தாண்ட வஞ்செய்தருளாநின்ற தாமரைமலர் போன்ற திருவடிகளைத் தரிசி த்தாராயின்,—முந்தை வினைப்பாசம் எலாம் முடித்து-பழவினைகளா லுண்டாகும் பாசங்களைநீக்கி,—முடியா முத்தி முதல்வர் ஆவார்- அடையக் கூடாததாகிய மோக்ஷத்தை யடைதற்குரிய முதன்மை யையுடையவ ராவார்.—எ. று. (கஅ)

ஆரணமோ டாறங்கங் கரைகண்டோர் யோகநெறி யறிந் தடைந்தோர், சீரணவு மகம்பலவும் புரிந்துளோர் நித் தமுறுஞ் செந்தீ யோர்கள், பூரணவே தாந்தநிலை தெரிந்து ளோ ராயினும்பொற் பொதுவி னுடுங், காரணகா ரியங்கட ந்த தாள்கண்டா லொழிந்துகதி காணலாமோ,

(இ-ள்) ஆரணமோடு ஆறு அங்கம் கரைகண்டோர் - வேதங்க ளோடு அவ்வேதாங்கமாறின் முடிவை அறிந்தவர்களும்,—யோக நெறி அடைந்தோர்-யோகமார்க்கத்தை யடைந்தவர்களும்,-சீர் அண வும் மகம் பலவும் புரிந்துளோர்-சிறப்புப் பொருந்திய யாகங்கள் பல வற்றையுஞ் செய்தவர்களும்,—நித்தம் உறும் செந்தீயோர் - நாள் தோறுஞ்செய்யத்தக்க நித்தியாக்கினியை வளர்ப்பவர்களும்,—பூரண வேதாந்த நிலை தெரிந்தோர் ஆயினும் - நிறைந்தவேதமுடிவின் தன் மையை அறிந்தவர்களாயிருந்தாலும்,—பொன் பொதுவில் ஆடும் காரண காரியம் கடந்த தாள் கண்டால் ஒழிந்து-கனக சபையினிட த்தே திருநிருத்தஞ் செய்தருளாநின்ற காரண காரியங்களுக்கு அதீதப்பட்டவராகிய நடேசமூர்த்தியினது திருவடிகளைத் தரிசி த்தா லொழிய,—கதி காணல் ஆமோ - மோக்ஷமடையக் கூடுமோ? (கூடாது).—எ. று. (கக)

அருட்கனக மணிமன்றத் தானந்த தாண்டவஞ்செய் தருள்வே தாந்தப், பொருட்கமல பதங்கண்டோர் வீடுறுவ ரெனவெம்மாற் புகன்ற செஞ்சொ, லிருட்கடுவுண் டவரறிய வுண்மையிதி லோர்கதையு மிசைப்பக் கேட்டி, தெருட் கருணை யறிவுடைய சைமினிவ வெனமுனிவன் செப்பு கின்றான்.

(இ-ள்) தெருள் கருணை அறிவுடைய சைமினிவ - தெளிந்த கிருபையும் ஞானமு முடைய சைமினி முனிவனே,—அருள் கனக மணி மன்றத்து ஆனந்த தாண்டவஞ் செய்தருள் வேதாந்தப் பொருள் கமல பாதம் கண்டோர் - திருவருளைக் கொடுக்கின்ற அழகிய கனகசபையினிடத்து ஆனந்த தாண்டவஞ் செய்தருளாநின்ற வேதமுடிவில் விளங்கும் மெய்ப் பொருளாகிய நடேசமூர்த்தியினது செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தரிசித்தவர்கள்,—வீடு உறுவர் என எம்மால் புகன்ற செஞ்சொல்-மோக்ஷத்தை யடைவார்களென்று எம்மாற் சொல்லப்பட்ட நல்ல சொல்லானது,—இருள்கடு உண்டவர் அறிய உண்மை - இருள் நிறம்பொருந்திய ஆலாகலத்தை யுண்டருளிய சிவபெருமான் சாக்ஷியாக உண்மையாகும்,—இதில் ஓர் கதையும் இசைப்பக் கேட்டி என முனிவன் செப்புகின்றான்- இதற்கோர் கதையுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சூதமுனிவர் சொல்லுகின்றார்.—எ. று. (உ0)

வேறு.

காரெலாம் பயில் பொழிலெலாங் கரையெலாந் தடத்து
ணீரெலாங் குளிர் வயலெலா நிலனெலாஞ் செந்நெற்
போரெலாம் வளைத் தரளங்கள் புதுநிலா வெறிக்கும்
பாரெலாம் புகழ் முத்தமிழ்ப் பாண்டி நன்னாடு.

(இ-ள்) கார் எலாம் பயில் பொழில் எலாம் - மேகங்கள் எல்லாம் சஞ்சரிக்கின்ற சோலைகளெல்லாவற்றிலும்,—கரை எலாம்—தடாகமுதலியவைகளின் கரைகளெல்லாவற்றிலும்,—தடத்துள் நீர் எலாம் - தடாகமுதலிவைகளிலுள்ள ஜலங்களெல்லாவற்றிலும்,—குளிர் வயல் எலாம் - குளிர்ச்சி பொருந்தியவயல்களெல்லாவற்றிலும்,—நிலன் எலாம் - மற்றைநிலங்களெல்லாவற்றிலும்,—செந்நெல் போர் எலாம் - செந்நெற்போர்களெல்லாவற்றிலும்,—வளைத்

தாளங்கள் புது நிலா எறிக்கும் - சங்குகளீன்ற முத்துக்களானவை புதிய சந்திரிகையை வீசத்தக்கதும்,—பார் எலாம் புகழ் - பூலோகத்தார்கள் யாவராலும் புகழத்தக்கதும்,--முத்தமிழ்ப் பாண்டி நன்னாடு-இயலிசைநாடகமென்னும் மூன்று தமிழும் வளரத்தக்கதுமான பாண்டி நாடென்னுமோர் நல்ல நாடுளது.—எ. று. (உக)

சந்தன டவி வாசமுந் தண்டமிழ் மணமு
மந்த மாருத முலாவரு மிடமெலாம் வயங்கு
மந்தரா திபரனைவரு மகமகிழ்ந் தேத்து
மெந்தை மேவிய மதுரைநாட் டியல்பையாருரைப்பார்.

(இ-ள்) மந்த மாருதம் உலாவரும் இடம் எலாம் - இளந்தென்றலானது உலாவாநின்ற அந்நாட்டிடங்களெவ்விடத்தும்,—சந்தன அடவி வாசமும் தண் தமிழ் மணமும் வயங்கும் - சந்தனக் காட்டினதுவாசனையும் குளிர்ச்சிபொருந்திய தமிழ்வாசனையும் விளங்கத்தக்கதும்,—அந்தர அதிபர் அனைவரும் அகம் மகிழ்ந்து எத்தும்-சுவர்க்கலோகத் தலைவராகிய தேவர்களெல்லாரு மனமகிழ்ந்து துதிக்கத்தக்கதுமான,—எந்த மேவிய மதுரை நாட்டு இயல்பை யார் உரைப்பார் - எமது பிதாவாகிய சோமசுந்தரேசர் எழுந்தருளியிராநின்ற அம்மதுரைத் திருநாட்டின் தன்மையை யாவர் எடுத்துச் சொல்ல வல்லவர்கள்.—எ. று. (உஉ)

அத்த கைத்திரு நாட்டிலோ ரந்தணன் வேத
வித்தகன்றிக ழுத்தம வேள்விமா னென்போ
னெத்திறத் தன யாகங்க ளெவ்வகை விரத
நித்த நல்லற மியாவையும் புரியுநன் னெறியோன்.

(இ-ள்) அத்தகைத் திருநாட்டில் - அந்தத் தகுதி பொருந்திய மதுரைத் திருநாட்டில்,—வேதவித்தகன் - வேதங்களை யறியத்தக்க ஞானத்தையுடையவனும்,—திகழ் உத்தம வேள்வி மான் என்போன்-விளங்காநின்ற உத்தமமாகிய யாகங்களைச் செய்பவனென்று சொல்லத்தக்கவனும்,—எத்திறத்தன யாகங்கள் எவ்வகை விரதம் நித்த நல் அறம் யாவையும் புரியும் நல்நெறியோன் - எப்படிப்பட்ட (பெரிய)யாகங்களும் எப்படிப்பட்ட பெரிய விரதங்களும் அழிவில்லாத நல்லதர்மங்களு மாகிய எல்லாவற்றையுஞ் செய்யத்தக்க சன்மார்க்க முள்ளவனுமான,—ஓர் அந்தணன் - ஒரு பிராமணன் (உளன்).—எ. று. (உ௩)

புடவி யெண்ணுமவ் வந்தண னிடத்தலை பொருபாற்
கடலகத் தெழு கடுவினைக் காட்டுமோர் தனயன்
றடனி லாவிய புவிமகள் சுமையெனத் தருக்கு
மடமை தீவினை யுருக்கொடு வருதல்போல் வந்தான்.

(இ-ள்) புடவி எண்ணும் அ அந்தணன் இடத்து-பூமியிலுள்ளவர்களால் மதிக்கத்தக்க அப்பிராமணனிடத்தில்,—அலை பொரும் பால் கடலகத்து எழும் கடு வினைக்காட்டும் ஓர் தனயன் - அலைகள் மோதுகின்ற திருப்பாற்கடலினிடத்துத் தோன்றுகின்ற ஆலகாலத்தைப்போலத்தன்னைக் கொடியோன் என்று பலரும் அறியும்படி காட்டுகின்ற ஓர்புத்திரன்,—தடனிலாவிய புவிமகள் சுமை என - விசாலம் பொருந்திய பூமிதேவிக்குப்பாரம் என்று சொல்லும்படி,—தருக்கு மடமை தீவினை உருக்கொடு வருதல் போல் வந்தான் - செருக்கும் அறியாமையும் பாவங்களு மாகிய இவைகள் ஒருவடிவெடுத்து வருதல் போல் வந்து பிறந்தான்.—எ. று. (உச)

துன்மதன் பெயு ரன்னவன் சரிதம்யார் சொல்வார்
வின்மதன் கணைக் கிலக்கென வளர்பவன் மேலோர்
பன்மதங்களின் விதித்தவெம் பாவங்க ளனந்தந்
தன்ம தங்களால் விரிவுறப் புரிதரச் சமைந்தோன்.

(இ-ள்) அன்னவன் பெயர் துன்மதன் - அவன் பெயர் துன்மதன்,—சரிதம் யார் சொல்வார் - அவன் சரித்திரத்தை எவர்கள் எடுத்துச் சொல்லுவார்கள்,—வில் மதன் கணைக்கு இலக்கு என வளர்பவன் - வில்லையுடைய மன்மதனது பாணத்துக்கு இலக்காக வளர்பவன்,—மேலோர் பல் மதங்களின் விதித்த வெம் பாவங்கள் அனந்தம் தன் மதங்களால் விரிவுறப் புரிதரச் சமைந்தோன் - மேலோர்களால் வகுக்கப்பட்ட பலசமய சாஸ்திரங்களிற் சொல்லிய பாவங்களெல்லாம் தன்னுடைய இறுமாப்பினால் விரிவாகச் செய்யும்படி உண்டானவன்.—எ. று. (உரு

சந்தி வந்தனை மறந்தனன் றுறந்தனன் றரும [னை
முந்தையோர்தமைப் பழித்தன னொழித்தனன் முறை
சிந்தைசெய்தவந் தணந்தனன் புணர்ந்தனன் சிறுமை
பந்த மாமறை யிகந்தன னுகந்தனன் பாவம்.

(இ-ள்) சந்தி வந்தனை மறந்தனன்-(அத்துன்மதன்)சந்தியாவந்தனஞ் செய்தலை மறந்தனன்;—தருமம் துறந்தனன் - தருமங்களை ஒழித்தனன்,—முந்தையோர் தமைப் பழித்தனன் - பெரியோர்களை நிந்தித்தனன்,—முறைமை ஒழித்தனன் - வருணாச்சிரம முறைமையை விட்டனன்,—சிந்தை செய் தவம் தணந்தனன் - தியானிக்கத் தக்கதாகிய தவம் செய்தலையும் நீங்கினன்,—சிறுமை புணர்ந்தனன்-(கொலை களவு முதலிய) கீழ்த்தொழிலில் சம்பந்த முற்றனன்,—பந்தம் ஆம் மறை இகந்தனன் - கட்டுப்பாடு பொருந்திய வேதங்களை நிந்தித்தனன்,—பாவம் உகந்தனன்- பாவச் செயல்களைச் செய்தற்கு விரும்பினன்.—எ. று. (௨௬)

உடல மீதுடற் காவியீ துயிர்க் குயி ராய
கடவு டன்மையீ தெனநெறி காட்டிய் வேதத்
தொடர் குலத்திடைத்தோற்றியு மந்நெறி மறந்தான்
விட லரும்பெருந் தீவினை விலக்குவ ரெவரோ.

(இ-ள்) உடலம் ஈது-சரீரத்தின்றன்மை இப்படிப்பட்டதென்றும்,—உடற்கு ஆவி ஈது - அச்சரீரத்திலுள் இருக்கின்ற உயிரின்றன்மை இப்படிப்பட்டதென்றும்,—உயிர்க்கு உயிர் ஆய கடவுள் தன்மை ஈது என - உயிர்க்குயிராகிய கடவுளினது தன்மை இப்படிப்பட்டதென்றும்,—நெறி காட்டிய வேதத் தொடர் குலத்து இடைத் தோற்றியும்- அவைகளின் வழிகளைக்காண்பிக்கின்ற வேத சம்பந்தமான பிராமணகுலத்திற் பிறந்தும்,—அந்நெறி மறந்தான்- அவ்வேத மார்க்கத்தை மறந்துவிட்டான்,—விடல் அரும் பெரும் தீவினை விலக்குவார் எவரோ - நீங்குதற்கரிய(பழவினையினாலாகிய) கொடிய தீவினைகளை விலக்க வல்லவர்கள் எவர்களோ ? (ஒருவருமில்லை).—எ. று. (௨௭)

இனைய தன்மைய னிவன்றனைத் தந்தைகண் டிரங்கி
மனையும் வாழ்வுநம் மரபுநீ போற்றிலை யந்தோ
தனைய கேளெனப் புன்முறை சமைவுற மமிர்தூ
மனைய நூலினா லநம்பல வறிவுறுத் தினனால்.

(இ-ள்) இனைய தன்மையன் இவன் தனைத் தந்தை கண்டு இரங்கி - இப்படிப்பட்ட தன்மைகளையுடையவனாகிய இத்துன்மதனை அவன் பிதாவானவர் பார்த்து இரக்கமுற்று,—மனையும் வாழ்வும்

நம்மரபும் அந்தோ நீ போற்றிலை - நமது நற்குடிப்பிறப்பையும் வாழ்க்கையையும் நமதுகுலமுறைமையையும் ஐயோ நீகாப்பாற்ற வில்லை,—தனய கேள் என - புத்திரனே நீ கேட்பாயாக என்று,— சமைவரும் அமிர்தம் அனைய நூலினால் பல அறம் அறிவுறுத்தினன்- பொருத்த மாகச் செய்யப்பட்டு வருகின்ற அமிர்தத்தை யொத்த சாஸ்திரங்களால் பல தருமங்களை எடுத்துச் சொல்லினார்.—எ. று. ஆல் அசை. (உஅ)

தாதை கூறிய மொழியெலாந் தமையுணர்ந் தோர்பாற்
றீதுறு தெனவவன் செவியுறு தமை தெளிந்து
போதமாதவ ருலகினிற் புரிமயக் கறுத்த
னீதி யாமெனத் தனயன்பா னேயத்தை நீத்தான்.

(இ-ள்) தாதை கூறிய மொழி எலாம் - பிதாவானவர் தான் சொல்லியவார்த்தைகளெல்லாம்,—தமை உணர்ந்தோர் பால் தீது உறுதுஎன-தம்மைத்தாமேஅறிந்த மெய்ஞ்ஞானிகளிடத்துத் தீமை கள் வந்து அடையாத தன்மையைப் போல,—அவன் செவி உறு தமை தெளிந்து - அத்துன்மதன் காதிலேறுத தன்மையை அறிந்து,—போத மாதவர் - ஞானத்தையும் பெரியதவத்தையு முடைய அப்பிராமணர்,—உலகினில், புரி மயக்கு அறுத்தல் நீதிஆம் என- பிரபஞ்சத்தில் வைக்கப்பட்ட மயக்கத்தை நீக்குதல் நீதி யாகும் என்று,—தனயன் பால் நேயத்தை நீத்தான் - புத்திரனிடத்தில் வைக்கப்பட்ட ஆசையை ஒழித்தார்.—எ. று. (உகூ)

மாயத் தாலுலை மைந்தனை யன்னையுமறந்தாள்
தாயத்தார் தனித்துணைவர் கடமருளாரேவ
லாயத்தா ரபலாயுளார்பதி யுளா ரகலா
நேயத் தாருடன் றேயத் தாரடை வினி னீத்தார்.

(இ-ள்) மாயத்தால் உலை மைந்தனை அன்னையும் மறந்தாள்- வஞ்சகத்தால் அலைகின்ற தன்புத்திரனாகிய துன்மதனை அவன் தாயு மறந்து விட்டாள்,—தாயத்தார் தனித்துணைவர்கள் தமருளார் ஏவல் ஆயத்தார் அபலாயுளார் பதியுளார் அகலா நேயத்தாருடன் தேயத் தார்-ஞாதிகளும்ஒப்பில்லாதசகோதரர்களும் சுற்றத்தாரர்களும்ஏவற் றொழில்செய்கின்ற கூட்டத்தார்களும் அன்னியூர்களும் அந்நகரத் திலுள்ளவர்களும் நீங்காதசிநேகிதர்களும் அத்தேசத்தார்களும்,—

அடைவினில் நீத்தார் - கிரமமாகத் (துன்மதன்மேல்வைத்தவிருப்பத்தை) ஒழித்தார்கள்.—எ. று. (சுo)

ஆடல் வேந்தர்வந் தடிதொழ வருந்தமிழ்த் தெய்வப்
பாடல் வேந்தர்கள் புகழ்ந்திடப் பாண்டிநா டாளுங்
கூடல்வேந்தனு மொற்றரா லறிந்துபார் குறைக
ணீடல் வேந்தர்கண் டிருத்தல்பொல் லாதென நினையா.

(இ-ள்) ஆடல் வேந்து வந்து அடிதொழ - வலிமை பொருந்திய அரசர்கள் வந்து பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரிக்கவும்,—தெய்வ அருந்தமிழ்ப் பாடல் வேந்தர்கள் புகழ்ந்திட,—தெய்வத்தன்மை பொருந்திய அரிய தமிழ்ப் பாடல்களைப் பாடுகின்ற கவிராசர்கள் புகழவும்,—பாண்டி நாடு ஆளும் கூடல் வேந்தனும் - பாண்டியதேசத்தை யரசாளுகின்ற மதுராபுரிக்கரசனாகிய பாண்டியராஜனும்,—ஒற்றரால் அறிந்து - தூதர்களால் (அத்துன்மதன்செய்கையை) அறிந்து,—பார் குறைகள் நீடல் - தான் அரசாட்சி செய்யும் நாட்டில் குறைவுபாடுகள் அதிகரித்தலை,—வேந்தர் கண்டு இருத்தல் பொல்லாது என நினையா - (அக்குறைவுகளை)அரசர்கள் பார்த்துக்கொண்டிருத்தல் குற்றமாகுமென்று(அவ்வரசன்)நினைத்து.—எ. று. (சுக)

மறை வழக்கமு மனுநெறி வழக்கமுஞ் சைவத்
துறை வழக்கமும் வழங்குநந் தொல்லைநாட் டகத்தோர்
குறை வழக்க முண்டாவ தேயென மனங் கொதியா
விறை வழக்கி னில்லானை நாட் டெல்லை நீத் தொழித்
[தான்.

(இ-ள்) மறை வழக்கமும் - வேதவழக்கமும்,—மனு நெறி வழக்கமும் - மனுதரும சாஸ்திர வழியிற் சொல்லிய வழக்கமும்,-சைவத் துறை வழக்கமும் - சைவசாஸ்திரவழியிற் சொல்லிய வழக்கமும்,—வழங்கும் நம் தொல்லை நாட்டு அகத்து - வழங்குகின்ற நமது பழைய தேசத்தினிடத்தில்,—ஓர் குறை வழக்கம் உண்டாவதே என இறை மனங் கொதியா - ஒரு குறைவு பாடுபொருந்திய தீய வழக்கம் உண்டாயிற்றே என்று அவ்வரசன் மனங்கொதித்து,—வழக்கில் நில்லானை - மேற்சொல்லிய வழக்குக்களில் நில்லாதவனாகிய துன்மதனை,—நாட்டு எல்லை நீத்து ஒழித்தான் - தன்தேசத்தின் எல்லையை விட்டு நீங்கிப் போகும்படிச்செய்தான்.—எ. று. (சுஉ)

ஆய நாட்டைவிட் டயல்செலா வளவிறே யங்க
ளேய கூத்தரோ டேத்திசை போற்றும்யாழ்ப் பாணர்
போய நாணுடைத் தூர்த்தர்பொல் லாருடன் புணர்ந்து
சேய நாட்டிரிவான்பொரு ளாசையிற் றிளைத்தான்.

(இ-ள்) ஆய நாட்டை விட்டு அயல் செலா - (அத்துன்மதன்) அத்தேசத்தைவிட்டுப் பக்கத்திலே போய்,—அளவில் தேயங்கள் ஏய கூத்தரோடு - அளவில்லாத தேசங்களிலுள்ள கூத்தாடிகளோடும்;—ஏத்து இசை போற்றும் யாழ்ப்பாணர் - துதிக்கத்தக்க சங்கீத வித்தையைப் (பொருளாகக்கொண்டு) காப்பாற்றுகின்ற யாழிலே வல்ல பாணர்களோடும்,—போய நாண் உடைத் தூர்த்தர் - நாணம் இல்லாத காமிகளோடும்,-பொல்லார் உடன் புணர்ந்து - கெட்டவர்களோடும் கூடி.—சேய நாள் திரிவான் - அனேக நாள் திரிபவனாய்,—பொருள் ஆசையில் திளைத்தான் - பொருளின் மேல் வைக்கப்பட்ட ஆசையில் அழுந்தினான்.—எ. று. (ருரு)

## வேறு.

கானநெறித் தனிவருவோர் கருத்தலையப் பொருள்கவர்ந்து, மூனுயிர்போ லுறவுபுரிந் துடைமையுட னெடுத்தொழித்தும், போனகநீ ரடைக்காயிற் புரிமயக்கஞ் சிறிதகலா, வானமருந் தருத்தியவ ருஞ்செல்வங் கொணர்ந்தகன்றும்,

(இ-ள்) கான நெறித் தனி வருவோர் கருத்து அலையப் பொருள் கவர்ந்தும் - காட்டு வழியில் தனித்து வருகின்றவர்களுடைய மனம் வருந்தும்படி அவர்களுடைய பொருள்களை அபகரித்தும்,—ஊன் உயிர் போல் உறவு புரிந்து உடைமை உடன் எடுத்து ஒழித்தும் - உடலும் உயிரும் போல் அவர்களோடு உறவு செய்து அவர்கள் பொருளை உடனே அபகரித்துக் கொண்டு அவர்களை விட்டு நீங்கியும்,—போனகம் நீர் அடைக்காயில் புரி மயக்கம் சிறிது அகலாவான மருந்து அருத்தி - போசனம் தாக நீர்த்தம் வெற்றிலைபாக்கு என்னும் (உணவுப்பொருள்களில் சம்பந்தப்படுத்திய) மயக்கஞ்சிறிது நீங்காதனவாகிய மருந்துகளை யுண்பித்தும்,—அவர் அரும் செல்வம் கொணர்ந்து அகன்றும் - அவர்க

ளுடைய அரிய பொருள்களை அபகரித்துக்கொண்டு நீங்கியும்.—எ. று. (௫௪)

அந்தணரை வதைசெய்து மறவோரை யுயிர்கவர்ந்து, மூந்துநெறி விருத்தர்களைப் பாலகரை முற்றுவித்தும், பைந் தொடியார் தமைமுடித்தும் பலகோடி கொலைபுரிந்தும், வந்த பொரு ளான்மகிழ்வான் மதன் கணையால் வருந்துவான்.

(இ-ள்) அந்தணரை வதைசெய்தும் - பிராமணர்களைக்கொன் றும்,— அறவோரை உயிர் கவர்ந்தும் - முனிவர்களுடைய வுயிரைக் கொன்றும்,—முந்துநெறி விருத்தர்களைப் பாலகரை முற்றுவித்தும் - முதன்மையாகிய நல்வழியிலொழுகுகின்ற வயோதிகர்களையும்,குழந் தைகளையுங் கொன்றும்,—பைந்தொடியார் தமை முடித்தும்-பசிய வளையல்களை அணிந்த பெண்களைக் கொன்றும்,—பலகோடி கொலை புரிந்தும் வந்த பொருளால் மகிழ்வான் - இன்னும் அளவில்லாத கொலைகளைச் செய்தும் அதனால் கிடைத்த பொருளினுற் சந்தோ ஷப்படுபவனும்,—மதன் கணையால் வருந்துவான் - மன்மத பாணத் தினுல் வருந்துகின்றவனுமாயினன்.—எ. று. (௫௫)

வாதித்த வேல்விழியார் மயலளற்றின் வீழ்ந்தழுந்தி, யாதித்தொல் குலமுடைய வரிவையுரை யயலாராற், பேதித் துஞ் சோர்வறிந்து பெட்பமுறத் தன்னுரையாற், போதித தும் பொருள்கொடுத்தும் புணர்ந்தவர்த நெறியொழித் தான்.

(இ-ள்) வாதித்த வேல் விழியார் மயல் அளற்றின் வீழ்ந்து அழுந்தி-கொலைத்தொழிலைச் செய்கின்ற வேற்படை போலுங் கண் களையுடைய பெண்களது மயக்கமாகிய சேற்றில் விழுந்தழுந்தி,— தொல் ஆதி குலம் உடைய அரிவையரை அயலாரால் பேதித்தும்- பழமையாகிய முதல்வருணத்தையுடையபிராமணப்பெண்களைப் பிற ரைக்கொண்டு அவர்கள் புத்தியைப்பேதிக்கும்படி செய்தும்,— சோர்வு அறிந்து பெட்பம் உற தன் உரையால் போதித்தும்-அவர் கள் மயங்குஞ்சமயம்பார்த்துத் தன்னிடத்தில் அவர்கள் விருப்பங் கொள்ளும்படி தன்னுடைய சொல்லாற் போதனை செய்தும்,— பொருள் கொடுத்தும் - அவர்களுக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்தும்,—புணர்ந்து - அவர்களைப் புணர்ச்சிசெய்து,—அவர்தம் நெறி ஒழித்தான் - அவர்களுடைய (கற்புநிலையாகிய) சன்மார்க்கத் தைக் கெடுத்தான்.—எ. று, (௫௬)

மகங்களள விலபுரிந்தோர் மறைவரம்பு கண்டோர்தம்,
மகந்தெளிந்தோர் மனைவியர்க ளனந்தம்பேர் புவிதாங்கு, நகங்
கடனை யிறுத்துக்காலடுங்கச்சாய்த் ததுபோல்,விகம்பரமென்
றறியாதோ னிலகியகற் பழித்தொழித்தான்.

(இ-ள்) இகம் பரம் என்று அறியாதோன்-இம்மைப்பயன் இது வென்றும் மறுமைப் பயன் இதுவென்றும் அறியாதவனாகிய அத்துன்மதன்,—கால் புவி தாங்கும்நகங்கள்தனை நடுங்க இறுத்துச் சாய்த்தது போல்-காற்றானது பூமியைத் தாங்குகின்ற அஷ்டகுலபர்வதங்களை நடுங்கும் படி முறித்துத் தள்ளியது போல்,—அளவில் மகங்கள் புரிந்தோர் - அளவில்லாதனவாகிய யாகங்களைச் செய்தவர்களும்,—மறை வரம்பு கண்டோர் - வேதங்களின் முடிவை யறிந்தவர்களும்,—தம் அகம்தெளிந்தோர்-தம்முடைய மனந்தெளிந்தவர்களுமாகிய பெரியோர்களுடைய,—மனைவியர்கள் அனந்தம் பேர் இலகிய கற்பு அழித்து ஒழித்தான் - மனைவியர்களாகிய அளவில்லாத பெண்களுடைய விளங்குகின்ற கற்புநிலைகளை அழித்து விட்டான்.— எ. று. (௬௭)

இறுதிக்கா னடுங்கச் சாய்த்தது போல்எனவும்பாடம்.
இறுதிக்கால் என்பதற்கு-ஊழிக்காற்று எனப்பொருள்கொள்க.

ஈந்தறியா னோருண்மை யிசைத்தறியான் பேரறநூ,
லாய்ந்தறியா னாய்ந்தவரை யடைந்தறியா னொருதீர்த்தந்,
தோய்ந்தறியான் றெய்வமெனச் சொற்றுமறி யானிரயம்,
நீந்தறியா வகைபாவு நினைவுரையாக் கையிற்கொண்டான்.

(இ-ள்) ஈந்து அறியான்-(அத்துன்மதன் யாவர்க்காயினுமொன்றுங்) கொடுத்தறியான்,—ஓர் உண்மை இசைத்து அறியான்-உண்மை வார்த்தைகள் ஒன்றுஞ் சொல்லி அறியான்,—பேர் அறநூல் ஆய்ந்து அறியான்-பெரியதரும சாஸ்திரங்களையும் ஆராய்ந்துஅறியான்,—ஆய்ந்தவரை அடைந்து அறியான் - (அச்சாஸ்திரங்களை) ஆராய்ந்தறிந்த பெரியோர்களை யடைந்து கேட்டும் அறியான்,—ஒரு தீர்த்தம் தோய்ந்து அறியான் - ஒரு புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து மறியான்,—தெய்வம் எனச் சொற்றும் அறியான் - தெய்வமொன்றுண்டென்று வாயாற் சொல்லியு மறியான்,—நினைவு உரை ஆக்கையில் - மனம் வாக்குக் காயங்களினால்,—நிரயம் நீந்து அறியா வகை யாவும் கொண்டான் - நரகத்தினின்று நீங்காதவிதங்கள் எல்லாவற்றையுங் கைக்கொண்டான்.— எ. று. (௬௮)

கொலைகளிலிங்கிவன் முடியாக் கொலையில்லையாவர்க்குங்
கலகமுறுங் களவுதனி லிவன்புரியாக் களவில்லை
யிலகுபெரும் புடவியிடை யிவனழியாக் கற்பில்லை
நலமகறீவினைக்கொடியோ னிவ்வண்ண நாட்கழித்தான்.

(இ-ள்) இலகு பெரும் புடவி இடை - விளங்காநின்ற பெரிய பூமியினிடத்தில்,—கொலைகளில் இங்கு இவன் முடியாக் கொலை இல்லை-கொலைகளுக்குள் இவ்விடத்தில் இத்துன்மதன் செய்து முடியாத கொலையொன்றுமில்லை,—யாவர்க்கும் கலகம் உறும் களவு தனில் இவன் புரியாக்களவு இல்லை - யாவருங் கலக மடையும்படிச் செய்கின்ற களவுகளுக்குள் இத்துன்மதன் செய்யாத களவுகளொன்று மில்லை,—இவன் அழியாக் கற்பு இல்லை-இவன் அழிக்காத கற்புகளொன்று மில்லை,—நலம் அகல் தீவினைக் கொடியோன் இவ் வண்ணம் நாள் கழித்தான் - நன்மையினின்று நீங்கிய பாவங்களைச் செய்கின்ற கொடியோனாகிய இத்துன்மதன் இவ்விதமாகவே தங்காலங்களைக் கழிப்பானாயினான்.—எ. று. (௩௯)

கருங்கடலுட் டிசைமயங்கிக் கரைகாணா துழலுமோ
ரருங்கலமங்கொருகாலா லேற்றகரை செல்வதுபோ[ன்
லொருங்கரியபவக்கடல்வாயுலைபவன்முன்னல்வினைக்கா
மருங்குதவி யுந்திடலான்மதிற்றில்லைத்திசைசென்றான்.

(இ-ள்) கரும் கடலுள் திசை மயங்கிக் கரை காணாது உழலும் ஓர் அரும் கலம் - கருமையாகிய சமுத்திரத்தில் திசைதப்பிக் கரை காணாது அலைகின்ற ஒரு அருமையாகிய கப்பலானது,—ஒரு காலால் ஏற்றக் கரை செல்வதுபோல் - ஒருகாற்றினாற் கரையிற்றள்ளப்பட அப்பொழுது அடையக்கூடிய கரையில் வந்து செல்வது போல்,—அரிய பவக்கடல் வாய் ஒருங்கு உலைபவன் - அருமையாகிய பிறவிக் கடலினிடத்து ஒருங்கு கிடந்து அலைகின்றவனாகிய அத்துன் மதன்,—முன் நல்வினைக் கால்மருங்குஉதவி உந்திடலால் - முற்பிறப்பிற் செய்த நல்வினையாகிய காற்றானது இவன் பக்கத்தில் உதவியாய் நின்று தள்ளுதலினால்,—மதில் தில்லைத் திசை சென்றான்-மதில்களாற் சூழப்பட்ட தில்லைவனத்தினது திசையை நோக்கிச் சென்றான்,—எ. று. (௪0)

காணின்று மலைநின்று கமலமிசை நின்றுதழன்
மேனின்று தவம்புரிந்தும் பெறற்கரிய வீட்டின்பம்

யானின்று தருவனென விளங்கொடியோ டானந்தத்
தேனின்று நடம்புரியுந் திருவெல்லைப் புறத்தணைந்தான்

(இ-ள்) கான் நின்று - காட்டினின்றும்,—மலை நின்று - மலையினின்றும்,—கமலமிசை நின்று- ஜலத்தினின்றும்,—தழல்மேல் நின்று - அக்கினியின்கண் நின்றும்,—தவம் புரிந்தும் பெறற்கு அரிய வீட்டு இன்பம் - தவஞ் செய்தும் பெறுதற்கரிதாகிய மோக்ஷவின்பத்தை,—யான் இன்று தருவன் என - யாம் இப்பொழுதே கொடுத்தருளுவோம் என்னுந் திருக்குறிப்போடு,—இளங் கொடியோடு ஆனந்தத் தேன் நின்று நடம்புரியும் - இளமை பொருந்திய கொடிபோன்ற சிவகாமியம்மையோடு ஆனந்தத் தேனாகிய நடேசப் பெருமான் நின்று திருநிருத்தஞ் செய்தருளா நின்ற,— திரு எல்லைப் புறத்து அணைந்தான் - சிதம்பரத்தின் திருவெல்லையின் பக்கத்தில் (அத்துன்மதன்) வந்து சேர்ந்தான்.—எ, று. (சுக)

வேறு.

அங்கொ டிங்கொ டூசல்போ லரும்பிறப் பிறப்பிடைத்
தங்கிவெந் துயர்க்கணிற் றணவுமாறு மார்கழித்
திங்கடன்னி லாதிரைத் தினத்தும் வானம்வையக
மெங்குமுய்ய நெறிவழங்கு மெழில்விழாநடந்ததால்.

(இ-ள்) அங்கு ஒடு இங்கு ஒடு ஊசல் போல் அரும் பிறப்பு இறப்பு இடை தங்கி - அவ்விடத்தும் இவ்விடத்தும் ஓடி அலைகின்ற ஊஞ்சல் போலுள்ள அருமையாகிய பிறப்பிலும் இறப்பிலுந் தங்கி,— வெம் துயர்க்கணில் தணவு மாறு-கொடிய துன்பத்தினின்று நீங்கும்படி,—மார்கழித் திங்கள் தன்னில் - மார்கழி மாசத்தில்,—ஆதிரைத் தினத்தும் - திருவாதிரை நக்ஷத்திரத்தில்,—வானம்வையகம்எங்கும் உய்யும் நெறி வழங்கும் - சுவர்க்க லோகத்தவர்களாகிய தேவர்களும் பூலோகத்தவர்களாகிய மனிதர்களும் மற்றெவ்விடங்களிலு முள்ள மற்றவர்களும் கடைத்தேறு மார்க்கத்தைக் கொடுத்தருளாநின்ற,— எழில் விழா நடந்தது - அழகிய திருவிழா நடந்தது.—எ. று.

ஆல் அசை. (சஉ)

ஒடு என்பன இசைநோக்கி ஒடு எனக் குறுக்கல் விகாரம் பெற்றன.

பந்தமாட வீதியிற் பளிங்கிழைத்த முன்றில்வாய்
முந்துசெம் மணிக்கணத்தின் முறையிழைத்த நிறைகுட

மந்தமற்ற பெருமைகொண்ட வாசிலா திலங்குபாற்
சிந்துவின்க ணிரவிவந் துதித்த செய்கை சிவணுமே.

(இ-ள்) பந்தம் மாட வீதியில் பளிங்கு இழைத்த முன்றில் வாய்-கட்டப்பட்ட மாளிகைகளையுடைய திருவீதியில் பளிங்குக் கற்களாற் செய்யப்பட்ட வீட்டு முற்றத்தினிடத்தில் வைக்கப்பட்ட,—முந்து செம்மணிக் கணத்தின் முறை இழைத்த நிறைகுடம்-முதன்மையாகிய சிவப்பு என்னும் இரத்தினக்கூட்டங்களால் வரிசையாகப்பதித்துச் செய்யப்பட்ட பூரணகும்ப மானது,—அந்தம் அற்ற பெருமை கொண்ட - அளவில்லாத பெருமை பொருந்திய,—ஆசு இலாது இலங்கு பால் சிந்துவின் கண் - குற்றமில்லாமல் விளங்குகின்ற திருப்பாற்கடலினிடத்தே,—இரவி வந்து உதித்த செய்கை சிவணும் - சூரியோதயமானதை யொத்திருக்கும்.—எ. று.
ஏ அசை. (சரு)

மாலடைந்த செய்யசோதி மணியினிற் குயிற்றிடும்
பாலிகைக்கண் வெண்முளைப் பரப்பெழுந்த பரிசுதான்
வேலைதந்த வமுதவிந்து மதியமன்றி வெய்யவன்
கோலமண், டலத்தும்வந்து குடிபுகுந்த தொக்குமால்.

(இ-ள்) மால் அடைந்த சோதிசெய்ய மணியினிற் குயிற்றிடும் பாலிகைக்கண்- பெருமை பொருந்திய ஒளியையுடைய சிவந்த இரத்தினங்களாற் செய்யப்பட்ட பாலிகைகளி னிடத்தில்,—வெள் முளைப்பரப்பு எழுந்த பரிசு - வெள்ளிய முளைகள் பரப்பிய தோற்றமானது,—வேலை தந்த அமுத விந்து - திருப்பாற்கடலிற் றோன்றிய அமிர்தத் துளியானது,—மதியம் அன்றி வெய்யவன் கோல மண்டலத்தும் வந்து குடி புகுந்தது ஒக்கும் - சந்திரமண்டலத்தல்லாமல் அழகிய சூரியமண்டலத்தினிடத்தும் வந்து குடியிருத்தலை யொத்திருக்கும்.—எ. று. தான் ஆல் அசைகள். (சச)

குருமணிக் குலங்களிற் குயிற்றுமம்பொன் மாடமு
மருவுவாயின் மணிதுயங்கு மகரதோ ரணங்களு
மிருமைகொண்ட வுதயவெற் பினத்தி னங்க ளுதயமா
யொருவிகந்த விடிவியெண் ணிலுள்ளவாயி னொக்குமே.

(இ-ள்) குரு மணிக் குலங்களில் குயிற்றும் அம்பொன்மாடமும் - நிறம் பொருந்திய கூட்டமாகிய இரத்தினங்கள் பதித்துச்

செய்யப்பட்ட அழகிய பொற்பிரகாசம் பொருந்திய மாளிகைகளும்,—மணி நயங்கு வாயில் மருவு மகர தோரணங்களும் -அழகு விளங்காநின்ற அம்மாளிகை வாயிலிற் கட்டிய மகரதோரணங்களும்,—இருமை கொண்ட உதய வெற்பு இனத்தின் - பெருமை பொருந்திய உதய மலைக்கூட்டங்களில்,—அங்ஙன் உதயமாய் ஒருவு இகந்த இரவி எண் இல் உள்ள ஆயின் ஒக்கும்- அவ்விடத்தில் உதயமாய் நீங்குதலில்லாத சூரியர்கள் அளவில்லாதவர்கள் உண்டாயின் (அவை) ஒப்பாகும்.—எ. று. ஏ அசை. (சரு)

இரவியால் விளங்குமா றிகந்துதில்லை யம்பலம்
பரவுசெய்ய சோதியே பரந்திலங்கு வெய்யவன்
கிரணமுந்து வெம்மைவந்து கிட்டினு னிகேதன
நிரவுகே தனக்குழா நிறைந்துமே னிழற்றுமால்.

(இ-ள்) தில்லை யம்பலம் - தில்லைவனத்தின்க ணுள்ள கனகசபையானது,—இரவியால் விளங்குமாறு இகந்து - சூரியனாற் பிரகாசிக்குந் தன்மை நீங்கி,—பரவு செய்ய சோதியே பரந்து - விரிந்த (அச்சபையின்) செவ்வொளியே பரவப் பெற்று,—இலங்கு வெய்யவன் கிரண வெம்மைமுந்து வந்து கிட்டினால்- விளங்காநின்ற சூரிய கிரணத்தினாலாகிய வெப்பமானது முற்பட்டு வந்து கிட்டினால்,—நிகேதனம் நிரவு கேதனக் குழாம் - கோயிலில் வரிசையாகக்கட்டிய கொடிக் கூட்டங்கள்,—மேல் நிறைந்து நிழற்றும் - ஆகாயத்தில் நிறைந்து நின்று நிழலைச் செய்யும்.—எ. று. ஆல் அசை. (சசு)

யாகசாலை தெற்றிமுற்ற மேசிலாத வீதிவாய்
மாகநாடு கோபுரங்கண் மண்டபங்க ளாலயம்
பாகசாத னாதியண்டர் பகுதிதுன்று மன்றியுஞ்
சோகமுற்ற முனிவர் தொண்டர் தொகுதியென்று மிகு
[தியால்.

(இ-ள்) யாகசாலை - யாகசாலைகளிடத்தும்,—தெற்றி-திண்ணைகளிடத்தும்,—முற்றம்-முற்றத்தினிடத்தும்,—ஏசு இலாதவீதிவாய்- குற்றமில்லாத வீதிகளிடத்தும்,—மாகம் நாடுகோபுரங்கள் - ஆகாய பரியந்தம் அளாவுகின்ற கோபுரங்களிடத்தும்,—மண்டபங்கள் - மண்டபங்களிடத்தும்,—ஆலயம் - கோயில்களிடத்தும், — பாகசாதன் ஆதி அண்டர் பகுதி துன்றும் - தேவேந்திரன் முதலாகிய

தேவர்கூட்டங்கள் நெருங்கியிருக்கும்,—அன்றியும் - அதுவல்லாம லும்,—சோகம் உற்ற முனிவர் தொகுதி - பரவசப் பட்டிருக்கின்ற முனிவர் கூட்டங்களும்,—தொண்டர் தொகுதி - அடியார்கூட்டங் களும்,—என்றும் மிகுதி - எப்பொழுது மிகுந்திருக்கும்.—எ. று. ஆல் அசை. (சஎ)

தொகுதி என்னுஞ் சொல்லை முனிவர் என்பதோடுங்கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.

புரமெரிந்து விழநகைத்த புனிதனன்ப ரளவிலார்
வரமிகுந்த மேனிநீறு மறுகிலங்கு மொளிகள் பாற்
பரவைமுன் பிரிந்தமெய்ப் பதஞ்சலிக்க ணேயமே
விரவிவந்து காணவெங்கு மேவிநேட லொக்குமே.

(இ-ள்) புரம் எரிந்து விழ நகைத்த புனிதன் அன்பர் அளவு இலார் வரம்மிகுந்தமேனி நீறும்- திரிபுரமானது எரிந்துவிழும்படி திருப்புன்முறுவல் செய்தருளிய சிவபெருமானது அளவில்லாத அடியார்களுடைய மேன்மை பொருந்திய திருமேனியிற் றரித்தரு ளிய விபூதியினது ஒளியும்,—மறுகு இலகுஒளிகள் - திருவீதியினிட த்துப் பிரகாசியாநின்ற ஒளியும்,—பால் பரவை - திருப்பாற்கடலா னது,—முன் பிரிந்த மெய்ப் பதஞ்சலிக்கண் நேயம் மேவி - முன் தன்னை விட்டு நீங்கிய ஆதிசேஷனாகிய உண்மை பொருந்திய பதஞ் சலிமுனிவரிடத்து விருப்ப முண்டாய்,—விரவி வந்து காண எங் கும் நேடல் ஒக்கும் - சீக்கிரம் வந்து பார்க்க விரும்பி எவ்விடத்தும் போய்த் தேடுதலை யொக்கும்.—எ. று. ஏ அசை. (சஅ)

மக்கடேவர் தந்நெருக்கின் வழிவிலங்கி வந்துளோர்
மிக்கதஞ்செய் தொழிலறிந்து வேறு வேறு சேர்வராற்
பக்கமே பணிந்துமீள் பதங்கர் தங்க டேர்தரைத்
தக்கதே ரொடையமாழி யொன்று கண்டு தணர்வரால்.

(இ-ள்) மக்கள் தேவர் தம் நெருக்கின் வழி விலங்கி வந்து ளோர் - மனிதர்களுடையவும் தேவர்களுடையவும் நெருக்கத்தினால் வழியில் விலகி வந்தவர்கள்,—மிக்க தம் செய்தொழில் அறிந்து வேறு வேறு சேர்வர் - மேம்பாடு பொருந்திய தங்கள் தங்கள் கரும ங்களைச் செய்து வேறு வேறாகச் சேர்ந்திருப்பார்கள்,—பக்கமே பணிந்து மீள் பதங்கர் - பக்கங்களி னின்று வணங்கித் திரும்புகின்ற

சூரியர்கள்,—தங்கள் தேர் தக்க தரைத் தேர் ஒடு ஐயம் - தங்களுடைய இரதங்கள் தகுதிபொருந்திய பூலோகத்திலுள்ள இரதங்களோடு சந்தேகமுண்டாயிருத்தலை,—ஆழி ஒன்று கண்டு தணர்வர் - தங்கள் இரதத்திற்கு ஒருருளை இருத்தலைப்பார்த்து அச்சந்தேகம் நீங்குவார்கள்.— எ. று. ஆல் அசை. (சக)

மிக்ககண் செய்தொழிலறிந்து வேறுவேறு சோர்வராலெனவும் பாடம்.

அண்டர்சூழ் விமானகோடியந்த ரத்த பந்தரான்
மண்டலத்தி னந்தகார மன்னி னங் கவற்றினல்
விண்டதேசதோவிளக்கும் வேதநாத னம்பலங்
கொண்ட சோதி யண்டாண்ட கூடமெங்கு மூடுமால்.

(இ-ள்) அண்டர் சூழ் விமான கோடி அந்தரத்த பந்தரான் - தேவர்கள் சூழ்ந்திருக்கின்ற அநேக விமானங்களால் ஆகாயத்திற் போடப்பட்ட பந்தலினல்,—மண்டலத்தில் அந்தகாரம் மன்னின் - பூமியினிடத்து இருளானது நிலைபெற்றால்,—அங்கு அவற்றினல் விண்டதேசதோவிளக்கும்-அப்பொழுது அவ்விமானங்களினின்றும் உண்டாகிய ஒளியோ அவ்விருளை நீக்கும், (நீக்காது.) (பின் எது நீக்கும் எனின்?),—வேதநாதன் அம்பலம் கொண்ட சோதி-வேதநாதனாகிய நடேசப் பெருமான் எழுந்தருளியிராநின்ற கனகசபையிற் பொருந்திய சோதியே,—அண்டர் அண்டகூடம் எங்கும் மூடும் - அத்தேவர்கள் வசியாநின்ற ஆகாயமுகடெங்கும் உள்ள இருளை நீக்கிப் பிரகாசிக்கும்.—எ. று. ஆல் அசை. (௩௦)

முடிகளோடு முடிநெருங்கி முந்தி முந்தி வந்துநின்
றடிகண்மன்றிலாடல்கண்டவண்டராவணைந்தவெண்
பொடிகொண்மேனிநிலவுவீசுபுனிதஞானவன்பரும்
படின்மேல் விழுந் தெழுந்து பாடி யெங்கு மாடினர்.

(இ-ள்) அடிகள் மன்றில் ஆடல் கண்ட அண்டரா - சிவபெருமான் கனகசபையில் திருநிருத்தஞ்செய்தலைத் தரிசித்த தேவர்கள் மாத்திரமா?,—அணைந்த - அவ்விடத்தில் வந்து சேர்ந்த,—வெண் பொடி கொள் மேனி நிலவு வீசு புனித ஞான அன்பரும்-வெள்ளிய விபூதியைத் தரித்தலினல் திருமேனியில் சந்திரிகை வீசுகின்ற பரிசுத்தமாகிய ஞானத்தையுடைய அடியார்களும்,—முடிகளோடு

முடி நெருங்கி முந்தி முந்தி வந்து நின்று - தலைகளோடு தலைகள் நெருங்கும்படி முற்பட்டு வந்து நின்று,—படியின் மேல் விழுந்து எழுந்து - பூமியின்மேல் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று,—எங்கும் பாடி ஆடினார் - எவ்விடத்தும் (சந்தோஷமிகுதியால்) பாடி ஆனந்தக் கூத்தாடினார்கள்.—எ, று. (ருக)

கதுவு தேவர் மகுடமீது கற்பகத்தின் மாலை வீழ்
மதுவையுண்டுபுதுமைகொண்டவண்டினங்களித்தவாற்
பதுமமன்னகண்கள்கொண்டுபண்கள்கொண்டமாமறை
பொதுவினாடுமதுவையுண்டுபுலவருங்களித்தனர். [ப்

(இ-ள்) புதுமை கொண்ட வண்டு இனம்-நூதனமாகியவண்டுக் கூட்டங்கள்,—தேவர் மகுட மீது கதுவு கற்பகத்தின் மாலை வீழ் மதுவை உண்டு களித்த - தேவர்களுடைய முடியிற் பொருந்திய கற்பகமலர் மாலையிலிருந்து ஒழுகுகின்ற தேனைக் குடித்துக் களிப்படைந்தன,—பண்கள் கொண்ட மாமறைப் புலவரும்-இசைபொருந்திய பெரிய வேதங்களை அறிந்த தேவர்களும்,—பதுமம் அன்ன கண்கள் கொண்டு - செந்தாமரை மலர்போன்றகண்களினாலே,—பொதுவில் ஆடும் மதுவை உண்டு களித்தனர் - கனகசபையினிடத்தே நின்று நடிக்கின்ற நடேசப்பெருமானது ஆனந்த தாண்டவமாகிய தேனை யுண்டு சந்தோஷித்தார்கள்.—எ. று. ஆல் அசை. (ருஉ)

மாமறைப் புலவரும் என்றதற்கு வேத பண்டிதர்கள் எனப் பொருள் கூறினும் அமையும்.

முற்று முள்ள புவன நின்று வந்த வந்த வானுளோ
ரெற்றைநாளணைந்ததென்றெதிர்ந்து தம்மில் வினவுறப்
பெற்ற வோதை யன்பர் பூசை பேணுகின்ற பலவிதத்
துற்றவார வங்கடன்னி லொலிமழுங்கி நையுமால்,

(இ-ள்) முற்றும் உள்ள புவனம் நின்று வந்தஅந்த வானுளோர்-சகல புவனங்களிலு மிருந்து வந்த அத்தேவர்கள்,—எற்றை நாள் அணைந்தது என்று எதிர்ந்து தம்மில் வினவுறப் பெற்ற ஓதை - எப்பொழுது வந்தது எப்பொழுது வந்தது என்று தங்களுக்குள்ளே வினவுதலினா லுண்டாகின்ற ஓசையானது,—அன்பர் பூசை பேணுகின்ற பலவிதத்து உற்ற ஆரவங்கள் தன்னில் ஒலி மழுங்கி நையும்-அடியார்கள் பூசை செய்தல் முதலிய பலவிதங்களா லுண்டாகிய ஓசையினால் ஒலி மழுங்கிக் குறையும்.—எ. று. ஆல் அசை. (ருங)

பங்கயத் தடம் படிந்து பாசம் வீசி யேறுவா
ரங்கண்மிக்க தான நல்கி யமரரஞ்ச விரவுவார்
சங்கரற் குகந்தசைவ தருமநின்று புரிகுவார்
பொங்கிமிக்கெழுந்தவோசைபுவன மெங்கும் விரவுமால்.

(இ-ள்) பங்கயத் தடம் படிந்து பாசம் வீசி ஏறுவார்-புண்டரீக பொய்கை என்று சொல்லப்பட்ட சிவகங்கையிலே ஸ்நானஞ் செய்து தங்களைப் பந்தித்திருக்கின்ற பாசங்களை நீக்கி (மோக்ஷமாகிய) கரையிலேறுகின்றவர்களும்,—அங்கண் மிக்க தானம் நல்கி அமரர் அஞ்ச விரவுவார் - அச்சிவகங்கைக் கரையில் மிகுந்த தானங்களைச் செய்து தேவர்கள் அஞ்சும்படி நெருங்கி வருகின்றவர்களும்,—சங்கரற்கு உகந்த சைவ தருமம் நின்று புரிகுவார்-சிவபெருமானுக்குப் பிரியமாகிய சிவதருமங்களைச் செய்கின்றவர்களுமாகிய இவர்களுடைய,— பொங்கிமிக்கு எழுந்த ஓசை புவனம் எங்கும் விரவும் - சந்தோஷமிகுதியால் அதிகரித் தெழுந்த சத்தமானது உலகங்களெல்லாம் வியாபிக்கும்.—எ. று. ஆல் அசை. (௫௪)

அரம்பை மாதர் கீத வோதை யாட லோதை யாரணம்
பரம்பு மோதை பல்லியம் பரப்புமோதை யன்றி மூன்
வரம்பிலார் நெருங்குதேவர் மகுட மோது நந்தி கைப்
பிரம்பினோதைச்சலதி யோதை சிறிதெனப் பிறங்குமால்.

(இ-ள்) அரம்பை மாதர் கீத ஓதை - தெய்வப் பெண்கள் பாடுகின்ற சங்கீத ஓசையும்,—ஆடல் ஓதை - அவர்கள் நிருத்தஞ் செய்கின்ற ஓசையும்,—பரம்பும் ஆரண ஓதை - விரிந்தவேத ஓசையும்,— பரப்பும் பல் இய ஓதை - அடிக்கின்ற பலவகைப்பட்ட வாத்திய ஓசையும்,—அன்றி - இவைகளே யன்றி,—வரம்பு இலார் நெருங்கு தேவர் மகுடம் மோதும் நந்திகைப் பிரம்பின் ஓதை - அளவில்லாதவர்களாய் நெருங்கி வருகின்ற தேவர்களுடைய முடிகளில் அடிபடுகின்ற திருநந்தி தேவரது திருக்கரத்திலுள்ள பிரம்பின் ஓசையும்,— சலதி ஓசை சிறிது எனப் பிறங்கும் - சமுத்திர ஓசைச் சிறிதென்று சொல்லும்படி விளங்கும்.—எ. று. ஆல் அசை. (௫௫)

புரமெரித்த தங்கதித்த புண்டரீக வந்தணன்
சிரமறுத்த துஞ்சிலைக்கை வேளையன்று செற்றது

நரமடங்கலைத்தொலைத்த நன்குமின்ன வாதியாம்
வரமிகும் புராணமே வழுத்துவார்க ளெங்கணும்.

(இ-ள்) புரம்எரித்ததும் - திரிபுரத்தையெரித்ததும்,—புண்டரீக அந்தணன் சிரம் அறுத்ததும் - தாமரையாசனராகிய பிரமதேவருடைய சிரசைக்கொய்ததும்,—சிலைக்கை வேளை அன்றுசெற்றதும்-விற் பொருந்திய கையையுடைய மன்மதனை அந்நாளிற் கொன்றதும்,—நரமடங்கலைத் தொலைத்த நன்கும் - (விஷ்ணுவினுடைய) நரசிம்மாவதாரத்தை அழித்த நன்மையும்,—இன்ன ஆதியாம் - இவை முதலாகிய (பலசரித்திரங்களைச் சொல்லுகின்ற),—வரம் மிகும் புராணமே எங்கணும் வழுத்துவார்கள் - மிகுந்த மேன்மையையுடைய சிவபுராணங்களையே அச்சிதம்பரஸ்தல மெவ்விடத்தும் பிரசங்கஞ் செய்து கொண்டிருப்பார்கள்.—எ. று. (ருசு)

சரிதையீது கிரியையீது தக்கயோக மீது தற்
குரிய ஞான மீதெனா வுணர்த்து மாக மங்களும்
புரியுமா மகங்க ளாதி புகலுமா ரணங் களுந்
தெரிவு ளோர்கள் கழகமே திகழ்ந் துயர்ந்த திக்கெலாம்.

(இ-ள்) திக்கு எலாம் - அச்சிதம்பரத்தினது திக்குகளெங்கும்,—சரியை ஈது கிரியை ஈது தக்கயோகம் ஈது தற்கு உரிய ஞானம் ஈது எனா உணர்த்தும் ஆகமங்களும் - சரியையிது கிரியையிது தக்க யோகமிது ஆன்மாவுக் குரித்தாகிய ஞானமிது என்று அறிவிக்கின்ற ஆகமங்களையும்,—புரியும் மா மகங்கள் ஆதி புகலும் ஆரணங்களும் - செய்யப்படுகின்ற பெரியயாகங்கள் முதலிய கருமங்களைச்சொல்லும் வேதங்களையும்,—தெரிவு உளோர்கள் கழகமே திகழ்ந்து உயர்ந்த - ஆராய்ந் தறிந்த பெரியோர்களுடைய கூட்டமே விளங்கி உயர்ந்தன.—எ. று. (ருஎ)

விரைவின் வேலை யன்ன மாயன் வேதனெய்த வாயிலிற்
கருடனன்ன மங்குணங்கல் கனக வெற்பும் வெள்ளிமால்
வரையுமெம் மிடத்தினும் வயங்கு மன்றினிறைவ னென்
றருடவத்த சிறைபடைத் தணைந்த தன்மையொக்குமே.

(இ-ள்) வேலை அன்ன மாயன் - கடல் போன்றநிறத்தையுடைய விஷ்ணுமூர்த்தியும்,—வேதன் - பிரமதேவரும்,—விரைவில் எய்த - சீக்கிரம் அந்தஸ்தலத்தில்வர,—கருடன் அன்னம் அங்கு வாயிலில் உணங்கல் - (அவர்களுடைய வாகனங்களாகிய) கருடனும் அன்ன

மும் அவ்விடத்திலுள்ள கோபுரவாயிலிற் படுத்து நித்திரை செய்த லானது,—மால் கனக வெற்பும் வெள்ளிவரையும்-பெருமைபொருந் திய மகாமேருமலையும் திருக்கைலாசமலையும்,—மன்றின் இறைவன் எம் மிடத்தும் வயங்குவன் என்று - கனகசபையி லெழுந்தருளியிரா நின்ற தலைவராகிய நடேசப்பெருமான் எங்களிடத்தும் வீற்றிருந் தருளுவன் என்று,-அருள் தவத்தசிறைபடைத்து அணைந்த தன்மை ஒக்கும் - கிருபையோடு கூடிய தவத்தினால் சிறகுகளைப்பெற்றுவந்தி ருக்குந் தன்மையை ஒத்திருக்கின்றது.—எ. று. எ. அசை. (ருஅ)

அருகு வாழு மங்கைநேய வண்ண லாட லாதரம்
பெருகு வார்க ளருவி கண்கள் பெருகஞான வமிர்தமே
பருகுவார்கள் புளகமெய்ப்படைத்து ளார்கள் பரவசத்
துருகுவார்களின்ப வெள்ள முற்றுளார்க ளெங்கணும்.

(இ-ள்) எங்கணும் - அந்தஸ்தல மெவ்விடத்தும்,—அருகு வாழும்மங்கை நேய அண்ணல் ஆடல்ஆதரம் பெருகுவார்கள்-இடது பாகத்தில் வீற்றிருந்தருளாநின்ற சிவகாமியம்மை யாரிடத்தே விருப் பத்தையுடைய நடேசமூர்த்தியினது திருநிருத்தத்தில் ஆசைமிகுந் தவர்களும்,—கண்கள் அருவி பெருக ஞான அமிர்தமே பருகுவார் கள்-கண்களினின்றும் அருவியைப் போல் ஆனந்த பாஷ்பம் பெருக ஞானாமிர்தத்தை யுண்பவர்களும்,—மெய்ப்புளகம்படைத்துளார்கள்-சரீரத்திலே புளகத்தை யடைந்தவர்களும்,—பரவசத்து உருகுவார் கள்-பரவசத்தினாலே மனமுருகுகின்றவர்களும்,—இன்ப வெள்ளம் உற்றுளார்கள்-ஆனந்த வெள்ளத்தில் அழுந்தினவர்களும்,—எ. று. இது குளகம். (ருகூ)

வணங்குவார் வழுத்துவார் மகிழ்ந்துகாணலின்றிநின்
றுணங்குவா ரிருந்து தாளை யுள்குவா ரிடப் புறத்
தணங்கு காண மன்றுளாடு மாடல்கண் டியாவரு
மிணங்கொணாதசிவன்முத்தி யெய்தியின்ப மெய்துவார்.

(இ-ள்) வணங்குவார்-வணங்குகின்றவர்களும்,—வழுத்துவார்-துதிக்கின்றவர்களும்,—மகிழ்ந்து காணல் இன்றி நின்று உணங்கு வார்-சந்தோஷத்தோடு தரிசிக்கப்பெறாமல் நின்று சோர்வடைகின் றவர்களும்,—இருந்து தாளை உள்குவார் - ஓரிடத்திலிருந்துதிருவடி களைத் தியானிக்கின்றவர்களும், (ஆகியவிவர்கள்),— இடப்புறத்து

அணங்கு காண மன்றுள் ஆடும் ஆடல்கண்டு - இடப்பாசத்திலிருக்கின்ற சிவகாமியம்மையார் தரிசிக்கும்படி கனகசபையினிடத்தே செய்யப்படுகின்ற திருநிருத்தத்தைத் தரிசித்து,—யாவரும் இணங்கு ஒணுத சிவன்முத்திபெய்தி - யாவர்களும் அடையப் பெருத சிவன் முத்தியை அடைந்து,—இன்பம் எய்துவார் - பேரின்பத்தை யடைவார்கள்,—எ. று. (௬௦)

இன்னதன்மை யெனவுரைக்க வெய்தொணுத நல்விழா
நன்னலந் தயங்கு தில்லை நகரம்வந் தடைந்துடன்
றுன்னு கின்ற பாண ராதி சூழநின்ற துன்மதன்
பொன்னினம்பலத்து ளன்ன போது வந்து புக்கனன்.

(இ-ள்) இன்ன தன்மை என உரைக்க எய்தொணுத நல் நலம் தயங்கும் நல் விழாத் தில்லை நகரம் - இப்படிப்பட்ட தன்மையையுடையதென்று சொல்லவு மடையவுங் கூடாத மிகுந்த அழகு விளங்காநின்ற நன்மை பொருந்திய திருவிழா நடக்கின்ற தில்லைவனமாகிய சிதம்பரத்தில்,—உடன் துன்னுகின்ற பாணர் ஆதி சூழ நின்ற துன்மதன் வந்து அடைந்து - தன்ேனாடு நெருங்கி வருகின்ற பாணர்முதலானவர்கள் சூழும்படி நின்ற துன்மதன் வந்து சேர்ந்து,- அன்னபோது - அவ்வுற்சவகாலத்தில்,—பொன்னின் அம்பலத்துள் வந்துபுக்கனன் - கனக சபையினுள்ளே வந்துசேர்ந்தான்.-எ,று (௬௧)

தணிவிலாதகனகமன்னுசபைபின்மூன்னர்நின் றுகைம்
மணிகள்பேரி தாளமா மதங்கமுன் முழங்கவந்
தணியுலாவு காமர் வல்லி யசைதல்போ லுருத்திரக்
கணிகைமாதர் பரதநீதி காணவாடல் பேணிஞர்.

(இ-ள்) தணிவுஇலாத மன்னு கனகசபையின் முன்னர் நின்று - நீக்கமின்றி நிலைபெற்று விளங்குகின்ற கனக சபையின் முன்னே நின்று,—கைம் மணிகள் பேரிதாளம் மாமதங்கம்முன்முழங்கவந்து - கைம் மணிகள் பேரிகை தாளம் பெருமை பொருந்திய மிர்தங்க முதலிய வாத்தியங்கள் கோஷிக்கும் படி வந்து,—அணி உலாவு காமர் வல்லி அசைதல் போல் - அழகுபொருந்தியகாமவல்லியென்னுங் கொடி அசைதல் போல்,—உருத்திர கணிகை மாதர் பரதநீதி காண ஆடல் பேணிஞர் - உருத்திரகணிகையர்கள்பரதசாஸ்திர முறைமை விளங்கும்படி நிருத்தஞ் செய்தார்கள்.—எ, று. (௬௨)

திருவிரும்பு மாதராடல் செய்தல் கண்டி யாவர் முன்
மருவு பாடலாட லென்று வடதிசைக்க ணோக்கினா
னருள்சுரந்த வல்லி காணவம்பலத்து ளாடு மோர [ன்.
கருணை வெள்ள நின்றதன்மைகண்கள்கொண்டுகண்டன

(இ-ள்) திரு விரும்பும் மாதர் ஆடல் கண்டு - மகாலக்ஷுமியும் விரும்பத்தக்க (அழகினையுடைய) அவ்வுருத்திர கணிகையர்கள் நிருத்தஞ் செய்தலை (அத்துன்மதன்) பார்த்து,—யாவர் முன்மருவு பாடல் ஆடல் என்று வடதிசைக்கண் நோக்கினான் - எவர்களுக்கு முன்னே பொருந்திய ஆடலும் பாடலும் நடக்கின்றன என்று வட க்குத் திக்கை உற்றுப்பார்த்தான்,—அருள் சுரந்த அம்மை காண அம்பலத்துள் ஆடும் - திருவருள் சுரக்கப்பெற்றசிவகாமியம்மையார் தரிசிக்குமபடி கனகசபையினிடத்தே திருநிருத்தஞ் செய்தருளா நின்ற,—ஓர் கருணை வெள்ளம் நின்ற தன்மை - ஒப்பில்லாத கிருபா சமுத்திரமாகிய நடேசப்பெருமான் நிற்கின்ற தன்மையை,—கண் கள் கொண்டு கண்டனன் - (தனது)கண்களாற் றரிசித்தான். எ-று()

நித்தி லத்தை யொத்த மூர னிலவுவீசு முகமதிக்
குத்திரத் தனத்து மாதர் கொண்ட வாட லங்கறச்
சித்தி முத்தி நல்குகின்ற தில்லையெல்லை தன்னைவிட்
டுத்தரத்திசைக் கணன்ப ருடன்விரைந்து சென்றனன்.

(இ-ள்) நித்திலத்தை ஒத்த மூரல் - முத்தை யொத்த பற்களை யும்,— நிலவு வீசும் மதிமுகம் - நிலவைவீசுகின்ற சந்திரன் போன்ற முகத்தையும்,—குத்திரத் தனத்து மாதர் கொண்ட ஆடல் அங்குஅற - மலைபோன்ற தனங்களையுடைய உருத்திர கணிகையர் செய்த நிருத்த மானது அப்பொழுது நீங்க,—சித்தி முத்தி நல்கு ன்ற தில்லை எல்லை தன்னை விட்டு - இஷ்டசித்திகளையும் மோக்ஷத் தையுங் கொடுக்கின்ற சிதம்பரத்தினது எல்லையைவிட்டு,—உத்தரத் திசைக்கண் அன்பருடன் விரைந்து சென்றனன் - வடதிசையினிட த்து அடியார்களோடு சீக்கிரம் சென்றான். எ. று. (௬௪)

கடலுலாவு புடவியிற் கருத்தினுக் கிசைந்த செய்
திடைவிடாது திரியு நாளி னெய்துகின்ற நெறியினோர்
படருகின்ற பணைகள்சூழ் பராரைமா மரத்திடைத்
தொடருநீழ லதனின்மன்னு தூர்த்தரோ டிருந்தனன்.

(இ-ள்) கடல் உலாவு புடவியில் கருத்தினுக்கு இசைந்த செய்து - (அத்துன்மதனானவன்) கடலாற் சூழப்பட்ட பூமியினிடத்தில் தன்மனதுக்கு இசைந்த காரியங்களைச் செய்து,—இடைவிடாது திரியும் நாளில் - இடைவிடாமல் திரிகின்ற காலத்தில்,—எய்துகின்ற நெறியில் - அவன் போகின்ற வழியில்,—படருகின்ற பணைகள் சூழ் பரா அரை ஓர் மாமரத்திடைத் தொடரும் நீழல் அதனில் - விரிந்திருக்கின்ற கிளைகளாற் சூழப்பட்ட பருத்த அரையையுடைய ஒரு மாமரத்தினது தொடர்ந்த நிழலிலே,—மன்னு துர்த்தரோடு இருந்தனன் - பொருந்திய காமிகளோடு இருந்தான்.—எ. று. ()

வேறு.

தெரிக்கொணு மறை யாவையுஞ் சிறந்தநூல் பலவும்
விரிக்கு நாவின னருக்கனி லொளிவிடு மெய்யன்
பரிக்கு ஞானமுங் கருணையும் படைத்தனன் வினையை
யரிக்கு மாதவத் தந்தண னொருவனங் கடைந்தான்.

(இ-ள்) தெரிக்க ஒணு மறை யாவையும் சிறந்த நூல் பலவும் விரிக்கும் நாவினன் - அறிய முடியாத வேதங்களெல்லாவற்றையுஞ் சிறப்புப் பொருந்திய சாஸ்திரங்கள் பலவற்றையும் விரித்துச் சொல்லுகின்ற நாவையுடையவனும்,— அருக்கனில் ஒளி விடு மெய்யன் - சூரியனைப்போல் பிரகாசத்தை வீசுகின்ற சரீரத்தையுடையவனும்,—பரிக்கு ஞானமும் கருணையும் படைத்தனன், தாங்குகின்ற ஞானத்தையும் கிருபையையும் பெற்றவனும்,—வினையை அரிக்கும் மாதவத்து அந்தணன் ஒருவன் அங்கு அடைந்தான் - வினைகளை யொழிக்கின்ற பெரிய தவத்தை யுடையவனுமாகிய ஒரு பிராமணன் அவ்விடத்தேவந்து சேர்ந்தான்.—எ. று. ()

வந்த வந்தண னத்தரு நீழலின் மதிசூ
டந்தி வண்ணனைச் சிந்தைசெய் தமர்ந்தினைப் பாரிச்
சந்த மாமறை வாக்கினுற் றுன்மதன் றனைப்பார்த்
தெந்த நாடுமுன் யாவனீ யெனவெதிர் வினவ.

(இ-ள்) வந்த அந்தணன் அத்தரு நீழலின் மதி சூடு அந்தி வண்ணனைச் சிந்தை செய்து அமர்ந்து - அவ்விடத்தில் வந்த அப்பிராமணன் அந்த மாமரத்தினிழலில் சந்திரனைத்தரித்த செவ்வானம் போன்ற நிறத்தையுடைய சிவபெருமானைத் தியானித்துக்

கொண்டிருந்து,—இளைப்பு ஆறி - இளைப்புநீங்கி,—துன்மதன் தனைப் பார்த்து - (முன்னே அவ்விடத்திலிருந்த) துன்மதனைப்பார்த்து,—சந்த மாமறை வாக்கினால் - இசைபொருந்திய பெரிய வேதத்தை அத்தியயனஞ் செய்கின்றதமது வாக்கினால்,— நீ முன் எந்த நாடு யாவன் என எதிர்வினவ - நீ முன்எந்த தேசம் நீ யாவன் என்று அவனெதிரே கேட்க,—எ. று. (கூஎ)

அழிவில்லா ததன் னாடுமந் நாட்டிடை நீதி
யொழிவி லாத தன்குல னுமக்குலத் திடை யொழுங்கின்
வழிநி லாதவெங் குணங்களும் புரிந்த வன்பாவத்
தொழி லு யந்தணன் செவித்துணைச் சுடும்படிச் சொன்
[னான்.

(இ-ள்) அழிவு இலாததன் நாடும் - கெடுதலில்லாத தன் தேசமும்,—அந்நாட்டு இடை நீதி ஒழிவு இலாத தன்குலனும்-அத்தேசத்திலுள்ள நீதிதவறாத தன்னுடைய குலமும்,—அக்குலத்திடை ஒழுங்கின் வழி நிலாத வெம் குணமும் - அக்குலத்திற் பிறந்து ஒழுக்க வழியில் நில்லாததன்கொடியகுணங்களும்,-புரிந்தவல் பாவத்தொழிலும்-தான்செய்த வலியபாவச் செயல்களுமாகிய இவைகளை,—அந்தணன் செவித்துணைச் சுடும்படிச் சொன்னான்-அப்பிராமணனுடைய இரண்டு காதுகளையுஞ் சுடும்படிச்சொன்னான்(துன்மதன்)—எ. று.()

சொற்ற வாய்மை கேட் டுள்ளமு முடலமுந் துளங்கி
யெற்றை நாளிவ னுய்வனோ வெனமன மிரங்கித்
துற்ற வல்லிருந் தொல்வினைத் துன்மதன் றனைப் பார்த்
துற்ற வன்பின னந்தண னொருமொழி யுரைப்பான்.

(இ-ள்) சொற்ற வாய்மை கேட்டு - (அத்துன்மதன்)சொல்லிய உண்மை வார்த்தையை அப்பிராமணன் கேட்டு,—உள்ளமும் உடலமும் துளங்கி - மனமுஞ் சரீரமு நடுங்கி,—இவன் எற்றைநாள் உய்வனோ என மனம் இரங்கி - இவன் எந்தநாளிற் கடைத்தேறுவானோ என்றுமனம் இரங்கி,—துற்ற வல் இரும் தொல்வினைத் துன்மதன் தனைப் பார்த்து - நெருங்கிய வலியபெரிய பழைய தீவினைகளையுடைய அத்துன்மதனைப்பார்த்து,—உற்ற அன்பினன் அந்தணன் ஒருமொழி உரைப்பான் - பொருந்திய அன்புடையவனாகிய அப்பிராமணன் ஒருவார்த்தைசொல்வான்.—எ. று. (கூகூ)

நீடும் வல்வினை புரிதலா னெஞ்சுறு வஞ்சம்
விடிலாத நீ பற்பல விளம்ப ருங் கற்ப
மூடு காணரு மிருபதோ டோரிரு நான்கு
கோடிமாநிர யக்குழி குளித்த னிச்சயமே.

(இ-ள்) நீடும் வல் வினை புரிதலால் - (எதுன்மதனே நீ) பெரிய வலிய தீவினைகளைச் செய்தலால்,—நெஞ்சு உறும் வஞ்சம் வீடு இலாத நீ - மனதிற் பொருந்திய வஞ்சகம் நீங்காத நீ,—விளம்பு அரும் பல் பல கற்பம் - சொல்லுதற்கரிய அனேக கற்ப காலம்,—காண் அரும் இருபது ஓடு ஓர் இரு நான்கு கோடி மா நிரயக்குழி ஊடு - பார்த்தற்கரிய இருபத்தெட்டுக் கோடி நரகக் குழியினுள்ளே,—குளித்தல் நிச்சயம் - முழுகுதல் நிச்சய மாகும்.எ று.()

நினது செய்கையை நினைதொறு நினைதொறு மெனது
மனனிடத்தெழு மச்சமோ டருண்மிக வளரும்
வினைக ளுள்ளன மாய்ந்திடு நெறி விளம் புவ னு
லனைய தன்மை நீ புரிந்திடின் வினையுனை யடரா.

(இ-ள்) நினது செய்கையை நினைதொறும் நினைதொறும் - எ துன்மதனே உனது செய்கையை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும்,—எனது மனன் இடத்து எழும் அச்சம் ஓடு அருள் வளரும்-என்மனதினிடத்துப்பயமும் இரக்கமும் உண்டாகின்றன,—வினைகள் உள்ளன மாய்ந்திடும் நெறி விளம்புவன் - உன்னைப்பற்றிய பாவங்களா யுள்ளவை நீங்கும் படியான மார்கத்தைச் சொல்லுகிறேன்,—அனைய தன்மை நீ புரிந்திடின் வினை உனை அடரா - நீ அக்காரியத்தைச் செய்வாயாயின் அப்பாவங்கள் உன்னை யடையாவாம்.—எ. று (எக)

தோறும் என்பன தொறும் என விகாரம் பெற்றன.

ஆத லால்விரைந் திக்கணத் தத்தகை புரிதி
தீது செய்துபின் பயந்தது தீர்த்திட முயல்வோர்க்
கோத லாநெறி யெனமறை யுரைத்தலா னீதிப்
போத முற்றுநீ கேட்டியேற் புகல்வனென் றுரைத்தான்.

(இ-ள்) ஆதலால் விரைந்து இக்கணத்து அத்தகை புரிதி-ஆகையால் நீசீக்கிரம் இந்தக்ஷணமே அவ்விதம் செய்யக்கடவாய்,—தீது

செய்து - முன்னே ஒருதீமையைச் செய்து,—பின்பயந்து அது தீர்த்திட முயல் வோர்க்கு-பின் அத்தீமைக்குப் பயந்து அது நீக்க முயற்சி செய்வோர்க்கு,—நெறி ஓதலாம் எனமறை உரைத்தலால்-(அத்தீமையினின்று நீங்கும்) மார்க்கத்தைச் சொல்லலாம் என்று வேதங்கள் சொல்லுதலால்,—நீதிப் போதம் உற்று நீ கேட்டியேல் புகல்வன் என்று உரைத்தான்,—அந்த நீதியையும் நல்லறிவையு மடைந்து நீ கேட்பாயாயின் உனக்குச்சொல்லுவன் என்று (அப்பிராமணன்) சொன்னான்.—எ. று. (எ௨)

கற்ற கேள்வியா லறிவினாற் கருணையாற் பவத்தைச்
செற்ற மாதவவேதியன் றிருமொழி கேளா
வுற்ற மாமதத் தொருகைமே லொருகையைத் தாக்கி
வெற்றி மாமுர சிடித்தென வெடிபட நகைத்தான்.

(இ-ள்) கற்ற கேள்வியால் அறிவினால் கருணையால்-தான்கற்ற கல்வியாலும் சாஸ்திர கேள்வியாலும், அறிவினாலும், கிருபையினாலும்,—பவத்தைச் செற்ற மாதவவேதியன் திருமொழி கேளா - பிறவியை நீக்கிய பெரிய தவத்தையுடைய அப்பிராமணனுடைய வார்த்தையை (அத்துன்மதன்) கேட்டு,—உற்றமா மதத்து ஒருகைமேல் ஒருகையைத் தாக்கி-தான் கொண்ட செருக்கினால் ஒருகையின்மேல் ஒருகையாலடித்து,—வெற்றி மா முரசு இடித்தென வெடிபட நகைத்தான் - பெருமை பொருந்திய ஜெயபேரிகை யடித்தாற்போல் சத்தமுண்டாகும்படிச்சிரித்தான்.—எ. று. (எ௩)

நக்க துன்மத னன்னவற் பார்த்துநான் மறையோய்
தொக்க மாமறை நல்வினை சூழ்ந்ததீ வினைகண்
மிக்க வேழைநின் போல்பவர் விளங்குவ ரன்றித்
தக்க செய்கையென் போல்பவர்க் கென்செயுஞ் சாற்றாய்.

(இ-ள்) நக்க துன்மதன் அன்னவன் பார்த்து - இவ்வாறு சிரித்த அத்துன்மதனனவன் அப்பிராமணனைப் பார்த்து,—நான் மறையோய் - நான்குவேதங்களையு மறிந்த ஓ பிராமணனே,—தொக்க மா மறை சூழ்ந்த நல்வினை தீவினைகள் - கூட்டமாகிய பெரிய வேதங்களிற் சொல்லிய நல்வினை தீவினைகளில்,—மிக்க ஏழை நின்போல்பவர் விளங்குவர் அன்றி - மிகுந்த ஏழ்மைக்குணத்தையுடைய உன்போல்பவர்கள் அவ்வினைகளிற் கிடந்து வருந்துவார்களன்றி,—தக்க செய்கைஎன் போல்பவர்க்கு என்செயும் சாற்றாய் - தகுந்த செய்கை

யையுடைய என்னைப்போல் தைரியமுடையவர்களை (அவ்வினைகள்) என் செய்யும் நீர் சொல்வீராக என்றான்,—எ. று. (எ௫)

தனது கற்புடை யாளிடைத் தனயரைப் பெறுதற்
கனைய காலத்தி லணைவதே யறமென்று மயலார்
மனைவி பாலணைந் தாற்கொடு வினையென்றும் வழங்கு
மினைய யாவருங் காணநீ யிசைத்த வாறொக்கும்.

(இ-ள்) தனது கற்புடையாள் இடைத் தனயரைப் பெறுதற்கு- தன்னுடைய கற்பிற்சிறந்த மனைவியினிடத்திற் புத்திரர்களைப் பெறுதற்கு,—அனைய காலத்தில் அணைவதே அறம் என்றும்- பொருத்தமாகிய சுபகாலத்திலே (அம்மனையாளைச்) சேர்வதே தருமமென்றும்,—அயலார் மனைவிபால் அணைந்தால் கொடுவினை என்றும் - பிறர்மனைவியினிடத்திற் சேர்ந்தால் கொடியபாவம் என்றும்,—வழங்கும் இனைய - இவ்விதம் வழங்கும் உலகவழக்கத்தையனுட்டிக்கின்றவரே,—யாவரும் காண நீ இசைத்த ஆறு ஒக்கும் - (என்னுடன் வந்திருக்கின்ற இவர்கள்) யாவரும் அறியும்படி நீர் சொல்லிய விஷயம் (நன்கு) ஒக்கும்!!—எ. று. (எ௬)

இன்ன போல்வன வெண்ணில விகற்பங்கள் கூறி
யன்ன வந்தணன் றன்னையு நிந்தனை யறைந்து
துன்னு நண்புடைப் பண்பிலாத் தூர்த்தர்க ளுடனுஞ்
சென்னியர் குழுவொடுந் தனதிச்சையிற் சென்றான்.

(இ-ள்) இன்ன போல்வன எண் இல விகற்பங்கள் கூறி-(அத்துன்மதன்) இவைபோல்வனவாகிய அளவில்லாத வேறுபாடுகளையெடுத்துச் சொல்லி,—அன்ன அந்தணன் தன்னையும் நிந்தனை அறைந்து - அந்தப்பிராமணனையு நிந்தித்துச் சொல்லி,—துன்னும் நண்பு உடைப் பண்பு இலாத் தூர்த்தர்கள் உடனும் - தன்னோடு வந்த சினேகத் தன்மையையுடைய நற்குணமில்லாத காமிகளோடும்,—சென்னியர் குழுவு ஒடும் - பாணர்களுடைய கூட்டத்தோடும்,—தனது இச்சையில் சென்றான் - தன் து இஷ்டப்படி நடந்தான்.எ. று (எ௭)

செஞ்சொ லானெறி யாம்பல செப்பியுங் கொடுமை
விஞ்சு தீவினை நீக்குமா றிசைந்திலன் வினைசெய்
தஞ்ச லில்லவர் நரகன்றி யருள்பெறு ரென்று
நெஞ்ச நொந்துதன் னிடத்தகன் றானரு ணீங்கான்.

(இ-ள்) செம் சொலால் பல நெறி யாம் செப்பியும் - நன்மையாகிய சொற்களால் பல நன்மார்க்கங்களை யாம் எடுத்துச் சொல்லியும்,—கொடுமை விஞ்சு தீவினை நீக்கும் ஆறு இசைந்திலன் - கொடுமை மேம்பட்ட பாவச்செயல்களை நீக்க உடன்பட்டிலன்,—வினை செய்து அஞ்சல் இல்லவர் - பாவங்களைச் செய்து அதற்கு அஞ்சாதவர்கள்,—நரகு அன்றி அருள் பெறார் என்று - நரகத்தையடைதலன்றி கிருபையை அடைய மாட்டார்களென்று நினைத்து,—அருள் நீங்கான் - கிருபையினின்று நீங்காதவனாகிய அப்பிராமணன்,—நெஞ்சம் நொந்து தன்னிடத்து அகன்றான் - மனம் வருந்தி தன்னிடத்திற் போய்ச் சேர்ந்தான்,—எ. று. (எள)

சத்தி யத்திரு மறைமொழிச் சைமினி முனிவ
மத்தர் போல்வருந் துன்மதன் மன்றினு ணின்ற
நித்த னாடகச் சரணங்க ணேர்கண்டு சீவன்
முத்த னாகிய துணர்ந்திலன் முழுதுணர் மறையோன்.

(இ-ள்) சத்தியத் திருமறை மொழிச் சைமினி முனிவ - உண்மைப் பொருளை யுணர்த்தும் வேதத்தைப் பாராயணஞ் செய்கின்ற சைமினி முனிவனே,—முழுதுணர் மறையோன் - எல்லாம் அறிந்த அப்பிராமணன்,—மத்தர்போல் வரு துன்மதன் - வெறிகொண்டவர்போல் வருகின்ற அத்துன்மதனுனவன்,—மன்றின் உள்நின்ற நித்தன் ஆடகச் சரணங்கள் நேர்கண்டு - கனகசபையினிடத்தே எழுந்தருளியிராநின்ற நித்தியராகிய நடேசப்பெருமானது பொன்மயமாகிய திருவடிகளை நேரேதரிசித்து,—சீவன் முத்தன் ஆகியது உணர்ந்திலன் - ஜீவன்முத்தனுனதன்மையைஅறிந்திலன்.-எ. று. ()

அந்த ணற்பழித் தகன்றவத் துன்ம தனெடுநா
ளிந்த மாநிலத் துலைந்து விந் தாடவி யெய்தி
வந்த வேலையிற் சிந்துமோர் வல்விடப் பாந்தண்
முந்துறக்கடித் தகன்றிட வாவிபோய் முடிந்தான்.

(இ ள்) அந்தணன் பழித்து அகன்ற அத்துன்மதன் - அப்பிராமணனைப் பழித்து நீங்கிய அத்துன்மதன்,—நெடுநாள் இந்தமா நிலத்து உலைந்து - அனேககாலம் இந்தப்பெரிய பூமியினிடத்தில் அலைந்து,—விந்த அடவி எய்திவந்த வேலையில் - விந்த மலையின்கணுள்ள காட்டினிடத்தில் வந்து அடைந்த காலத்தில்,—வல்விடம்சிந்தும் ஓர் பாந்தள் முந்துறக் கடித்து அகன்றிட - வலிய விஷத்தைக் கக்கு

கின்ற ஒரு பாம்பானது (அவனுக்கு) முன்னே வந்து கடித்துவிட்டு ஓடிப்போக,—ஆவிபோய் முடிந்தான் - இறந்தான். எ. று. (எக)

வேறு.

மடித்த வாயின ரிடித்த சொல்லினர் மருண்ட பார்வையர் கொடுந்தழற், குடித்த குஞ்சியர் பொடித்த பங்கியர் குறித்த வன்மையர் கதங்கொளத், துடித்த மேனியர் விடுத்த காலனடு தூதர் வாயுவின் விரைந்துபோ, மடித்த லத்தினர் முடித்த வன்பினர்க ளக்கணத்தி லடுத்தனர்.

(இ-ள்) மடித்த வாயினர் - மடித்த வாயையுடையவர்களும்,—இடித்த சொல்லினர் - இடிஇடித்தாற் போன்ற சொல்லை யுடையவர்களும்,—மருண்ட பார்வையர் - வெருண்ட பார்வை யுடையவர்களும்,—கொடும் தழல் குடித்த குஞ்சியர் - கொடிய அக்கினியினால் விழுங்கப்பட்டாற் போன்ற குடுமியையுடையவர்களும்,—பொடித்த பங்கியர் - கருகினாற் போன்ற செம்பட்ட மயிரை யுடையவர்களும்,—குறித்த வன்மையர் - குறித்த வலிய தேகத்தையுடையவர்களும்,—கதம் கொளத் துடித்த மேனியர் - கோபமுண்டாகத் துடிதுடித்த சரீரத்தை யுடையவர்களும்,—வாயுவின் விரைந்து போம் அடித்தலத்தினர் - வாயுவேகத்தைப் பார்க்கிலும் விரைவாகச் செல்லுகின்ற கால்களை யுடையவர்களும்,—முடித்த அன்பினர் - அன்பில்லாதவர்களுமாகிய,—காலன் விடுத்த அடு தூதர் - இயமனால் அனுப்பப்பட்ட கொலைத் தொழிலையுடைய தூதர்கள்,—அக்கணத்தில் அடுத்தனர் - அச்சமயத்தில் வந்துசேர்ந்தார்கள்.—எ. று. (அ0)

பற்று மென்பர் சிலர் பற்றிவெங் கொடிய் பாவியைத் தரையின் மீதெடுத், தெற்று மென்பர்சில ரெற்றிவெந் தசையை யிருமென்பர் சிலர் மார்பிடைக், குத்து மென்பர் சிலர் தண்டி யாதொழிதல் குற்றமென் பர்சிலர் முற்றுறச், சுற்று மென்பர்சிலர் பாசம்வீசி யுடல் சூழ மென்றுபலர் துன்னினர்.

(இ-ள்) சிலர் பற்றும் என்பர் - சிலதூதர்கள்(இத்துன்மதனைப்) பிடியுங்கள் என்று சொல்லுவார்கள்,—சிலர் வெம் கொடியபாவியை ப்பற்றி தரையின்மீது எடுத்து எற்றும் என்பர் - சிலதூதர் மிகக் கொடியபாவியாகிய இவனைப்பிடித்துப்பூமியினின்றுந்தூக்கி எறியுங்

கள் என்று சொல்லுவார்கள்,—சிலர் எற்றி வெம் தசையை ஈரும் என்பர் - சிலதூதர்கள் இவனைக்காலாற் றாக்கிஎறிந்து கொடியமாமிசத்தை யரியுங்கள் என்று சொல்லுவார்கள்,—சிலர் மார்பு இடைக் குத்தும் என்பர் - சிலதூதர்கள் மார்பினிடத்தேகையாற்குத்துங்கள் என்று சொல்லுவார்கள்,—சிலர் தண்டியாது ஒழிதல்குற்றம்என்பர் - சிலதூதர்கள் இவனைத்தண்டியாமல் விடுதல் குற்றமாகுமென்று சொல்லுவார்கள்,—சிலர் முற்றுறச் சுற்றும் என்பர் - சிலதூதர்கள் இவன் இறக்கும்படிச் சுழற்றுங்கள் என்று சொல்லுவார்கள்,—பலர் பாசம் வீசி உடல் சூழும் என்று துன்னினார் - வேறு பலதூதர்கள் பாசத்தை வீசி இவன் சரீரத்தைச் சுற்றிக்கட்டுங்கள்என்றுநெருங்கி வந்தார்கள்.—எ. று. (௬௧)

துற்ற வக்கொடிய நெடிய தண்டதர தூத ரெண்ணிலர்க டுன்மதன், மற்ற டம்புய முரிந்தொ சிந்துக வயங்கொள் பாச மிறுகப் பிணித், தெற்றை நாளுமெவ ருக்கு மிக்கபய மெய்து விப்பதொரு செய்கையே, பற்று கின்றதம துலகி னிற்கடிது படருவா னினையும் வேலையின்.

(இ-ள்) துற்ற அக்கொடிய நெடிய தண்டதர் தூதர் எண் இலர்கள் - நெருங்கிய அக்கொடிய பெரிய இயமதூதர்கள் பலர்,—துன்மதன் மல் தடம் புயம் முரிந்து ஒசிந்து உக - அத்துன்மதனுடைய மல்யுத்தத்திற் பழகிய பெரிய புயங்கள் முறிந்து ஒடிந்து விழும்படி,—வயங்கொள் பாசம் இறுகப்பிணித்து - வலிமை பொருந்திய கயிற்றினால் இறுகக்கட்டி,—எற்றை நாளும் எவருக்கும் மிக்கபயம் எய்துவிப்பது ஒரு செய்கையே - எந்த நாளிலும் எவர்களுக்கும் மிகுந்த அச்சமுண்டாக்குவது உனக்கு ஒரு காரியமாகுமா என்று சொல்லி,—பற்றுகின்ற தமது உலகினில் கடிது படருவான் நினையும் வேலையின் - பிடிக்கின்ற தங்கள் உலகத்துக்குக்கொண்டு போகும்படி நினைத்துக் கொண்டிருக்கின்ற சமயத்தில்,—எ, று. (௬௨)

காத ஞாருள் படைத்துயர்ந்தவரு ணந்தி தேவரு ளேவலான், மாதி ரங்களொளி வீசு பூதிநிறை வடிவரெப் பொழுது முடிவிலர், தீதிலாத திரி புண்டரத்தர் திரி சூலர் செஞ்சடையர் துகளறும், பேத மிக்கசிவதூத ரெண்ணிலர்கள் பொங்கி யங்கெதிர் பொருந்தினார்.

(இ-ள்) நாதனூர் அருள் படைத்து உயர்ந்த் அருள் நந்திதேவர் அருள் ஏவலால் - சிவபெருமானது திருவருளைப் பெற்றுயர்ந்த கிருபை பொருந்திய திருநந்திதேவர் கட்டளையிட்டருளிய ஏவலினால்,—மாதிரங்கள் ஒளிவீசு பூதி நிறை வடிவர் - அஷ்டதிக்குகளிலும் ஒளியை வீசுகின்ற விபூதி நிறைந்த திருமேனியை யுடையவர்களும்,—எப்பொழுதும் முடிவு இலார் - எப்பொழுதும் அழிவில்லாதவர்களும்,—தீது இலாத திரிபுண்டரத்தர் - குற்றமில்லாத திரிபுண்டரத்தையுடையவர்களும்,—திரிசூலர் - முத்தலைச் சூலத்தையுடையவர்களும்,—செஞ்சடையர் - சிவந்த சடையை யுடையவர்களும்,—துகள் அறும் போதம் மிக்க சிவதூதர் எண்ணிலர்கள் - குற்றமற்ற ஞானமிகுந்த சிவதூதர்கள் அளவில்லாதவர்கள்,—பொங்கி அங்கு எதிர் பொருந்தினர் - மனங்கொதித்து அவ்விடத்திலுள்ள இயமதூதர்களுக்கு எதிரேவந்து சேர்ந்தார்கள்.—எ. று.　　　(அரு)

மட்டிலாத யம தூதர்முற்று முக மாறியோட வவன் வன்புயக், கட்டறுத் தொளிர் விமான மீதினிது கடிது வைத்தகில வண்டமு, முட்ட நின்றவ ருணந்தி தேவர்த முகம்பெறக் கருதி மாதவச், சிட்டர் விட்டகல வரியதண் கயிலை செல்லு வார்கள்சிலர் சென்றனர்.

(இ-அ) மட்டு இலாத யமதூதர் முற்று முகமாறி ஓட - அளவில்லாத யமதூதர்களெல்லாந் திசைமாறி ஓடிப்போக,—அவன் வல் புயக்கட்டு அறுத்து - அத்துன்மதனது வலியபுயத்திற்கட்டிய கட்டுக்களை அறுத்து,—அகில அண்டமும் முட்டநின்ற ஒளிர்விமானமீது இனிது கடிது வைத்து - உலகத்திலுள்ள அண்ட முகடுவரைக்கும் முட்டும்படி உயர்ந்து நின்ற பிரகாசம் பொருந்திய தேவவிமானத்தின்மேல் இனிதாக விரைவில் ஏற்றிக்கொண்டு,—அருள் நந்தி தேவர்தம் முகம்பெறக் கருதி - கிருபையையுடைய திருநந்தி தேவர் சந்நிதானத்தை யடைய எண்ணி,—மாதவச் சிட்டர் விட்டு அகல அரிய தண்கைலை செல்லுவார்கள் சிலர் சென்றனர் - மகாதவசிரேஷ்டர்களாகிய முனிவர்கள் விட்டு நீங்குதற்கரிய குளிர்ச்சி பொருந்திய திருக்கைலாசத்துக்குச் செல்புவர்களாய்ச் சிலர்போனார்கள்.—எ. று.　　　(அச)

தக்க துந்துபி முழங்க மாமறை தழங்க வானவர் வணங்கமுன், றெக்க பேரொளி விமான மீதுவரு சுடரவற்

பொருவு துன்மதன், செக்க ரஞ்சடையு மூக்க ணும்பரவு
திண்புயங்க ளொரு நாலுநற், கைக்கபாலமு மிலங்கு றச்சிவ
கணநிபர்க் கிடை கலந்தனன்.

(இ-ள்) தக்க துந்துபிமுழங்க - தகுதிபொருந்திய துந்துபி வாத்தியம் ஆரவாரிக்கவும்,—மாமறை தழங்க - பெரிய வேதங்கள் கோஷிக்கவும்,—வானவர் முன்வணங்க - தேவர்கள் முன்னே நின்றுவணங்கவும்,—தொக்க பேர் ஒளி விமானம் மீது சுடவரன் பொருவு துன்மதன் - கூட்டமாகிய பெரிய ஒளி பொருந்திய விமானத்தின் மேலே வருகின்ற சூரியனை யொத்த துன்மதனெனவன்,—அம் செக்கர் சடையும் - அழகிய சிவந்த சடையையும்,—மூக்கணும் - மூன்று கண்களையும்,—பரவ ஒரு நாலு திண்புயங்களும் - துதிக்கத்தக்க வலிமைபொருந்திய நான்கு புயங்களையு முடையவனும்,—நல்கைக் கபாலமும் இலங்குற - நல்லகைகளினிடத்தே கபாலமும் விளங்கும்படி,—சிவ கணநிபர்க்கு இடைகலந்தனன் - சிவகண நாதர்களுக்கு நடுவில் பொருந்தி இருந்தான்.—எ. று. (அ௫)

காலதூதவர்கள் கண்டுகொண்டுமுதிர் கதமு மானமு
மிகுந்திடன், மேலிடா வவனை யெங்கள் பால்விடுமின் விடுமி
னென்றவர் விரைந்துசென், றாலகாலநிக ராவ தாமென
வடர்ந்த போதெதிர் திரும்பினர், சில ஞானசிவ தூதர் நின்று
சிலர் சிறினரவரை நூறினர்.

(இ-ள்) காலதூதவர்கள் கண்டுகொண்டு - (இவ்விதமாகத்துன்மதன் சிவகண நாதர்களோடு விளங்குதலை) யமதூதர்கள் பார்த்து,—முதிர் கதமும் மானமும் மிகுந்திடல் மேலிடா - முதிர்ந்த கோபமு மானமும் அதிகரித்தலால் எதிர்த்து,—அவனை எங்கள் பால்விடுமின் விடுமின் என்று - அத்துன்மதனை எங்களிடத்தில் விடுங்கள் விடுங்கள் என்று,—அவர் விரைந்து சென்று - அவர்கள் சீக்கிரம் போய்,—ஆலகாலம் நிகர் ஆவதாம் என - ஆலகாலத்தை யொப்பாகுமென்று சொல்லும்படி,—அடர்ந்த போது - எதிர்த்து யுத்தஞ் செய்த காலத்தில்,—சில ஞான சிவதூதர் சிலர் - பரிசுத்தமாகிய ஞானத்தையுடைய சிவதூதர்களிற் சிலர்,—எதிர் திரும்பினர் நின்று சிறினர் அவரை நூறினர் - அவ்விடத்தி லெதிர்த்துத்திரும்பி நின்று கோபித்தவர்களாய் அவ்வியமதூதர்களைக் கொன்றார்கள்.—எ. று. ()

தாளி னாலன லுயிர்ப்பி னாலுயர் தடக்கை யானகை
முழக்கினாற், றோளி னாலிடியு முட்க மிக்கவதிர் சொல்லினா
லடரும் வில்லினால், வாளினா லயில் கொள்வேலினான்மழு
வலத்தினா னயன வன்னியாற், கூளிநாய்மகிழ வந்தெதிர்
த்தவர் குலைந்து சாய்தர மலைந்தனர்.

(இ-ள்) தாளினால் - கால்களாலும்,—அனல் உயிர்ப்பினால் - அக்கினிமயமாகிய சுவாசத்தாலும்,—உயர் தடக்கையால் - உயர்வாகிய பெரிய கைகளாலும்,—நகை முழக்கினால் - சிரிப்பினது சத்தத்தினாலும்,—தோளினால் - புயத்தினாலும்,—இடியும் உட்க மிக்க அதிர் சொல்லினால் - இடிமுழக்கமுங் குறையும்படி மிகுந்து கர்ச்சிக்கின்ற சொல்லினாலும்,—அடரும் வில்லினால் - யுத்தத்துக்குரிய வில்லினாலும்,—வாளினால் - வாளினாலும்,—அயில் கொள் வேலினால்,—கூர்மை பொருந்திய வேலாயுதத்தினாலும்,—மழுவலத்தினால் - வெற்றி பொருந்திய மழுவாயுதத்தினாலும்,—நயன வன்னியால் - கண்களிலிருந்து ஜொலிக்கின்ற கோபாக்கினியினாலும்,—கூளி நாய் மகிழ - பேய்களும் நாய்களும் சந்தோஷிக்க,—வந்து எதிர்த்தவர் குலைந்து சாய்தர - வந்துஎதிர்த்தயமதூதர்கள்நடுநடுங்கி முறிந்தோட,—மலைந்தனர் - எதிர்த்து யுத்தஞ் செய்தார்கள்.—
எ. று. (அஎ)

கர மறுத்துமழல் விழி சிதைத்து முழல் கா றுணித்து
மலை யெனவிழச், சிர மறுத்துமிரு கன்ன தாடமொடு செவி
தகர்த்துமுயி ருலையுமா, றுர மொடித்துமுயர் புயமுறித்து
மெயி றுகவிடித்து மவ ரிடையநீள், வர மிரித்துநதி யுதிர
மோட மிடன் மடியமிக் கமரின் முடுகினர்.

(சூ-ள்) கரம் அறுத்தும் - கைகளை வெட்டியும்,—அழல் விழி சிதைத்தும் - அக்கினிமயமாகிய கண்களைப் பிடுங்கியும்,—உழல் கால் துணித்தும் - திரிகின்ற கால்களை வெட்டியும்,—மலை என விழச் சிரம் அறுத்தும் - மலைபோலவிழும்படித் தலைகளையறுத்தும்,—இரு கன்னதாடம் ஒடு செவி தகர்த்தும் - இரண்டு கன்னங்களாகிய மலைகளோடு காதுகளையறுத்தும்,—உயிர் உலையும் ஆறு உரம் ஒடித்தும் - உயிர் வருந்தும்படி மார்பை ஒடித்தும்,—உயர் புயம் முரித்தும் - உயர்ந்த புயங்களை முறித்தும்,—எயிறு உக இடித்தும் - பற்களுதிரும்படி வாயிலிடித்தும்,—அவர் இடைய நீள் வரம் இரித்

தும் - அவர் வருந்தும்படி பெரிய வரங்களைக் கொடுத்தும்,—உதிரம் நதி ஓட - இரத்தமானது ஆறுபோல் ஓட,—மிடன் மடிய - மிடறு அழிய,—மிக்கு அமரின் முடுகினர் - மிகுந்த யுத்தத்தில் முடுகிவந்தார்கள்,—எ. று. (அஅ)

செக்கர் வானமெரி குஞ்சி தாரகைகள் சிந்து தந்த நிரை கொண்டலே, தொக்கு மேவுமுட லந்தடித் தனைய சொரி தழற் கண் விடு சுடர்கடா, மிக்க வெண்ணில்பல பிறைக ளுள் ளவென மேவு பேரெயிறு விரவலா, லக்க ணத்தியம படர்மு டிந்த கள மந்த ரத்தை நிக ராகுமால்.

(இ-ள்) அக்கணத்து யமபடர் முடிந்த களம் - அப்பொழுது அந்த யமபடாள் இறந்த யுத்தகளமானது,—எரி குஞ்சி செக்கர்வானம் - (அந்தயம படர்களுடைய) அக்கினி நிறம்போன்ற செம்பட்ட மயிரானது செவ்வான மாகவும்,—சிந்து தந்த நிரை தாரகைகள் - அடிபட்டுச் சிந்திய பல்வரிசைகள் நக்ஷத்திரங்களாகவும்,—தொக்கு மேவும் உடலம் தடித்தனைய கொண்டல் - தோலோடுகூடிய சரீரமானது இடி இடித்தாற்போன்ற மேகங்களாகவும்,—தழல் சொரி கண் சுடர்கள் - அக்கினியைக் கக்குகின்ற கண்கள் சூரியர்களாகவும்,—மேவுபேர் எயிறுமிக்க எண்ணில்பலபிறைகள் உள்ள என விரவலால் - பொருந்திய பெரிய சிங்கப்பற்கள் மேம்பட்ட அளவில்லாத பலவாகிய மூன்றும் பிறைகளாகவும் பொருந்தி யிருத்தலால்,—அந்தரத்தைநிகராகும் - ஆகாயத்தை யொத்திருக்கும்,—எ. று. தாம் ஆல் அசைகள். (அகூ)

அரிந்த துண்டமு மிழந்த தோள்களு மழிந்த வாய்களு மலக்கணைன், முரிந்த மார்பமு மயங்கு நெஞ்சமு முடிந்த சென்னியு நெடுங்குடர், சரிந்த வுந்தியு மொடிந்தெ லும்பொடு தறிந்த தாள்களு முயிர்ப்புறம், பிரிந்த பேரு டலு மன்றி நின்ற தொரு பேரு மங்கனிலே பேசினே.

(இ-ள்) அரிந்த துண்டமும் - அறுபட்ட மூக்குக்களும்,—இழந்த கண்களும் - நீங்கிய புயங்களும்,—அழிந்த வாய்களும் - அறுபட்ட வாய்களும்,—அலக்கணால் முரிந்த மார்பமும் - துன்பத்தோடு வெட்டுண்ட மார்பும்,—மயங்கு நெஞ்சமும் - கலங்கிய மனமும்,—முடிந்த சென்னியும் - அறுபட்ட சிரசும்,—நெடும் குடர் சரிந்த உந்தியும் - பெரிய குடலிற்சரிந்து தொங்குகின்ற கொப்பூழும்,—

எலும்பு ஓடு ஒடிந்து தறிந்த தாள்களும் - எலும்புகளோடு ஒடிந்து வெட்டுண்டகால்களும்,—உயிர்ப்புறம் பிரிந்தபேர் உடலும் அன்றி - உயிர் நீங்கி இறந்தவர்களுடைய சரீரமே யல்லாமல்,—பேசின் - சொல்லுமிடத்து,—அங்ஙன் நின்றது ஒரு பேரும் இலை - அவ்விடத்தில் உயிர் ஓடு நின்றவர்கள் ஒருவருமில்லை.—எ. று. ஏ அசை, (கூ0)

பலகை யாடமரிலூனுகர்ந்து மிசை பறவை யாடின பதம் பெயர்த், தலகை யாடின மகிழ்ந்து பாரிட மடங்க வாடின விழுங் குறைத், தலைக ளாடின விரத்த சாகர தரங்க மாடின வரந்தவா, வுலகை யாடல் கொள வல்ல காலபட ருற்று லந்தகள முற்றுமே.

(இ-ள்) வரம் தவா உலகை ஆடல் கொள வல்ல கால படர் உற்று உலந்த களம் முற்றும் - மேன்மை நீங்காத உலகங்களைச் செயங் கொள்ளத்தக்க வலிமையை யுடைய எம படாள் பொருந்தி இறந்து கிடக்கின்ற யுத்தகளம் முழுதும்,—மிசை பறவை பலகை ஆடு அமரில் ஊன் நுகர்ந்து ஆடின - ஆகாயத்திற் பறக்கின்ற பட்சிகள் தோற் பலகை கொண்டு செய்யப்பட்ட வாள் யுத்தத்தினால் கிடைத்த மாமிசங்களைத் தின்று வட்ட மிட்டன,—அலகை பதம் பெயர்த்து ஆடின - பேய்கள் கால்களைத் தூக்கி வைத்துக் கூத்தாடின,—பாரிடம் மகிழ்ந்து மடங்க ஆடின - பூதங்கள் சந்தோஷித்துக் கவிழ்ந்து ஆடின,—விழும் குறைத் தலைகள் இரத்த சாகர தரங்கம் ஆடின - வெட்டுண்டு விழுகின்ற குறைத் தலைகள் இரத்தக் கடலின் அலையில் முழுகின.—எ. று. ஏ அசை (கூக)

சிட்ட ரானசிவ ஞான மாதவர்கள் சிந்தை நோவவொரு வன்மைசெய், திட்ட பாவிகுல நிலைகுலைந் ததெனவெய்து காலன்விடு தூதருங், கெட்டொழிந்து பொடி பட்டெடனரு மொரு கேடிலாத சிவ தூதர் கைப், பட்டபே ரொழிய நின்ற பேர்யம பதத்தை நாடினர் படர்ந்தனர்.

(இ-ள்) சிட்டர்ஆன சிவஞான மாதவர்கள் - விசிட்டர்களாகிய சிவஞானத்தையுடைய முனிவர்கள்,—சிந்தைநோவ - மனவருத்தம் உண்டாகும்படி,—ஒருவன்மை செய்திட்ட பாவி குலம் நிலை குலைந்தது என - ஒரு தீமையைச் செய்த பாவியினுடைய குலம் நிலை கெட்டாற்போல,—எய்து காலன் விடு தூதரும் கெட்டு ஒழிந்து

பொடிபட்டு - அவ்விடத்தில் எமனால் அனுப்பப்பட்ட தூதர்களும் அழிந்து பொடியாகி,—ஒருகேடு இலாத சிவதூதர் கைப்பட்ட பேர் ஒழிய - (என்றாலும்) ஒருகெடுதலுமில்லாத சிவதூதர்களுடைய கையிலகப்பட்டவர்க ளொழிய,—நின்ற பேர் யமபதத்தை நாடினர் பட்டார்ந்தனர் - எஞ்சி நின்றவர்கள் எமலோகத்தைத் தேடினவர்களாய்ப் போனார்கள்.—எ. று. (கூஉ)

இன்ன தென்னவுரை யாடொணாத பய மெய்தி யோடி னார்தமிறைவனைத், துன்னி யச்சமோ டிறைஞ்சி நின்றுமிகு துன்மதன்ற னுயிர் கொண்டது, மன்னபோது சிவ தூதர் வந்தது மடர்ந்த துந்தம் படைக்கணஞ், சின்னமுற் றதுவு மன்ன வற்கொ டவர் சென்றதுங் கடிது செப்பினார்.

(இ-ள்) இன்னது என்ன உரை ஆடு ஒணாத பயம் எய்தி ஓடினார் - இன்ன தன்மைய தென்று சொல்லமுடியாத பயத்தை யடைந்து ஓடினவர்களாகிய இயமதூதர்கள்,—தம் இறைவனைத் துன்னி - தங்கள் அரசனாகிய எமதருமராஜனை யடைந்து,—அச்சம் ஒடு இறைஞ்சி நின்று - பயத்தோடு வணங்கி நின்று,—மிகு துன்மதன்றன் உயிர் கொண்டதும் - (பாவ) மிகுந்த துன்மதனுடைய உயிரைத் தாங்கள் கைக்கொண்டதும்,—அன்னபோது சிவதூதர்வந்ததும்,— அப்பொழுது சிவதூதர்கள் அவ்விடத்து வந்ததும்,—அடர்ந்ததும் - தங்களோடு அவர்கள் எதிர்த்து யுத்தஞ் செய்ததும்,—தம்படைக் கணம் சின்னம் உற்றதுவும் - தங்களுடைய கூட்டமாகிய படைகள் சின்னபின்னமானதும்,—அன்னவன் கொடு அவர் சென்றதும்- அத்துன்மதனை அச்சிவதூதர்கள் தேவ விமானத்திற் கொண்டு (திருக் கைலாசத்திற்குச்) சென்றது மாகிய யாவும்,—கடிது செப்பினார் - சீக்கிரத்திற் சொன்னார்கள்.—எ. று. (கூங)

வேறு.

தெரிந்த தூதர்சொற் செவித்துணை புகுதலுஞ் சினக் கொடுந் தழன் மேன்மேல், விரிந்த பங்கிகள் பொரிந்தன செறிந்தவர் வெருக்கொளப் புருநங்கண், முரிந்து நெற்றிமீ தாடின நீடிய மூடிய புகைவீசி, யெரிந்த கண்ணிணை சொரிந்தன கொடுந்தழ லிருண்டன திசையெல்லாம்.

(இ-ள்) தெரிந்த தூதர் சொல் செவித்துணை புகுதலும் - அறிந்து வந்து சொல்லிய தூதர்களுடைய வார்த்தையானது இரண்டு

காதுகளில் நுழையவும்,—சினக் கொடுந் தழல் மேல்மேல் விரிதர - கொடிய கோபாக்கினியானது மேன்மேல் அதிகரித்தன;—பங்கிகள் பொரிந்தன - செம்பட்ட மயிர்கள் பொரிந்தன;—செறிந்தவர் வெருக்கொள புருவங்கள் முரிந்து நெற்றிமீது ஆடின - நெருங்கிச் சமீபத்திலிருக்கிறவர்கள் அஞ்சும்படி புருவங்கள் முறிந்து நெற்றியின்மேல் நின்று துடித்தன;—நீடிய மூடிய புகை வீசி எரிந்த கண் இணைகொடும் தழல் சொரிந்தன - நீண்ட உலகத்தை மூடும்படி புகையைவீசி எரிந்து கொண்டிருக்கின்ற இரண்டு கண்களும் கொடிய அக்கினியைக் கக்கின,—திசை எல்லாம் இருண்டன - திக்குகளெல்லா மிருண்டு போயின.—எ. று. (கூச)

மண்டு வெங்கதத் தழறலைக் கொண்டென வளர்குஞ்சி துளங்கப்பா, ரெண்டி சாமுகம் பொறியெழத் துணைக்கர மெற்றிமுற் றில்லாத, துண்ட வெண்பிறை யெயிற்றிடை நிலவெழச் சுராசுரர்வெருக்கொள்ள, வண்ட கோளகை வெடிபட விடிபட வலமர நகைசெய்தான்.

(இ-ள்) மண்டு வெம் கதத்து அழல் தலைக்கொண்டு என வளர் குஞ்சி துளங்க- மூளுகின்ற கொடிய கோபாக்கினியானது அதிகரித்தெழுந்தாற்போல வளருகின்ற செம்பட்டமயிர்களசையவும்,—பார் எண் திசாமுகம் பொறிஎழ - பூமியினிடத்தும் அஷ்டதிக்குகளினிடத்தும் அக்கினிப்பொறிபறக்கவும்,—துணைக்கரம் எற்றி - இரண்டு கைகளையுந்தட்டி,—முற்று இல்லாத துண்ட வெள்பிறை எயிற்று இடைநிலவு எழ - முற்றுதலில்லாத துண்டமாகிய வெளிய மூன்றாம்பிறை போன்ற பற்களினிடத்திருந்து சந்திரிகை வீசவும்,—சுரர் அசுரர் வெருக்கொள்ள - தேவர்களும் அசுரர்களும் அஞ்சும்படியாகவும்,—அண்ட கோளகை வெடிபட இடிபட அலமர நகைசெய்தான் - அண்டகடாகம் வெடிக்கும்படியாகவும் இடியும்படியாகவும் சுழலும்படியாகவும் (அவ்வியமன்) சிரித்தான்.—எ. று. (கூரு)

செஞ்சவேயுமக் கெதிர்ப்படு வாரிலை சிறிநுங்களி னீங்கள், வெஞ்ச பர்த்திறம் விளைத்திரோ விளைத்தலால் விளைந்ததோ விதுநீவி, ரஞ்ச லுள்ளது பகர்மினென் றிடியென வறைந்தனனவரஞ்சிக், குஞ்சி தாழ்த் தெமர் குறையல வயலவர் குறையெனக் கதமிக்கான்.

(இ-ள்) செஞ்சவே உமக்கு எதிர்ப்படுவார் இலை - எ தூதர்களே நீங்கள் வலிமை குறையும்படி உங்களுக்கு (எதிர்களாக) எதிர்ப்

பட்டு வருபவர்களில்லை;—நுங்களில் நீங்கள் சீறி வெம்சமர்த்திறம் விளைத்திரோ - உங்களுள் நீங்கள் கோபித்துக் கொடிய யுத்தவலியைக் காட்டிச் சண்டை செய்தீர்களோ?—விளைத்தலால் விளைந்ததோ - நீங்கள் சண்டை செய்தலால் இக்கேடு உங்களுக்குண்டாயிற்றோ?—இது நீவிர் அஞ்சல் உள்ளது பகர்மின் என்று இடி என அறைந்தனன் - இதற்கு நீங்கள் பயப்படாமல் உள்ளபடி மறைக்காமல் சொல்லுங்கள் என்று தூதர்களைப் பார்த்து இடி இடித்தாற்போற் சொன்னான்,—அவர் அஞ்சி குஞ்சி தாழ்த்து எமர் குறை அல அயலவர் குறை என - அத்தூதர்கள் பயந்து தலைவணங்கி அது எங்களுடைய குற்றமல்ல அயலவர்களாகிய சிவதூதர்களுடைய குற்றமென்று சொல்ல,—கதம் மிக்கான் - (அப்பொழுது அவ்வியமன்) மிகுந்த கோபமுடையவனாயினான்.—எ. று. (கசு)

தொடர்ந்து வந்தென தூதரைச் சிலரெதிர் தொலைப்பதே தொலைந்தாரென், றடர்ந்த வாசகங் கேட்பதே யாயினு மதிசய மகிலங்கள், கடந்த வாண்மையு மானமு மென் பெருங் காவலுஞ் செங்கோலு, நடந்த வாமிக நன்றுநன் றிதுவெனப் பன்முறை நவில்கின்றான்.

(இ-ள்) என தூதரைத் தொடர்ந்து வந்து சிலர் தொலைப்பதே - என்னுடைய தூதர்களைப் பின்றொடர்ந்து வந்து சிலர் அழித்தார்களா?—தொலைந்தார் என்று அடர்ந்த வாசகம் கேட்பதே - அத்தூதர்கள் இறந்து போய்விட்டார்களென்று சொல்லிய உறுதிவார்த்தையை நான் கேட்கக் கூடியதா?—ஆயினும் அதிசயம் - ஆனாலும், இது ஆச்சரியம்,—அகிலங்கள் கடந்த ஆண்மையும் - உலகங்களைச்செயித்த எனது ஆண்டன்மையும்,—மானமும் - என்னுடைய மானமும்,—என் பெரும் காவலும் - என்னுடைய பெரிய காவலும்,—செங்கோலும் - என் செங்கோலும்,—இது நடந்தவா மிக நன்று நன்று எனப் பல் முறை நவில்கின்றான் - இவ்விதமாக நடந்த இச்செய்கைகள் மிகவும் நல்லது நல்லது என்று பலமுறை சொல்லுகின்றான்.—எ. று. (கஎ)

இவை புரிந்தவர் சிவகணத் தவ்வொரு மெண்ணமுற் றிறைவற்காந், தவ முயன்றவர் தனிமநம தூதுவர் தடுத் தனரோ வென்னாக், கலவு நெஞ்சின னஞ்சினன் றன்மத னல்வினைக் கணக்குண்டே, லவை விளங்கிய சித்திர குத்தர் நீ ரறைந்திடும் விரைந்தென்றான்.

(இ-ள்) இவை புரிந்தவர் சிவகணத்தவர் எனும் எண்ணம் உற்று-(அப்பொழுது எமனானவன்) இவைகளைச் செய்தவர்கள் சிவ கணத்தவர்கள் என்று எண்ணங்கொண்டு,—இறைவற்கு ஆம் தவம் முயன்றவர்தமை - சிவபெருமானுக்குரிய தவங்கள்செய்தவர்களை,— நமதூதுவர் தடுத்தனரோ என்னுக் கவலும் நெஞ்சினன் அஞ்சி னன் - நம்முடைய தூதர்கள் தடுத்தார்களோ என்று வருந்துகின்ற மனமும் பயமுமுடையவனாய்,—அவை விளங்கிய சித்திரகுத்தர் - அவைகளை அறிந்த சித்திர குத்தர்களைப் பார்த்து,—நீர் துன்மதன் நல்வினைக் கணக்கு உண்டேல் விரைந்து அறைந்திடும் என்றான் - நீங்கள் துன்மதன் புண்ணியஞ் செய்ததாகக் கணக்கிருக்குமாயின் அதனைச்சீக்கிரம் பார்த்துச் சொல்லுங்களென்று ஆஞ்ஞாபித்தான்.
எ. று. (கூஅ)

கருதி னும்பயந் தரும்பெருங் கடுந்தொழிற் காலன்
வாய்மொழி கேளா, வெருவி யங்கவர் பன்முறை பன்முறை
மிகவுமங் காராய்ந்து, தரும கேள்கொடுந் துன்மத னிப்பவந்
தனின்மன மொழியாக்கை, மருவு புண்ணிய மணுவள
விலனென வணங்கிநின் றெதிர்சொன்னார்.

(இ-ள்) கருதினும் பயம் தரும் பெரும் கடும்தொழில் காலன் வாய்மொழிகேளா - நினைக்கினும் அச்சத்தைத் தருகின்றபெரிய கொடுந்தொழிலையுடைய எமதர்ம ராஜன் சொல்லிய வார்த்தை யைச் சித்திர குத்தர்கள் கேட்டு,—அவர் அங்கு வெருவி - அவர் கள் அப்பொழுது பயந்து,—அங்கு பன்முறை பன்முறை மிகவும் ஆராய்ந்து - அவ்விடத்தில் பற்பல முறை கணக்குக்களைத் தேடிப் பார்த்து,—தருமகேள் - ஏதருமராஜனே கேளும்,—கொடும் துன்ம தன் - கொடுமையையுடைய துன்மதனானவன்,—இப்பவம் தனில் - இந்தப் பிறப்பில்,—மனம் மொழி யாக்கை மருவு புண்ணியம் அணு அளவு இலன் என - மனம்வாக்குக் காயங்களோடு பொருந்திய புண் ணியங்கள் அணுவளவுஞ் செய்திலனென்று.—எதிர்வணங்கி நின்று சொன்னார் - முன்னேவணங்கிநின்று சொன்னார்கள்.—எ று (கூகூ)

துக டவிர்ந்ததோர் புண்ணிய மிலனெனச் சொற்
றலுந் தொலையாப்பா, விக டனக்கொரு துணையிலை செயல்
வியப் பெனவெழுந் தேயண்ட, முகடு மேல்கொளக் கால்கிளர்
கோட்டுவெம் மோட்டுமைம் மாமேருப்,பகடு முன்வர வெரினி
டைப் புகுந்துமைப் பரவைபோல் வழிக்கொண்டான்.

(இ-ள்) துகள் தவிர்ந்ததுஓர் புண்ணியம் இலன் எனச்சொற்றலும் - (இத்துன்மதன்) குற்றமிலாததாகிய யாதொரு புண்ணியமுஞ் செய்திலனென்று சித்திர குத்தர்கள் சொல்லவும்,—தொலையாப் பாவிகள் தனக்கு ஒருதுணை இலை - நீங்காத பாவமுடையவர்களுக்கு யாதொரு துணையுமில்லை (இங்ஙனமாக),—செயல் வியப்பு என எழுந்து - (இயமன் இச்சிவ தூதர்கள்) செய்த காரியம் ஆச்சரியப் படத்தக்க தாயிருக்கிறதென்று சொல்லி, (சிம்மாசனத்தினின்றும்) எழுந்து,—அண்ட முகடு மேல் கொள் - அண்டமுகட்டிற் செல்லும்படியான,—கால்கிளர் - வாயு வேகத்தோடு விளங்காநின்ற,—மோட்டுக் கோட்டு மைம்மாமேரு வெம்பகடு முன்வர - உயர்ந்த கொம்புகளையுடைய கரிய பெரிய மலைபோன்ற கொடிய எருமைக்கடா (தனக்கு) முன்னேவர,—வெரின் இடைப் புகுந்து - அதன் முதுகின் மேலேறி,—மைப்பரவை போல் வழிக் கொண்டான் - கரிய சமுத்திரம் போல் வழிநடந்தான்.—எ. று. (௧00)

அதி சயத்துட னிறந்தவ ரொழிந்துவந் தடைந்ததூதுவர்சூழ, முதிரு மச்சமு மேல்கொளக் கோபமு மூண்டெழ விரைந்தேகி, விதிபரம்பரம் பொருளென வருளென விளங்கினோர் யாவர்க்குங், கதி யளித்திட நன்றருளெம்பரன் கயிலையைக் கண்ணுற்றான்.

(இ-ள்) இறந்தவர் ஒழிந்து வந்து அடைந்த தூதுவர் சூழ - (சிவதூதர்களால்) இறந்தவர் ஒழிய மற்றுத்தன்னை வந்து அடைந்த தூதர்கள் சூழ,— அதிசயத்துடன் - ஆச்சரியத்தோடு,— முதிரும் அச்சமும் மேற்கொள - மிகுந்த பயமும் அதிகரிக்க.—கோபமும் மூண்டு எழ - கோபமுமிகுந்துண்டாக,—விரைந்து ஏகி - சீக்கிரம் போய்,—விதி பரம் பரம் பொருள் என அருள் என விளங்கினோர் யாவர்க்கும் - சிருஷ்டித் தொழிலைச் செய்கின்ற மேலான பரம் பொருள் என்றும், அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்தருளுக என்றுந் துதிக்கின்றவர்களெல்லாருக்கும்,—கதி அளித்திட - மோக்ஷத்தைக்கொடுக்கும்படி,—நன்று அருள் - நல்லஅனுக்கிரகத்தைச் செய்தருளாநின்ற.—எம் பரன் கைலையைக் கண்ணுற்றான் - எமது சிவபெருமானெழுந்தருளியிராநின்ற திருக்கைலாசமலையை (எமதருமராஜன்) தரிசித்தான்.—எ. று. (௧0௧)

ஆல காலமுண் டருள்பர னுலபத் தணிக்கடைப்புறநங்கோர், சிலமாயனு மயன்முத லோர்தொழுஞ் சிறப்பினுற்

சிறந்தொன்று, ஞால மேழினோ டேழும்வந் தெய்தினும் நடுவிடை வெளிகாட்டுங், கோல மாமணி மண்டப முளததுகூறலாம் படித்தன்றால்.

(இ-ள்) ஆல காலம் உண்டருள் பரன் ஆலயத்து அணிக்கடைப் புறத்து - விஷத்தை யுண்டருளிய சிவபெருமானெழுந்தருளி யிருக்கின்ற திருக்கோயிலின் அழகிய தலைவாயிலின் பக்கத்தில்,—ஓர் சீலமாயனும் அயன் முதலோர் தொழும் சிறப்பினால் - ஒப்பற்ற பரிசுத்தம் பொருந்திய விஷ்ணு மூர்த்தியும் பிரமதேவர் முதலிய தேவர்களும் வணங்குகின்ற சிறப்பினால்,—சிறந்து - மேன்மையையடைந்து,—ஒன்றும் ஞாலம் எழினோடு எழு வந்து எய்தினும் - பொருந்திய பதினாலுலகத்தவர்களும் ஒன்று சேர்ந்து வந்தடைந்தாலும்,—நடு இடைவெளிகாட்டும்கோலம் மாமணிமண்டபம் உளது - நடுவில் இடைவெளியைக் காட்டுகின்ற அழகிய பெரிய இரத்தினங்கள் பதித்துச் செய்யப்பட்ட மண்டப மொன்றிருக்கின்றது;—அது கூறலாம் படித்து அன்று - அது இப்படிப்பட்டதென்று சொல்லுந் தன்மையை யுடையதல்ல.—எ. று. அங்கு ஆல் அசைகள். (கoஉ)

மிக்க பேரொளி யுலகெலாம் விளங்குற விளங்கு மண்டபந் தன்னிற், றிக்குப்பாலருங் கடவுளர் தொகுதியுஞ் சென்றுமுன் பணிந் தேத்தித், தக்க காரியம் புகன்றிட விஞ்சையர் சாரணர் புகழ்பாடச், செக்க ரஞ்சடை முனிவருஞ் சித்தருந் திரண்டுநின் றெதிர்போற்ற.

(இ-ள்) மிக்க பேர் ஒளி உலகு எலாம்விளங்குற விளங்கும் மண்டபந் தன்னில் - மிகுந்த பெரிய சோதியானது உலகங்களெல்லாம் பிரகாசிக்கும்படி விளங்காநின்ற அந்த மண்டபத்தில்,— திக்குப்பாலரும் கடவுளர்தொகுதியும் சென்று - அஷ்ட திக்குப் பாலர்களும் தேவகூட்டங்களும் போய்,—முன் பணிந்து - சந்நிதானத்தில் நமஸ்கரித்து,—எத்தி - தோத்திரஞ்செய்து,—தக்க காரியம் புகன்றிட - தகுதி பொருந்திய தாங்கள் வந்தகாரியங்களை விண்ணப்பஞ் செய்ய,—விஞ்சையர் சாரணர் புகழ்பாட - வித்தியாதரர்களும் சாரணர்களும்(சிவபெருமானது)கீர்த்திகளை யெடுத்து (வீணையிலேற்றிப்) பாடவும்,—அம் செக்கர் சடைமுனிவரும் சித்தரும் திரண்டு நின்று எதிர் போற்ற - அழகிய சிவந்த சடையையுடைய முனிவர்களும் சித்தர்களுங்கூடி நின்று சந்நிதியிற்றுதிக்கவும்.—எ. று. இதுமுதல் மூன்றுபாட்டு குளகம் (கoரு)

தேடி யாரணங் காண்கிலாப் பரம்பரன் றிருவுருத் தவந் தன்னு, னீடி யாவருந் தொழப்பெறுங் கணதிபர் நிரைதொழப் பன்னூறு, சோடி காலர்வந் தெதிர்ப்பினும் விழுங்கிநின் றேக்கிடுங் குறட்பூதம், பாடி யாடிமுன் னிறைஞ்சிட லலகைகள் பணிந்தெதிர் பரந்தோங்க.

(இ-ள்) ஆரணம் தேடிக் காண்கிலாப் பரம் பரன் திரு உரு - வேதங்களாலுந் தேடிக்காணமுடியாத சிவபெருமானது திருவுருவத்தை,—யாவரும் தவந்தன்னால் நீடி தொழப் பெறும் நிரை கணதிபர் - யாவர்களுந் தவத்தினால் மிகவும் வணங்கப் பெறுகின்ற கூட்டமாகிய சிவகணநாதர்களும்,—பல் நூறு காலர்வந்து எதிர்ப்பினும் விழுங்கி முன் தேக்கிடுங் குறள் பூதம் - அனேகஎமதூதர்கள் வந்து எதிர்த்தாலும் அவர்களை முன்னே எடுத்து விழுங்கித்தேக்கிடுகின்ற குறுகிய வடிவினர்களாகிய பூதங்களும்,—முன்பாடி ஆடி இறைஞ்சிட - சந்நிதியினின்று பாடியும் ஆடியும் வணங்கவும்,—எதிர் அலகைகள்பரந்து பணிந்து ஓங்க - எதிரே பேய்கள் பரந்து நின்று வணங்கி மேன்மையை யடையவும்.—எ. று. (௧0௪)

அந்தி வெண்பிறை வேணியு நுதற்கணு மணிப்புய மொருநான்குஞ், சுந்த ரந்திகழ் முழைமழுப் பிரம்புடன் சுரிகையுந் தடக்கையும், வந்த சூரிய ரெண்ணிலர் புகுந்தன வடிவமு முழுநீறு, மெந்தை தந்திடப் பெறுநந்தி வானவ னிருந்தன னினிதம்மா.

(இ-ள்) அந்தி வெண் பிறை வேணியும் - அந்திக்காலத்திற் றோன்றுகின்ற வெள்ளிய மூன்றாம் பிறையைத் தரித்த சடையையும்,— நுதல் கணும் - நெற்றிக்கண்ணையும்,—ஒரு நான்கு மணிப்புயம் - ஒப்பில்லாத அழகிய நான்கு திருப்புயங்களையும்,—உழை மழுப் பிரம்புடன் சுரிகையும் சுந்தரந் திகழ் தடக்கையும் - மானும் மழுவும் பிரம்பும் உடைவாளும் ஆகிய இவைகள் அழகோடு விளங்குகின்ற பெரிய திருக்கரங்களையும்,—வந்த சூரியர் எண்ணிலர் புகுந்தன வடிவமும் - வருதற்றொழிலையுடைய அளவில்லாதசூரியர்கள் ஒன்று சேர்ந்தாற் போன்ற வடிவத்தையும்,—முழுநீறும் - திருமேனி முழுதும் தரித்த திருவெண்ணீறும்,—எந்தை தந்திடப்பெறும் நந்தி வானவன் - எமது பிதாவாகிய சிவபெருமான் கொடுத்தருளப் பெற்றுக் கொண்ட திருநந்திதேவர்,—இனிது இருந்தனன் - இனிதாக வீற்றிருந்தருளினார்.—எ. று. அம்மா வியப்பிடைச்சொல் (௧0௫)

இருவர் சங்கர ருளரென நந்தியெம் மிறைவன்வீற் றிருந்தோங்கு, மருவ ருஞ்சபைச் சேணிடைக் கண்டுதன் வாகனத் திழிந்துள்ளம், வெருவி யாடையை யொதுக்கிவாய் புதைத்தருள் வெள்ளமே யனையான்முன், கருகு முள்ளமும் வடிவமும் படைத்தவெங் காலன்வந் தெதிர்சார்ந்தான்.

(இ-ள்) எம் இறைவன் வீற்று இருந்து ஓங்கும் மருவரும் சபை - எமது தலைவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருத்தலா லுயர்கின்ற கிட்டுதற்கரிய சபையினிடத்தில்,—நந்தி சேண் இடைக் கண்டு - திருநந்தி தேவர் வீற்றிருத்தலை (இயமன்) தூரத்திலிருந்து பார்த்து,—சங்கரர் இருவர்உளர் என - இரண்டு சிவபெருமானை வீற் றிருக்கின்றார்களென்று எண்ணி,— தன்வாகனத்துஇழிந்து - தன் னுடைய வாகத்தினின்று மிறங்கி,—உள்ளம் வெருவி - மன மஞ்சி,—ஆடையை ஒதுக்கி - வஸ்திரத்தை யொதுக்கிக்கொ ண்டு,—வாய்புதைத்து - வாயைப் பொத்திக் கொண்டு,—அருள் வெள்ளம் அனையான்முன் - கிருபாசமுத்திரம் போன்ற சிவபெரு மானுடைய சந்நிதானத்தில்,—கருகும் உள்ளமும் வடிவமும் படை த்த வெம் காலன் எதிர்வந்து சார்ந்தான் - கறுத்த மனதையுஞ் சரீ ரத்தையுமுடைய ஏமனானவன் எதிரேவந்தான்.—எ. று. (க0சு)

கண்டி றைஞ்சிமுக் கால்வலங் கொண்டுடன் காசினி யிடைச்சேர்ந்த, தண்டு போற்படிந் தீரறுசா லருந்தலத் திடைப்பணிந் தேத்திக், கொண்ட லாமென நின்றுகால் குவியக் கைகுவித்தி யாவருங் கேட்ப, மண்டு பேரரு ணந்திவா னவனெதிர் வருத்துரை செய்கின்றான்.

(இ-ள்) மண்டு பேர் அருள் நந்தி வானவன் எதிர் கண்டு இறை ஞ்சி - (அவ்வியமன்) மிகுந்த பெரிய கிருபையை யுடைய திரு நந்தி தேவர் எதிரே தரிசித்து வணங்கி,—முக்கால் வலங் கொண்டு - மும்முறை பிரதக்ஷிணஞ்செய்து,—உடன் காசினியிடைச் சேர்ந்த தண்டு போல் படிந்து - உடனே பூமியில் விழுந்த தண்டம் போல் விழுந்து-ஈர் அறுகால் அரும் தலத்திடைப் பணிந்து எத்தி - பன்னி ரண்டு முறை அரிய பூமியில் விழுந்து நமஸ்கரித்துத் துதித்து,— கொண்டல் ஆம் என படி நின்று கால் குவியக்கைகுவித்து - மேக மென்று சொல்லும்படிபூமியில் நின்று கால்களை நெருங்க வைத்துக் கைகளை (அஞ்சலியாகக்) குவித்துக் கொண்டு,—வருத்து உரை செய்கின்றான் - (தான்வந்த காரியத்தை, விசித்து விண்ணப்பஞ் செய்கின்றான்.—எ. று. (க0எ

தெண்ணி லாநறுங் கண்ணியஞ் சடாடவித் தெய்வநாயகனெங்கு, முண்ணி லாவிய பகவனெம் பரம்பர னுமையவளொருபாக, னெண்ணி லாவுயிர் புரிந்தவல் வினையறிந் திதற்கிதென் றுறுந்தண்டம், பண்ணு மாறெனக் கனுதியே பணிக்கயான் பணிவிடைப்படி நின்றேன்.

(இ-ள்) தெள் நிலா நறும் கண்ணி அம் சடாடவித் தெய்வநாயகன் - தெளிவு பொருந்திய மூன்றாம் பிறையையும் வாசனை பொருந்திய (கொன்றைப் பூமாலையையுந் தரித்த சடைக்காட்டையுடைய தேவநாயகனும்,—எங்கும் உள் நிலாவிய பகவன் - (சித்து அசித்து என்னும் பிரபஞ்சங்கள்) எவ்விடங்களிலும் விளங்காநின்ற பகவானும்,—எம் பரம் பரன் - எமக்கு மேலானவனும்,—உமையவள் ஒருபாகன் - உமாதேவியை ஓர் பாகத்தி லுடையவனுமாகிய சிவபெருமான்,—எண் இலா உயிர் புரிந்த வல்வினை அறிந்து —அளவில்லாதனவாகிய ஆன்மாக்கள் செய்த கொடிய பாவங்களை அறிந்து,—இதற்கு இது உறும் தண்டம் என்று பண்ணும்ஆறு - இன்ன பாவஞ் செய்த ஆன்மாவுக்கு இன்னதண்டம் பொருத்தம் என்று அறிந்து அந்தந்த பாவத்துக்கு ஏற்ற தண்டத்தைச் செய்யும்படி,—எனக்கு அநாதியே பணிக்க - அடியேனுக்கு அநாதியே கட்டளையிட்டருள,—யான் பணிவிடைப்படி நின்றேன் - அடியேன் அக்கட்டளைப்படியே என் தொழிலைச் செய்துகொண்டிருந்தேன்.—எ. று. ()

இற்றை நாள்வரை யோரிடை யூறும்வந் தெய்திடா துலகத்தென், வெற்றி யாணையே நடந்ததிப் போதது வீய்ந்ததென் னதிகார, முற்றும் வேண்டிலன் வேண்டினர்க் கீவதே முறைமையென் றறிந்தன்டஞ், சுற்று பாசமங் கெடுத்துமுன் வைத்தனன் சுரர்கணத் தொகைகாண,

(இ-ள்) இற்றைநாள் வரை ஓர் இடையூறும் வந்து எய்திடாது -இது நாள் வரையில் (அடியேனுக்கு) யாதொரு விக்கினமும் வராமல்,--உலகத்து என் வெற்றி ஆணையே நடந்தது-உலகங்களிலே அடியேனது வெற்றிபொருந்திய ஆஞ்ஞையே நடந்து வந்தது,—இப்போது அது வீய்ந்தது - இப்பொழுது அவ்வாஞ்ஞை அழிந்து போய்விட்டது,—என் அதிகாரம் முற்றும் வேண்டிலன் - அடியேனுக்குக் கொடுத்த அதிகார முழுதும் இனிவேண்டுவதில்லை,—வேண்டினர்க்கு ஈவதே முறைமை என்று - விரும்பினவர்களுக்குக்

கொடுப்பதே முறைமை யாகுமென்று சொல்லி,—சுரர் கணத் தொகை காண - தேவகூட்டங்கள் பார்க்கும்படி,—அடும் தண்டம் சுற்றுபாசம் அங்கு எடுத்து முன் வைத்தனன் - கொல்லுகின்ற தண்டாயுதத்தையும், சுற்றிக் கட்டுகின்ற பாசத்தையும் எடுத்துத் (திருநந்தி தேவர்) சந்நிதானத்தில் வைத்தான்.(எமன்).—எ.று.க0கூ)

ஆற்றல் சால்யமன் செய்கைகண் டப்படி யாகநின் னதிகார, மாற்றிவேறொரு காலனுக் குன்பதம் வழங்குதல் வழக்கால்வெள், ளேற்று நாயகன் சைவநன் னெறிதனக் கிடரிழை யாவன்பற், போற்ற லாதநீ யொழிவதே நெறியெ னப்பின்னரும் புகல்கின்றான்.

(இ-ள்) ஆற்றல் சால்யமன் செய்கை கண்டு - வலிமைபொருந்திய எமனுடைய செய்கையைத் (திருநந்திதேவர்) பார்த்து,—அப்படியாக - (யமனே) அங்ஙனமாகுக,—நின் அதிகாரம் மாற்றி - உன்னுடைய அதிகாரத்தை நீக்கி,—வேறு ஒருகாலனுக்கு உன் பதம் வழங்குதல் வழக்கு- வேறொரு இயமனுக்கு உன்பதவியைக் கொடுத்தல் முறைமை யாகும்; (எதனாலெனில்),—வெள் ஏற்று நாயகன் சைவநல் நெறி தனக்கு இடர் இழையா அன்பன்போற்றலாதநீ - வெள்ளிய ரிஷபத்தை வாகனமாக வுடைய சிவபெருமானுக்குரிய நல்ல சைவமார்க்கத்துக்கு இடையூறு செய்யாத அன்பனாகிய துன் மதனைக் காப்பாற்றாத நீ,—ஒழிவதே நெறி எனப் பின்னரும் புகல் கின்றான் - நீங்கிப் போவதே முறைமையாகும் என்று பின்னுஞ் சொல்லுகின்றார் (திருநந்திதேவர்).—எ. று. ஆல்-அசை. (ககo)

தேவ தேவனுக் கன்பனை யானுமெத் தேவரு முனி வோரும், யாவருந்தொழக் தகும்பெரி யோன்றனை யிடருறப் பிணிப்பித்த, பாவ காரிநீ யென்செய்தாய் சிவனையே பழித் ததன் றேவென்னாச், தாவி லாதவெஞ் சினத்தொடு மருள் செய்தான் சங்கா னருள்பெற்றான்.

(இ-ள்) தேவ தேவனுக்கு அன்பனை - தேவதேவனாகிய சிவ பெருமானிடத்தே அன்புடையவனும்,—யானும் எத்தேவரும் முனி வோரும் யாவருந் தொழத்தகும் பெரியோன்தனை - நானும், எந்தத் தேவர்களும், முனிவர்களும், மற்றுள்ள யாவர்களும் வணங்கத்தக்க பெரியோனுமாகிய அத்துன்மதனை,—இடர் உறப் பிணிப்பித்த பாவ காரிநீ - துன்பமுண்டாகக் கட்டுவித்த பாவிநீ,—என் செய்

தாய் - நீ என்னகாரியஞ் செய்தாய்,—சிவனையே பழித்த தன்றோ என்று - அது சிவபெருமானை நிந்தித்த தல்லவா? என்று,—தாவிலா வெம் சினத்தோடு - அழிவில்லாத கொடிய கோபத்தோடு,—சங்கரன் அருள் பெற்றான் அருள் செய்தான் - சிவபெருமானது திருவருளைப் பெற்றவராகிய திருநந்திதேவர் திருவாய் மலர்ந்தருளினார்.—எ. று. (ககக)

வேறு.

"அடுந்திறற் கணநிபர்க் கதிபன் கூறலு
மொடுங்கின னுயிர்ப்பில னுடல முள்ளமு
நடுங்கினன் வேர்த்தன னாவு ணங்கினன்
படுங்கொடும் பயமெனும் பரவை யாழ்ந்தனன்."

(இ-ள்) அடும் திறல் கணநிபர்க்கு அதிபன் கூறலும் - மிகுந்த வலிமையையுடைய சிவகண நாதர்களுக்குத் தலைவராகிய திருநந்திதேவர் இவ்வாறு சொல்லவும்,—ஒடுங்கினன் - (அவ்வியமன்) சரீரம் ஒடுங்கினான்;—உயிர்ப் பிலன் - மூர்ச்சித் தவனானான்;—உடலமும் உள்ளமும் நடுங்கினன் - சரீரமும் மனமும் நடுங்கினான்;—வேர்த்தனன் - வேர்வை யடைந்தான்;— நா உணங்கினன் - நாவுலர்ந்தான்;—படும் கொடும் பயம் எனும் பரவை ஆழ்ந்தனன் - (இவ்வாறு) உண்டாகிய கொடிய பயமென்று சொல்லப்பட்ட கடலுள் அழுந்தினான்.—எ. று. (ககஉ)

கற்றுணர் வுற்றநற் கலையு ஞானமு
முற்றுணர் பேரருண் முயங்கு மாதவ
வற்றைநாண் மறலித னச்ச மொப்புறச்
சொற்றிடி லெளிதெனச் சொல்ல லாகுமோ.

(இ-ள்) கற்று உணர்வு உற்ற நல்கலையும் ஞானமும் முற்று உணர் பேர் அருள் முயங்கு மாதவ - கற்றறிந்த நல்ல சாஸ்திரம் ஞானம் என்னு மிவைகள் முழுதையுமறிந்த பெரிய கிருபை பொருந்திய தவசிரேஷ்டராகிய சைமினியே,—அற்றை நாள் மறலி தன் அச்சம் - அந்நாளில் யமன் அடைந்தபயத்துக்கு,—ஒப்புறச் சொற்றிடில் - ஒப்பாக ஒன்றைச் சொல்லில்,—எளிது எனச் சொல்லல் ஆகுமோ - எளிதென்று ஒன்றைச் சொல்லக்கூடுமோ?—(கூடாது). எ. று. (ககங)

பயக்கடல் விழுந்தொரு படியி னலெழுந்
தயர்த்தன னறிவுவந் தடையப் பேரரு
ணயப்பிடை விடாவரு ணந்தி தேவன்முன்
வயத்திறன் மறலியும் வணங்கிக் கூறுவான்.

(இ-ள்) பயக் கடல் விழுந்து ஒரு படியினல் எழுந்து அயர்த்தனன் - அச்சமென்னுங் கடலில் விழுந்து ஒரு விதமாக எழுந்து சோகத்தை யடைந்தான்,—அறிவு வந்து அடைய - (ஒருவாறு) நல்லறிவுவர,—பேர் அருள் நயப்பு இடைவிடா அருள் நந்தி தேவன் முன் - பெரிய கிருபையும் இன்பமும் இடைவிடாமற் கொடுத்தருளுகின்ற திருநந்தி தேவருடைய சந்நிதியில்,-வயம் திறல் மறலியும் வணங்கிக் கூறுவான் - வெற்றியும் வலிமையுமுடைய எமன் நமஸ்கரித்து விண்ணப்பஞ் செய்வான்.—எ. று. (௧௧௪)

தலைவநின் னேவலைத் தலையின் மீதுகொண்
டலைவற வென்றொழி லாற்றி னேன்மலைச்
சிலையவ னன்பரைத் தீங்கு செய்தது
மிலைதிரு வுளத்தினுக் கிசைந்த செய்கெனு.

(இ-ள்) தலைவ நின் ஏவலைத் தலையின் மீது கொண்டு அலைவு அற என் தொழில் ஆற்றினேன் - எமது தலைவரே தேவரீராலேவப்பட்ட ஏவற்றொண்டைச் சிரமேற்கொண்டு கெடுதலில்லாமல் அடியேனது தொழிலைச் செய்துவந்தேன்,—மலைச் சிலையவன் அன்பரைத் தீங்கு செய்ததும் இலை - மகா மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானுடைய அடியார்களுக்கு அடியேன் யாதொரு தீங்குஞ் செய்தது மில்லை;—திரு உளத்துக்கு இசைந்த செய்க எனு - (ஆதலால்) திருவுளத்திற்குப் பொருத்த மானவைகளைச் செய்தருளுக என்று சொல்லி.—எ. று. (௧௧௫)

நண்ணுமிப் பிறப்பிடை நவிலித் துன்மதன்
புண்ணிய மொன்றிலன் புனிதற்கன்பனென்
றெண்ண வுந்தருவனே யெனது தூதுவ
ரண்ணலேயறி யுறுதடர்ப்பரோ வென்றுன்.

(இ ள்) அண்ணலே - (எமது) தலைவரே,—நவில் இத்துன்மதன் நண்ணும் இப்பிறப்பு இடை - சொல்லுகின்ற இத்துன்மதன்

பொருந்திய இப்பிறப்பில்,—புண்ணியம் ஒன்றும் இலன்- யாதொரு புண்ணியமுஞ் செய்தவனலன்,—புனிதற்கு அன்பன் என்று எண்ணவும் தகுவனே - சிவபெருமானுக்கு அடியவனென்று நினைக்கவுந் தகுதியுடையவனோ,—எனது தூதுவர் அறிவுறாது அடர்ப்பரோ என்றான் - எனது தூதர்கள் அறியாமல் (அத்துன்மதனை) வருத்துவார்களோ என்று இயமன் சொல்லினான்.—எ. று. (கககூ)

என்றலு முகிணகையிள நிலாவெழ
நன்றிது நன்றென நந்தி வானவ
னன்றவற் பார்த்திவ னரனுக் கன்பனென்
றென்று நீ யுணர்ந்திலை போலு முள்ளதால்.

(இ-ள்) என்றலும் - என்று (இந்தப் பிரகாரம் யமன்) சொல்லவும்,—நந்திவானவன் இதுநன்று நன்று என - திருநந்திதேவர் இது நல்லது நல்லது என்று சொல்லி,—அன்று முகிழ் நகைஇளநிலா எழ அவன் பார்த்து - அப்பொழுது அரும்பை யொத்த பற்கள் இளமையாகிய சந்திரிகையைக் கக்கும்படிச்சிரித்து, அவனைப்பார்த்து,—இவன் அரனுக்கு அன்பன் என்று உள்ளது ஒன்றும் நீ உணர்ந்திலை போலும் - இத்துன்மதன் சிவபெருமானுக்கு அடியவனென்று சொல்லுகின்ற உண்மை யொன்றும் நீ அறிந்ததில்லை போலும்.—
எ. று. ஆல் அசை. (ககள)

வன்பெரு நரகிடை மறுகு வோர்சிவ
னன்பரை யிகழ்பவ ரன்றி யங்கவர்
பொன்பொதி சடாடவிப் புனிதர்க் கொப்பென
வின்புறு வோர்கதிக் கிறைவ ராவரால்.

(இ-ள்) சிவன் அன்பரை இகழ்பவர் வன் பெரும் நரகிடை மறுகுவோர் - சிவனடியார்களை நிந்திப்பவர்கள் வலிய பெரிய நரகத்திற்கிடந்து வருந்துவார்கள் ;—அன்றி - அதுவன்றி,—அவர் பொன்பொதி சடாடவி புனிதற்கு ஒப்பு என இன்பு உறுவோர்-அச்சிவனடியார்களைப் பொன்னிறம் பொருந்திய சடைக்காட்டையுடைய சிவபெருமானுக்கு ஒப்பாவார்கள் என்று சந்தோஷிப்பவர்கள்,—கதிக்கு இறைவர் ஆவர் - மோக்ஷத்திற்குத் தலைவராவார்.—எ. று. ஆல் அங்கு அசைகள். (கக அ)

நிறையடி யவர்பிழை நீக்கி யாளுமெங்
கறைமலி களரருட் கடன தாதலான்

முறைபுரி நீயறி யாது முற்றிய
வறைபெருங் குறைபொறுத் தருள்வ னஞ்சனீ.

(இ-ள்) நிறைஅடியவர் பிழை நீக்கி ஆளும் எம் கறைமலி களர் அருள் கடனது ஆதலால் - நற்குணங்கள் நிறைந்த அடியவர்கள் செய்த குற்றங்களை நீக்கியாளுதல் எமது நஞ்சக்கறை பொருந்திய திருக் கண்டத்தையுடைய சிவபெருமானது திருவருளின் முறைமை யாதலால்,—முறைபுரிநீ - செங்கோன் முறைமையைச்செய் கின்ற நீ,—அறியாது முற்றிய - அறியாமற் செய்த,—அறை பெரும் குறை பொறுத்தருளுவன் - மேற்சொல்லிய பெரிய குற்றங்களைப் பொறுத் தருளுவோம்,—நீ அஞ்சல் - (ஆதலால் இயமனே) நீ பயப் படாதே.—எ. று. (கககூ)

அற்புதற் கன்பனே யாமித் துன்மதன்
முற்பக னல்வினை முயங்க முன்னொர்நாட்
டற்பர மாகிய தமனியப் பொதுச்
சிற்பர நாடகந் தரிசித் தானரோ.

(இ-ள்) இத்துன்மதன் முன்பகல் நல்வினை முயங்க - இத்துன் மதனனவன் முற்பிறப்பிற் புண்ணியத்தைச் செய்ய,—முன் ஓர் நாள் தற்பரம் ஆகிய தமனியப் பொது சிற்பரன் நாடகம் தரிசித் தான் - (அதனால்) முன்னொரு நாளில் மேலானதாகிய கனகசபையி னிடத்தில் ஞானசொருபியாகிய நடேசப்பெருமான் செய்தரு ளிய திருநிருத்தத்தைத் தரிசித்தான்;—அற்புதற்கு அன்பனேயாம் - (ஆதலால்) அவன் அச்சிவபெருமானுக்கு அன்புடையவனே யாவா ன்.—எ. று. அரோ அசை. (கஉ0)

தாவருஞ் சிதம்பரந் தன்னி லற்புத
மேவருந் திருநட மேவிக் காண்பரேற்
றீவினை மிக்கவர் திருந்து புண்ணியர்
யாவரு முத்தரோ ரைய மில்லையால்.

(இ-ள்) தாவரும் சிதம்பரம் தன்னில் மேவி - அழிதலில்லாத தாகிய சிதம்பரத்திற் போய்,—அற்புதம் மேவரும் திருநடம் காண்ப ரேல் - ஆச்சரிய கரம் பொருந்தியதிருநிருத்தத்தைத் தரிசிப் பாரா யின்,—தீவினை மிக்கவர் திருந்து புண்ணியர் யாவரு முத்தர் - பாவ த்தினுன் மேம்பட்டவர்களாயினும் நல்ல புண்ணிய முடையாரா

யினும் அவர்களெல்லாருஞ் சிவன் முத்தராவார்கள்;—ஓர் ஐயம் இலை - (இதற்கு) யாதொரு சந்தேகமுமில்லை.—எ-று. ஆல்-அசை.()

ஆதலி னின்றறி யாது செய்தவித்
தீதுநீ யன்பனுஞ் செய்கை கொண்டரு
ளுதனும் பொறுத்தன னடுங்க யாரையும்
வேதனைத் தண்டமும் விளங்கச் செய்தியால்.

(இ-ள்) ஆதலின் இன்று அறியாது செய்த இத்தீது - ஆகையால் இப்பொழுது நீ அறியாமற் செய்த இக்குற்றத்தை,—நீ அன்பன் ஆம் செய்கை கொண்டு அருள் நாதன் பொறுத்தனன் - நீ அடியவனுந்தன்மையைத் திருவுள்ளத்திற் கொண்டு கிருபையையுடைய சிவபெருமான் பொறுத்தருளினார்;—யாரையும் நடுங்க வேதனைத் தண்டமும் விளங்கச்செய்தி - (இனிநீ அடியார்களொழிந்த) மற்ற யாவர்களையும் நடுங்கும்படித் துன்பத்தைத்தருகின்ற தண்டனையை (எல்லாரும்) மறியும்படிச் செய்யக்கடவாய்,—எ.று. ஆல் அசை. ()

செய்ததீங் குளரெனிற் சிவன்றன் றொண்டர்பா
லெய்துத றவிர்தியே யிறைவற் கன்பனீ
கைதவ மிலாதவெங் கால நின்பதி
நொய்தினி லேகென நோக்கிக் கூறினன்.

(இ-ள்) கைதவம் இலாத வெம் கால - வஞ்சகமில்லாத கொடிய இயமனே,—செய்த தீங்கு உளர் எனில் - பாவங்களைச் செய்தவர்களாயிருந்தாலும்,—சிவன்தன் தொண்டர் பால் எய்துதல் தவிர்தி - நீ அச்சிவனடியார்களிடத்துப் போகாதிருக்கக்கடவாய்;—நொய்தினில் நின்பதி ஏகு என நோக்கிக் கூறினன் - சீக்கிரம் உன் உலகத்துக்குப் போகக் கடவாய் என்று இயமனைப் பார்த்துத் திருநந்திதேவர் சொல்லியருளினார்.—எ. று. (கஉ௬)

அந்தக னதிசயித் தடியர் தீவினைப்
பந்தனை யெய்தினும் படர லென்றனை
யெந்தையெம் பரம்பரற் கன்ப ரென்பவர்
தந்தம தொழுக்கநீ சாற்றென் றேத்தினன்.

(இ-ள்) அந்தகன் அதிசயித்து - அவ்வியமன் ஆச்சரியமடைந்து,—எந்தை - எமது பிதாவே,—அடியர் தீவினைப் பந்தனை எய்தினும் படரல் என்றனை - அடியார்கள் தீவினையாகிய பாசபந்தத்தை

யடைந்தாலும் அவர்களிடத்து அடியேனைப் போகாதே என்று சட்டளையிட்டருளினீர்,—பரமற்கு அன்பர் என்பவர் தம் ஒழுக்கம் நீ சாற்று என்று எத்திறன் - சிவபெருமானுக்கு அடியவர்களென்று சொல்லப்பட்டவர்களுடைய ஒழுக்கங்களைத் தேவரீர் சொல்லியருளுக என்று விண்ணப்பஞ் செய்தான்.—எ. று. (கஉச)

அற்றவன் மொழிதல்கேட் டரனுக் கன்பர்தம்
முற்றபே ரொழுக்கமே யுணர்த்து வான்புலன்
செற்றெழு முணர்வுடைச் சிலாதரன் பெறு
நற்றவப் பயனிகர் நந்தி கூறுவான்.

(இ-ள்) அற்று அவன் மொழிதல் கேட்டு - அப்பொழுது அவ்வியமன் சொல்லிய வார்த்தையைக் கேட்டு,—அரனுக்கு அன்பர் தம் உற்ற பேர் ஒழுக்கமே உணர்த்துவான் - சிவபெருமானுக்கு அடியவர்களுடைய பெரிய ஒழுக்கங்களை (அவ்வியமனுக்கு) அறிவிக்கும் பொருட்டு,—புலன் செற்று எழும் உணர்வு உடைச் சிலாதரன் பெறு நல் தவப் பயன் நிகர் நந்தி கூறுவான் - ஐம்புலன்களைச் செயித்த ஞானத்தையுடைய சிலாதர முனிவர் பெற்றருளிய நல்ல தவப்பயன் போன்ற திருநந்திதேவர் திருவாய் மலர்ந்தருளுவார்.—எ. று. (கஉரு)

வேறு.

முந்தைமறை யாகமநன் னெறியணிபுண் டரராக முழுது நீற்றோர், சிந்தையினன் பிலரேனு முளரேனுஞ் செய்வோர் தீங்கின் சிவார்ச்சனைகள், பந்தமுள ரேனுமுருத் திரசிவசங் கரவமல பரம வென்று, சந்ததமு முரைப்போர்களிவ ரன்றோ விறைவனுக்குத் தகும்பே ரன்பர்.

(இ-ள்) முந்தை மறை ஆகமம் நல் நெறி அணிபுண்டரர் - பழமையாகிய வேதாகமங்களிற் சொல்லிய நல்லவிதிப்படி தரிக்கப்பட்ட திரிபுண்டரத்தையுடையவர்களும்,—ஆக முழுதும் நீற்றோர் - சரீர முழுதும் விபூதியை உத்தூளனஞ் செய்தவர்களும்,—சிந்தையில் அன்பு உளரேனும் இலரேனும் சிவார்ச்சனைகள் செய்வோர் - மனதில் அன்புள்ளவர்களாயிருந்தேனும், அன்பில்லாதவர்களாயிருந்தேனுஞ் சிவபூசை செய்பவர்களும்,—தீங்கின் பந்தம் உளர் எனும் உருத்திரசிவசங்கர அமல பரம என்று சந்ததமும் உரைப்போர்கள் - பாவ சம்பந்தப்பட்டவர்களேனும் உருத்திரனே சிவசங்கரனே மல

முத்தனே பரமனே என்று நாடோறுந் துதிப்பவர்களும்,—இவர் அன்றோ இறைவனுக்குத் தகும் பேர் அன்பர் - இவர்களல்லவோ சிவபெருமானுக்குரிய பெரிய அன்பராவார்கள்.—எ. று. (கஉ௬)

செஞ்சடையோன் றெய்வவிழாச் சேவிப்போ ரங்கவர்க் குச் செவ்விமாறு, வஞ்சுவைகூ ரமுதுதக மளித்துளோர் சிவாலயங்க ளகிலம் போற்றத், தஞ்சமெனச் செய்வோர் செய் விப்போர்கண் டுளமகிழ்வோர் சைவ நீதி, விஞ்சுசிவ னன்பர்தமைப் பூசிப்போ ரீசற்கு மிகுந்த நேசர்.

(இ-ள்) செம் சடையோன் தெய்வ விழாச் சேவிப்போர் - சிவந்த சடாபாரத்தையுடைய சிவபெருமானது தெய்வத்தன்மை பொருந்திய திருவிழாவைச் சேவிப்பவர்களும்,—அவர்க்குச் செவ்வி மாறு அம்சுவை கூர் அமுது உதகம் அளித்துளோர் - அச்சிவனடியார்களுக்குக்காலந்தவறாமல் அழகிய சுவை மிகுந்த திருவமுதையுந் தீரத்தத்தையுங் கொடுத்தவர்களும்,—அகிலம் போற்றச் சிவாலயங்கள் தஞ்சம் எனச் செய்வோர் - உலகத்தார்கள் துதிக்கும்படிச் சிவாலயங்களைத் தங்களுக்குப் புகலிடமாகுமென்று நினைத்துக் கட்டு பவர்களும்,—செய்விப்போர் - அச்சிவாலயங்களைக் கட்டுவிப்பவர் களும்,—கண்டு உளம் மகிழ்வோர் - அச்சிவதருமங்களைக் கண்டு மனமகிழ்வோர்களும்,—சைவநீதி விஞ்சு சிவன் அன்பர்தமைப் பூசிப்போர் - சைவத்துக்குரிய நீதிமார்க்கத்தின் மேம்பட்ட சிவ னடியார்களைப் பூசிப்பவர்களும்,—ஈசற்கு மிகுந்த நேசர் - (ஆகிய இவர்கள்) சிவபெருமானிடத்து மிகுந்த அன்புடையவர்களாவார் கள்.—எ. று. அங்கு அசை. (கஉஎ)

சிரமீதுங் களமீதுங் கன்னமீதும் புயத்துஞ் செங்கை மீது, முரமீதுங் கண்டிகையைத் தரித்துளோ ருபனிடதத் துற்றோர் வேண்டும், வரமீயத் தக்கசத வுருத்திரமந் திரந வில்வோர் மறைகட் கெல்லாம், பரமீதென் றுணருமெழுத் தஞ்சுமுரைப் போர்கள்சிவ பத்த ராவார்.

(இ-ள்) சிரமீதும் களமீதும் கன்னமீதும் புயத்துமீதும் செங்கை மீதும் உரமீதும் கண்டிகையைத் தரித்துளோர் - சிரசின் மேலும் கழுத்தின் மேலும் காதுகளின் மேலும் புயங்களின் மேலும் சிவந்த கைகளின் மேலும் மார்பின் மேலும் உருத்திராக்ஷமாலையைத்தரித்த வர்களும்,—உபநிடதத்து உற்றோர் - உபநிஷதங்களைக்கற்றறிந்தவ

ர்களும்,—வேண்டும் வரம் ஈயும் தக்க சத உருத்திர மந்திரம் நவில்வோர் - விரும்பிய வரங்களைக் கொடுக்கின்ற தகுதி பொருந்திய உருத்திர சதமந்திரங்களைச் செபிப்பவர்களும்,—மறைகட்கு எல்லாம் வரம் ஈது என்று உணரும் எழுத்து அஞ்சும் உரைப்போர்கள் - மந்திரங்களெல்லாவற்றினு மேலானது இது என்று அறியத்தக்க ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபிப்பவர்களுமாகிய இவர்கள்,—சிவபத்தர் ஆவார் - சிவனடியாராவார்கள்.—எ. று. (கஉஅ)

எந்தைபரன் றனைநோக்கி யுய்யானந் திருக்குளங்க
ளேற்ற கூவ, னந்தவனம் பலசெய்வோர் செய்விப்போ, ரருட்
சைவநற் றனத்துச், சிந்தைமகிழ்வுட னுறைவோ ருறைவோ
ர்க்கு வேண்டுவன செய்வோ ரீச, னந்தமிலா வடியவர்தம்
மேவல்பணி விடைத்தொழிலோ ரரனுக் கன்பர்.

(இ-ள்) எந்தை பரன் தனை நோக்கி உய்யானம் திருக்குளங்கள் ஏற்ற கூவல் நந்தவனம் பல செய்வோர் - எமது பிதாவாகிய சிவபெருமானைக்குறித்துச் சோலைகள் திருக்குளங்கள் தகுதி பொருந்திய கிணறுகள் திருநந்தனவனங்கள் என்னும் பலவற்றைச் செய்வோர்களும்,—செய்விப்போர் - அவைகளைச்செய்விப்போர்களும்,—அருள் நல் சைவத்தானத்துச் சிந்தை மகிழ்வுடன் உறைவோர் - கிருபை பொருந்திய நல்ல சைவ மடங்களில் மனமகிழ்ச்சியோடு வசிப்பவர்களும்,—உறைவோர்க்கு வேண்டுவன செய்வோர் - (அம்மடங்களில்) வசிப்பவர்களுக்கு வேண்டுவனவற்றைச் செய்பவர்களும்,—அந்தம் இலா ஈசன் அடியர்தம் ஏவல் பணிவிடைத் தொழிலோர் - முடிவில்லாத சிவபெருமானுடைய அடியார்களது ஏவற்றொண்டைச் செய்கின்ற தொழிலையுடையவர்களுமாகிய இவர்கள்,—அரனுக்கு அன்பர் - சிவபெருமானுக்கு அடியராவார்கள்.—எ. று.()

இச்செய்யுள் நான்காம் அடியில் அந்தமிலா வடியவர்தம் மேவலோர்க் கேவலோ ரரனுக்கன்பர் எனவும் பாடம்.

அரியயரே முதலான புத்தேளி ரனைவரினு மழியா
வீசன், பெரியனென வுணர்ந்துளா ரங்கவன்றன் னுமத்திற்
பெரியோர் பேணற், குரியவுருத் திரபரம வாலசிவ சங்கர
வென் றுரைக்கு மிந்தத், தெரிவரிய திருநாமம் பெரிதென்
போர் சிவலோகச் செல்வ ராவார்.

(இ-ள்) அரி அயரே முதலான புத்தேளிர் அனைவரினும் - விஷ்ணுமூர்த்தி பிரமதேவர் முதலான தேவர்கள் எல்லாரினும்,—

அழியா ஈசன் பெரியன் என உணர்ந்துளோர் - அழிவில்லாத சிவபெருமானே மேலானவன் என்று அறிந்தவர்களும்,—அவன் தன் நாமத்தில் - அச்சிவபெருமானுடைய திருநாமங்களில்,—பெரியோர் பேணற்கு உரிய - பெரியோர்கள் விரும்புதற்குரிய,—உருத்திர பரம அமல சிவசங்கர என்று உரைக்கும் தெரிவரிய இந்தத் திருநாமம் பெரிது என்போர் - உருத்திர பரம அமல சிவசங்கர என்று சொல்லுகின்ற அறிதற்கரிய இத்திரு நாமங்களே மேலானதென்று சொல்லுவோர்களுமாகிய இவர்கள்,—சிவலோகச் செல்வர் ஆவார் - சிவசாலோக்கியப்பதவியை யடையத்தக்க செல்வத்தையுடைய வர்களாவார்கள்.—எ. று. ஆங்கு அசை. (க௯0)

அறையுமறைப் பெரும்பற்றப் புலியூரி லன்பினரன்பகன்றோ ரேனு, முறைபவர்க ளங்கவர்க்குத் தூரத்து மணித்திருந்து முதவத் தக்க நிறைவுபெறும் பொருளீவோர் சேயதேத யத்துறைந்து நிறைந்த செல்வப், பொறைமலியம் பலங்காணுங் காதலுடை யோரெம்மாற் போற்றுந் தொண்டர்.

(இ-ள்) அறையும் மறைப் பெரும் பற்றப் புலியூரில் அன்பினர் எனும் - முழங்குகின்ற வேதத்தையுடைய பெரும் பற்றப் புலியூராகிய சிதம்பரத்தினிடத்தில் அன்புடையவர்களாயிருந்தாலும்,—அன்பு அகன்றோர் எனும் - அன்பில்லாதவராயிருந்தாலும்,—அங்கு உறைபவர்கள் - அத்தலத்தில் வசிப்பவர்களும்,—தூரத்தும் அணித்தும் இருந்தும் அவர்க்கு உதவத் தக்க நிறைவு பெறும் பொருள் ஈவோர் - தூரத்திலிருந்தேனும் சமீபத்திலிருந்தேனும் அத்தலத்தில் வசிப்பவர்களுக்குக் கொடுக்கத்தக்க மிகுந்த திரவியங்களைக் கொடுப்போர்களும்,—சேய தேயத்து உறைந்து நிறைந்த செல்வப் பொறை மலி அம்பலம் காணும் காதல் உடையோர் - தூரதேசத்திலிருந்து நிறைந்த (அருட்) செல்வத்தின் பாரமிகுந்த தில்லையம்பலத்தைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவர்களுமாகிய இவர்கள்,—எம்மால் போற்றும் தொண்டர் - எம்மாற் றுதிக்கத்தக்க அடியாரவார்கள்.—எ. று. (க௯க)

எனும் என்பதை அன்பினர் என்பதனோடுங் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.

அடுத்தமணி யம்பலத்து ளானந்த தாண்டவஞ்செய் தருளுந் தாள்க, ளடுத்தபிறப் பிடையொருகாற் சென்ற

டைந்து கண்டுளோ ரென்றுங் கண்டோ, ரடுத்தவித் தல
ந்தன்னி னன்புளரன் பிலரே னு மாய்ந்து ளோர்கள், தடுத்த
கமை பெறவிளங்குங் கண்டத் தெம் மண்டர்பிரான் கணத்து
ளோரால்.

(இ-ள்) அடுத்தமணிஅம்பலத்துள் ஆனந்த தாண்டவஞ் செய்தருளும் தாள்கள்,—சமீபித்ததாகிய அழகிய கனகசபையினிடத்தே ஆனந்த தாண்டவஞ் செய்தருளாநின்ற திருவடிகளை,—எடுத்தபிறப்பிடை ஒரு கால் சென்று கண்டுளோர் - எடுத்த இப்பிறப்பில் ஒரு முறை போய்த்தரிசித்தவர்களும்,—என்றும் கண்டோர் - எப்பொழுதுந் தரிசித்தவர்களும்,—அடுத்த இத்தலம்தன்னில் மாய்ந்துளோர்கள்-அடைந்ததாகிய இச்சிதம்பர ஸ்தலத்தில் இறந்தவர்களும் (ஆகிய இவர்கள்),—அன்புளர் அன்பிலர் எனும் - அன்புடையவர்களாயிருந்தாலும் அன்பில்லாதவர்களாயிருந்தாலும் (அவர்கள்),— தகமை பெறக் கடுவிளங்கும் கண்டத்து எம் அண்டர் பிரான் கணத்துளோர் - தகுதியுண்டாக ஆலகாலம் விளங்குந் திருக்கண்டத்தை யுடைய எமது தேவநாயகனாகிய சிவபெருமானுக்குரிய கணத்தவர்களாவார்கள்.—எ. று. ஆல் அசை. (கருஉ)

அருவினைசெய் யாதீச னடியவர்பூ சனைதவறு தரன்
ருட் கன்பாய்த், திருநடங்கண் டவ்வுருவஞ் சிந்தனைசெய்
தருணமஞ் செப்பிச் சைவ, மருவருமந் திரம்போற்றிச் சிவ
ஞானத் துடன்றில்லை வைகி மாய்ந்தோ, ரொருமைதிக ழன்
பர்களி னுத்தமரி னுத்தமரென் றுரைக்கற் பாலோர்.

(இ-ள்) அருவினைசெய்யாது - அரிய தீவினைகளைச் செய்யாமல்,—ஈசன் அடியவர் பூசை தவறாது - சிவனடியார்களுக்குச் செய்யத்தகும் பூசையில் தவறாமல்,— அரன் தாட்கு அன்பாய் - அச்சிவபெருமானது திருவடியினிடத்து அன்புடையவராய்,—திரு நடம் கண்டு - திருநிருத்தத்தைத் தரிசித்து,—அவ்வுருவஞ்சிந்தனைசெய்து-அத்திருநிருத்தஞ் செய்தருளிய நடேசமூர்த்தியைத் தியானித்து,—அருள் நாமம் செப்பி - திருவருளைப் பாலிக்கின்ற திருநாமங்களையுச்சரித்து,—சைவம் மருவும் அரும் மந்திரம் போற்றி - சைவத்துக்குரிய அரிய மந்திரங்களைச் செபித்து,—சிவஞானத்துடன் தில்லை வைகி மாய்ந்தோர் - சிவஞானத்தோடு சிதம்பரத்திலிருந்து இறந்தவர்கள்,—ஒருமை திகழ் அன்பர்களின் - ஒருமைப்பாடு விளங்கிய அடியார்களுள்,—உத்தமரின் உத்தமர் என்று உரைக்கற் பாலோர் -

உத்தமர்களினும் உத்தமராவார்கள் என்று சொல்லுந் தன்மையுடையவராவார்.—எ. று. (கஅ௫)

யாமுரைத்த விம்மொழிக்கோ ரையமிலை யாமுன் கூறுந், தோமகன்ற வடையாள முடையோரை யடைந்தவர்பாற் றுணுக்க மெய்த, வேமமுறத் தண்டங்கள் புரிதலொழி வாயுன்ற னேவற் றூதர், தாமுணர வித்தகைமை தனிலொன்றுங் குறையாது சாற்று வாயால்.

(இ-ள்) யாம் உரைத்த இம்மொழிக்கு ஓர் ஐயம் இலை ஐயம் இலை-யாம் சொல்லிய இவ்வார்த்தைக்கு யாதொரு சந்தேகமுமில்லை, சந்தேகமுமில்லை,—யாம் முன் கூறும் தோம் அகன்ற அடையாளம் உடையோரை அடைந்து - (இயமனே,) நாம் முன் சொல்லிய குற்றமில்லாத அடையாளங்களுள்ள சிவனடியார்களிடம் நீ போய்ச் சேர்ந்து,—அவர்பால் துணுக்கம் எய்த - அவர்களிடத்து நடுக்கமுண்டாகும்படி,—ஏமம் உறத் தண்டம் புரிதல் ஒழிவாய் - துன்பமுண்டாகும்படித் தண்டனைகள் செய்தலைவிட்டு விடக்கடவாய்,-உன்றன் ஏவல் தூதர்தாம் உணர இத்தகைமைதனில் ஒன்றும் குறையாது சாற்றுவாய் - உனது ஏவலைச் செய்கின்ற தூதர்கள் அறிந்து நடக்கும்படி இவ்வடியவர்களுடைய தன்மைகள் ஒன்றுந் தவறாமல் நீ சொல்லக்கடவாய்.—எ. று. ஆல் அசை. (கஅ௬)

பரவுபல சாதிகள்பல் லாச்சிரமத் தோர்மறையைப் பழித்து ளோர்கள், விரவருநாய்க் கெடுத்திடுவோர் பதிதரிழி குலத்தர்முதல் வியன் பசுக்க, ளரவுபுழுக் கரங்கருமாப் பாதவஞ்சூர் கொடிபுன்கூ ழாதி தில்லைத், தரைமருவு சராசரந்தீ வினையுடைய வெனினுநீ சார்வா யல்லை.

(இ-ள்) பரவு பல சாதிகள் - (உலகத்தில்) விரிந்திருக்கின்ற பல சாதியர்களும்,—ஆச்சிரமத்தோர் - பல ஆச்சிரமத்தவர்களும்,—மறையைப் பழித்துளோர்கள் - வேதங்களை நிந்தித்தவர்களும்,—விரவரும்நாய்க்குஎடுத்துஇடுவோர்- கிட்டற்கரியநாய்களுக்கு (உணவு) எடுத்து இடுபவர்களும்,—பதிதர் - பிரஷ்டர்களும்,—இழிகுலத்தோர்முதல் - தாழ்ந்த சாதியார் முதலானவர்களும்,—வியன் பசுக்கள் - பெரிய பசுக்களும்,—அரவு - சர்ப்பங்களும்,—புழு - புழுக்களும்,—கரம் - கழுதைகளும்,—கருமா - பன்றிகளும்,—பாதவம் - விருக்ஷங்களும்,—சூர் கொடி - மிளகுக் கொடிகளும்,—புன் கூழ் ஆதி - சிறிய பயிர் முதலானவைகளு மாகிய, — தில்லைத்தரை மருவு சரம் அசரம் - தில்லை வனமாகிய சிதம்பரபூமியிற் பொருந்

திய சரம் அசரம் என்னும் பொருள்கள் - தீவினை உடைய எனினும் - பாவங்களைச் செய்தனவா யிருந்தாலும்,—நீ சார்வாய் அல்லை - நீ அவைகளிடத்துச் சாராதே.—எ. று. (கஙரு)

அத்தகைய தேதென்று வினவுதியேற் றில்லையிடத் தியாரும் யாவு, மெய்த்தகைய சிவனுருவாய் விளங்குவர்கள் பரமனுக்கு மிக்க நேசப், பத்தரிவை கொண்டியானு மரியயரும் விண்ணோரும் பணியத் தக்கோர், மொய்த்தமிட லோயுன்றற் றீண்டரியர் தூதர்க்கு மொழிவா யென்றான்.

(இ-ள்) மொய்த்த மிடலோய் - பொருந்திய வலிமையை யுடைய இயமனே,—அத்தகையது எது என்று வினவுதியேல் - (நீ அவர்களுக்கு) அப்படிப்பட்டதகுதி எவ்வாறுண்டாயிற் றென்று கேட்பாயாயின், (சொல்லுதும்),—தில்லை இடத்து யாவரும் யாவும் மெய்த் தகைய சிவன் உருவாய் விளங்குவர் - அத்தில்லை வனமாகிய சிதம்பரத்தில் வசிக்கின்ற எவர்களும் எவைகளும் உண்மையாகிய தகுதிபொருந்திய சிவசாரூபமாகவே விளங்குவார்கள்,—பரமனுக்கு மிக்க நேசப் பத்தர் - சிவபெருமானுக்கு மிகுந்த விருப்பத்தை யுடைய அடியாராவர்கள்,—இவை கொண்டு - இக்காரணங்களைக் கொண்டு,—யானும் அரி அயரும் விண்ணோரும் பணியத் தக்கோர் - (அவ்வடியார்கள்) என்னாலும், விஷ்ணு மூர்த்தியினாலும், பிரமதேவராலும், தேவர்களாலும் வணங்கப்படத் தக்கவராவார்கள்,—தூதர்க்கும் மொழிவாய் என்றான் - (ஆதலினால்) உனது தூதர்களுக்கும் இதனைச் சொல்லுவாயாக என்று (திருநந்தி தேவர்) திருவாய் மலர்ந்தருளினார்.—எ. று. (கஙசு)

அருளுடையா னணிக்கைலைக் கோயினா யகஞ்செய்யு மண்ணல்பாசத், திருளுடையக் கருணைபொழி நந்திவா னவன்மொழிகேட் டிதயந் தன்னின், மருளுடைய வணங்கிடைக் கொண் டங்ஙனநின் றுறையுமையாண் மணாளற் போற்றித், தெருளுடைய விறன்மறலி தூதரொடுந் தனதுலகஞ் சென்று சேர்ந்தான்.

(இ-ள்) அருள் உடையான் அணிக் கைலைக் கோயில் நாயகம் செய்யும் அண்ணல் - கிருபையையுடைய சிவபெருமான் எழுந்தருளியிராநின்ற திருக்கைலாச மலையிலுள்ள திருக்கோயிலில் முதன்மைத் தொழில் செய்கின்ற தலைவரும்,—பாசத்து இருள் உடையக் கருணை பொழி நந்திவானவன் மொழி - (ஆன்மாக்களைப்பந்தித்திருக்கின்ற) பாசமாகிய இருள் கெடும்படி கிருபையாகிய (வெயிலை) வீசுகின்ற

திருநந்திதேவருடைய வார்த்தையை,--தெருள் உடைய விறல்மறலி கேட்டு - தெளிவையுடைய வெற்றிபொருந்திய இயமன் கேட்டு,-- இதயம் தன்னில் மருள் உடைய அணங்கு இடைக்கொண்டு - தம் மனதில் மயக்கத்தையுடைய துன்பதத்தைக் கொண்டு,—அங்ஙனம் நின்று-அவ்விடத்திலிருந்து,—உறை உமை மணாளன் போற்றி-அங்கெழுந்தருளியிரா நின்ற உமாதேவி நாயகராகிய சிவபெருமானைத் தோத்திரஞ்செய்து கொண்டு,—தூதர் ஓடும் தனது உலகம் சென்று சேர்ந்தான் - தூதர்களோடும் (இயமன்) தனதுலகத்திற் போய்ச் சேர்ந்தான்.—எ. று. (௧௱எ)

சிந்தைமகி ழன்புடைய சைமினிவ துன்மதன்றன் செய்கை மிக்க, மந்தணமீங் கிதுநினக்கு வகுத்துரைத்தோ மாதலான் மன்றுளாடு, மந்தமிலான் பதங்கண்டோர் சிவகதியை யடைகுவரென் றறைந்தா னென்றான், சந்தநெறி மறைநூலைத் தலைக்கண்டிங் குலகளித்த தவத்தோர் சிங்கம்.

(இ-ள்) சிந்தை மகிழ் அன்பு உடைய சைமினிவ - மனமகிழத் தக்கஅன்பையுடையசைமினிமுனிவனே,—சந்தநெறிமறை நூலைத் தலைக்கண்டு இங்கு உல்கு அளித்த தவத்தோர் சிங்கம் - இசை வழியாகப் பொருந்திய வேதங்களின் முடிவைக் கண்டறிந்து (அவ்வேதங்களை நான்காக) வகுத்தருளிய தவத்தையுடைய முனிவர்களுக்குள் ஆண்சிங்கம் போன்றவராகிய வியாசமுனிவர்,— துன்மதன்றன் செய்கை மிக்க மந்தணம் - துன்மதனுடைய செய்கை மிகுந்த இரகசியமானது,—ஈங்கு இது நினக்கு வகுத்து உரைத்தோம் - இப்பொழுது இதனை உனக்கு வகுத்துச் சொன்னோம்,—ஆதலால் - ஆகையால்,—மன்றுள் ஆடும் அந்தம் இலான் பதம் கண்டோர் சிவகதியை அடைகுவர் என்று அறைந்தான் என்றான் - கனகசபையினிடத்தே திருநிருத்தஞ் செய்தருளாநின்ற முடிவில்லாதவராகிய நடேசப்பெருமானது திருவடிகளைத் தரிசித்தவர்கள் மோக்ஷத்தை யடைவார்களென்று (வியாசமுனிவர்) சொல்லி யருளினரென்று சூதமுனிவர் சொல்லினர்.—எ. று. (௧௱அ)

துன்மதச்சருக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

பாயிரமுள்பட சருக்கம் ௲-க்கு திருவிருத்தம் (௨௱௪.)

உ

திருச்சிற்றம்பலம்.

# மூன்றாவது

# துச்சகச் சருக்கம்.

பற்றொ ணாக்கதி பற்றிய துன்மத
னற்ற வச்சரி தத்தை நவிற்றினஞ்
சொற்ற தீவினைத் துச்சகன் முத்தியி
னுற்ற வாறிங் குரைக்கலுற் றாமரோ.

(இ-ள்) பற்று ஒணாக் கதி பற்றிய துன்மதன் நல் தவ சரிதத்தை நவிற்றினம் - அடைதற்கரிதாகிய மோக்ஷத்தை யடைந்த துன்மதனுடைய நல்ல தவம்பொருந்திய சரித்திரத்தைச் சொன்னோம்,- சொற்ற தீவினைத் துச்சகன் முத்தியின் உற்றவாறு இங்கு உரைக்கல் உற்றாம் - சொல்லப்பட்டபாவச் செய்ல்களையுடைய துச்சகன் முத்தியடைந்த சரித்திரத்தை இனி உங்களுக்குச் சொல்லுவாம்.—எ. று. அரோ அசை. (௧)

சொன்ன மாக்கதை கேட்டுத் துளக்கிய
சென்னி மாதவன் சிந்தையிற் பேரரு
டன்னை நோக்கித் தாபதர் சேகர
னின்ன மோர்கதை கேளென் றியம்புவான்.

(இ-ள்) சொன்ன மாக் கதை கேட்டுச் சென்னி துளக்கிய மாதவன் சிந்தையிற் பேர் அருள் தன்னை நோக்கி - சூதமுனிவராற் சொல்லப்பட்ட பெரி சரித்திரங்களைக் கேட்டுச் சிரக்கம்பஞ் செய்த சைமினிமுனிவருடைய மனதிற் பொருந்திய பெரிய கிருபையைப்பார்த்து,—தாபதர் சேகரன் இன்னம் ஓர் கதை கேள் என்று இயம்புவான் - முனிவர்களுக்குத் தலைவராகிய சூதமுனிவர் இன்னும் ஓர் சரித்திரஞ் சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சொல்லத் தொடங்குகின்றார்.—எ. று. (௨)

துன்று ஞானச் சுடருரு வங்கொடு
மன்று ளாடு மலர்ப்பதங் கண்டவ

ரன்றியுந் தில்லை யம்பல வெல்லையிற்
பொன்றி னோரும் பொருந்துவர் முத்தியே.

(இ-ள்) துன்றும் ஞானச் சுடர் உருவம் கொடு மன்றுள் ஆடும் மலர்ப்பதம் கண்டவர் - பொருந்திய ஞானமயமாகிய சோதிசொரூபங் கொண்டு கனக சபையினிடத்தில் ஆனந்த தாண்டவஞ் செய்தருளா நின்ற நடேசப்பெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தரிசித்தவர்களும்,—அன்றியும் தில்லை அம்பல எல்லையில் பொன்றினோரும் - அதுவல்லாமலும் தில்லையம்பலமாகிய சிதம்பரத்தினது எல்லையில் இறந்தவர்களும்,— முத்தி பொருந்துவர் - மோக்ஷத்தையடைவார்கள்.—எ. று. ஏ அசை. (௩)

அறந்த வாநெறி யாயைய மில்லையாற்
றுறந்த பாசச் சுருதிப் பரம் பொருள்
சிறந்த வாழ்வுடைத் தில்லையி னெல்லைவா
யிறந்து ளோர்முத்தி யெய்தின ரெண்ணிலோர்.

(இ-ள்) அறம் தவா நெறியாய் - தருமங்களினின்றுந் தவறாத சன்மார்க்கத்தையுடைய சைமினியே,—பாசம் துறந்த சுருதிப்பரம் பொருள் சிறந்து வாழ்வுடைத் தில்லையின் எல்லை வாய் - பாசம் நீங்கிய வேதத்திற் சொல்லிய பரம் பொருளாகிய நடேசப்பெருமான் சிறப்போடெழுந்தருளியிராநின்ற சிதம்பரத்து எல்லையில்,—இறந்துளோர் எண் இலோர் முத்தி எய்தினர் - இறந்தவர்களனேகர்கள் மோக்ஷத்தை யடைந்தார்கள்;—ஐயம் இல்லை - இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை.—எ. று. ஆல் அசை. (௪)

ஆய்ந்த மாமறை யம்பல வெல்லையின்
மாய்ந்து ளோனொரு வன்றெய்வ மாதவ
வேந்தர் போற்ற விளங்குஞ் சிவபதஞ்
சேர்ந்த நற்செயல் செப்புவன் கேட்டியால்.

(இ-ள்) ஆய்ந்த மாமறை அம்பல எல்லையில் மாய்ந்துளோன் ஒருவன் - ஆராயப்பட்ட பெருமை பொருந்திய வேதங்கள் முழங்குகின்ற சிதம்பரத்தினது எல்லையில் இறந்தவனாகிய ஒருவன்,—தெய்வ மாதவ வேந்தர் போற்ற - தெய்வத்தன்மை பொருந்திய பெரிய தவசிரேஷ்டர்களாகிய முனிவர்கள் துதிக்கும்படி,—விளங்கும் சிவபதம் சேர்ந்த நல் செயல் செப்புவன் கேட்டி - விளங்கு

கின்ற சிவபதத்தில் அடைந்த நல்ல சரித்திரத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக.—எ. று. ஆல் அசை. (ரு)

தொலைவி லாத வினையைத் துகள்செயு
முலக முந்தவத் தோர்களு மும்பருங்
கலைஞ ரும்புகழ் காவிரி மாநதித்
தலைவி ளங்குந் தனிச்சைய மால்வரை.

(இ-ள்) தொலைவு இலாத வினையைத் துகள் செயும் உலகமும் தவத்தோர்களும் உம்பரும் கலைஞரும் புகழ் - நீங்குதலில்லாத வினைகளைத் துகள் செய்கின்ற உயர்ந்தோர்களும் முனிவர்களும் தேவர்களும் புலவர்களும் புகழத்தக்க,—மா காவிரி நதித் தலை - பெருமை பொருந்திய காவிரி யாற்றினது தலைப்பில்,—தனிமால் சையவரை விளங்கும் - ஒப்பற்ற பெருமை பொருந்திய சையகிரியானது விளங்கிக்கொண்டிருக்கின்றது.—எ. று. (சு)

கரியை யீரு மரியின் கணங்களு
மெரியு நெஞ்சத் தெயினர் குழாங்களும்
விரி கதிர்ச்சுடர் மேவருங் கானமுந்
தெரியின் மிக்குள செப்பிய வக்கிரி.

(இ-ள்) செப்பிய அக்கிரி - சொல்லப்பட்ட அச்சையகிரியினிடத்தே,—கரியை ஈரும் அரியின் கணங்களும் - யானைகளைக் கிழிக்கின்ற சிங்கக்கூட்டங்களும்,—எரியும் நெஞ்சத்து எயினர் குழாங்களும் - எரிகின்ற மனத்தையுடைய வேடர்கூட்டங்களும்,—விரி கதிர்ச் சுடர் மேவரும் கானமும் - விரிந்த ஒளிபொருந்திய அக்கினியையுடைய காடுகளும்,—தெரியின் மிக்கு உள - ஆராய்ந்து பார்க்குமிடத்து மிகுதியாக இருக்கின்றன.—எ. று. (எ)

அக்கிரிக்க ணமர்ந் துறைவோ னெடுந்
தொக்க வல்வினைத் துச்சக னிச்சகத்
தெக்கொ லைத்தொழி லேனு மியற்றிடத்
தக்க வஞ்சச் சவரர்கு லத்துளோன்.

(இ-ள்) அக்கிரிக்கண் அமர்ந்து உறைவோன் - அந்தச் சைய கிரியினிடத்தே இருக்கின்றவனாகிய,—நெடும் தொக்க வல்வினைத் துச்சகன் - பெரிய கூட்டமாகிய வலிய தீவினைகளைச் செய்கின்ற துச்சகன்,—இச்சகத்து எக் கொலைத் தொழிலேனும் இயற்றிடத்

தக்க வஞ்சச் சவரர் குலத்து உளோன் - இப்பூமியினிடத்து எப்ப பட்ட கொலையாயிருந்தாலும் அதனைச் செய்து முடிக்கத் தக்க வஞ்சகத்தையுடைய வேடர் குலத்திற் பிறந்தவன்.—எ. று. (அ)

செய்த வத்திற னோடறந் தீய்த்தெழு
வெய்தின் மிக்க வடவை மிகுங்கொலைப்
பெய்து லாவும் பெரும்புயல் விஞ்சிய
கைத வம்பெரு குங்கடல் போன்றுளான்.

(இ-ள்) செய் தவத் திறன் ஓடு அறம் தீய்த்து எழு மிக்க வெய்தின் வடவை - செய்யப்பட்ட வலிய தவத்தோடு தர்மங்களையுந் தகித்து எழுகின்ற மிகுந்த கொடுமையாகிய வடவாமுகாக்கினியினாலும்,—மிகும் கொலைப் பெய்து உலாவும் பெரும் புயல் - மிகுந்த கொலையாகிய மழையைப் பெய்து உலாவுகின்ற பெரிய மேகத்தினாலும்,—விஞ்சிய கைதவம் பெருகுங் கடல் போன்றுளான் - மிகுந்த பாவங்களாகிய வெள்ளம் பெருகுகின்றமையாலும் சமுத்திரத்தை யொத்தவன்.—எ. று. (கூ)

கோல மாயக் கொடியோன் கொடுமையாற்
காலன் மாதவர் போல்வன் கனல்சொரி
பால நேத்திரன் முன்னம் பருகிய
வால கால மமிர்த நிகர்க்குமால்.

(இ-ள்) கொடியோன் கோல மாயக் கொடுமையால் காலன் மாதவர் போல்வன்-அக்கொடிய துச்சகனானவன்எடுக்கின்ற வடிவங்களினது தந்திரத்தினாலும் கொடுமையினாலும், இயமனையும் முனிவர்களையும் ஒப்பாவன்,—கனல் சொரி பால நேத்திரன் முன்னம் பருகிய ஆலகாலம் அமிர்தம் நிகர்க்கும் - (அவன் செய்கையானது) அக்கினியைக்கக்கு கின்ற நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் முன்னே உண்டருளிய விஷத்தையும் (பின் தோன்றிய) அமிர்தத்தையும் ஒத்திருக்கும்.—எ. று. ஆல் அசை. (கய)

உன்ன ருங்கொடி யோரி னுயர்ந்தவன்
றன்னி யற்கை தனையித் தராதலத்
தின்ன வாறென யாவர்க்கு மாதவ
முன்ன ரன்பின் மொழிந்தன மில்லையால்.

(இ-ள்) மாதவ - பெரிய தவத்தை யுடைய சைமினியே,— உன்னரும் கொடியோரின் உயர்ந்தவன் தன் இயற்கைதனை - நினைத்தற்கரிய கொடியவர்களினு மேம்பட்ட துச்சகனுடைய தன்மையை,—இத் தராதலத்து - இப்பூமியினிடத்தில்,—இன்னவாறு என - இத்தன்மையை யுடையதென்று,—யார்க்கும் முன்னர் அன்பின் மொழிந்தனம் இல்லை - எவர்களுக்கும் முன்னே (நாம்) அன்போடு சொன்னோ மில்லை.—எ. று. ஆல் அசை. (கக)

எல்ல வர்க்கு மியம்பரி தன்றியு
மொல்லை கேட்க வுறாதது கேட்பினுந்
தொல்லை வல்வினைத் துச்சகப் பேரினு
லல்லன் மல்கிய வச்ச மளித்திடும்.

(இ-ள்) எல்லவர்க்கும் இயம்ப அரிது - எல்லாருக்குஞ்சொல்லுதற்கரியது,—அது அன்றியும் ஒல்லைகேட்க உறாது - அதுவல்லாமலுஞ் சீக்கிரங் கேட்கவுமுடியாது;—அது கேட்பினும் - அதைக் கேட்டாலும்,—தொல்லை வல்வினைத் துச்சகப் பேரினுல் - பழைய வலிய வினைகளையுடைய துச்சகன் என்னும் பெயரினாலேயே,— அல்லல் மல்கிய அச்சம் அளித்திடும் - துன்பநிறைந்தபயத்தைக் கொடுக்கும்.—எ. று. (கஉ)

செல்லு நீணெறி செல்லா நெறியிதென்
றல்லல் கூறி யருந்துணை போனடந்
தெல்லையான விடத்தவர் கைப்பொரு
ளொல்லை கொண்டங் கொளிக்கு மியல்பினேன்.

(இ-ள்) செல்லும் நீள் நெறி செல்லா நெறி இது என்று அல்லல் கூறி - யாவரும் நடக்கும் வழி இது யாவரும் நடக்காத வழி இது என்று அதனது துன்பத்தையும் எடுத்துச் சொல்லி,— அரும் துணை போல் நடந்து - (வழியிற்போகின்றவர்களுக்கு) அரிய துணை போலத் தானுங் கூடப்போய்,—எல்லையான இடத்து அவர் கைப் பொருள் ஒல்லை கொண்டு - (அவர்கள் தங்குதற்குரிய) எல்லையாகிய இடத்தில் (தானுங்கூடத் தங்கி) அவர்கள் கையிலுள்ள பொருளைச் சீக்கிரம் அபகரித்துக் கொண்டு,—அங்கு ஒளிக்கும் இயல்பினேன் - அவ்விடத்தில் ஒளித்துக் கொள்ளுந் தன்மையையுடையவன்.—எ. று. (கங)

பிணியு ளோனெனைப் பேணுமென் றியாவருந்
துணியு மாறு நடித்தனன் சொற்சொலா

வணிகர் போல வமர்ந்தணி யாடைக
டணிய வஞ்சந் தனிற்கொண் டகல்வனால்.

(இ-ள்) பிணி உளேன் எனைப் பேணும்என்று யாவரும்தணியுமாறு நடித்தனன் - (அத்துச்சகன்) நான் வியாதி யுள்ளவன் என்னைக் காப்பாற்றுங்கள் என்று சொல்லி யாவரும் நம்பும்படி நடித்தவனாய்,—சொல் சொலா அணியர் போல அமர்ந்து - இன் சொற்களைச் சொல்லிச் சமீபத்திலிருப்பவர்போலிருந்து,—தணிய அணி ஆடைகள் வஞ்சம் தனில் கொண்டு அகல்வான் - அவர்கள் சோர்ந்திருக்குஞ் சமயம் பார்த்து அவர்களுடைய ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் மோசமாக அபகரித்துக் கொண்டு போவான்.—
எ. று. ஆல் அசை. (கச)

கொற்ற வாளிகள் கோதண்டங் கொண்டழல்
துற்ற வெஞ்சுரந் தோற்றித் தனிநெறி
யுற்ற போதி னுயிருடன் கைப்பொருள்
செற்று வாங்கிச் செருக்குந் திறலினன்.

(-ள்) கொற்ற வாளிகள் கோதண்டம் கொண்டு - வெற்றி பொருந்திய பாணங்களையும் வில்லையுங் கையிற் கொண்டு,—அழல் துற்ற வெம் சுரம்தோற்றி- உஷ்ணம் பொருந்திய கொடிய சுரவழியிற் போய்,—தனி நெறி உற்ற போதின்- (யாவராயினும்) வழியிற்றனித்து வருங்காலத்தில்,— உயிருடன் கைப்பொருள் செற்று வாங்கிச் செருக்குந் திறலினேன் - அவர்கள் உயிரோடு பொருளையும் வருத்தி அபகரித்துக் கொண்டு அதனால் செருக்கடைகின்ற வலிமையை யுடையவன்.—எ. று. (கடு)

## வேறு.

புரிநூற் சிகையுத் தரிகமுடைப் பொலிய மறையோர் வேடங்கொண், டருநூன் மறையோர் பாலதிதி யவரோ டடிசிலருந்திவழி, வருநீர் மையினு லிளைத்தோர்போல் வைகியெல்லின் மனைவளங்க, ளொருநீர் மையிற்பார்த் திரவினெடுத் தொளிக்குங் களவை யுரைப் பாரார்.

(இ-ள) புரிநூல் சிகை உத்தரிகம் உடைப் பொலிய மறையோர் வேடம் கொண்டு - பூணநூலும் சிகையும் உத்தரீக உடையும் விளங்குகின்ற பிராமண வேடம் பூண்டு,—அருநூல் மறையோர்

பால் அதிதியவரோடு அடிசில் அருந்தி - அருமையாகிய சாஸ்திரங்களேயும் வேதங்களேயு மறிந்த பிராமணர்களிடத்திற் போய் விருந்தினரோடு தானும் போசனஞ் செய்து,—வழி வரும் நீர்மையினல் இளைத்தோர்போல் வைகி - வழிநடந்து வருகின்ற தன்மையினல் இளைப்புடையவர்போல் தங்கி,—எல்லில்மனைவளங்கள் ஒரு நீர்மையில் பார்த்து - பகற்காலத்தில் அப்பிராமணருடைய வீட்டிலுள்ள செல்வங்களை ஒரு விதமாகப் பார்த்து,—இரவில் எடுத்து ஒளிக்கும் களவை உரைப்பார் யார் - இராத்திரியில் (அத்துச்சகன்) எடுத்து மறைக்குந் திருட்டை எடுத்துச் சொல்ல வல்லவர்கள் யாவர்.—எ. று. (கசு)

அழிந்த வேந்த னொருவன்சே யாக வியம்பிக் கண்கணீர்,
வழிந்து சோர நெட்டுயிர்த்து வாடி மனித்த ருளர்முன்னங்,
கழிந்த செல்வம் வரும்வந்தா னாட்டோர் கைக்கொண் டுய்ப்பரென,
மொழிந்து தங்கு மிடத்துள்ள வெடுத்த களவு முடிவுண்டோ.

(இ-ள்) அழிந்த வேந்தன் ஒருவன் சேயாக இயம்பி - அத்துச்சகன் (ஓர் தேசத்து அரசனிடத்துப் போய்ச்சேர்ந்து) தன்பகையரசனல் நாடு நகர முதலியவற்றை) இழந்த ஒரு இராஜகுமாரன் நான் என்று சொல்லி,—கண்கள் நீர் வழிந்து சோர - கண்களிலிருந்து நீரானது வழிந்து சொரிய,—நெட்டுயிர்த்து வாடி - பெருமூச்சுவிட்டு வாடி,—முன்னம் கழிந்த செல்வம் வரும் மனிதர் உளர் - முன்னமே கெட்டுப்போன (எனது நாடு நகர முதலிய) செல்வங்களைத்திரும்பிவரும்படிச்செய்கின்றமனிதர்களிருப் பார்களாயின்,—வந்தால் நாட்டு ஓர் கைக்கொண்டு உய்ப்பர் என மொழிந்து - (அவர்கள் அப்பொருள்களைத் திருப்பிக் கொண்டு) வந்தால் அந்நாட்டில் ஓர் பாகத்தை (அவர்கள்) எடுத்துக்கொண்டு மற்றைப் பாகத்தை எனக்குக் கொடுக்கக்கடவர்கள் என்றுசொல்லி,—தங்கும் இடத்து உள்ள எடுத்த களவு முடிவு உண்டோ - தான் (ஆதரவாகத்) தங்கியிருந்த (அவ்வரசனிடத்தில்) உள்ள பொருள்களை அபகரித்துக்கொண்ட களவுக்கு ஓர்எல்லை இல்லை.—எ. று. (கஎ)

முன்னங் காவின் வருமணியும் விற்க முயல்வணிக,
ரென்ன வணுகிக் கொள்வோர்போ லுள்ள தெல்லாம் வினவியவர்,
தன்னை நட்பி னிடைப்படுத்தித் தகுதி பாவித் தங்குள்ள,
பொன்னு மணியு முளகளவு புரியுஞ் செயலோ தரிதரிதால்.

(இ-ள்) முன்னம் கரவின் வரும் மணியும் பணியும் விற்க முயல் வணிகர் என்ன அணுகி-துச்சகனென்பவன் ஒருவணிகனிடத்திற் போய் முன்னமே திருட்டினால் கிடைத்த இரத்தினங்களையும், ஆபரணங் களையும் விற்க முயற்சி செய்கின்ற வைசியர்கள் போல் சேர்ந்து,— கொள்வோர் போல் உள்ளது எல்லாம் வினவி - வாங்குகின்ற வரை ப்போல் இருக்கின்ற பொருள்களெல்லாவற்றையுங் கேட்டு,—அவர் தம்மை நட்பின் இடைப் படுத்தி - அப்பொருள் வைத்திருக்கின் றவர்களைத் தன் சினேகத்துக்குள் அகப்படுத்தி,—தகுதி பாவித்து - அவர்களைத் தகுதியாகப் பாவித்து,—பொன்னும் மணியும் உள களவு புரியும் செயல் ஓது அரிது அரிது - அங்குள்ள பொன்னும் இரத்தினங்களுமா யுள்ளனவற்றைத் திருடுகின்ற திருட்டைச் சொல்லுதல் மிகவும் அருமையாக இருக்கின்றது.—எ. று. ஆல் அசை. (கஅ)

வித்திங் குளவோ வேருளவோ விலைக்கு வேந்தர் கொடுங் கோலா, லெய்த்திங் கடைந்தே னின்னவூ ரின்னார் வகையு ளேனென்று, சித்தங் கரைய வேளாளர் திறம்போ லொழுகி நண்புடையோர், வைத்த பொருள்க ளெடுத்தொளிக்கும் வஞ்ச முரைக்க வல்லாரார்.

(இ-ள்) விலைக்கு இங்கு வித்து உளவோ ஏர் உளவோ - அத்துச்சகன் (ஒருவேளாளனிடத்திற்போய்) விலைக்கு இவ்விடத் தில் விதையகப்படுமோ ஏர் அகப்படுமோ? என்றும்,—வேந்தர் கொடுங் கோலால் எய்த்து இங்கு அடைந்தேன் - (எனது ஊரை ஆளுகின்ற) அரசரது கொடுங் கோலால் இளைத்து இவ்விடம் வந்து சேர்ந்தேன் என்றும்,—இன்ன ஊர் இன்னார் வகை உளேன் என்று - நான் இன்னவூர் இன்னாருடைய வகுப்பைச் சேர்ந்தவன் என்றுஞ் சொல்லி,—சித்தம் கரைய வேளாளர் திறம் போல் ஒழுகி - மனமுருகும்படி வேளாளர்களுடைய செய்கையைப் போல் நடந்து,—நண்பு உடையோர்வைத்த பொருள்கள் எடுத்து ஒளிக்கும் களவை உரைக்க வல்லார் ஆர் - தனக்குச் சினேக மாயுள்ளவர்கள் வைத்திருந்த பொருள்களை எடுத்து மறைக்குந் திருட்டை எடுத்துச் சொல்லவல்லவர்கள் யாவர்.—எ. று. (கக)

அறங்கள் புரியுந் தீவினைநோய்க் கஞ்சு நெஞ்சத் தருள் கூரு, மறங்க டவிரு மெனமுனிவர் வடிவா லுண்டி தவிர்

விரத, முறங்க லின்றி யாற்றியுறைந் துடைய மனையிற் பொருள்கவர்ந்து, கறங்கு போல விரைந்தகன்ற களவு புகலிற் கரையுளவோ.

(இ-ள்) அறங்கள் புரியும் தீவினை நோய்க்கு அஞ்சும் அருள் கூரும் மறங்கள் தவிரும் என முனிவர் வடிவால் - (அத்துச்சகன்) தருமங்களைச் செய்கின்றவர்களுந் தீவினையாகிய நோய்க்குப் பயப்படுகின்றவர்களும், கிருபை மிகுந்தவர்களும், பாவங்களை நீக்குகின்றவர்களும் என்று சொல்லப்பட்ட முனிவர் வேடங் கொண்டு,— உண்டி தவிர் விரதம் உறங்கல் இன்றி ஆற்றி - போசனத்தை நீக்குகின்ற உபவாசவிரதத்தை நித்திரை யில்லாமற் செய்து,— உறைந்து உடைய மனையிற் பொருள் கவர்ந்து - தான் வசித்துக் கொண்டிருந்த வீட்டிலுள்ள பொருள்களை அபகரித்து,—கறங்கு போல் விரைந்து அகன்ற களவு புகலில் கரை உளவோ - கற்றாடியைப் போல் சுழன்று சீக்கிரம் அவன் செய்த பெரிய களவை எடுத்துச் சொல்லுமிடத்து அதற்கு ஓர் அளவுண்டோ? இல்லை.—எ. று.(உ௦)

தலமா லிகந்த துறவினர்போற் றண்ட முண்டந் தயங்க நிலம், வலமா யினநற் பதியுளது வணங்கப் பெற்றேன் தீர்த் தத்தின், குலமா டினனிங் கோரொடுக்கங் கொடுத்தா லிருப்பே னெனவுறைந்தங், கலமா மனையோ ருறத்தனங்கள் கவருஞ் செயலோ வறைவரிதால்.

(இ-ள்) தலம் மால் இகந்த துறவினர் போல் - (அத்துச்சகன்) மண்ணாசைமுதலிய ஆசை நீங்கிய சந்நியாசிகள் போல்,—தண்டம் முண்டம் தயங்க - தண்டமும் முண்டிதமும் விளங்கும்படி வேடம் பூண்டு,—நிலம் வலமாய் - பூப்பிரதக்ஷிணமாய் வந்து,—இனம் நற் பதி உளது வணங்கப் பெற்றேன் - கூட்டமாகிய புண்ணிய க்ஷேத்திரங்களா யுள்ளனவற்றை வணங்கி வந்தேன்,--தீர்த்தத்தின் குலம் ஆடினேன் - கூட்டமாகிய புண்ணிய தீர்த்தங்க ளெல்லாவற்றினும் ஸ்நானஞ் செய்தேன்;—இங்கு ஓர் ஒடுக்கங் கொடுத்தால் இருப்பேன் என உறைந்து - இவ்விடத்தில் ஒரு இருப்பிடங்கொடுத்தால் வசித்துக்கொண்டிருப்பேன் என்று சொல்லி அவர்கள் வீட்டிலிருந்து,— அம் கலம் மாமனையோர் உற - அழகிய ஆபரணங்களையுடையபெரிய வீட்டினர் இருக்க,—தனங்கள் கவரும் செயலோ அறைவ அரிது - (அவர்கள் அறியாமல் அவ்வீட்டிலுள்ள) திரவியங்களைத் திருடுஞ் செய்கையோ ஒருவராலுஞ் சொல்ல முடியாது.—எ. று. ஆல் அசை. (உக)

களவோ கொலையோ வஞ்சகமோ கருதி யுரைக்கி லிவன்
புரிந்த, தளவோ வில்லை யென்சொல் கேமந் தோநல் வினைக,
ளுளவோ யாது மிலைக்குறவ ருடைய மகளி ரெயிறுநறுந்,
தளவோ டிகலுஞ் சையகிரி தன்னி னின்ன தகையுறைநாள்.

(இ-ள்) கருதி யுரைக்கில் - நினைத்துச் சொல்லு மிடத்து,—
களவோ கொலையோ வஞ்சகமோ இவன்புரிந்தது அளவோ இல்லை -
களவு கொலை வஞ்சகம் என்பவைகளில் இத்துச்சகன் செய்த
தற்கு ஓர் அளவு மில்லை;—அந்தோ என் சொல்கேன் - ஐயோ !
ஐயோ !! இதற்கு நான் என்ன சொல்லுவேன்;—நல்வினைகள் உள
வோ யாதும் இலை - (இவன் ஏதேனும்) ஒருபுண்ணியங்கள் (செய்த)
துண்டோ ? ஒன்றுமில்லை;—குறவருடைய மகளிர் எயிறு நறும் தள
வோடு இகலும் சையகிரி தன்னில் - வேடுவப் பெண்களுடைய
பற்கள் வாசனை பொருந்திய முல்லையரும்புகளோடு பகை கொள்
ளத்தக்க சையகிரியினிடத்தில்,—இன்ன தகை உறையும் நாள் -
(அத்துச்சகன்) இத்தன்மையாக வசித்துக் கொண்டிருக்கும் நாளில்.
எ. று. (உஉ)

எந்தத் தவங்கண் முயன்றாலு மெந்தக் கருமம் புரிந்
தாலு, மந்தக் கொடிய தீவினையை யாற்றற் கெளிதோ
வாய்ந்துணர்ந்து, சிந்தைக் கினியோர் துயரொழிக்குந் திறனே
போல வாங்கவனை, முந்தைத் திகழ்நல் வினைமுயங்க விளைந்த
செய்கை மொழிகின்றாம்.

இ-ள்) எந்தத் தவங்கள் முயன்றாலும் - எத்தன்மை யாகிய
தவங்களைச் செய்தாலும்,—எந்தக் கருமம் புரிந்தாலும் - எத்தன்மை
யாகிய கருமங்களைச் செய்தாலும்,—அந்தக் கொடிய தீவினையை
ஆற்றற்கு எளிதோ - (அத்துச்சகன் செய்த) அக்கொடிய பாவங்கள்
பொறுத்தற் கெளியதோ?—ஆய்ந்து உணர்ந்து - அவைகளை ஆராய்
ந்தறிந்து,—சிந்தைக்கு இனியோர் துயர் ஒழிக்கும் திறனேபோல -
மனதுக்கு இன்பமுடையவர்களது துன்பத்தை நீக்குகின்ற தன்மை
யைப்போல,—ஆங்கு அவனை - அப்பொழுது அத்துச்சகனை,—முந்
தைத் திகழ் நல்வினை முயங்க - முற்பிறப்பிற் செய்த புண்ணியம்
வந்துசேர,—விளைந்த செய்கை மொழிகுவாம் - அதனாலுண்டாகிய
செய்கையை எடுத்துச் சொல்வாம்.—எ. று. (உஙு)

நாகர் தருநேர் நந்தனங்க ணாரவாவி நந்தனங்கண்,
மாக மிடையொண் டானங்கள் வளருந்தரும தானங்கள்,

யாக மன்றசேர் தந்திரங்க ளிகல்வாள் வேந்தர் தந்திரங்கண்,
மேக மகர மலைநாடு வேலை மருவு மலைநாடு.

(இ-ள்) மேகம் மகரம் அலை நாடு வேலை மருவும் மலை நாடு - மேகங்களும் மகர மீன்களும் அலைகளை நாடிச் செல்லுகின்ற சமுத்திரத்தினாற் சூழப்பட்ட மலை நாட்டினிடத்தே,—நாகர் தருநேர் நந்தனங்கள் - தேவர்களுடைய பஞ்சதருக்களை யொத்த நந்தன வனங்களும்,—நரலைவாவி நந்து அனங்கள் - சமுத்திரத்திலும் தடாகங்களிலும் சங்குகளும் அன்னங்களும்,—மாகம் மிடை ஒள் தானங்கள் - ஆகாயபரியந்தம் உயர்ந்து விளங்குகின்ற இடங்களும்,—வளரும் தரும தானங்கள் - மேன் மேலும் விருத்தியாகின்ற தருமங்களும் தானங்களும்,—மறைசேர்யாக தந்திரங்கள் - வேதவிதிப்படி செய்கின்ற யாகக்கிரியைகளும்,—இகல் வாள் வேந்தர் தந்திரங்கள் - யுத்தஞ் செய்தற்குரிய வாட்படையை யுடைய அரசசைனியங்களும் (உள்ளன).—எ. று. (உச)

அயலார் சோலை முருகவிழா வணியார் வரைகண் முருக விழாப், புயலா டுவபொற் கோபுரங்கள் பொன்னாட் டணி பொற் கோபுரங்கள், வியலார் வயலோ மிகப்பணிலம் விருந் தோவாமன் மிகப்பணில, மியல்பாய் விளங்குங் கலைவேத மில்லா தனவங் கலைவேதம்.

(இ-ள்) அயல் ஆர் சோலை அவிழா முருகு - பக்கத்திற்பொருந்திய சோலைகளிலே நீங்காத வாசனைகளும்,—அணி ஆர் வரைகள் முருகவிழா - அழகு பொருந்திய மலைகளிலே முருகக்கடவுளுடைய திருவிழாக்களும்,—புயல் ஆடுவ பொன் கோபுரங்கள் - மேகங்கள் சஞ்சரிக்கின்ற அழகிய கோபுரங்களும்,—பொன் நாட்டு அணி பொன் கோபுரங்கள் - சுவர்க்க லோகத்தினது அழகைத் தன்னிடத்திலுள்ளதாகிய பொன்மயமாகிய இராஜ நகரங்களும்,—வியல் ஆர் வயலோ மிகப் பணிலம் - விசாலம் பொருந்திய வயல்களினிடத்தே மிகுதியாகிய சங்குகளும்,—கலை வேதம் இயல்பாய் விளங்கும் - சாஸ்திரங்களும் வேதங்களுமாகிய இவைகள் இயல்பாகவே விளங்கிக்கொண்டிருக்கும்,—அங்கு அலைவு ஏதம் இல்லாதன - அவ்விடத்தில் துன்பமுங் குற்றமும் இல்லாதனவாம்.—எ. று. (உரு)

வரைமிக் கெழுமம் பொழிகடங்கள் வருமா தங்கம் பொழிகடங்கள், பரவைத் திருவாழ் மனைமணங்கள் பயிலும்

பொழில்வாய் மன்னைமணங்கள், விரவிச் சிறந்த வண்டினங்கள்
வீணே யகலா வண்டினங்க, ளுரையிற் பொலிவோர் மாதிரங்க
ளுயர்நூ லொலியே மாதிரங்கள்.

(இ-ள்) வரைமிக்கு எழும் அம்பொழி கடங்கள் - மலைகளிலிருந்து மேலெழும்பி நீரைப் பொழிகின்ற மேகங்களும்,—வரும் மாதங்கம் பொழி கடங்கள் - வருகின்ற யானைகள் பொழிகின்ற மத ஜலங்களும்,—பரவைத் திரு வாழ் மனை மணங்கள் - திருப்பாற்கடலிற் பிறந்த மகாலட்சுமி வாழுகின்ற வீடுகளில் விவாகங்களும்,—பயிலும் பொழில்வாய் மன் ஐ மணங்கள் - பொருந்திய சோலைகளில் நிலை பெற்றிருக்கின்ற அழகிய வாசனைகளும்,—விரவிச் சிறந்த வண்டு இனங்கள் - நெருங்கிச் சிறப்புற்றிருக்கின்ற வண்டுக்கூட்டங்களும்,—வீணே அகலா வண் தினங்கள் - வீணாகக் கழியாத சுபதினங்களும்,—உரையில் பொலிவோர் மாதிரங்கள் - உண்மைச் சொற்களினால் விளங்குகின்ற சத்தியவான்களது பெரிய உறுதி மொழிகளும்,—உயர் நூல் ஒலியே மாதிரங்கள் - உயர்ந்த சாஸ்திர ஒலியே திக்குகளில் உள்ளன,—எ. று. (உ௫)

அந்த நாட்டுக் கலங்கா ரணிமா மணிநே ரலங்காரந்
தந்த தறமே நாடகந்த டழைக்கு மருங்கு நாடகங்க, ணந்துங்
கொடியின் மகாகன நண்ணி நெருங்கு மாககனம், விந்தை
கலையாண் மலைவஞ்சி விளங்கும் புகழாண் மலைவஞ்சி.

(இ-ள்) அந்த நாட்டுக்கு அலங்காரம் - அந்த மலை நாட்டுக்கு அலங்காரமானது,—அணி மாமணி நேர் அலங்கு ஆரம் - அழகிய பெரிய மணிகளையொத்து விளங்காநின்ற முத்துக்களும்,—அறமே தந்தது நாடு அகம்-தருமமே செய்யப்பட்டதாகிய உள்நாடுகளும்,—மருங்குதழைக்கும்நாடகங்கள் - பக்கத்தில்செழிப்பாகச்செய்கின்ற கூத்துக்களும்,—கொடியின் நந்தும் மா ககனம் - கொடியினாலே மறைக்கப்பட்ட பெரிய ஆகாயமும்,—மாகம் நண்ணி நெருங்கும் கனம் - ஆகாயத்திற் பொருந்தி நெருங்கியிருக்கின்ற மேகங்களும்,—விந்தை கலையாள் மலைவஞ்சி புகழாள் விளங்கும் - துர்க்கையும், சரஸ்வதியும் பார்வதியும் மகாலட்சுமியும் விளங்குகின்ற,—மலை - அம்மலைநாட்டில்,—வஞ்சி-வஞ்சியென்னுமோர் நகரமுண்டு,—எ. று.

உரைசெ யிந்தப் பதியுறையோ னொளிர்வே னீங்காத்
துனியுறையோ, னரவு வாழ்த்து மருங்குடையா னறிஞர்

போற்று மருங்குடையான், பரவை மருவு தாலத்தார் பரவற் குரிய தாலத்தான், விரவு திருவா ழாகத்தான் விறல்வே ளனைய வாகத்தான்.

(இ-ள்) உரை செய் இந்தப் பதி உறையோன் - சொல்லப் பட்ட இந்த வஞ்சி யென்னு நகரத்திலுள்ளவன்,—ஒளிர் வேல் நீங் காத் தனி உறையோன் - விளங்காநின்ற வேலாயுதநீங்காத ஒப்பற்ற உறையையுடையவன்,—அரவு வாழ்த்தும் அரும் குடையான் - ஆதி சேடனுற்றுதிக்கத் தக்க அரிய வெண்கொற்றக் குடையையுடை யவன்,—அறிஞர் போற்றும் மருங்குடையான் - அறிவுடையோர்கள் துதிக்கத்தக்க பக்கத்தையுடையவன்,—பரவை மருவு தாலத்தார் பர வற்கு உரிய தாலத்தான் - கடலாற் சூழப்பட்ட பூமியிலுள்ளவர்கள் துதித்தற்குரிய பனம்பூ மாலையை யுடையவன்,—திரு வாழ் விரவு ஆகத்தான் - மகாலட்சுமி வாழும் படியாகப் பொருந்திய மார்பை யுடையவன்,—விறல்வேள் அனைய ஆகத்தான் - வெற்றி பொருந்திய மன்மதனை யொத்த சரீரத்தையுடையவன்.—எ. று. (உஅ)

கலியி னீதி வரவேலான் காணுர்க் கடிந்த வரவேலா, னிலவு நுதல்வாழ் பூதியினு னெருங்கி வளரும் பூதியினு, னிலகு வீர வாரணத்தா னெழிலி யனைய வாரணத்தா, னுலக முதவு மம்புயத்தா னுவப்பப் புவியா ளம்புயத்தான்.

(இ-ள்) கலியின் நீதி வரவு எலான் - கலியுக தருமங்கள் வருத லை ஏற்க மாட்டாதவன்,—காணார்க்கடிந்த வரவேலான் - பகைவர் களைச் செயித்த மேலான வேற்படையையுடையவன்,—நிலவுநுதல் வாழ் பூதியினுன் - விளங்காநின்ற நெற்றியினிடத்துப் பொருந்திய விபூதியை யுடையவன்,—நெருங்கி வளரும் பூதியினுன் - மிகுந்து வளருகின்ற செல்வத்தையுடையவன்,—இலகு வீர வாரணத்தான் - விளங்காநின்ற வெற்றிச் சங்கையுடையவன்,—எழிலி அனைய வார ணத்தான் - மேகம் போன்ற யானைப் படையை யுடையவன்,—உல கம் உதவும் அம்புயத்தான் உவப்பப் புவி ஆள் அம் புயத்தான்- உல கங்களைச் சிருஷ்டித்த தாமரை யாசனராகிய பிரமதேவர் சந்தோ ஷிக்கும்படி பூமியை ஆளத்தக்க அழகிய புஜபலத்தை யுடையவன்.— எ. று. (உகூ)

இறைவர் சைவ வாலயத்து ளியற்றுப் பணிகள் யாது மிலை, திறைக ளளவா மன்னரிலை செங்கோல் செல்லாத்

தேயமிலை, நிறையு மனுநூ னீதியினி னிகழ்த்தா நீதி யாவு மிலை, முறையி னரசர் தருமத்துண் முற்று தனவு மிவற் கிலையால்.

(இ-ள்) இறைவர் சைவ ஆலயத்துள் இயற்றுப்பணிகள் யாதும் இலை - சிவபெருமான் எழுந்தருளியிரா நின்ற சிவாலயங்களில் இவ் வரசன் செய்யாத திருப்பணிகள் ஒன்றுமில்லை,— திறைகள் அளவர் மன்னர் இலை - (இவ்வரசனுக்குக்) கப்பணங் கட்டாத அரசர்கள் ஒருவரும் இல்லை;—செங்கோல் செல்லாத் தேயம் இலை - (இவ்வர சன்) செங்கோல் செல்லாத தேசங்களில்லை;—நிறையும் மனு நூல் நீதியினில் நிகழ்த்தா நீதி யாவும் இலை - நிறைந்த மனுசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட நீதிகளில் (இவ்வரசன்) நடத்தாத நீதிகள் ஒன்று மில்லை;—முறையின் அரசர் தருமத்துள் முற்றுதனவும் இவற்கு இலை - முறைதவறாத அசர்கள் செய்யப்படுகின்ற இராஜதருமங்க ளுள் இவ்வரசனுக்குமுடியாத தருமங்கள் ஒன்றுமில்லை.—எ. று. ஆல் அசை. (கூ0)

மண்ட லீகர் மகுடசிகா மணியி லொளிக ளகலமிசைச், சண்ட சூர கிரணமெனத் தவழுங் கழற்காற் றனிவேந்தன், கண்டி தவள நீறணிந்து கருணை யமலற் கருளடைந்த, தொண்டர் சரண முயர்கதிக்குத் துணையா நாடு மிணையில் லோன்,

(இ-ள்) மண்டலீகர் மகுட சிகாமணியில் ஒளிகள் அகல - அர சர்களது முடியினிடத்திலுள்ள சிகாமணியின் பிரகாசமானது நீங்கும்படி,—மிசை - (அவ்வரசர்களது முடியின்) மேலே,—சண்ட சூர கிரணம் எனத் தவழும் கழல் கால் தனி வேந்தன் - கோபம் பொருந்திய சூரிய கிரணம் போல விளங்குகின்ற வீரக்கழலை யணிந்த பாதத்தையுடைய ஒப்பற்ற அரசன்,—கண்டி தவள நீறு அணிந்து - உருத்திராக்ஷ மாலையும் வெள்ளிய விபூதியும் தரித்து,—கருணை அமலற்கு அருள் அடைந்த தொண்டர் சரணம் உயர் கதிக்குத் துணையா நாடும் இணை இல்லோன் - கிருபையையுடைய மலமுத்த ராகிய சிவபெருமானது அனுக்கிரகத்தைப் பெற்ற அடியார்களது திரு வடிகளையே மேலான மோக்ஷத்திற்குத் துணையாகத் தேடுகின்ற ஒப் பில்லாதவன்.—எ. று. (கூக)

மறையிற் பொலியும் புண்டரிக மலர்மே லுறையு மொருகடவுள், முறையிற் பயந்த பகிரண்ட முழுதுந் தவள

நுண்டுகிலா, லுறையிட் டனைய நிலவுபுக ழுடையான்
கடல்சூ ழுலகமெலாங், குறைவற் றிலக வருள்சுரக்குங்
கோமான் சேரர் குலதீபன்.

(இ-ள்) மறையின் பொலியும் புண்டரிக மலர்மேல் உறையும் ஒருகடவுள் - வேதங்களினாலே விளங்குகின்ற தாமரை மலர்மேல் வீற்றிருக்கின்ற ஒப்பில்லாத பிரமதேவர்,—முறையிற் பயந்த பகிரண்டம் முழுதும் - கிரமமாகப் படைத்த உலகமுழுதும்,—தவள நுண் துகிலால் உறை இட்டு அனைய நிலவு புகழ் உடையான் - வெள்ளிதாகிய சிறிய வஸ்திரத்தினால் உறைசெய்து மறைத்தாற் போல விளங்குகின்ற கீர்த்தியையுடையவன்,—கடல் சூழ் உலகம் எலாம் குறைவு அற்று இலக அருள் சுரக்கும் கோமான் - கடலாற் சூழப்பட்ட உலகமுழுதும் குறைவில்லாமல் விளங்கும்படி கிருபையைப்பாலிக்கின்ற அரசன்,—சேரர் குல தீபன் - சேரராஜாக்களுடைய குலத்துக்கு ஒரு தீபம் போன்றவன்:—எ. று.　　(ருஉ)

வேறு.

வான நாடர்வந் தடிதொழ மன்றிடை விளங்கு
ஞானநாடக வுளத்தி னனவில்தொறு மின்ப
மான சைவநூன் மொழிப்படி யருச்சனை சைவத்,
தான முய்ப்பவ னவன் பெயர் சபாபதிப் பிரியன்.

(இ-ள்) வான நாடர் வந்து அடி தொழ மன்று இடை விளங்கும் ஞான நாடக உளத்தினன் - சுவர்க்க லோகத்தின்கணுள்ள தேவர்கள் வந்து திருவடிகளை வணங்கும்படியாகக் கனகசபையினிடத்திலே விளங்கும்படி செய்கின்ற ஞானத்தைத்தரத்தக்க திருநிருத்தத்தைத் தியானிக்கின்ற மனதையுடையவன்,—நவில் தொறும் - சொல்லுந்தோறும்,—இன்பமான சைவநூல் மொழிப்படி - இன்பத்தைத் தரத்தக்கதாகிய சைவ சாஸ்திரத்திற் சொல்லியபடி,—சைவத் தானம் அருச்சனை முடிப்பவன் - சிவாலயங்கள் தோறும் பூசாக்கிரமந்தவறாமல் முடிப்பவன்,—அவன் பெயர் சபாபதிப்பிரியன் - அவ்வரசன் பெயர் சபாபதிப்பிரியன்.—எ. று.　　(ருரு)

உள்ள முள்ளன பகைகளு முலகினிற் பகையுந்
தள்ளி யேனைய குறைகளுந் தணந்திட வருளின்
வெள்ள மாமென வடகலை தென்கலை விளங்க
வள்ளி யோனியற் சோர்தமர புய்யவே வாழ்வோன்.

(இ-ள்) உள்ளம் உள்ளன பகைகளும் - மனதினிடத்துள்ளன வாகிய (காமக்ரோதமுதலிய) உட்பகைகளையும்,—உலகினிற் பகையும் தள்ளி - உலகத்தினிடத்துள்ளனவாகிய (பகை முதலிய) புறப்பகைகளையு நீக்கி,—ஏனைய குறைகளுந் தணந்திட - மற்றுள்ள குறைகளுநீங்க,—அருளின் வெள்ளம் ஆம் என - கிருபாவெள்ளமென்று சொல்லும்படி,—வடகலை தென்கலை விளங்க - ஸம்ஸ்கிருத நூலுந்தமிழ்நூலும் விளங்க,—வள்ளியோன் இயல் சேரர்தம் மரபு உய்ய வாழ்வோன் - கொடையாளன் என்னும் இயல்பையுடைய சேரராஜர்களது வம்மிசமுய்யும்படி வாழ்கின்றவன்.—எ. று. (ருச)

வேந்தர் மந்திரக் கிழவர்கள் விளங்குமண் டபத்திற்
போந்து வாளரித் தவிசிடைப் பொலிந்தரு ளுமையாள்
காந்தன் மேவிய கனகமன் றிடைப்புக ழாய்ந்த
மாந்தர் கூறமிர் தஞ்செவி மாந்தியுண் மகிழ்வோன்.

(இ-ள்) வேந்தர் மந்திரக்கிழவர்கள் விளங்க மண்டபத்தில் போந்து - அரசர்களும் மந்திரிமார்களும் விளங்கும்படி அரசிருக்கை மண்டபத்திற்போய்,—வாள் அரித் தவிசிடைப் பொலிந்து - ஒளி பொருந்திய சிம்மாசனத்தில் வீற்றிருந்து,—அருள் உமையாள் காந்தன் மேவிய கனக மன்றிடைப் புகழ் - கிருபையையுடைய உமாதேவிநாயகராகிய சிவபெருமான் எழுந்தருளியிராநின்ற கனகசபையின் மேன்மையை,—ஆய்ந்த மாந்தர் கூறும் அமிர்தம் செவி மாந்தி - ஆராய்ந்தறிந்த பெரியோர்கள் சொல்லுகின்ற (அப்புகழாகிய) அமிர்தத்தைச் செவிவாயாக உண்டு,—உள்மகிழ்வோன் - (அதனால்) மனமகிழ்ச்சி யடைகின்றவன்.—எ. று. (ருரு)

காண்ட லெய்தினர் போகமு முத்தியுங் காண
வாண்ட நாயகன் பொற்பொது வமர்ந்த வானந்தத்
தாண்ட வந்தொழுங் காதலின் றகைமை மீக்கொள்ள
வீண்டு மந்திரக் கிழவர்க்கு மிசைத்துட னெழுந்து.

(இ-ள்) காண்டல் எய்தினர் போகமும் முத்தியும் காண - தரிசித்தவர்கள் போக மோக்ஷங்களையடையும்படி,—ஆண்ட நாயகன் பொன் பொது அமர்ந்த ஆனந்த தாண்டவம் தொழும் காதலின் தகைமை மீக்கொள்ள - (நம்மை) ஆண்டருளாநின்ற சிவபெருமான் கனகசபையினிடத்தே விரும்பிச்செய்கின்ற ஆனந்த தாண்டவத்தை வணங்க வேண்டுமென்னு மாசையின்றன்மை அதிசுரி

க்க,—உடன் ஈண்டு மந்திரக்கிழவர்க்கும் இசைத்து எழுந்து - உடனே பக்கத்திற் சூழ்ந்திருக்கின்ற மந்திரிமார்களுக்கும் சொல்லி (அவ்விடத்தைவிட்டு) எழுந்து.—எ. று. (கூகூ)

முரச மார்த்தெழ வலம்புரிச் சங்கின முழங்கப்
பரசு பல்லியந் துவைத்திட வந்தியர் பரவ
நிரைசெய் சாமரங் கால்பொர வெண்குடை நிழற்ற
வரச ரெண்ணிலர் புடைவரச் சிவிகைமீ தணைந்தான்.

(இ-ள்) முரசம் ஆர்த்து எழ - முரசவாத்தியம் ஆரவாரிக்கவும்,—இனம் வலம்புரிச்சங்கு முழங்க - கூட்டமாகிய வலம்புரிச்சங்குகள் முழங்கவும்,—பரசு பல்லியம் துவைத்திட - துதிக்கத்தக்க பலவகைப்பட்ட வாத்தியங்கள் ஆரவாரிக்கவும்,—வந்தியர் பரவ - புகழ்வோர்கள் துதிக்கவும்,—நிரை செய் சாமரம் கால்பொர - வரிசையாகப் பொருந்திய சாமரங்கள் காற்றை வீசவும்,—வெண்குடை நிழற்ற - வெண் கொற்றக்குடை நிழலைச் செய்யவும்,—அரசர் எண்ணிலர் புடைவர - அளவில்லாத இராஜாக்கள் பக்கத்தில்வரவும்,—சிவிகை மீது அணைந்தான்-பல்லக்கின் மேலேறினன்.—எ.று. (கூஎ)

செறுத்த கோபமுந் தழற்கணுந் திறற்கையுங் கோடும்
பொறுத்த மேனியுங் கறுத்தடல் புரிந்திட நிழலை
வெறுத் துலாவரு மேருவும் பலவென வல்லி
யறுத்து லாவிய களிற்றின மளப்பில நெருங்க.

(இ-ள்) செறுத்த கோபமும் தழல் கண்ணும் திறல் கையும் கோடும் பொறுத்த மேனியும் - கோபிக்கின்ற கோபமும் அக்கினி சுவாலிக்கின்ற கண்களும் வலிய துதிக்கையும் கொம்புகளுமாகிய இவைகளைத்தாங்கிய சரீரமுடையதும்,—நிழலை வெறுத்துக் கறுத்து அடல் புரிந்திட மேருவும் பல என உலாவரும் - தன்னிழலைப்பார்த்து வெறுத்துக் கோபித்துச் சண்டை செய்யும்படி பல மலைகள் போல் உலாவிக்கொண்டு வருகின்றதும்,—வல்லி அறுத்து உலாவிய அளப்பில் களிற்றினம் நெருங்க - (கட்டிய) சங்கிலிகளையறுத்துக்கொண்டு திரிகின்றதுமான அளவில்லாத யானைக்கூட்டங்கள் நெருங்கி வரவும்.—எ. று. (கூஅ)

அருக்க ரேறிய தேரென வளவிலா விரத
நெருக்க மிக்குற வூழியி னீடிய வெங்கா
லுருப் படைத்தன துரகத முலப்பில நிலாவச்
செருப் பொருப்பென விருதரு மளவிலர் செறிய.

(இ-ள்) அருக்கர் ஏறிய தேர் என அளவு இலா இரதம் நெருக்கம் மிக்குற - துவாதசாதித்தர்கள் ஏறிச்செல்லுகின்ற இரதங்களைப் போல அளவில்லாத இரதங்கள் மிக நெருங்கி வரவும்,—ஊழின் நீடிய வெம் கால் உருப்படைத்து அன உலப்பில் துரகதம் நிலாவ - ஊழிக்காலத்தில் அதிகரித்துலாவிய கொடிய சண்டமாருதத்தின் வடிவத்தைப் பெற்றாற் போன்ற அளவில்லாத குதிரைகள் பிரகாசத்தோடுவரவும்,—செருப் பொருப்பு என விருதரும் அளவிலர் செறிய - யுத்தமலை போன்ற அளவில்லாத படை வீரர்கள் நெருங்கி வரவும்.—எ. று. (கூக)

படி மறைத்தன நடவிய பதாகினி படியிற்
பொடி மறைத்தன மாதிரப் பொலிவைவாள் விசும்பைக்
கொடி மறைத்தன வாதித்தர் குருச்சுட ரரசர்
முடி மறைத்தன மறைத்தன கடலொலி முரசம்.

(இ-ள்) படி மறைத்தன நடவிய பதாகினி படியிற் பொடி மறைத்தன - பூமியை மறைத்தனவாய் நடந்து செல்லுகின்றசேனைகளைப் பூமியினிடத்திருந்தெழுந்தபுழுதிகள் மறைத்தன,—மாதிரப் பொலிவை வாள் விசும்பை கொடி மறைத்தன - அஷ்டதிக்குகளின் பொலிவையும் ஒளிபொருந்திய ஆகாயத்தையும் வஸ்திரக்கொடிகள் மறைத்தன,—ஆதித்தர் குருச்சுடர் அரசர் முடி மறைத்தன - சூரியர்களது நிறம் பொருந்திய பிரகாசத்தை அரசர்களுடைய முடிகள் மறைத்தன,—கடல் ஒலி முரசம் மறைத்தன - சமுத்திர ஓசையை முரசவாத்திய ஒலிகள் மறைத்தன.—எ. று. (சo)

செந்தமிழ்க் கலை வடகலை தெளிந்தவ ரேத்தத்
தந்திரத் திரு மறையவர் தாபதர் வாழ்த்த
விந்திரத் திரு வீதெனப் பூதல மிசைப்ப
வந்தி றுத்தனன் சுந்தரச் சையமால் வரைப்பால்.

(இ-ள்) செந்தமிழ்க்கலை வடகலை தெரிந்தவர் ஏத்த - செந்தமிழ்நூல்களையும்ஸம்ஸ்கிருதநூல்களையும் அறிந்தபுலவர்கள்துதிக்கவும்,-தந்திரத்திருமறை யவர்தாபதர் வாழ்த்த - வேதங்களையறிந்தஅழகிய பிராமணர்களும், முனிவர்களும் ஆசீர்வதிக்கவும்,—ஈது இந்திரத் திரு எனப் பூதலம் இசைப்ப - இவ்வரசனது செல்வம் இந்திரச்செல்வமென்று பூவுலகத்தார்கள் புகழவும்,—சுந்தரமால் சைய வரைப்பால் வந்து இறுத்தனன் - அழகிய பெரிய சையகிரியினிடத்தே வந்து சேர்ந்தான் (அவ்வரசன்).—எ. று. (சக)

குடதி சைக்கட லெழுந்தொரு குலகிரி யாற்றிற்
புடவி யிற்குண திசைநெறிப் பொலிந்துசெல் வதுபோற்
றட மிலங்கிய சைய மால் வரையினை யிகந்து
நடவு கின்றது துன்றிய நராதிப னனிகம்.

(இ-ள்) குடதிசைக் கடல் எழுந்து - மேற்றிசைக் கடலானது எழுந்து,—ஒரு குலகிரி யாற்றில் - ஒப்பில்லாத கூட்டமாகிய மலை யாறாக,—புடவியில் குணதிசை நெறிப் பொலிந்து செல்வதுபோல் - பூமியில் வந்து கீழ்த்திசை வழியாகப் பிரவாகித்துச் செல்வது போல்,—துன்றிய நராதிபன் அனிகம் - அவ்விடத்திற்றங்கிய அவ் வரசனதுசேனைகள்,—தடம் இலங்கிய சைய மால்வரையினை இக ந்து நடவுகின்றது,—விசாலம் பொருந்திய விளங்குகின்ற பெரிய சையகிரியைக்கடந்து நடக்கின்றது.—எ. று. (சஉ)

முச்ச கங்களு மண்டமு முறையினிற் பயந்த
கச்ச கங்கொளாக் கனமுலை கணவற்கு விடத்தை
வைச்ச கந்தரற் கன்புடை மன்னவன் படைக்கட்
டுச்ச கன்கள வாசையாற் சோர்வுபார்த் தணைந்தான்.

(இ-ள்) முச்சகங்களும் அண்டமும் முறையினில் பயந்த - மூன்றுலகங்களையும் அண்டங்களையுங் கிரமமாகப் பெற்றருளிய,— கச்சு அகம் கொளா கன முலை கணவற்கு - கச்சுளடங்காத பெருத்த ஸ்தனங்களையுடைய உமாதேவியாரது நாயகரும்,—விட த்தை வைச்ச கந்தரற்கு - விஷம் பொருந்திய திருக்கண்டத்தையு டைய வருமாகிய சிவபெருமானிடத்து,—அன்பு உடை மன்னவன் படைக்கண் - அன்பினையுடைய அவ்வரசனது சேனைகளுக்குள்,— களவு ஆசையால் துச்சகன் சோர்வு பார்த்து அடைந்தான் - திருட வேண்டு மென்னும் ஆசையால் துச்சகனென்பவன் சோர்ந்திருக்குஞ் சமயம் பார்த்துப்போய்ச் சேர்ந்தான்.—எ. று. (சரு)

உரிய சூத்திர னிவனென வுருக்கொடு வந்த
கரிய நெஞ்சினன் றனையடற் காவல னேவல்
புரியு மாக்களோர் பொன்பொதி சுமைபுடைத் தேற்றிப்
பெரிய காவலா லிவன்றனைப் பேணினர் சென்றார்.

(இ-ள்) உரிய சூத்திரன் இவன் என உருக்கொடு வந்த கரிய நெஞ்சினன்தனை - ஏவல் செய்தற்குரிய சூத்திரன் இவன் என்று

சொல்லும்படி வடிவுகொண்டு வந்த கள்ள மனதையுடையவனுகிய அத்துச்சகனை,—அடல் காவலன் ஏவல் புரியும் மாக்கள் - வலிய அவ்வரசனது ஏவலைச்செய்கின்ற ஏவலாளர்கள்,—புடைத்து ஓர் பொன் பொதி சுமை ஏற்றி - (அத்துச்சகனைப்பிடித்து) அடித்து பொன் நிறைந்த ஒரு சுமையை அவன் மேலேற்றி,—பெரிய காவலால் இவன் தனைப் பேணினர் சென்றுர் - பெரிய காவலோடு இத்துச்சகனைப் பாதுகாத்தவர்களாய்ப் போனுர்கள். எ. று. (சச)

அன்ன போதவ னிச்சுமை துறந்துநா மகன்றுற்
றுன்னு மன்னவர் புடைத்திடுந் துயரமே செய்வர்
பொன்னி னீள்சுமை சோர்விடைக் கொணர்ந்து போ
நன்ன லத்தென மகிழ்ந்திட நாடியே நடந்தான். [வதுவே

(இ-ள்) அன்ன போது அவன் இச்சுமை துறந்து நாம் அகன்றுல் - அப்பொழுது அத்துச்சகனுனவன் இச்சுமையைப் போட்டு விட்டு நாம் ஓடிப்போனுல்,—துன்னும் அன்னவர் புடைத்திடும் - நெருங்கி வருகின்ற அவ்வேவலாளர்கள் அடிப்பார்கள் ;—துயரமே செய்வர் - (அதுவன்றித்) துன்பமுஞ் செய்வார்கள் ;—நீள் பொன்னின் சுமை சோர்வு இடைக்கொணர்ந்து போவதே நல் நலத்து என மகிழ்ந்து - பெரிய பொற் சுமையை இவர்கள் மறந்த காலத்தில் அபகரித்துக் கொண்டு போவதே நல்லகாரியமென்று மகிழ்ந்து,— இடம் நாடியே நடந்தான் - தன் கருமத்தைமுடிக்கத்தக்கஇடத்தைப் பார்த்துக்கொண்டு நடந்தான்.—எ. று. (சரு)

ஆய்ந்த மெய்ப்பொருண் மாதவ ரடர்ந்த வெம்புலனைக்
காய்ந்த டர்ந்தவை செல்வுழிக் காக்குமா போல
வேந்த னேவலர் துச்சக னினைவினின் விடாமற்
போந்து காவலை மேவினர் விரைந்தனர் போனுர்.

(இ-ள்) ஆய்ந்த மெய்ப்பொருள் மாதவர் - ஆராயப்பட்ட உண்மைப் பொருள்களை அறிந்த முனிவர்கள்,—அடர்ந்த வெம்புலனைக் காய்ந்து அடர்த்து - நெருங்கிய கொடிய பஞ்சேந்திரியங்களைக் கோபித்து அடக்கி,—அவை செல் உழிக் காக்குமா போல் - அவைகள் செல்லுமிடங்களிற் செல்லாமற் காக்கின்ற தன்மையைப்போல,— வேந்தன் ஏவலர் துச்சகன் நினைவினில் விடாமல் - அவ்வரசனது ஏவலாளர்கள் அத்துச்சகனது எண்ணப்படி விடாமல்,—போந்து காவலை மேவினர் விரைந்தனர் போனுர் - அவனுடன் சென்று காவலைப்பொருந்தி சீக்கிரம் போனுர்கள்,—எ. று. (சசு)

பராக மண்டகோ ளகையுறப் படைபுடை நெருங்க
வராக மீசனை யன்றிமற் றயலிலா தருள்கூர்
தராத லாதிபன் சராசரஞ் சராசனச் சயிலப்
புராரி தன்வடி வாகிய புரிக்கய லடுத்தான்.

(இ-ள்) பராகம் அண்ட கோளகை உற - புழுதிகளானவை ஆகாய முகட்டைப் பொருந்த,—படைபுடை நெருங்க - சைனியங்கள் பக்கத்தில் நெருங்கி வரவும்,—அராகம் ஈசனை அன்றி மற்று அயல் இலாது - விருப்பமானது சிவபெருமானிடத் தன்றி மற்றுப் புறச்சமய தெய்வங்களிடத்துச் செலுத்தாது,—அருள் கூர் - (சிவபெருமானிடத்தே)அன்பு மிகுந்த,—தாரதல அதிபன் - அச்சபாப்திப்பிரியன் என்னும் அரசன்,—சர அசரச் சயிலச் சாராசனப் புராரி தன் வடிவாகிய புரிக்கு அயல் அடுத்தான் - சரம் அசரமென்னும் ஆன்மாக்கள் தங்குதற் கிடமாகிய மகாமேரு மலையை வில்லாகக் கொண்டருளிய திரிபுர சம்மாரியாகிய சிவபெருமானது திருவுருவாகிய சிதம்பரத்திற்குச் சமீபத்தில்வந்து சேர்ந்தான்.—எ. று. (சஎ)

பைவ ளுகவேந் தறிந்தெளி துரைக்கவும் படுமே
யெய்வ னெனெ வருமத னெரியெழ விழித்த
சைவ நாயகன் சதுமறை நாயக னெண்ணுந்
தெய்வ நாயக னடம்புரி தில்லைமா நகரம்.

(இ-ள்) நான் எய்வன் எனவரும் மதன் எரி எழ விழித்த சைவ நாயகன் - நான் பாணத்தைச் செலுத்துவேன் என்று வந்த மன்மதனுடைய (எரிந்து விழும்படி) அக்கினியுண்டாக (நெற்றிக்கண்ணைத்) திறந்த சைவ நாயகனும்,—சதுமறை நாயகன் எண்ணுந் தெய்வ நாயகன் - நான்கு வேதங்களையு மோதுகின்ற தலைவனாகிய பிரமதேவனாற் றியானிக்கத்தக்க தெய்வ நாயகனுமாகிய சிவபெருமான்,—நடம்புரி தில்லை மாநகரம் - திருநிருத்தஞ்செய்தருளா நின்ற தில்லை வனமாகிய சிதம்பரத்தின்(மகிமையை) - பை அநகர் வேந்து அறிந்து எளிது உரைக்கவும் படுமே - படம் பொருந்திய அந்த நாகர்களுக்கரசனாகிய ஆதிசேஷனுந் தெரிந்து எளிதாகச் சொல்லவுங் கூடுமோ? (கூடாது).—எ. று. (சஅ)

சதுமறை நாயகன் என்னுந் தெய்வ நாயகன் எனவும் பாடம்.

புண்ட ரீகமுந் திசைமுகம் பொலிந்த வராணமு
மண்டு பேரொளி யன்னமு மலர்ந்தசொற் கரும்புங்
கண்ட பல்பொருட் டோற்றமுங் காட்சியுங் கவினுந்
தொண்டு நான்மறை யவனெனக் குலவுவ பழனம்.

(இ-ள்) பழனம் - அச்சிதம்பரத்தினது வயல்களானவை,—புண்டரீகமும் - தாமரை மலர்களும்,—திசைமுகம் பொலிந்த வாரணமும் - அஷ்டதிக்குகடோறும் பிரகாசிக்கின்ற சங்குகளும்,—மண்டு பேர் ஒளி அன்னமும் - நெருங்கிய பெரிய ஒளியையுடைய அன்னங்களும்,--மலர்ந்த சொல் கரும்பும் - விரிந்த சாற்றையுடைய கரும்புகளும்,—கண்ட பல்பொருள் தோற்றமும் - காணப்பட்ட பல வகைப் பொருள்களின் தோற்றங்களும்,—காட்சியும் - உற்பத்தியும்,—கவினும் கொண்டு - இவைகளின் அழகையுங்கொண்டு,—நான் மறையவன் எனக்குலவுவ - நான்கு வேதங்களையுமறிந்த பிரமதேவனென்று சொல்லும்படிப் பொருந்துவனவாம்.—எ. று. (சகூ)

கோடு தாங்கலா னேமிமேற் குலவலாற் குலப்புள்
ளூடு மேவலா லரியர வத்தினு லும்பர்
நாடு கீழ்ப்பட வோங்க லாற்பசுமை நண்ணுதலா
னீடுமாலெனப் பொலிவன நெருங்கு தண் டலைகள்.

(இ-ள்) நெருங்கு தண்டலைகள் - நெருங்கிய சோலைகளானவை,—கோடு தாங்கலால் - கொடுகள் பொருந்தியிருத்தலாலும்,—நேமி மேல் குலவலால் - நேமியானதுமேலே பொருந்துதலாலும்,—குலப்புள் ஊடு மேவலால் - குலப்பட்சி நடுவே பொருந்துதலாலும்,—அரி அரவத்தினால் - அரியோசையாலும்,—உம்பர் நாடு கீழ்ப்பட ஓங்கலால் - தேவலோகங் கீழ்ப்படும்படி உயர்தலாலும்,—பசுமை நண்ணுதலால் - பச்சை நிறம்பொருந்தி யிருத்தலாலும்,—நீடும் மால் எனப் பொலிவன - நீண்ட விஷ்ணு மூர்த்தியைப் போல் விளங்குவனவாம்.— எ. று. (ருo)

கோடு=சங்கு, கொம்பு நேமி=சக்கிராயுதம், சக்கிரவாகப்பக்ஷி. குலப்புள்=கருடன், கூட்டமாகியபக்ஷி. அரி அரவம்=அரிஎன்னும் ஓசை, கிளியோசை. உம்பர் நாடுகீழ்ப்பட ஓங்கல்=நெடிய வடிங்கொண்டது, தேவருலகங்கீழ்ப்படும்படி உயர்ந்திருத்தல். பசுமை நண்ணுதல்=பச்சைநிறத்தை யடைதல்.

அளியு மேனிறை புளகமு மலர்முக முக்கட்
டெளியு முட்டுக ளின்மையு மீர்மூந் துவன்றிப்
பளித குங்குமப் பயோதரி பணிய மெய்ஞ்ஞான
வெளிநடந் தொழு மன்பரின் விளங்குவ பொய்கை.

(இ-ள்) பொய்கை - தடாகங்களானவை, —அளியும் - அளியும்,--மேல்நிறை புளகமும் - மேலே நிறைந்த புளகமும்,—அலர்

முகமும் - மலர் முகமும்,—ஈரமும் - ஈரமும் - துவன்றி - பொருந்தி,—பளித குங்கும பயோதரி பணியும் - பச்சைக் கர்ப்பூரமுங் குங்குமப்பூவுங் கலந்த கலவைச் சாந்தணிந்த ஸ்தனங்களையுடைய சிவகாமி யம்மையார் வணங்குகின்ற,—மெய்ஞ்ஞான வெளி நடம் தொழும் அன்பரின் விளங்குவ - உண்மையாகிய சிதம்பரத்திற்செய்தருளும் (நடேசப்பெருமானது) திருநிருத்தத்தை வணங்குகின்ற அடியார்களைப்போல விளங்குவனவாம் — எ. று. (௫௪)

அளி=வண்டு, கிருபை. புளகம்=குமிழி, சரீரபுளகம். அலர்முகம்=முகப்பில் மலர், மலர்ந்தமுகம். ஈரம்=குளிர்ச்சி, அன்பு. எனப்பொருள் கொள்க.

ஆளு நாயகன் றில்லையி னணிபெறுங் கோயிற்
கோளு லாவுற வளரெழு குருமதி லண்ட
கோள மீதுறச் சோதிகள் குலவிய நேமி
வாள் மால்வரை யேழுள வேலவை மானும்.

(இ - ள்) ஆளும் நாயகன் தில்லையின் - (நம்மை) ஆண்டருளுகின்ற நடேசப்பெருமான் எழுந்தருளியிராநின்ற தில்லைவனமெனப் பெயரிய சிதம்பரத்தின்கணுள்ள,—அணி பெறும் கோயில் - அழகு பொருந்திய ஆலயத்தில்,—கோள் உலாவுற வளர் எழு குரு மதில் - (சூரியன் முதலிய) கிரகங்கள் சஞ்சரிக்கும்படி வளருகின்ற எழாகிய நிறம் பொருந்திய மதில்களானவை,—அண்ட கோளம் மீது உறச் சோதிகள் குலவிய மால் நேமிவாள வரை எழு உளவேல் - அண்டகடாகத்தினது உச்சியின் மேற் பொருந்தும்படி சந்திர சூரியர்கள் சஞ்சரிக்கின்ற பெருமை பொருந்திய சக்கிரவாளகிரிகள் எழு இருக்குமாயின்,—அவை மானும் - அவைகளை யொக்கும். — எ. று. (௫௨)

ஏம வெற்பெழு மூழிதோ றலைந்துகு மிறவாக்
காம ரித்தலத் துளதெனத் தளர்வறக் கருதித்
தாமரைத் தவி சுறைபவன் பற்பல சமைத்த
சேம மேருவிற் சிறந்தபொற் செறிந்தகோ புரங்கள்.

(இ-ள்) பொன் செறிந்த கோபுரங்கள் - பொன்னாற் செய்யப்பட்ட திருக்கோபுரங்கள்,—ஏம வெற்பு எழும் ஊழிதோறும் அலைந்து உகும் - மகாமேருவானது உண்டாகா நின்ற ஊழிக் காலங்கடோறும் அலைந்து உதிர்ந்துவிடும்,—காமர் இத்தலத்து உளது எனை.

அழகிய இச்சிதம்பரத்தில் (அம்மகாமேருஇருக்குமாயின்) அழியாது என்று,—தாமரைத் தவிசு உறைபவன் தளர்வறக் கருதி - தாமரையாசனத்தில் வீற்றிருந்தருளிய பிரமதேவர் மனத்தளர்ச்சி நீக்கக் கருதி,—சமைத்த பல்பல சேம மேருவில் சிறந்த - சிருஷ்டிக்கப்பட்ட பற்பல வாகிய காவலையுடைய மகாமேரு மலைபோலச் சிறப்புற்றிருந்தன.—எ. று. (௩௩)

அடர்ந்த வண்டமூ டிடைவிடா தணைந்தகோ புரத்தை
நடங்கு தேரொடும் வாயிலி னுழைந்துபோ துவன்வான்
றொடர்ந்த நீணெறி விலகிமுன் சூழ்வ னல்லாது
கடந்து போகவும் வல்லனோ வெழுபரிக் கதிரோன்.

(இ-ள்) எழுபரிக் கதிரோன் - எழுகுதிரைகளையுடைய சூரியன்,—அடர்ந்த அண்டம் ஊடு இடைவிடாது அணைந்த கோபுரத்தை - நெருங்கிய அண்டங்களின் மத்தியில் இடைவிடாமற் போய்ப் பொருந்திய திருக்கோபுரத்தை,—நடங்கு தேர் ஓடும் வாயிலின் நுழைந்து போதுவன் - அசைகின்ற இரதத்தோடும் வாயிலின் வழியாய் நுழைந்து செல்லுவன்,—வான் தொடர்ந்த நீள் நெறிவிலகி முன் சூழ்வன் - ஆகாயசம்பந்தமான நீண்ட வழியில் விலகி (அக்கோபுரத்துக்கு) முன் சுற்றிக்கொண்டு வருவன்,—அல்லது கடந்து போகவும் வல்லனோ - அவ்வாறன்றி அக்கோபுரத்தைத் தாண்டிச் செல்லவும் வல்லமை யுடையவனோ? அன்று.—எ. று. (௩௪)

தேறு மாகரு மரம்பையர் தொகுதியுஞ் செறிய
வேறுவேறுதிர் முத்தமு மணிகளும் விரிந்து
மாறுமா றெதிர் விளங்கலால் வயங்குதா ரகைப்பே
ராறு பூதலத் தணைந்தமை யனையவா வணங்கள்.

(இ-ள்) ஆவணங்கள் கடைவீதிகளானவை,—தேறும் மாகரும் அரம்பையர் தொகுதியும் செறிய - தெளிவையுடைய தேவர்களும் தேவப்பெண்கள் கூட்டங்களும் நெருங்க,—வேறு வேறு உதிர் முத்தமும் மணிகளும் விரிந்து - (அந்நெருக்கத்தால் அவர்கள் அணிந்திருக்கின்ற ஆபரணங்களிலிருந்து) வெவ்வேறாக உதிர்கின்ற முத்துக்களும் இரத்தினங்களும் பரவி,—மாறு மாறு எதிர் விளங்கலால் - முன்னே பிரகாசிக்கின்றமையால்,—வயங்கு பேர் தாரகை ஆறு பூதலத்து அணைந்தமை அனைய - விளங்காநின்ற பெரிய நக்ஷத்திர நதியானது பூமியினிடத்து வந்துசேர்ந்ததமையை யொத்திருந்தன.—எ. று. (௩௫)

முத்தி யாவது தில்லையம் பலமென முயங்குஞ்
சித்த மேவிய வானவர் சிறப்பினு லுறைந்து
வித்த கத்துடன் றத்தம விமானங்க ணிரைத்து
வைத்த லாமெனப் பொலிவன மாடமா ளிகைகள்.

(இ-ள்) மாட மாளிகைகள் - மாடங்களும் மாளிகைகளும்,—முத்தியாவது தில்லை அம்பலம் என முயங்கும் சித்தம் மேவிய வானவர் - மோக்ஷமென்று நூல்களாற் சிறப்பித்துச் சொல்லப்படுவது தில்லை வனத்தின் கணுள்ள கனகசபையே என்று நினைக்கின்ற மனத்தையுடையவர்களாகிய தேவர்கள்,—சிறப்பினால் உறைந்து - சிறப்போடு அத்தலத்தில் வந்து தங்கி,—வித்தகத்துடன் தத்தம விமானங்கள் நிரைத்துவைத்தல் ஆம் எனப் பொலிவன - அதிசயத்தோடு தங்கள் தங்கள் விமானங்களை வரிசையாக நிறுத்தி வைத்தாற்போலுமென்று சொல்லும்படி விளங்குகின்றன.—எ. று. (ருசு)

துங்க மாளிகை வெண்சுதைச் சோதிநாற் றிசையும்
பொங்கி மீதுசூழ்ந் திலங்கிய பொலிவுமான் மழுச்சேர்
செங்கை யான்வடி வாகிய சிவகங்கை தனைவான்
கங்கை மாநதி வலம்வருங் காட்சியைக் கடுக்கும்.

(இ-ள்) துங்க மாளிகை வெள் சுதைச் சோதி நால் திசையும் பொங்கி மீது சூழ்ந்து இலங்கிய பொலிவு - உயர்ந்த மாளிகையிற் பூசியவெள்ளிய சுண்ணச்சாந்தின் ஒளி நாலு திக்குகளிலும் பொங்கி வழிந்து மேலே சூழ்ந்து விளங்குகின்ற பிரகாசமானது,—மழுச்சேர் செங்கையான் வடிவாகிய சிவகங்கைதனை - மழுப்படை பொருந்திய சிவந்த திருக்கரத்தையுடைய சிவபெருமானது வடிவாகிய சிவகங்கையென்னுந் தீர்த்தத்தை,—மா வான் கங்கைநதி வலம் வரும் காட்சியைக் கடுக்கும் - பெரிய தேவகங்கையானது பிரதக்ஷிணஞ் செய்கின்ற தோற்றத்தை யொத்திருக்கும்.—எ. று. (ருஎ)

மொய்த்த பேரொளிப் பரிதிதேர் முயங்கிய பரிமேன்
மத்திகைக் குழாமெனப் பொலி மாடவெண் பதாகைப்
பத்தி தாக்குத லொழிவறத் தொழில்புரி பாகன்
கைத்த லத்தினுக் குதவிசெய் நலத்தினைக் காட்டும்.

(இ-ள்) மொய்த்தபேர் ஒளிப் பரிதி தேர் முயங்கிய பரிமேல் மத்திகைக் குழாம் எனப் பொலி மாடவெள் பதாகைப் பத்தி-நெரு

ங்கியபெரிய ஒளியையுடைய சூரியனது தேரிற்பூட்டிய குதிரையின் மேற் பொருந்திய சம்மட்டிக் கூட்டம்போல் விளங்காநின்ற மாளிகையிற் கட்டிய வெள்ளிய கொடி வரிசைகளானவை,—பாகன்தாக்குதல் ஒழிவறத் தொழில் புரி கைத்தலத்தினுக்கு உதவி செய் நலத்தினைக் காட்டும் - அத்தேர்ச் சாரதியானவன் அடித்தல் நீங்காமல் அத்தேரைச் செலுத்துதலாகிய தொழிலைச்செய்கின்ற அவனது கைக்கு உதவி செய்கின்றதாகிய நன்மையைக் சாண்பிக்கும்.— எ. று. (ருஅ)

அருங்க லைத்துறை வேள்வியோ ரளப்பரு மிரதங்
கருங்க ளத்திறை விழாவினிற் கதிர்மணி நெடுந்தேர்
மருங்கு சூழ்தரு வானவர் விமானங்கண் மறுகி
னெருங்கி யிவ்வகைத் திவையென நினைக்கவு மரிதால்.

(இ-ள்) அரும் கலைத்துறை வேள்வியோர் அளப்பரும் இரதம் - அருமையாகிய சாஸ்திர முறைப்படி செய்யப்படுகின்ற யாகத்தையுடையவர்களாகிய தில்லைவாழந்தணர்களது அளவிடப்படாத இரதங்களும்,—கரும் களத்து இறை விழாவினில் கதிர் மணி நெடும் தேர்-கரிய திருக்கண்டத்தையுடைய சிவபெருமானது திருவிழாவில் அமைக்கப்பட்டிருக்கின்ற ஒளியை வீசுகின்ற அழகிய நீண்ட இரதங்களும்,—மருங்கு சூழ் வானவர் விமானங்கள் - பக்கத்திற் சூழ்ந்திருக்கின்ற தேவர்களுடைய விமானங்களும்,—மறுகில் நெருங்கி - வீதிகளில் நெருக்குற்று,-இவை இவ்வகைத்து என நினைக்கவும் அரிது - இவைகள் இன்னதன்மையை யுடையன என்று (மனசினால்) நினைக்கவும்கூடாமையாயிருக்கின்றன.—எ. று. ஆல் அசை. (ருசு)

திலக வாணுத லரிவையர் தேவர்தந் நெருக்கிற்
குலவு மாமுடி யுதிர்மணி யல்கிடுங் குப்பை
யுலக நாயக னம்பலங் காணிய வுவந்து
தலனு றும்பரி தியருடன் றலைமயக் குறுமால்.

(இ-ள்) திலக வாள் நுதல் அரிவையர் - திலதத்தை அணிந்த ஒள்ளிய நெற்றியையுடைய பெண்கள்,—தேவர் தம் நெருக்கில் குலவும் மாமுடி உதிர் மணி அலகு இடும் குப்பை - தேவர்களுடைய நெருக்கத்தினாற் பொருந்திய பெரிய முடிகளிலிருந்து உதிர்கின்ற இரத்தினங்களைப் பெருக்குதலாலாகிய குப்பையானது,—உலக நாயகன் அம்பலம் காணிய - உலகநாயகனாகிய நடேசப்பெருமான்

எழுந்தருளியிராநின்ற கனகசபையைத் தரிசிக்கும்படி,—உவந்து, தலன் உறும் பரிதியருடன் தலைமயக்கு உறும் - மகிழ்ந்து பூமியில் வந்து பொருந்திய சூரியர்களோடு கலந்திருக்கும்.—எ. று. ஆல் அசை. (சுo)

ஒன்றி லாதவைம் புலன்வழித் தடைபடா துலகை
வென்ற மாதவர் மன்றிடை நடந்தொழ விரைந்து
துன்று மன்பொடு செல்வுழிச் சுரர்முடி யிடைவீழ்
மன்றன் மாலையே வழியிடை தடுப்பன மறுகு.

(இ-ள்) ஒன்று இலாத ஐம்புலன் வழித் தடைப்படாது உலகை வென்ற மாதவர் - (ஒன்றையொன்று) பொருந்துதலில்லாத பஞ்சேந்திரியங்களின் வழியில் தடைப்படாமல் பிரபஞ்ச வாழ்க்கையைச் செயித்த பெரிய தவத்தையுடைய முனிவர்கள்,—மன்று இடை நடம் தொழ இயைந்து - கனகசபையினிடத்துச் செய்தருளா நின்ற திருநிருத்தத்தை வணங்கும்படிச் சம்மதித்து,—துன்றும் அன்புடன் செல்வுழி - பொருந்திய அன்போடு போகின்ற காலத்தில்,—சுரர் முடியிடை வீழ் மன்றல் மாலையே மறுகுவழி இடை தடுப்பன - தேவர்களுடைய முடிகளிலிருந்து விழுகின்ற வாசனை பொருந்திய மலர் மாலைகளே வீதிவழிகளை நடுவிற் றடுப்பனவாம்.—எ. று. (சுக)

நீடு மண்ணல்பான் மலைமகள் செறிந்தமை நிகர்ப்ப
மாடு யர்ந்தபே ரம்பலச் சோதியும் வடபாற்
கோடு கொண்டெழி னிழலுமிழ் குலவிய வடத்தி
னூடு தங்கிய பசுமையுங் கலந்துநின் றொளிரும்.

(இ-ள்) நீடும் அண்ணல் பால் மலைமகள் செறிந்தமை நிகர்ப்ப - அழிவில்லாதவராகிய சிவபெருமானுடைய இடப்பக்கத்தில் பர்வதராஜ குமாரத்தியாகிய உமாதேவியார் பொருந்தி வீற்றிருந்ததைப்போல்,—மாடு உயர்ந்த பேர் அம்பலச் சோதியும் - பொன்னாற் செய்யப்பட்டு உயர்ந்திருக்கின்ற பெரிய கனகசபையின் பிரகாசமும்,—வடபால் கோடு கொண்டு எழில் நிழல் உமிழ் குலவிய வடத்தின் ஊடு தங்கிய பசுமையும் - அக்கனகசபைக்கு வடபக்கத்தில் கொம்புகளை யுடையதாய் அழகிய நிழலைத் தரும்படி நிற்கின்ற ஆலமரத்திற் பொருந்திய பசியநிறமும்,—கலந்து நின்று ஒளிரும் - பொருந்தி நிலை பெற்று விளங்கும்.—எ. று. (சுஉ)

மதிய மீதுகீழ் வடத்தரு வயங்குற வெறுக்கைப்
பொது வெழுஞ்சுட ரண்டமேற் பொலிவதோ திமமுங்
கதுவு கேழலுமா யயன் கண்ணன்முன் றேட
முதிரு நீடொளித் தழற்பிழம் பென்னலா மொழியின்.

(இ-ள்) மீது மதியம் கீழ்வடத்தரு வயங்குற - மேலே சந்திரனும் கீழே ஆல விருக்ஷமும் விளங்க,—வெறுக்கைப் பொது எழும் சுடர் அண்டமேல் பொலிவது மொழியின் - கனகசபையினின்றும் எழுகின்ற சோதியானது ஆகாயத்தின் மேற் பிரகாசிப்பதைச் சொல்லுமிடத்து,—அயன் கண்ணன் ஓதிமமும் கதுவு கேழலுமாய் முன்தேட - பிரமதேவரும் விஷ்ணு மூர்த்தியும் அன்னமும் வேகத்தோடு (பூமியைத் தோண்டுகின்ற) பன்றியுமாக வடிவங்கொண்டு அடியுமுடியுந் தேட,—முதிரும் நீடு ஒளித் தழற் பிழம்பு என்னலாம் - மிகவும் நீண்டு எழுந்த ஒளியையுடைய அக்கினிப் பிழம்பு என்று சொல்லலாம்.—எ. று. (சுங)

திரு நடந்தொழு வோர்சிவ மாகிய செயல்போ
லருளிலங்கிய வம்பலத் தாடகத் தொளியா
லிரு பெருஞ் சுடர்த் தாரகை யெழிற்சரா சரங்கண்
மருவி யுள்ளன தமனிய வடிவமாய் வயங்கும்.

(இ-ள்) திரு நடம் தொழுவோர் சிவம் ஆகிய செயல்போல் - திருநிருத்தத்தை வணங்குபவர்கள் சிவமாகின்ற செய்கையைப் போல்,—அருள் இலங்கிய அம்பலத்து ஆடகத்து ஒளியால் - கிருபை விளங்கிய கனகசபையினது பொற் பிரகாசத்தால்,—இரு பெரும் சுடர் தாரகை எழில் சரம் அசரங்கள் மருவி உள்ளன தமனிய வடிவமாய் வயங்கும் - இரண்டு பெருஞ்சுடர்களாகிய சந்திர சூரியர்களும், நக்ஷத்திரங்களும், அழகிய சரம் அசரமென்னும் ஆன்மாக்களும், (மற்று உலகத்திற்) பொருந்தியுள்ளனவாகிய பொருள்களும் பொன் வடிவமாகவே விளங்கும்.—எ. று. (சுச)

விழைவு கொண்டணை விண்ணவர் மகுடகோ டிகளின்
றழைவு கொண்டெழு கற்பகத் தமனிய மாலை
யிழை நெருக்குற வீழ்வன பொற்றல மெனப்பொன்
மழை முகிற்குல மொழிவறப் பொழிவன மானும்.

(இ-ள்) விழைவு கொண்டு அணை விண்ணவர் மகுட கோடிகளின் - விருப்பத்தோடு சிதம்பரஸ்தலத்தில் வருகின்ற தேவர்களனு

அனேக முடிகளிலிருந்து,—தழைவு கொண்டு எழு கற்பகத் தமனிய மாலை இழை நெருக்குற வீழ்வன - செழித்து வளர்ந்துயர்ந்த கற்பக தருவினது பொன்னிறம் பொருந்திய மலர் மாலைகள் (ஒன்றொன்று) இழைந்து நெருங்கி விழுதலானவை,—முகில் குலம் பொன் தலம் என- மேக கூட்டங்கள் இதுவும் பொன்னுலகமென்று நினைத்து,— பொன்மழை பொழிவன மானும் - பொன் மழை பொழிதலை யொத்திருக்கின்றன.—எ. று. (சுரு)

எண்டலத் துறு கடவுள ரிழைத்திடும் யாகத்
துண்டி வேண்டிய வண்டர்தம மேனியோ யொளியே
கொண்ட வங்கியின் கொழும்புகை யண்டகூடத்து
மண்ட லாற்றெய்வ நதியமு மாகுதி மணக்கும்.

(இ-ள்) எண் தலத்து உறு கடவுளர் இழைத்திடும் யாகத்து ஒளியே கொண்ட அங்கியின் கொழும்புகை அண்ட கூடத்தும் மண்டலால் - மதிக்கத்தக்க பூமியினிடத்துள்ள பிராமணர்களால் செய்யப்படும் யாகத்தி லுண்டாகிய ஒளி பொருந்திய அக்கினியினது செழிய புகையானது ஆகாயத்தின் உச்சியிற்போய்ப்படிதலால்,— உண்டி வேண்டிய அண்டர்தம் மேனியோ தெய்வ நதியமும் ஆகுதி மணக்கும் - அவ்வியாகத்திற் கொடுக்கப்படும் அவி உணவை விரும்பிய தேவர்களுடைய சரீரமாத்திரமா? தேவகங்கையினிடத்தும் ஆகுதியின் வாசனை வீசும்.—எ. று. (சுசு)

படைப் புறத்தினை மறைப்பன பணிலங்கள் பழன
மடைப் புறத்தினை மறைப்பன மணிமுத்த மைந்தர்
தொடைப் புறத்தினை மறைப்பன தும்பிகண் மறையோர்
கடைப் புறத்தினை மறைப்பன கடவுளர் தொகுதி.

(இ-ள்) பணிலங்கள் படைப்புறத்தினை மறைப்பன - சங்குகள் கலப்பைச்சாலின் வெளியை மறைப்பன;—மணி முத்தம் பழன மடைப்புறத்தினை மறைப்பன - மணிகளும் முத்துக்களும் வயலினது நீர் மடையின் வெளியை மறைப்பன;—தும்பிகள் மைந்தர் தொடைப்புறத்தினை மறைப்பன - வண்டுகள் காளையர்களது மாலையின் வெளியை மறைப்பன,—கடவுளர் தொகுதி மறையோர் கடைப்புறத்தினை மறைப்பன - தேவர்களுடைய கூட்டங்கள் பிராமணர்களுடைய வீட்டின்முற்றத்தின் வெளியயமறைப்பன—.எ. று. ()

நெடிய மான்முதற் கடவுளர் நிறைதலா லறையும்
படியி லாமையான் மகத்தொடு தவம்பர வுதலான்

முடிவி லாமையா னற்கதி தருதலான் முடியா
வடிகள் வாழ்தலா லாரண மனையதந் நகரம்.

(இ-ள்) அந்நகரம் - அச்சிதம்பரஸ்தலமானது,—நெடிய மால் முதல் கடவுளர் நிறைதலால் - நீண்ட விஷ்ணுமூர்த்தி முதலிய தேவர்கள் நிறைந்திருத்தலாலும்,-அறையும்படி இலாமையால் (இத் தன்மையுடைய தெனச்) சொல்லுந் தன்மையில்லாமையாலும்,-மகத்தொடு தவம் பரவுதலால் - யாகத்தோடு தவமும் விரிந்திருத்தலாலும்,—முடிவு இலாமையால் - முடிவில்லாமையாலும்,—நல்கதிதருதலால் - நல்ல மோக்ஷத்தைக் கொடுத்தலாலும்,—முடியா அடிகள் வாழ்தலால் - முடிவில்லாத சிவபெருமான் வாழ்ந்து கொண்டிருத்தலாலும் - ஆரணம் அனையது - வேதங்களை யொத்திருக்கின்றது.— எ. று. (கூஅ)

வேறு.

நிறையும் முணர்வு நெறியும் மறமும்
மறையும் மகமும் மறுகும் மணமும்
பொறையுந் தவமுங் கொடையும் புகழும்
மிறையும் முயிரும் மெனநின் றிலகும்.

(இ-ள்) நிறையும் உணர்வும் நெறியும் அறமும் மறையும் மகமும் - நிறைந்த அறிவும் ஒழுக்கமும் தருமமும் வேதமும் (அவ் வேத விதிப்படி (செய்கின்ற) யாகங்களும்,—மறுகும் மணமும் பொறையும் தவமும் கொடையும் புகழும் - அவ்வீதிகளிலுள்ள விவாகச்சடங்குகளும் பொறுமையும் தவமும் தானமும் கீர்த்தியுமாகிய இவைகள்,—இறையும் உயிரும் என நின்று இலகும்- பதியும் பசுவும் போல (அத்தலத்தில்) நிலைபெற்று விளங்கும்.—எ. று.(கூக)

அருளம் பலமீ தடர்பொற் சுடரா
லிருள்வெம் பகலென் றிவைகண் டிலமா
லுருவும் மருவும் மொருவும் மொருவன்
தருமெய்க் கதியென் பதுமித் தலனே.

(இ-ள்) அருள் அம்பலமீது அடர் பொன் சுடரால் - திருவருளைப்பாலிக்கின்ற கனகசபையினிடத்து விளங்கிய பொற்பிரகாசத்தால்,—இருள் வெம்பகல் என்று இவை கண்டிலம் - இருட்காலம் வெவ்விய பகற்காலம் என்று சொல்லப்பட்ட இவைகளின் (வேறுபாட்டைக்) கண்டோமில்லை;—உருவும் அருவும் ஒருவும் ஒருவன்

தரும் மெய்க்கதி என்பதும் இத்தலனே - உருவமும் அருவமும் நீங்கிய ஒப்பில்லாத சிவபெருமானுற் கொடுக்கப்பட்ட அழியாத மோக்ஷம் என்று சொல்வதும் இச்சிதம்பரஸ்தலமே யாம்.—எ. று. ()

மூவா யிரமா முனிவோர் முயலுந்
தாவாத மகந்தனி லுண்டு பொதுத்
தேவா டல்பணிந் தருள்சேர் நகரத்
தோவாத களிப்பின ரும்பரெலாம்.

(இ-ள்) உம்பர் எலாம் - தேவர்களெல்லாம்,—மூவாயிர மாமுனிவோர் முயலும் தாவாத மகம் தனில் உண்டு - தில்லை மூவாயிர முனிவர்களால் முயன்று செய்யப்படும் கெடுதலில்லாத யாகத்தில் அவிப்பாகம் வாங்கியுண்டு,—பொதுத் தேவு ஆடல் பணிந்து - கனக சபேசனது திருநிருத்தத்தை வணங்கி,—அருள் சேர் நகரத்து ஓவாத களிப்பினர் - கிருபையைப் பாலிக்கின்ற அச்சிதம்பரஸ்தலத்தில் நீங்காத சந்தோஷத்தோடு வசிப்பார்கள்.—எ. று. (எக)

எங்கும் மறை யெங்கணு மாகமமே
யெங்கும் மக மெங்கணு மர்ச்சனையே
யெங்குந் தவ மெங்கணு நீளறமே
யெங்குந் திரு வென்றுமிலங் குறுமால்.

(இ-ள்) எங்கும் மறை - (அச்சிதம்பரஸ்தலத்தில்) எவ்விடங்களிலும் வேதகோஷ்டங்களும்,—எங்கணும் ஆகமம் - எவ்விடத்தும் ஆகமமுழக்கமும்,—எங்கும் மகம்-எவ்விடத்தும் யாகங்களும்,—எங்கணும் அர்ச்சனை - எவ்விடத்தும் சிவபூசைகளும்,—எங்கும் தவம் - எவ்விடத்துந் தவங்களும்,—எங்கணும் நீள் அறம் - எவ்விடத்தும் மிகுந்த தருமங்களும்,—எங்கும் திரு - எவ்விடத்துஞ் செல்வங்களும்,—என்றும் இலங்குறும் - (ஆகியஇவைகள்) எம்பொழுதும்விளங்கிக் கொண்டிருக்கும்.—எ. று. (எஉ)

நீடுந் தவ முந்நிதியும் விதியிற்
றேடுங் கதியுந் திகழ்மன் றிடை நின்
றூடும் பதமென்றறிவைச் செறியக்
கூடுந் தகையோர் குண னென்று மிலோர்,

(இ-ள்) நீடும் தவமும் நிதியும் விதியில் தேடும் கதியும் திகழ் மன்று இடை நின்று ஆடும் பதம் என்று -மிகுந்த தவமும் பொரு

ளும் விதிவசத்தாற் றேடி யடையத்தக்க மோக்ஷமுமாகிய இவைகள் விளங்காநின்ற கனகசபையினின்று திருநிருத்தஞ்செய்தருளாநின்ற நடேசப்பெருமானது திருவடிகளே என்று நினைத்து,—அறிவைச் செறியக் கூடும் தகையோர் - தமது புத்தியை அத்திருவடியினிடத் துப்பதியும்படிச் செய்கின்ற தன்மையையுடைய பெரியோர்கள்,— குணன் ஒன்றும் இலோர் - யாதொருகுணமுமில்லாதவர்களாய்ப் பரவசப்பட்டவர்களாவார்கள்.—எ. று. (எங)

வற்று வினைசெற் றுயர்மா தவமே
யுற்று ருமுறு தொளிரொண் கதிவா
னெற்று வியமன் றெதிர்பார் வையினிற்
பெற்று ரினியோர் பெறுபேறுமிலார்.

(இ-ள்) வற்று வினை செற்று உயர் மா தவமே உற்றுரும்- குறைதலில்லாத வினைகளை யழித்து உயர்ந்த பெரிய தவத்தையுடையவர்களும்,—உறாது ஒளிர் ஒள் கதிர்வான் எல் தாவிய மன்று எதிர் பார்வையில் பெற்றார் - அடைதற்கரிதாய் விளங்குகின்ற ஒள்ளிய வேகத்தோடு சஞ்சரிக்கின்ற சூரிய மண்டலத்திற்றாவுகின்ற ஒளியையுடைய கனகசபையை நேரே நின்று கண்களாற்றரிசித்தவர்களும்,— இனி ஓர் பெறு பேறும் இலர் - இனி அடையக்கூடிய பேறுகள் ஒன்றுமில்லாதவர்களாவார்கள்.—எ. று. (எச)

கொன்று ருயிருண் கொடுவெஞ் சமனை
வென்று ரழியா விரதத் துயர்வோர்
மன்று டுமலர்ப் பதமல் லதுவே
றென்று தொளிரும் முளமெய் யுரையோர்.

(இ-ள்) அழியா விரதத்து உயர்வோர் - (அச்சிதம்பரஸ்தலத்தில்) கொல்லாவிரதத்தினுலுயர்ந்த பெரியோர்களும்,—மன்றுஆடும் மலர்ப்பதம் அல்லது வேறு ஒன்றாது ஒளிரும் மெய் உளம் உரையோர் - கனகசபையினிடத்துத் திருநிருத்தஞ் செய்தருளாநின்ற (நடேசப்பெருமானது) செந்தாமரை மலர்போன்ற திருவடிகளிலேயல்லாமல் வேறொன்றிலும் பற்றாது விளங்குகின்ற மனம் வாக்குக் காயங்களையுடையவர்களும்,—ஆர் உயிர் கொன்று உண் கொடும் வெம் சமனை வென்றார் - நிறைந்த உயிரைக்கொன்று உண்ணுகின்ற மிகுந்த கொடுமையையுடைய இயமனைச் செயித்தவர்களாவார்கள்.—எ. று. (எரு)

எய்தாத பெரும் பதமெய் திடினு
நொய்தா நினைவோர் நுவன்மன் றுறையும்
பைதா ழரவா பரணன் பணியே
செய்தார் வமுறுந் திகழ்வாழ் வுடையோர்.

(இ-ள்) நுவல் மன்று உறையும் பை தாழ் அரவாபரணன் பணியே செய்து ஆர்வம் உறும் திகழ் வாழ்வு உடையோர் - (எவர்களாலும்) துதிக்கத்தக்க கனக சபையினிடத்தே எழுந்தருளியிராநின்ற படம் பொருந்திய சர்ப்பத்தை ஆபரணமாக அணிந்த நடேசப்பெருமானுக்குத் திருத்தொண்டு செய்தலிலே விருப்பமிகுந்த விளங்காநின்ற வாழ்வையுடையவர்கள்.—எய்தாத பெரும்பதம் எய்திடினும் நொய்தா நினைவோர் - அடையக்கூடாத பெரிய பதவிகளையடைந்தாலும் அதனை அற்பமாக நினைப்பார்கள்.—எ. று. (எசு)

அறிவா ரறிவா லறியா நிறையும்
மறிவா ரருளா லறிவார் பிறிதொன்
றறிவா னமையா ரறியா மையிடத்
தறிவா மெனமெய் யறிவூ டமைவார்.

(இ-ள்) அறிவார் - (அறியவேண்டியவற்றை) அறியவேண்டியவர்கள்,—அறிவால் அறியா நிறையும் அறிவு - பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறியப்படாத பரிபூரண ஞானமாகிய பரசிவத்தை,—ஆர் அருளால் அறிவார் - அருமையாகிய (அப்பரசிவத்தினது) திருவருளினாலே (அதனை) அறிந்து கொள்ளுவார்கள்.—பிறிது ஒன்று அறிவான் அமையார் - (அவர்கள்) வேறொன்றையுமறிய விரும்பார்கள்,—அறியாமை இடத்து - அறியாமையிடமாகிய துரியா தீதத்தில் உள்ள,—அறிவு ஆம் என - மெய்ஞ்ஞானப் பொருளாம் என்றெண்ணி,—மெய் அறிவூடு அமைவார் - தத்துவ உணர்ச்சியோடு அமைந்திருப்பார்கள்.—எ. று. (எஎ)

வாக்குக்கெட்டா நிலையாதலின், அறிவூடமைவார் என்றார்.

வேதா கமநூல் விரிநூல் பலவும்
மோதா வுணரும் முணர்வுக் குணர்விந்
நாதாதி கடந்து நடம் புரியுந்
தாதா கமலச் சரணென் றுணர்வார்.

(இ-ள்) வேதாகம நூல் விரிநூல் பலவும் ஓதா உணரும் உணர்வுக்கு உணர்வு - (மேற்சொல்லிய ஞானிகள்) வேதம் ஆக

மம் என்னு முதனூல்களையும் அதன் வழிநூல்களாக விரிந்து கிடக்கின்ற பலசாஸ்திரங்களையும் ஓதியுணரும் அறிவுக்கு அறிவு,—இந்நாதாதி கடந்து நடம்புரியும் தாதா கமலச் சரண் என்று உணர்வார் - இந்நாத முதலானவைகளைக்கடந்து திருநிருத்தஞ்செய்தருளாநின்ற பிதாவாகிய நடேசமூர்த்தியினது செந்தாமரை மலர்போன்ற திருவடியே என்று அறிந்து கொள்ளுவார்கள்.—எ. று. (எஅ)

ஆறா றுகடந் தருளா ரணமுந்
தேறா தொளிர்தற் பரசிற் ககனத்
தூறா வுணரா வுருகா மகிழும்
பேறா ரவரிற் பெறுவா ரிலரே.

(இ-ள்) ஆறாறு கடந்து - முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்து,—அருள் ஆரணமும் தேறாது ஒளிர் - (சிவபெருமானால்) அருளிச்செய்யப்பட்ட வேதங்களாலும் அறியப்படாது விளங்குகின்ற,—தற்பர சித் ககனத்து - தனக்கு மேலானதாய் விளங்குகின்ற சிதம்பரத்தினிடத்து,—ஊறா உணரா உருகா மகிழும் பேறு - அன்புசுரந்து அறிந்து மனமுருகி மகிழும்படியானபேற்றை,—அவரின் பெறுவார் ஆர் - அவர்களைப்போலடையத்தக்கவர்கள் யாவர்,—இலர் - ஒருவருமில்லை.—எ. று. (எகூ)

இத்தன் மையரென் றுமிருப் பதுமெய்
வித்தன் னதுமுத் திவிரும் பினர்தஞ்
சித்தங் கணிலா யதுசித் துருவத்
தத்தன் வடிவா கிய தந்நகரம்.

(இ-ள்) அந்நகரம் - அச்சிதம்பரஸ்தலமானது,—இத்தன்மையர் என்றும் இருப்பது - மேற்சொல்லிய இவர்கள் எப்பொழுதும் வசிப்பது,—மெய்வித்து அன்னது - சத்தியத்துக்கு வித்தாயுள்ளது,—முத்தி விருப்பினர்தம் சித்தங்கள் நிலாயது - மோக்ஷத்தை விரும்பினர்களுடைய மனங்களில் விளங்கப்பெற்றது;—சித்து உருவத்துஅத்தன் வடிவாகியது - ஞானசொரூபியாகிய சிவபெருமானது வடிவமாக உள்ளது.—எ. று. (அ0)

வேறு.

முல்லைத் திருநகை வல்லைப் பொருமுலை முடியா வுமை திரு வடிபேணத், தொல்லைப் பழமறை யெல்லைத் தனிமுத

றொலையா நலமுறு நிலையங்கண், டல்லைப் பொருவினை வெல்
லுத் தமர்சிவ மதுவா நெறியருள் பொது மேவத், தில்லைத்
திருநகர் மல்லற் களியொடு சென்றான் மனுநெறி குன்றா
தான்.

(இ-ள்) மனு நெறி குன்றாதான் - மனுசாஸ்திரவழியிற்றவறாதவனாகிய சபாபதிப்பிரியன் என்னுஞ்சேரராஜனானவன்,—முல்லைத் திருநகை வல்லைப் பொருமுலை - முல்லையரும்பு போன்ற அழகிய பற்களையும் சூதாடுகருவி போன்ற ஸ்தனங்களையுமுடைய,—முடியா உமை திருவடி பேண - முடிவில்லாத சிவகாமியம்மையாரது திருவடிகளைத் தரிசிக்க விரும்பி,—தொல்லைப்பழ மறை எல்லைத் தனிமுதல் தொலையா நலம் உறும் நிலையம் கண்டு - மிகவும் பழமையாகிய வேதமுடிவிற்கூறிய ஒப்பற்ற முதல்வராகிய சிவபெருமானது நீங்காத ஆனந்தத்தைத்தருகின்ற திருநிருத்தத்தைத்தரிசித்து,—அல்லைப்பொரு வினை வெல் உத்தமர் சிவம் அது ஆம் நெறி அருள் பொது மேவ - இருட்டையொத்த வினைகளை வென்ற பெரியோர்களுக்குத் தாம் சிவமாந்தன்மையாகின்ற மோக்ஷமார்க்கத்தைக் கொடுத்தருளுகின்ற கனகசபேசனிடத்தே வந்து சேர,—மல்லல் களியொடு - மிகுந்த சந்தோஷத்தோடு - தில்லைத்திரு நகர் சென்றான் - தில்லைவனமாகிய அழகிய சிதம்பரஸ்தலத்திற் போய்ச்சேர்ந்தான்.—எ. று. (அக)

குலவெற் பினமரு ளடையத் திருநகர் குடிபுக் கன
வென மதிமிக்கோர், புலனுற் றறிவரு நலனிற் கிளர்திகழ்
பொற்கோ புரமவை முற்காணா, இலகப் பொலனணி பெறுநற்
சிவிகையி னிழியா வருணெறி வழியாமத், தலனிற் றுகள்
வடி வுறமிக் ககமகிழ் தணியப் பரிவொடு பணிவுற்றான்.

(இ-ள்) குல வெற்பு இனம் அருள் அடையத் திருநகர் குடிபுக்கன என - கூட்டமாகிய மலைகள் திருவருளைப் பெறும்படி சிதம்பரத்திற் குடிபுகுந்தாற்போல்,—மதி மிக்கோர் புலன் உற்று அறிவரும் நலனில் கிளர் திகழ் பொன் கோபுரம் அவை முன் காணா - அறிவான் மேம்பட்ட பெரியோர்கள் ஐம்புலன்களாலுற்று அறியும் அழகினான் மிகுந்து விளங்குகின்ற பொன்மயமாகிய திருக்கோபுரங்களை அக்கனகசபைக்கு முன்னேகண்டு,—இலகப் பொலன் அணி பெறு நல் சிவிகையின் இழியா - விளங்கும்படி பொன்னாற்செய்யப்பட்டு அழகைப்பெற்ற நல்ல பல்லக்கினின்றுங் கீழே இறங்கி,—அருள் நெறி வழியாம் - திருவருண்மார்க்கத்துக்கு வழியாகிய,—அத்தலனில் துகள்

வடிவு உற மிக்க அகமகிழ்வு தணிய பரிவு ஒடு பணிவு உற்ருன் - அச்சிதம்பரஸ்தலத்தில் புழுதிகள் சரீரத்திற் பொருந்தும்படி மிக்க மனமகிழ்ச்சியினுல் குளிர்ந்த அன்போடு நமஸ்கரித்தான்.—எ,று. ()

தண்ணிய என்பது தணிய என இடைக்குறையாக வந்தது.

மடமா மகளிர்க ளுடனு டவர்களு மறைநூ லவர்களு மிறைபாதத், திடமா கியவறி வுடையா ரெவர்களு மியல்வா ணருமிசை மூரல்வாருந், தொடரா தரவுட னடரா மிகுபுகழ் துதியா நிறைகலை மதிகாணுங், கடலா மெனவரு ளடலான் மனுநெறி கண்டான் வரவெதிர் கொண்டார்கள்.

(இ-ள்) மடம் மா மகளிர் உடன் ஆடவர்களும் மறைநூலவர்களும் - அறியாமை பொருந்திய பெரிய பெண்களும் புருஷர்களும் வேதத்தையறிந்த பிராமணர்களும்,—இறை பாதத்து இடம் ஆகிய அறிவு உடையார் எவர்களும் - சிவபெருமானது திருவடிக்கிருப்பிடமாகிய ஞானத்தையுடைய யாவர்களும்,—இயல் வாணரும் - இயற்றமிழ்வாணராகிய புலவர்களும்,—இசை மூரல் வாரும் - இசைத்தமிழ் பாடுகின்ற பாடகர்களும்,—தொடர் ஆதரவு உடன் அடரா - பின்றொடர்கின்ற ஆசையோடு நெருங்கி நின்று,—மிகுபுகழ் துதியா - (அவ்வரசனது) மிக்க புகழை யெடுத்துத்துதித்து,—நிறை கலை மதி காணும் கடல் ஆம் என - நிறைந்த கலைகளையுடைய பூரணைச்சந்திரனைக் கண்ட கடல் போல,—அருள் அடல்மனு நெறிகண்டான் வரவு எதிர் கொண்டார்கள் - கிருபையும் வலிமையும் பொருந்திய மனுசாஸ்திர முறைமையை அறிந்த சபாபதிப்பிரியனென்னுஞ் சேரராஜனது வரவை எதிர் கொண்டார்கள்.—எ. று. (அரு.)

அளகைக் கதிபதி வரவோ வரமிகு மமராபதிபிறை வரவோ மெய்த், துளவக் கருமுகில் வரவோ வரவிது சொல்வா ரெனிலவர் வல்லாரென், றுளணிற் பயில்கலை யறிவோர் புகழ்தர வொழியா தெழுமரு ளுடன் வந்தான், பளகற் றிருவினை யகலப் பரிவொடு பணிவார் கதியுறு மணிவீதி.

(இ-ள்) வரவு - இவ்வரசனது வரவு,—அளகைக்கு அதிபதி வரவோ - அளகாபுரிக்கரசனுகிய குபேரனது வரவோ?—மிகு அமராபதி இறை வரவோ - மேன்மையையுடைய தேவலோகத்துக்கரசனுகிய இந்திரனுடைய வரவோ?—மெய் துளவக் கரு முகில் வரவோ - சரீரத்திற்றுளப மாலையை அணிந்த கரிய மேகம் போன்ற

விஷ்ணுமூர்த்தியின் வரவோ?—இது சொல்வார் எவர் எனில் - இவ்வரவைச்சொல்ல வல்லவர்கள் எவர்கள் என்றால்,—பயில்கலை அறிவோர் - கற்கத்தக்க சாஸ்திரங்களை யறிந்த பெரியோர்கள்,—வல்லார் எவர் என்று உளனில் புகழ்தர - (அவ்வரவை அறிந்து சொல்ல) வல்லவர்கள் எவர்கள் என்று மனதில் புகழும்படி,—பளகு அற்று இருவினை அகல பரிவு ஒடு பணிவார் கதி உறும் அணி வீதி - குற்ற மற்று இருவினைகள் நீங்கும்படி அன்போடு வணங்குகின்றவர்கள் மோக்ஷத்தையடையத்தக்க அழகிய திருவீதியினிடத்து,—ஒழியாது எழும் அருளுடன் வந்தான் - நீங்காது வளருகின்ற கிருபையோடு வந்து சேர்ந்தான்.—எ. று. (அச)

நிலமா மகளிரு மரமா மகளிரு நிகழ்மா னிடர்களு மிமையோருங், கலவா வவரவர் விலகா துலவிய கனகா சல நிகர் மணிமாடப், பலமா மறுகெதிர் பரவா விடையிடை பணியா வுயர்புய வணிபோ லிவ், வுலகா ளொருகுடை நிழலா னருளுட னுற்றா னிறையுறை பொற்கோயில்.

(இ-ள்) உயர் புய அணிபோல் இவ்வுலகு ஆள் ஒரு குடை நிழலான் - உயர்ந்த புயங்களில் அணிந்த ஆபரணங்களைப் போல இவ்வுலகத்தை ஆளுகின்ற ஒப்பற்ற வெண்கொற்றக் குடையானிழலைச் செய்கின்றவனுகிய அவ்வரசன்,—மாநில மகளிரும் மா அர மகளிரும் - மானிடப்பெண்களும், பெரிய தேவப்பெண்களும்,—நிகழ் மானிடர்களும் இமையோரும் - சஞ்சரிக்கின்ற மனிதர்களும் தேவர்களும்,—கலவா - ஒன்று சேர்ந்து,—அவர் அவர் விலகாது உலவிய - அவர்அவர்கள் நீங்காது சஞ்சரிக்கின்ற,—கனக அசலம்நிகர்-பொன் மலை போன்ற,—மணி மாடம் - அழகிய மாளிகைகளையுடைய,—பல மா மறுகு எதிர் பரவா - பலவாகிய பெரிய திருவீதிகளை நேரே துதித்துத் துதித்து,—இடை இடையே பணியா - ஒவ்வொரு திருவீதிகளினிடத்தும் நமஸ்கரித்து,—இறை உறை பொன் கோயில் அருளுடன் உற்றான் - நடேசப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற அழகிய ஆலயத்தில் அன்போடு வந்து சேர்ந்தான்.—எ. று. (அரு)

விதுவாழ் முடியினன் வடிவா மிதுவென விதியா ரணமொழி புகல்வாசப், புதுமா மலர்விரி மதுவா லுயரலை பொங்கிப் பொழிசிவ கங்கைப்பான், முதுவாய் மையருட னருகா மகிழ்வுடன் மூழ்கிச் சூழ்கரை யேறிப்பொற், சது

வான் மறையவர் பெறுமா றருளொடு தந்தா னுலகின் மிகு தானம்.

(இ-ள்) விது வாழ் முடியினன் வடிவு ஆம் இது என விதி ஆரண மொழி புகல் - பாலசந்திரன் வாழுகின்ற திருமுடியையுடைய சிவ பெருமானது வடிவமாகும் இது என்று விதிக்கப்பட்ட வேதங்களிற் சொல்லிய,—வாசப் புது மா மலர் விரி மதுவால் உயர் அலை பொங்கிப் பொழி சிவகங்கைப்பால் - வாசனை பொருந்திய புதிய பெரிய பொற்றாமரை மலர்களிலிருந்து விரிந்து ஒழுகுகின்றதேனால் உயர்ந்த அலைகள் பொங்கிப் பொழிகின்ற சிவகங்கை யென்னுந்தீர்த்தத்தில்,—முது வாய்மையருடன் அருகா மகிழ்வுடன் மூழ்கி - பழமையாகிய உண்மைப் பொருளையறிந்த பெரியோர்களுடன் குறையாத சந்தோஷத்தோடு ஸ்நானஞ்செய்து,—சூழ் கரை ஏறி - சூழ்ந்திருக்கின்ற கரையிலேறி,—பொன் வான் சது மறையவர் பெறும் ஆறு - திரவியங்களை மேலாகிய நான்கு வேதங்களையறிந்த பிராமணர்களேற்றுக் கொள்ளும்படி,—உலகில் மிகு தானம் அருளொடு தந்தான் - உலகத்தில் மிகுந்த தானங்களைக் கிருபையோடுங் கொடுத்தான்—எ. று. (கூஅ)

ஏலப் புலனுறு காலத் ததனெறி யெய்தா முனிவரரெய் தப்போ, யாலத் தருநிழன் மூலப் பதியிடை யழியா முதலென மொழிவேதக், கோலச் சிகையெழு ஞானத் திரளொரு கோலத் துடனுயர் ஞாலத்தின், பாலற் புதமது வாகிப்பொலிவது பாரா விழிவழி நீர்வாரா.

(இ-ள்) ஏலப் புலன் உறு காலத்து - பொருந்திய பஞ்சேந்திரியங்களுந் தத்தம் புலன்களின் வழியே இழுத்துச் செல்லுங் காலத்து,—அதன் நெறி எய்தா முனிவரர் எய்த - அவைகளின்வழியே (மனதைச்) செலுத்தாத முனிவர்கள் தன்னோடு வர,—போய் - (தானும் அவர்களோடு) போய்,—ஆலத்தரு நிழல் மூலப்பதியிடை - ஆலவிருக்ஷத்தி னிழலிலுள்ள திருமூலட்டானத்தில்,—அழியா முதல் என மொழி வேதக் கோலச் சிகை எழு ஞானத்திரள் - அழிதலில்லாத முதனூல் என்று சொல்லப்பட்ட வேதங்களின் அழகிய சிரசாகிய உபநிடதங்களில் விளங்கியஞானக்கூட்டமாகிய சிவம்,—கோலத்துடன் உயர் ஞாலத்தின் பால் அற்புத மதுவாகிப் பொலிவது பாரா - திருவுருவத்தோடு உயர்வாகிய பூமியினிடத்தில் ஆச்சரியகரமாக விளங்கிக் கொண்டிருத்தலை அவ்வரசன் பார்த்து,—

விழிவழி நீர் வாரா - கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பஞ்சொரிய.— எ. று. குளகம். (அஎ)

அழுதும் புளகமொ டுளமங் குருகியு மணியார் படிமிசை பணியாமுன், றொழுதும் பரபத சிவசங் கரவரதொலையா மறையுட னுலகேழு, முழுதுந் தருமொரு முதல்வா நிலைபெறு முத்தா வலைவறு சித்தாவெப், பொழுதும் பதநினை தரநல் கெனநனி புகழ்தந் தருளொடு மகிழ்கின்றான்.

(இ-ள்) அழுதும் - (அவ்வரசன் ஆனந்த மேலீட்டினால்) அழுதும்,—புளகம் ஒடு உளம் உருகியும் - சரீர புளகத்தோடு மனமுருகியும்,—அணி ஆர் படி மிசை பணியா முன் தொழுதும் - அழகு பொருந்திய பூமியின் மேலே விழுந்து சந்நிதானத்தில் நமஸ்கரித்தும்,—பரபத - மேலான பதவியைக் கொடுப்பவரே?—சிவ - சிவபெருமானே?—சங்கர - சுகத்தைச் செய்பவரே?—வர - வரத்தைக் கொடுப்பவரே,—தொலையா மறை உடன் எழு உலகு முழுதும்தரும் ஒரு முதல்வா - அழியாத வேதங்களோடு ஏழாகியஉலகமுழுதையுஞ் சிருஷ்டிக்கின்ற ஒப்பில்லாத முதல்வரே?—நிலை பெறும் முத்தா - நிலை பெற்ற மலமுத்தரே—அலைவறு சித்தா-அசைவற்ற சித்த வடிவங் கொண்டவரே?—எப்பொழுதும் பதம் நினைதர நல்கு என - எப்பொழுதுந் தேவரீருடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருக்கும்படியான வரத்தைக் கொடுத்தருள்க வென்று,—நனி புகழ்ந்து - மிகவும் துதித்து,—அருளொடு மகிழ்கின்றான் - இரக்கத்தோடு சந்தோஷமடைகின்றான்.—எ. று. அங்கு அசை. (அஅ)

கோதற் றிடவெழு மாதிக் குறியெதிர் குறுகா வருள்கொடு செறுநாளு, பேதக் கொடுவினை மோதித் திகழ்விடை பெற்று கமமறை கற்றூர்சூழ், போதப் பரசிவ போதப் பொலிவொடு பொற்பா லினிதுட னுற்றானல், வேதச் சிகையெழு நாதச் சுடரயல் வெளிநின் றிலகிய வொளிர்மன்றம்.

(இ-ள்) கோது அற்றிட எழும் ஆதிக்குறி எதிர் குறுகா - (ஆன்மாக்களைப் பந்தித்திருக்கின்ற (மும்மலங்களாகிய) குற்ற நீங்கும்படி எழுந்தருளியிரா நின்ற திரு மூலட்டானேசுரருடைய சந்நிதானத்தையடைந்து,—அருள் கொடு செறும் நாளு பேதக் கொடுவினை மோதி - அச்சிவபெருமானது திருவருளைக் கொண்டு அழியத்தக்க பலவிதமான பேதங்களையுடைய பாவங்களைக் கெடுத்து,—

திசழ் விடைபெற்று - அத்திருமூலட்டானேசுரரிடத்தில் விளங்கா நின்ற அனுமதியைப் பெற்று,—ஆகமம் மறை கற்றூர்சூழ் போத - சிவாகமங்களையும் வேதங்களையும் கற்றறிந்த பெரியோர்கள் பக்கத்திலே சூழ்ந்துவர,—சிவபோதப் பொலிவோடு-சிவஞானப் பிரகாசத்தோடு,—வேதச் சிகை எழு நாதச் சுடர் அயல் வெளி நின்று இலகிய ஒளிர் மன்றம் - வேதசிரசில் தோன்றிய நாத வடிவாயும் சோதி சொரூபமாயுமுள்ள சிவம் பக்கத்திலுள்ள சிதாகாசத்தில் நின்று பிரகாசிக்கும்படி விளங்காநின்ற கனகசபையினிடத்து,—பொற்பால் இனிது உடன் உற்றான் - அழகோடு இனிதாகவந்து சேர்ந்தான்.—எ, று. (அக)

இருகுங் குமமுலை யொருபெண் கொடியுட னொருவன்
றிருநட மெதிர்காண, மருவும் புலனொடு கரணந் தலைகெட
வளரும் புளகமோ டுடல்கம்பித், துருகுஞ் செயல்பெற வுளா
மூஞ் செயலற வுரையுஞ் சிறிதற வரமாரு, வருள்கொண்
டருவியி னிருகண் புனறர வசையா னுயர்பர வசமானான்.

(இ-ள்) இரு குங்கும முலை ஒரு பெண் கொடியுடன் ஒருவன் திரு நடம் எதிர் காண - இரண்டாகிய குங்குமக்குழம்பை அணிந்த ஸ்தனங்களை யுடைய ஒப்பில்லாத சிவகாமவல்லியம்மையாருடன் நின்று ஒப்பில்லாத நடேசப்பெருமான்செய்தருளியதிருநிருத்தத்தை எதிரே நின்று தரிசிக்க,—மருவும் புலனொடு கரணம் தலைகெட - பொருந்திய ஐம்புலன்களும் திரிகரணங்களும்தமோறவும்,—வளரும் புளகம் ஒடு உடல் கம்பித்து - வளருகின்ற புளகத்தோடு சரீரநடுக்கமுற்று,—உளமும் உருகும் செயல் பெற - மனமும் உருகுந் தன்மையை யடையவும்,—செயல் அற - தற்செயல் நீங்கவும்,—சிறிது உரையும் அற - கொஞ்சம் வார்த்தையுங் குளறவும்,—வரம் மாரு அருள் கொண்டு - வரம் நீங்காத கிருபையைக் கொண்டு,—அருவியின் இருகண் புனல்தர - மலையருவியைப்போல் இரண்டு கண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சொரியவும்,—அசையான் உயர் பரவசம் ஆனான் - அசைவற்றவனாய் மிகுந்த பரவசத்தை யடைந்தான்.—எ. று. (கO)

ஆறும் பகைபுரி யஞ்சுங் கொடுவினை யருசா மனமுதலொருநாளுஞ், சீறும் பெரியவர் தேறும் பரபத சிந்தா மணிநிகரெந்தாய்வெண், ணீறும் பகிரதி யாறும் புனைசடை நிலா கடமரு ளமலாவென், றூறும் பரிவுட னுவுங் குளறிட வுளமுங் களிகொள வுரைசெய்தான்.

(இ-ள்) பகைபுரி ஆறும் - பகையைச் செய்யாநின்ற காமம், குரோதம், லோபம், மதம், மாற்சரிய மென்னும் ஆறு விகாரங்களும்,—கொடுவினை அஞ்சும் - பொய், கொலை, களவு, கள்ளுண்டல், சூது என்னுங் கொடிய ஐந்து பாதகங்களும்,—அருகா மனமுதல் ஒரு நாலும் - கெடுதலில்லாத மனம், புத்தி, அகங்காரம் சித்தம் என்னும் நாலு கரணங்களும்,—சீறும் பெரியவர் - ஆகிய இவைகளைக் கோபித்து விலக்கும் பெரியோர்கள்,—தேறும் பரபத சிந்தாமணி நிகர் எந்தாய்-தெளிகின்ற பரமபதத்தில் எழுந்தருளியிராநின்ற சிந்தாமணியை யொத்த எமது பிதாவே,—வெண்ணீறும் பகீரதியாறும் புனை சடை நிமல - திருவெண்ணீற்றையுங் கங்காநதியையுந் தரித்த ஜடையையுடைய மலமுத்தரே,—ஆகமம் அருள் அமலா என்று - ஆகமங்களை யருளிச் செய்த மலமுத்தரே என்று,—ஊறும் பரிவு உடன் நாவும் குளறிட உளமும் களி கொள உரை செய்தான் - சுரக்கின்ற அன்போடு நாக்குளறவும் மனஞ் சந்தோஷிக்கவும் தோத்திரஞ் செய்தான்.—எ. று. (கூ௩)

என்பால் வினைகெட நின்பா லருள்பெற விறைவா வருளென வறையாநின், றன்பான் மிகவு மகிழ்ந்தாதரவுடனருளா லொருபடி விடைகொள்ளாப், பொன்பான் மிளிர்தரு நன்கா ரொளிர்மனை புக்கா னிவனினு மிக்காருண், டென்பா ரிலைபெறு மின்பார் கதியள விதுவென் றுரைசெய யார்வல்லார்.

(இ-ள்) என்பால் வினை கெட நின்பால் அருள் பெற இறைவா அருள் என அறையா நின்று - அடியேனிடத்திலுள்ள தீவினை நீங்கவும் தேவரீருடைய திருவருளைப்பெறவும்எம்பெருமானே கிருபை செய்தருள வேண்டும் என்று விண்ணப்பஞ் செய்து,—அன்பால் மிக உளம் மகிழ்வான் - அன்போடு மிகவும் மனமகிழ்ச்சியையடைய வனாகிய அவ்வரசன்,—நாதன் அருளால் ஒரு படி விடைகொள்ளா - சிவபெருமானது திருவருளால் ஒருவாறு அநுமதி பெற்றுக் கொண்டு,—பால் பொன் மிளிர் தரும் நன்கு ஆர் ஒளிர் மனைபுக்கான் - பக்கத்திலே பொற் பிரகாசத்தை வீசுகின்ற அழகு நிறைந்து விளங்குகின்ற தமது மாளிகையிற் போய்ச் சேர்ந்தான்,—இவனிலும் மிக்கார் உண்டு என்பார் இலை - இவ்வரசனைபார்க்கினு மேம்பட்டவர்கள் உண்டென்று சொல்பவர்கள் ஒருவருமில்லை,—பெறும் இன்பு ஆர்கதி அளவு இது என்று உரை செய வல்லார் யார் - இவ்வரசன் அடைகின்ற இன்பம் பொருந்திய மோக்ஷத்தினளவு இதுவென்று சொல்ல வல்லவர்கள் யாவர்? (ஒருவருமில்லை).—எ. று. ()

வேறு.

தக்க சேரலர் மன்னவன் றன்மையீ திப்பான்
மிக்க காவல னேவலால் விரைவினர் சூழத்
தொக்க பொற்சுமை யெடுத்தணை துச்சகன் றானுந்
திக்கெ லாம் புகழ் தில்லையம் பதியிடைச் சேர்ந்தான்.

(இ-ள்) தக்க சேரலர் மன்னவன் தன்மை ஈது - தகுதிபொருந்திய சேர தேசத்தார்க் கரசனாகிய சபாபதிப்பிரிய னென்னும் அரசனது தன்மையை இதுவரையுஞ் சொன்னோம்,— இப்பால் - இனிமேல்,—மிக்க காவலன் ஏவலால் விரைவினர் சூழ தொக்க பொன் சுமை எடுத்து அணை துச்சகன் தானும் - மேம்பாடு பொருந்திய அவ்வரசனது ஏவதலினால் காவற்காரர்கள் நெருங்கிச் சூழ்ந்துவரக் கட்டப்பட்டதாகிய பொற்சுமையை யெடுத்துக் கொண்டு வந்த துச்சகன் என்னும் வேடனானவன்,—திக்கு எலாம் புகழ் தில்லையம்பதி இடைச் சேர்ந்தான்- அஷ்டதிக்கின் கணுள்ள யாவர்களும் புகழத்தக்க தில்லைவனமாகிய சிதம்பரத்தில் வந்து சேர்ந்தான்.—எ.று.(கஙு)

படியி லாதவப் பார்த்திப னேவலோர் சுமையைக்
கடிது வாங்கினர் துற்றவக் கணத்தி னப்பதியிற்
கொடிய வெப்புநோய் வருநெறிக் கோடலான் வருந்தி
முடிவி லாவினை முடிந்திட வாருயிர் முடிந்தான்.

(இ-ள்) படி இலாத அப்பார்த்திபன் ஏவலோர் சுமையைக்கடிது வாங்கினர் - ஒப்பில்லாத அவ்வரசனது ஏவலாளர்கள் அப்பொற்சுமையைச் சீக்கிரத்தில் வாங்கினார்கள்,—அப்பதியில் துற்ற அக்கணத்தில் வரும் நெறி கொடிய வெப்பு நோய் கோடலால் வருந்தி - அச்சிதம்பரத்தில் அத்துச்சகன் வந்த அப்பொழுது, வழியிலுண்டாகிய கொடிய சுரநோயால் வருத்தமுற்று,—முடிவு இலா வினை முடிந்திட ஆர் உயிர் முடிந்தான் - அளவில்லாத வினைப்பயன் முடிய அத்துச்சகன் இறந்தான்.—எ. று. (கச)

கற்ப காடக மலர்மழை கடவுளர் பொழியப்
பொற்ப ராகமோ டரம்பையர் வரம்பிலர் புகழ
விற்ப ராவிய விமானமேல் விளங்கியங் கவனுஞ்
சிற்ப ரானந்த ரடையுமச் சிவபத மடைந்தான்.

(இ-ள்) ஆடக கற்பக மலர் மழை கடவுளர் பொழிய - பொன்னிறம்பொருந்திய கற்பகப்பூமழையைத் தேவர்கள் பொழியவும்,—

வரம்பு இலர் அரம்பையர் பொற்ப ராக மோடு புகழ - அளவில்லாதவர்களாகிய தெய்வப்பெண்கள் அழகிய இராகத்தோடு ஸ்தோத்திரஞ் செய்யவும்,—அங்கு அவனும் வில் பராவிய விமானமேல் விளங்கி - அப்பொழுது அத்துச்சகனும் ஒளி பரந்த தேவவிமானத்தின்மேல் விளங்கி,—சித்பர ஆனந்தர் அடையும் அச் சிவபதம் அடைந்தான் - மேலாகிய ஞானானந்தத்தையுடைய பெரியோர்கள் அடையத்தக்க அந்தச் சிவலோகப் பதவியை யடைந்தான்.—எ. று. (கரு)

சற்பகாடவிமலர் மழை எனவும் பாடம்.

ஆதி நாயக னாடலைக் கண்டில னேனுங்
கோதி லாப்பதி யதனிடைத் துஞ்சலாற் குறியாப்
பாத கம்புரி துச்சகன் முத்தியிற் படர்ந்தா
னீது சத்தியஞ் சத்திய மிசைக்குமா றெவனோ.

(இ-ள்) குறியாப் பாதகம் புரி துச்சகன் - கணக்கிட்டுக்குறிக்க முடியாதபாவங்களைச்செய்த அத்துச்சகன்,—ஆதிநாயகன் ஆடலைக் கண்டிலன் எனும் - முழுமுதற் கடவுளாகிய நடேசப்பெருமானது திருநிருத்தத்தைத் தரிசியாதவனாயினும்,—கோது இலாப் பதி இடைத் துஞ்சலால் - குற்றமில்லாத அச்சித்தம்பரஸ்தலத்தில் இறந்தபடியால்,—முத்தியில் படர்ந்தான் - மோக்ஷத்தையடைந்தான்,—ஈது சத்தியம் சத்தியம் - இது உண்மை! உண்மை!!!,—இசைக்கும் ஆறு எவனோ - சொல்லுந் தன்மை வேறு யாது?—எ. று. (கசு)

அண்ண லாடலைக் கண்டில ராயினு முத்தி
யெண்ணில் கோடிய ரிறந்துடன் பெற்றவர் விண்ணு
மண்ணு நாரமு மரனுமப் பொதும்பரு மெந்தக்
கண்ணு மாய்ந்தவெவ் வுயிருநற் கதியடைந் திடுமால்.

(இ-ள்) அண்ணல் ஆடலைக் கண்டிலர் ஆயினும் - நடேசப் பெருமானது திரு நிருத்தத்தைத் தரிசியாதவர்களாயினும்,—எண்ணில் கோடியர் இறந்து உடன் முத்தி பெற்றவர் - அளவில்லாத கோடிபேர்கள் (அத்தலத்தில்) இறந்து உடனே மோக்ஷத்தையடைந்தவராவார்கள்,—விண்ணும் மண்ணும் நாரமும் மரனும் அப்பொதும்பரும் எந்தக் கண்ணும் மாய்ந்த எவ்வுயிரும் நல்கதி அடைந்திடும் - (அச்சிதம்பரத்தில்) ஆகாயம் பூமி ஜலம் மரம் அந்தச்சோலை என்று சொல்லப்பட்ட எவ்விடங்களிலாயினும் இறந்த எந்த உயிர்களும் மோக்ஷத்தையடையும்,—எ. று. ஆல் அசை. (கஎ)

பொருவி னுரவப் புணரியிற் புணரொரு மீனோ [த்தின்
ரெருவை முன்கொணர்ந் தணிதில்லை யெல்லையோர் மர
மருவி யக்கயல் கொன்றுண மாய்ந்தவவ் வுயிர்போய்க்
கருத ரும்பெரு முத்தியைப் பெற்றதக் கணத்தில்.

(இ-ள்) பொருவு இல் நார அப்புணரியில் புணர் ஒரு மீன் - ஒப்பில்லாத ஜலத்தையுடைய அச்சமுத்திரத்திற் பொருந்திய ஒரு மீனை,—ஓர் எருவை முன் கொணர்ந்து - ஒரு கழுகு முன்னே எடுத்துக்கொண்டு வந்து,—அணி தில்லை எல்லை ஓர் மரத்தின் மருவி - அழகிய சிதம்பரத்தின் எல்லையிலுள்ள ஒரு மரத்தின் மேலிருந்து,—அக்கயல் கொன்று உண - அந்தக் கெண்டைமீனைக் கொன்று புசிக்க,—மாய்ந்த அவ்வுயிர் போய் அக்கணத்தில் கருதரும் முத்தியைப் பெற்றது- இறந்த அம்மீனின் ஆன்மாவானது அப்பொழுதே நினைத்தற்கரிய மோக்ஷத்தையடைந்தது.—எ. று. (கூஅ)

ஈது போலவிவ் வெல்லையி னமலநீர் வானம்
பூத லந்தனி லிறந்துமுன் னற்கதி புகுந்தோ
ரோதி னெண்ணில ராதலா லாடல்கண் ணுறுமற்
சாத லத்தலத் தெய்தினு முத்திசத் தியமால்.

(இ-ள்) ஈது போல அமல இவ்வெல்லையில் - இதுபோல் மலத்தை நீக்கத் தக்கதாகிய இச்சிதம்பரத்தினது எல்லையில்,—நீர் வானம் பூதலம் தனில் இறந்து முன் நல் கதி புகுந்தோர்-ஜலத்திலேனும் ஆகாயத்திலேனும் பூமியிலேனும் இறந்து முன்னே மோக்ஷமடைந்தவர்கள்,—ஓதில் எண்ணிலர் - சொல்லுமிடத்து அளவில்லாதவர்களாவார்கள்,—ஆதலால் - ஆகையால்,—அத்தலத்தில் ஆடல் கண்ணுறுமல் சாதல் எய்தினும் - அந்தஸ்தலத்தில் (நடேசப் பெருமானது) திருநிருத்தத்தைத் தரிசியாமல் இறந்தாலும்,—முத்தி சத்தியம்-மோக்ஷத்தையடைதல் சத்தியமாகும்.-எ. று. ஆல் அசை. ()

பொதுவி னாடலைக் காணிலப் புரத்திடை மாயிற்
கதி யடைந் திடக் கண்டனங் கடற்றலத் தெந்தப்
பதியினும் பெரி திப்பதி பகர்விராட் புருட
னிதய பங்கய மீதென விருக்கைசைத் தலினால்.

(இ-ள்) பொதுவின் ஆடலைக் காணில் அப்புரத்திடை மாயில் கதி அடைந்திடக் கண்டனம் - கனகசபையிற் செய்தருளுந் திரு

நிருத்தத்தைத் தரிசித்தாலும் அந்த ஸ்தலத்திலிறந்தாலும் மோக்ஷத்தையடைய யாம் பார்த்தோம்,—பகர் விராட்புருடன் இதய பங்கயம் ஈது என இருக்கு இசைத்தலினால் - சொல்லப்படுகின்ற விராட்புருடனுடைய இருதய கமலஸ்தானம் இச்சிதம்பர ஸ்தலமென்று வேதங்கள் சொல்லுதலினால்,—கடல் தலத்து எந்தப் பதியினும் இப்பதிபெரிது - கடலாற்சூழப்பட்ட பூமியின் கண்ணுள்ள எந்த ஸ்தலத்தினும் இச்சிதம்பரஸ்தலம் பெரிதாகும்.—எ. று. (கOO)

கவை யிகந்தமா மகிழ்ச்சியைக் கருத்துறின் மற்றை
யவைய வங்களு நின்னல தாயினு மணியா
நவை படிந்துயர் கருத்துறி னவில வயவங்க
ளெவையு மெவ்வணி யெய்தினும் மிலகுமோ விலகா.

(இ-ள்) கவை இகந்த மா மகிழ்ச்சியைக் கருத்து உறின் - கவலையினின்று நீங்கிய பெரிய சந்தோஷத்தை மனமானது அடையுமாயின்,—மற்றை அவயவங்களும் நின்னலது ஆயினும் - மற்றை அவயவங்களும் உன் வசப்படாததாயினும்,—அணியாம் - அவையுமழகையுடைய தாகும்,—நவை படும் துயர் கருத்துறின் - குற்றம் பொருந்திய துன்பத்தை மனமடையுமாயின்,—நவில் அவயவங்கள் எவையும் எவ்வணி எய்தினும் இலகுமோ இலகா - சொல்லப்படுகின்ற அவயங்களெல்லாம் எந்த ஆபரணத்தை யணிந்தாலும் பிரகாசிக்குமோ? பிரகாசிக்கமாட்டா.—எ. று. (கOக)

இன்ன தென்னமன் றிறைகொளும் பூசையாலெந்த
நன்னெ டும்பதிப் பூசையு நடந்ததே யாகும்
பொன்னி னம்பல வாணர்க்குப் பூசையின் றேலப்
பன்னெ டும்பதிப் பூசையாற் பயன்கள்வே றென்னே.

(இ-ள்) இன்னது என்ன மன்று இறை கொளும் பூசையால் - இத்தன்மைபோல் கனகசபையி லெழுந்தருளியிரா நின்ற நடேசப்பெருமான் எற்றருளுகின்ற பூசையினால்,—எந்த நல் நெடும் பதிப் பூசையும் நடந்ததே யாகும் - மற்றுள்ள எந்த நல்ல பெரிய ஸ்தலங்களிலும் பூசை நடந்ததேயாகும்,—பொன்னின் அம்பலவாணர்க்குப் பூசை இன்றேல் - பொன்னம்பலவாணராகிய நடேசப்பெருமானுக்குப் பூசை நடவாதாயின்,—வேறு அப் பல் நெடும் பதிப் பூசையால் பயன் என்னே - வேறாகிய அந்தப் பலவகைப்பட்ட பெரிய ஸ்தலங்களிற் செய்யப்படும் பூசையினாலே என்ன பிரயோசனம்.—எ. று.()

பொருவி னுள்ளமோ டன்றியே கண்முதற் புலன்க
ளுருவ மாதிய விடயங்க ளுணருமோ வுணரா
கருது மவ்வுளம் புலத்தொகை கடந்திடா தெனினு
மருவு துன்பொடின் புணர்தர வல்லதே யதுபோல்.

(இ-ள்) பொருவு இல் உள்ளம் ஓடு அன்றி - ஒப்பில்லாத மனதோடு கூடி யல்லாமல்,—கண்முதல் புலன்கள் - கண்முதலிய ஐம்புலன்களும்,—உருவம் ஆதிய விடயங்கள் உணருமோ உணரா - வடிவமுதலிய விஷயங்களை யறியுமோ? அறியா;—கருதும் அவ்வுள்ளம் புலத்தொகை கடந்திடாது எனினும் - நினைக்கின்ற அம்மனமானது ஐம்புலக் கூட்டங்களைக் கடவாதிருந்தாலும்,—மருவு துன்பொடு இன்பு உணர்தர வல்லதே - பொருந்திய துன்பமும் இன்பமுமறியத் தக்கதேயாம்,—அதுபோல் - அதுபோல.—எ. று. (கoரு)

வாண லந்திக ழம்பல வாணனைச் சென்று
கா லன்றியெத் தலங்களைக் காணினும் பயனென்
சேணி லங்குமச் சிதம்பரத் திருநடங் கண்டா
லாண வப்பெரும் பகையறுத் தருளடைந் திடலாம்.

(இ-ள்) வாள் நலம் திகழ் அம்பல வாணனைச் சென்று காணல் அன்றி - ஒளியினாலும் அழகினாலும் விளங்காநின்ற கனகசபையி லெழுந்தருளியிருக்கின்ற நடேசப்பெருமானைப் போய்த் தரிசியாமல்,—எத்தலங்களைக் காணினும் பயன் என் - வேறு எந்த ஸ்தலங்களைத் தரிசித்தாலும் பிரயோசனம் யாது?—சேண் இலங்கும் அச்சிதம்பரத் திருநடம் கண்டால் - ஆகாயபரியந்த முயர்ந்து விளங்காநின்ற அச்சிதம்பரஸ்தலத்திற் செய்யப்படுந் திருநிருத்தத்தைத் தரிசித்தால்,—ஆணவப் பெரும் பகை அறுத்து அருள் அடைந்திடலாம் - ஆணவமாகிய பெரிய பகையை நீக்கி நடேசப் பெருமானது திருவருளை யடையலாம்.—எ. று. (கoச)

சொற்ற தின்னதேற் சுருதிநா யகனிடங் கொண்ட
நற்ற லங்களா லாவதென் னென்னினுன் மறைகண்
முற்று நாடருஞ் சிதம்பர மூர்த்தியைக் காண்டற்
குற்ற வத்தலக் காட்சிக ளேதுவா முணரில்.

(இ-ள்) சொற்றது இன்னதேல் - மேற்சொல்லியது இவ்வாறாயின்,—சுருதி நாயகன் இடம் கொண்ட நல் தலங்களால் ஆவது

என் எனின் - வேத நாயகனுகிய சிவபெருமான் இடமாகக் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற நன்மை பொருந்திய மற்றைத் தலங்களினுலுண்டாகும் பிரயோசனம் யாதென்று வினவின்,—உணரில் - ஆராய்ந்து பார்க்குமிடத்து,—உற்ற அத்தலக் காட்சிகள் - பொருந்திய மற்றைத் தலங்களைத் தரிசித்தல் களானவை,—நான் மறைகள் முற்றும் நாடரும் சிதம்பரமூர்த்தியைக் காண்டற்கு எதுவாம் - நான்காகிய வேதங்கள் முழுதந் தேடுதற்கரிய சிதம்பரேசுரரைத் தரிசித்தற்கு எதுவாகும்.—எ. று. (௪0ரு)

ஆதி யம்பலங் காண்டலோ ரருந்தலங் காணற்
கேது வாகுமோ விமையவ ரெண்ணிலா மூர்த்தி
பேத முள்ளன வாணவப் பெரும்பிணக் கறுத்தோர்
போத நாடிய பரசிவப் பொலிவையொப் பாமோ.

(இ-ள்) ஆதிஅம்பலம் காண்டல் ஓர் அரும் தலம் காண்டற்கு ஏதுஆகுமோ - எல்லாத்தலங்களுக்கு முதன்மையாகிய திருச்சிற்றம்பலத்தைத் தரிசித்தல் வேறு ஓர் அருமையாகிய ஸ்தலத்தைத் தரிசித்தற்குக் காரணமாகுமோ? (ஆகாது),—இமையவர் - தேவர்களும்,—எண்ணிலா பேதமுள்ளன மூர்த்தி - அளவில்லாத பேதங்களையுடைய மூர்த்திகளும்,—ஆணவப் பெரும் பிணக்கு அறுத்தோர் போதம் நாடிய பரசிவப் பொலிவை ஒப்பாமோ - ஆணவ மலத்தின் பெரிய பிணக்கை நீக்கிய பெரியோர்கள் ஞானத்தினுலறியத்தக்க சிவபெருமானது பிரகாசத்துக்கு ஒப்பாகுமோ? (ஆகாது).—எ. று. (௪0சு)

ஆய போலருட் சைவநற் றலங்களி னழியாத்
தூய விப்பதி தூயது சுருதியாற் றவத்தான்
மேய செய்கையு ளெவற்றினுல் விளங்கிய பொதுவி
னேய நாடகங் காண்டற்கு முயல்வதே யியல்பாம்.

(இ-ள் ஆய போல் அருள் சைவ நல்தலங்களின் - ஆகிய இவைகள் போல் திருவருள் விளங்குகின்ற நல்ல சிவஸ்தலங்களைப் பார்க்கினும்,—அழியா தூய இப்பதி தூயது - யாதொருகாலத்திலும் அழிதலில்லாத பரிசுத்தமாகிய இச்சிதம்பரஸ்தலம் பரிசுத்த முடையதாகும்,—(ஆகையால்),—சுருதியால் தவத்தால் மேய செய்கை உள்ள எவற்றினுல் விளங்கிய பொதுவின் நேய நாடகம் காண்டற்கு முயல்வதே இயல்பாம் - வேதங்களினுலும் தவங்களினுலும் பொருந்திய கர்மங்களினுலும் பிரகாசியாநின்ற கனக சபையினிடத்தே விரும்பித

தோடு செய்யத் தக்க ஆனந்த தாண்டவத்தைத் தரிசிப்பதற்கு முயற்சி செய்வதே தகுதியாகும்.—எ. று. (கoஎ)

எந்த நல்வினைத் தலங்களு மித்தலங் காணும்
பந்த வாதர முளதெனிற் பயன்பெறு மில்லையேன்
முந்து மப்பய னில்லையலை புலன்முரண் முருக்குஞ்
சிந்தைமாதவ வின்னமுஞ் செப்புவன் கேண்மோ.

(இ-ள்) அலை புலன் முரண் முருக்கும் சிந்தை மாதவ - அலைகின்ற மாறுபடுதலையுடைய ஐம்புலன்களின் வலிமைகளைக் கெடுக்கின்ற மனதையுடையசைமினி முனிவனே,—எந்த நல்வினைத் தலங்களும் இத்தலம் காணும் பந்த ஆதரம் உளது எனின் பயன் பெறும் - எப்படிப்பட்ட புண்ணிய ஸ்தலங்களும் இச்சிதம்பர ஸ்தலத்தைத் தரிசிக்கவேண்டுமென்னும் உறுதியையுடைய ஆசையானது மனதினிடத்திலிருக்குமாயின், அது பிரயோசனத்தையடையும்,—இல்லையேல் - அப்படி இல்லாதாயின்,—முந்தும் அப்பயன் இலை - முன்சொல்லிய அப்பிரயோசனமுமில்லை; இன்னமும் செப்புவன் கேண்மோ - (ஆகையால்) இன்னமுஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக.—எ. று. (கoஅ)

வேறு.

இத்தல மமர்ந்து மன்று ளிருபதங் கண்டு முத்தி,
சத்திய மென்னு தையஞ் சார்ந்து வேறோர் தலத்தின், மெய்த்தவம் புரிந்து மாய்ந்தோர் வீட்டின்ப மெய்த லாகார், நித்தவம் பலத்துள் ளானை நிந்தை செய்கையினு லம்மா.

(இ-ள்) இத்தலம் அமர்ந்து மன்றுள் இருபதம் கண்டு முத்தி சத்தியம் என்னாது - இச்சிதம்பர ஸ்தலத்திலிருந்து கனக சபையில் நடேசப் பெருமானது இரண்டு திருவடிகளையுந் தரிசித்து. மோக்ஷமடைதல் உண்மை என்று நினையாமல்,—ஐயம் சார்ந்து வேறு ஓர்தலத்தில் மெய்த் தவம் புரிந்து மாய்ந்தோர் - சந்தேகப்பட்டு வேறொரு ஸ்தலத்தையடைந்து உண்மையாகிய தவத்தைச் செய்து இறந்தவர்கள்,—நித்த அம்பலத்துள்ளானை நிந்தை செய்கையினால் - அழிவில்லாததாகிய கனக சபையிலெழுந்தருளி யிருக்கின்ற நடேசப் பெருமானை நிந்தித்த படியால்,—வீட்டு இன்பம் எய்தல் ஆகார் - மோக்ஷசுகத்தை யடையார்கள்,—எ. று. (கoகூ)

இருடரு பேரவத்தை யிறுதியி னிதயந் தன்னிற், கரு விக ளொடுங்கு மாபோற் கருதிய பதிகள் யாவும், பொருவ ரும் புண்டரீக புரத்திடை யொடுங்கு மீச, னுருவமா மிது வென் ஞான்று மொடுங்குறா துண்மை யாயால்,

(இ-ள்) இருள் தரு பேர் அவத்தை இறுதியில் கருவிகள் இதயந் தன்னில் ஒடுங்குமா போல் - மயக்கத்தைத் தருகின்ற பெரிய அவஸ்தையை யுடைய மரணாந்த காலத்தில் (தத்துவமுதலிய) கருவிகளெல்லாம் இருதயத்தில் ஒடுங்குகின்ற தன்மையைப்போல,- கருதிய பதிகள் யாவும் பொருவரும் புண்டரீக புரத்திடை ஒடுங்கும் - மதிக்கத்தக்க மற்ற ஸ்தலங்களெல்லாம் ஒப்பில்லாத சிதம்பரத்தில் ஒடுங்கும்,—இது ஈசன் உருவம் - இது சிவ சொரூபமாகும்,—என்ஞான்றும் ஒடுங்குறாது - (ஆதலால்)இது எந்நாளிலும் அழியாது;—உண்மை ஆம் - இது சத்தியமாகும். -எ. று. (சக௦)

எப்பதி களினு முள்ள விறையருண் மூர்த்தி யாவுஞ் செப்பருஞ் சிதம்ப ரத்துட் டிருவத்த யாமந் தன்னி, லொப் புற வடைத லானூ லுரைக்குமெக் காலத் துள்ளு, மப்பெ ருங் காலச் சேவை யதிகவுத் தமமா மென்றே.

(இ-ள்) எப்பதிகளினும் உள்ள அருள் இறை மூர்த்தியாவும் - எந்த ஸ்தலங்களினுமுள்ள கிருபை பொருந்திய சிவபெருமானுடைய மூர்த்தங்களெல்லாம்,—செப்பரும் சிதம்பரத்துள் திரு அத்த யாமந் தன்னில் ஒப்பு உற அடைதலால் - துதித்தற்கரிய சிதம்பரஸ்தலத்தில் திருவர்த்த சாம காலத்தில் ஒருமிக்க வந்து தரிசித்தலால்,—எக்காலத்துள்ளும் அப்பெருங் காலச் சேவை அதிக உத்தமம் ஆம் என்று நூல் உரைக்கும் - எந்தக்கால தரிசனத்தினும்அந்த அர்த்த சாமகால தரிசனம் மிகவும் மேலானதென்று சாஸ்திரங்கள் சொல்லும்.—எ. று. (கசக)

ஐவகைத் தொழிலுக் கேற்ற வைவகைக் கடவு ளெல் லாந், தெய்வத வடிவ மான சிவபரன் வடிவதாகு, மெய்வளர் தில்லை யெல்லை விடாமலங் குறைகின் றனெனுஞ், சைவநா யக னென் றுலோர் தலங்கண்மற் றதின்வே றுண்டோ.

(இ-ள்) ஐவகைத் தொழிலுக்கு ஏற்ற ஐவகைக் கடவுள் எல்லாம் - (சிருஷ்டி முதலிய) பஞ்சகிருத்தியஞ் செய்தற்குரிய பஞ்ச

நிருத்திய மூர்த்திக ளெல்லாம்,—தெய்வத வடிவமான சிவபரன் வடிவதாகும் - தெய்வ வடிவமாகிய சிவசொரூபமாக விளங்குகின்ற,—மெய் வளர் தில்லை எல்லை விடாமல்-உண்மை விளங்குகின்ற சிதம்பரத்தினது எல்லையை விடாமல்,—எம் சைவநாயகன் அங்கு உறைகின்றான் என்றால் - எமது சிவபெருமான் அவ்விடத்திலெழுந்தருளியிருக்கின்றான் என்று சொல்லுவார்களாயின்,—அதின் வேறு ஓர் தலங்கள் உண்டோ - அதைப் பார்க்கினும் வேறொரு ஸ்தலங்கள் உண்டோ? (இல்லை)—எ. று. மற்று. அசை. (ககூ)

மாலயன் முதலா யுள்ள வானவர் குழுவுக் கெல்லா,
மேலவன் புராரி யென்று விரித்திடுஞ் சுருதி யாவுந், தால
மேற் றலங்க ளிந்தத் தலத்தினுக் கொவ்வா தென்றென்,
றோலிடு மந்தவேத முரைக்கலாந் தகைமைத் தன்றால்.

(இ-ள்) மால் அயன் முதலா உள்ள வானவர் குழுவுக்கு எல்லாம் - விஷ்ணுமூர்த்தி பிரமதேவர்முதலியதேவகூட்டங்களுக்கெல்லாம்,—புராரி மேலவன் என்று சுருதி யாவும் விரித்திடும் - திரிபுரசம்மாரியாகிய சிவபெருமானே மேலானவனென்று வேதங்களெல்லாம் சொல்லும்,—ஓலிடும்அந்தவேதம் - இவ்விதமாக ஓலமிடுகின்ற அந்தவேதமானது,—தாலமேல் தலங்கள் இந்தத் தலத்தினுக்கு ஒவ்வாது என்று என்று உரைக்கலாம் தகைமைத்து - பூமியினிடத்துள்ள மற்ற ஸ்தலங்கள் இச்சிதம்பரஸ்தலத்துக்கு ஒப்பாக மாட்டா என்று என்று சொல்லுந்தகுதியை யுடையதாகும்.—எ.று.ஆல் அசை.

அதிகமொப் பானதேவ ரான்றனக் கில்லை தில்லை, முது
பதி தனக்கு மிந்த முறைமைவா னவரை வேணி, மதியவற்
கொப்பென் றுள்ளு மனத்தரே பதித ரெந்தப், பதியுமிப்
பதிக்கொப் பென்னும் பதகரும் பதித ராவார்.

(இ-ள்) அரன் தனக்கு அதிகம் ஒப்பு ஆன தேவர் இல்லை - சிவபெருமானுக்கு மேலாக வேனும் சமமாக வேனும் முள்ள கடவுள் ஒருவருமில்லை,—முது தில்லை பதி தனக்கும் இந்த முறைமை - பழமையாகிய இச்சிதம்பரஸ் தலத்திற்கு மிந்த முறைமையாகவே மேலுஞ் சமமுமுள்ள வேறொரு ஸ்தலமுமில்லை;—வானோரை வேணி மதியவற்கு ஒப்பு என்று உள்ளும் மனத்தரே பதிதர்-மற்றைத்தேவர்களைச் சடையினிடத்தே சந்திரனை யணிந்த சிவபெருமானுக்குச் சமமென்று நினைக்கின்ற மனதையுடையவர்கள் பதிதராவார்கள்;—எந்தப் பதியும் இப்பதிக்கு ஒப்பு என்னும் பதகரும் பதிதர் ஆவர் -

(அதுபோல்) எந்த ஸ்தலங்களையும் இச்சிதம்பரஸ் தலத்துக்குச் சமமென்று நினைக்கின்ற பாவிகளும் பதிதராவார்கள்.—எ. று. (கககச)

ஓதுபன் னெறியுள் வேத வொழுக்கமே யுயர்ச்சி முத்தி, சாதனம் பலவுட் பூதி சாதனம் தலைமை வெற்பின், மாதொரு பாகற் கேற்க வழிபடும் பூசை தன்னு, ளாதர மவன்ற னன்பர்க் கன்பினி லளிக்கும் பூசை.

(இ-ள்) ஓது பல் நெறியுள் வேத ஒழுக்கமே உயர்ச்சி - சொல்லப்பட்ட பலவகை ஒழுக்க வழிகளுள்ளே வேதத்திற் சொல்லிய ஒழுக்க வழியே வுயர் வுடையதாகும்,—முத்திசாதனம் பலஉள் பூதி சாதனம் தலைமை - மோக்ஷத்தைத் தரத்தக்க சாதனங்கள் பலவற்றுள்ளே விபூதிசாதனமே முதன்மையாகும்,—வெற்பு மாது ஒரு பாகற்கு எற்க வழிபடும் பூசை தன்னுள் - இமயமலையிற் பிறந்தருளிய உமாதேவியை ஓர்பாகத்திலேயுடைய சிவபெருமானுக்கு எற்கும்படி செய்கின்ற பூசைகளுள்ளே,—அவன் தன் அன்பர்க்கு அன்பினில் அளிக்கும் பூசை ஆதரம் - அச்சிவபெருமானுடைய அடியார்களுக்கு அன்போடு செய்யப்படும் பூசையே (அச்சிவபெருமானுக்கு) விருப்பத்தைத் தரும்.—எ. று. (ககடு)

வேதமந் திரத்துட் போத மிகுஞ்சத வுருத்தி ரம்பே, ராதிமந் திரத்தி னுடு மஞ்செழு த்ததிக மென்று, மேதமில றங்க ளாதி யீந்திடும் விரதந் தன்னிற், சீதரன் முதலோர் பேணுஞ் சிவார்ச்சனை பெரிய தாகும்.

(இ-ள்) வேத மந்திரத்துள் சத உருத்திரம் போதம் மிகும் - வேதத்திற் சொல்லிய மந்திரங்களுள் உருத்திர சதமந்திரமே ஞானத்தை மிகுதியாகத்தரும்,—பேர் ஆதி மந்திரத்தில் நாடும் அஞ்செழுத்து அதிகம் - மேற்சொல்லிய பெயரையுடைய உருத்தி சதமுதலிய மந்திரங்களுக்குள்ளே ஆராயத்தக்க ஸ்ரீ பஞ்சாட்சரமே அதிகமாகும்,—என்றும் எதம் இல் அறங்கள் ஆதி ஈந்திடும் விரதம் தன்னில் - எப்பொழுதுங் குற்றமில்லாத புண்ணிய முதலியவைகளைக் கொடுக்கத்தக்க விரதங்களில்,—சீதரன் முதலோர் பேணும் சிவார்ச்சனை பெரியதாகும் - விஷ்ணுமூர்த்தி முதலிய தேவர்களால் விரும்பத்தக்க சிவபூசை செய்தலாகிய விரதமே பெரிதாகும்,—எ. று. ( )

வருணமெண்ணில ரவற்றுண் மறையவ ருயர்ந்தோர் நீதி, யருளு மாச்சிரமந் தன்னுட் டுறந்தவ ரதிகரன்பு, பெரு

கிய வறத்திற் கொல்லாப் பேரறம் பெரிது நன்கு, தருபவர வருட் டக்க தேசிகர் தலைவராவர்.

(இ-ள்) வருணம் எண்ணிலர் அவருள் மறையவர் உயர்ந்தோர்-(உலகத்தில்)அனேக வருணத்தார்கள் உண்டு அவர்களுள் பிராமணர்களே உயர்ந்தோராவார்கள்,—நீதி அருளும் ஆச்சிரமம் தன்னுள் துறந்தவர் அதிகர் - நிதியைத்தருகின்ற ஆச்சிரமங்களுக் குள்ளே சந்நியாசாச்சிரமிகளே உயர்ந்தோர்களாவார்கள்,—அன்பு பெருகிய அறத்தில் கொல்லாப் பேர் அறம் பெரிது - அன்பு மிகுந்துசெய்யப் படும் தருமங்களுள் கொல்லாமையாகிய பெரியதர்மமே மேலானது;—நன்கு தருபவர் அவருள் தக்க தேசிகர் தலைவர் ஆவார் - புண்ணியத்தை யெடுத் துபதேசிப்பவருள் தகுதிபொருந்திய ஆசாரியரே மேலானவராவார்,—எ. று. (ககஎ)

பற்பல ஞானந் தன்னுட் பரசிவ ஞானமேலாம், பொற் புறு மிவைகள் போலப் புடவிமேற் பதிக டம்முட், கற்பனை யில்லா ஞான ககன மென் றிருக்கோ லிட்ட, வற்புதங் கொண்ட தில்லை யம்பல மதிகமன்றே.

(இ-ள்) பல் பல ஞானம் தன்னுள் பர சிவ ஞானம் மேலாம் - பல பலவாகிய ஞானங்களுக்குள்ளே மேன்மைபொருந்திய சிவஞானமே மேலானதாகும்,—பொற்பு உறும் இவைகள் போல - அழகு பொருந்திய (மேற்சொல்லிய) இவைகள் போல்,—புடவி மேல் பதிகள் தம்முள் - பூமியினிடத்துள்ள ஸ்தலங்களுக்குள்,—கற்பனை இல்லா ஞான ககனம் என்று இருக்கு ஒலிட்ட அற்புதம் கொண்ட தில்லை அம்பலம் அதிகம் - கற்பனையைக் கடந்ததாகிய ஞானகாசமென்று வேதங்கள் முழங்குகின்ற அற்புதங்களைத் தன்னிடத்துக் கொண்டிருக்கின்ற தில்லைவனத்தி கணுள்ள திருச்சிற்றம்பலமே மேலானதாகும். எ று. அன்று ஏ அசைகள். (ககஅ)

புகழுறும் புண்டரீக புரத்தினுக் கெந்த ஞான்று, நிகரதி கங்க ளில்லை நிகரதி கங்களாகப், பகர்பவனுடனோர் வார்த்தை புகர்ந்தவன் பாவிவேதஞ், சகலமு முணர்ந்துந் தேருன் றன் றந்தை தனய னல்லன்.

(இ-ள்) புகழ் உறும் புண்டரீக புரத்தினுக்கு எந்த ஞான்றும் நிகர் அதிகங்கள் இல்லை - துதிக்கத்தக்க புண்டரீக புரமென்று சொல்லப்படுஞ் சிதம்பரஸ்தலத்துக்கு எக்காலத்திலும் ஒப்பும்மேலா

னதும்ான ஸ்தலங்களொன்று மில்லை;—நிகர் அதிகவ்களாகப் பகர் பவனுடன் ஓர் வார்த்தை பகர்ந்தவன் பாவி - ஒப்பாகவேனும்மேலா கவேனுஞ் சொல்லிக்கொண்டிருப்பவனோடு ஒருவார்த்தை பேசின வன் பாவியாவான்,—வேதம் சகலமும் உணர்ந்தும் தேறான் - வேத ங்களெல்லாவற்றையு மறிந்திருந்தும் (அவன்) தெளிவில்லாதவனா வன்;—தன் தந்தை தனயன் அல்லன் - அவன் தன் பிதாவுக்குப் பிறந்த புத்திரன் ஆகான்.—எ. று. (கககூ)

போகமும் வீடு மன்றுட் புனிதனைக் கண்டா லன்றி, யாகுமோ பதிக ளிங்ஙன் றாற்றிய வறங்க ணீத்து, மாகமார் புரிசைத் தில்லை மாநகர் நோக்கி யன்பா, லேகுதி முனிவ முத்தி யெதிர்ந்த வப்போதே யெய்தும்.

(இ-ள்) போகமும் வீடும் மன்றுள் புனிதனைக் கண்டால் அன்றி ஆகுமோ - போகமும் மோக்ஷமும் கனகசபையிலெழுந்தருளியிருக் கும்பரிசுத்தராகிய நடேசப் பெருமானைத்தரிசித்தா லல்லாமல் உண் டாகுமோ?(உண்டாகமாட்டா. ஆதலால்),—முனிவ - சைமினிமுனி வனே,—இங்ஙன் பதிகள் ஆற்றிய அறங்கள் நீத்து - இப்பூமியினிடத் துள்ள மற்ற ஸ்தலங்களிற் செய்யப்பட்ட புண்ணியங்களை யொழி த்து,—அன்பால் மாகம் ஆர் புரிசைத்தில்லை மாநகர் நோக்கி ஏகுதி - அன்போடு ஆகாயத்தை யளாவாநின்ற மதில்களை யுடைய பெரிய தில்லைவனம் என்று சொல்லுகின்ற சிதம்பரஸ்தலத்தைநோக்கிச்செ ல்லக்கடவாய்,—எதிர்ந்த அப்போதே முத்தி எய்தும் - அந்தஸ்தலம் எதிர்ப்பட்ட அப்பொழுதே மோக்ஷமுண்டாகும்.—எ. று. (க௨0)

பத்தியு நியமந் தானு முயற்சியும் பழுதொன் றின்றி, முத்தியு முத்தி நல்கு முழுமுத றானு நீங்காச், சத்தியுஞ் சிவமு மான தனிச்சுட ராடல் கண்டு, வித்தக வீடு காண்டி வேறிதற் கைய மின்றால்.

(இ-ள்) வித்தக - ஞானத்தையுடைய சைமினியே,—பத்தியும் நியமந்தானும் முயற்சியும் பழுது ஒன்று இன்றி - பத்தியிலும் நிய மத்திலும் முயற்சியிலும் யாதொரு குறைவு மில்லாதவனாகி,—முத் தியும் முத்தி நல்கும் முழுமுதல் தானும் - மோக்ஷகாரணனும் அம் மோக்ஷத்தைக் கொடுக்கு முழுமுதற் கடவுளும்,—நீங்காச் சத்தி யும் சிவனுமான - ஒன்றை யொன்று விட்டு நீங்காத சத்தியுஞ் சிவ முமாகிய,—தனிச்சுடர் ஆடல் கண்டு - ஒப்பில்லாத சோதிசொரூப

ராயுள்ள நடேசப்பெருமானுடைய திருநிருத்தத்தை தரிசித்து,—வீடு காண்டி - மோக்ஷத்தை யடையக்கடவாய்,—இதற்கு வேறு ஐயம் இன்று - இதற்கு வேறொரு சந்தேகமுமில்லை....எ. று. ஆல் அசை. (கஉக)

பேறிவை யென்று ளையம் பேதமை தன்று லுற்றோர்,
மாறிலா நிரயந் தன்னின் மாரௌ ரவத்தைச் சேர்வர்,
தேறுதி முனிவ வென்று செவித்துணை களிப்ப வன்பாற்,
கூறினன் புராணம் யாவுங் கூறிய கொள்கை மேலோன்.

(இ-ள்) பேதமை தன்னால் இவை பேறு என்றுது ஐயம் உற்றோர் - அறியாமையால் தாமடையக்கூடிய பேறு (மேற்சொல்லிய) இவைகள் தாம் என்று நினையாமல் சந்தேகப்பட்டவர்கள்,—மாறு இலா நிரயம் தன்னில் மா ரௌவரவத்தைச் சேர்வர் - மாறுபடுதலில்லாத நரகங்களிற் பெரிய ரௌரவ நகரத்தை யடைவார்கள்,—முனிவ தேறுதி என்று - சைமினிமுனிவனே நீ தெளிந்துகொள்ளக்கடவாய் என்று,—புராணம் யாவும் கூறிய கொள்கைமேலோன் - புராணங்களெல்லாவற்றையுஞ் சொல்லிய கோட்பாட்டையுடைய மேலோராகிய சூதமுனிவர்,—அன்பால் செவித்துணை களிப்பக்கூறினன் - அன்போடு (சைமினிமுனிவருடைய) இரண்டு செவிகளும் ஆனந்தத்தையடையும்படி சொல்லியருளினார். எ று. (கஉஉ)

து ச் ச க ச் ச ரு க் க மு ற் றி ற் று.

பாயிரம் உள்படச் சருக்கம் ச க்கு திருவிருத்தம் ௬௱௩.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

# நியமச்சருக்கம்.

வேறு.

சுரர்தொழ வீடு பெற்ற துச்சகன் சரிதந் தன்னில்
விரவிமுன் னறிந்த வாறு விளம்பின மிப்பா லிப்பார்
பரவிய தொல்லைத் தில்லைப் பதியிடை யுறைவோர் தங்கள்
வரமிகு நியமந் தன்னை வகுத்துரை செய்ய லுற்றாம்.

(இ-ள்) சுரர் தொழ வீடு பெற்ற துச்சகன் சரிதம் தன்னில் - தேவர்கள் வணங்கும்படி மோக்ஷத்தையடைந்த துச்சகனுடைய சரித்திரத்தில்,—முன் விரவி அறிந்த வாறு விளம்பினம் - முன்னே நாம் பெரியோர்களுடன் கலந்து கேட்டறிந்த பிரகாரஞ்சொன்னோம்;—இப்பால் - இனிமேல்,—இப்பார் பரவிய தொல்லைத் தில்லைப் பதியிடை உறைவோர்தங்கள் - இப்பூமியிலுள்ளோர்களாற் றுதிக்கப்படுகின்ற பழமையாகிய தில்லைவனத்தில் வசிப்பவர்களுடைய,—வரம் மிகும் நியமம் தன்னை வகுத்து உரைசெய்யல் உற்றாம் - மேன்மையுள்ள நியமங்களை விரித்துச் சொல்லுவாம்.—
எ. று. (க)

சலமகன் முனிவன் கூறச் சயிமினி யிவைக ளெல்லாங்
குலமறைப் பொருளே நீதி கொண்டதே சிகரன் பெய்தி
நலமிகு மெவையு மென்று நவிற்றுதல் கடனே யானிங்
கலமுற வுரைத்தா பொன்று மடியனேற் கையமின்றால்.

இ-ள்) சலம் அகல் முனிவன் கூற - கோபம் நீங்கிய சூத முனிவர் செல்ல,—சைமினி - இதைக்கேட்ட சைமினி முனிவர்,—இவைகள் எல்லாம் குலம் மறைப் பொருளே - தேவரீர் சொல்லிய இவைகளெல்லாங்கூட்டமாகிய வேதப்பொருளே யாகும்;—நீதி

கொண்ட தேசிகர் அன்பு எய்தி நலம் மிகும் எவையும் நவிற்றுதல் கடனே - தருமத்தைக் கைக்கொண்ட ஆசிரியர்கள் அன்பு பொருந்திய நன்மை மிகுந்த எந்தப் பொருள்களையும் உபதேசித்தல் முறைமையாகும்;—இங்கு யான் அலம் உற உரைத்தாய் - தேவரீர் இவ்விடத்தில் அடியேன் மனதில் அமையும்படி சொல்லியருளினீர்,—அடியனேற்குஒன்றும் ஐயம் இன்று - ஆதலால், அடியேனுக்கு யாதொரு சந்தேகமுமில்லை,—எ. று. (உ)

ஞானதே சிகர்க ளுண்மை நவிற்றிடி லதனுக் கைய
மானவர் பதிதரா த லதிசய மன்றே தில்லை
மானக ருறைந்து வாழு மாசிலா நியம மன்பு
தானுற வருள்செ யென்னத் தவமுனி சாற்ற லுற்றான்.

(இ-ள்) ஞான தேசிகர்கள் உண்மை நவிற்றிடில் அதனுக்கு ஐயமானவர் - ஞானாசாரியர்கள் உண்மைப்பொருளை உபதேசித்தால் அவ்வுபதேசப் பொருளைச் சந்தேகிப்பவர்கள்,—பதிதர் ஆதல் அதிசயம் அன்று - (அவர்கள்) பிரஷ்டராகுதல் ஆச்சரியமல்ல;—தில்லைமாநகர் உறைந்து வாழும் மாசு இலா நியமம் - சிதம்பரஸ்தலத்திலிருந்துவாழும்படியான குற்றமில்லாத நியமங்களை,—அன்புதான் உற அருள் செய் என்ன - அன்பு பொருந்தும்படி எனக்கு அனுக்கிரகஞ்செய்தருளுக என்று சைமினிமுனிவர் விண்ணப்பஞ்செய்ய,—தவமுனி சாற்றலுற்றான் - தவத்தையுடைய சூதமுனிவர்சொல்லத்தொடங்கினர்.—எ. று. தான் அசை. (௩)

யாதொரு தேயந் தன்னி லிருப்பவர் தில்லை யெய்துங்
காதல்கூர் நியமங் கொண்டு சிவார்ச்சனைக் கடன்கண் முற்றி
மாதவர் மறையோர்க் கேற்ற வந்தனை புரிந் திறைஞ்சி
யாதர மல்கப் போற்றி யவரருள் பெற்ற பின்னர்.

(இ-ள்) யாதொரு தேயம் தன்னில் இருப்பவர் - எதனுமொரு தேசத்திலிருப்பவர்கள்,—எய்தும் காதல் கூர் நியமம் கொண்டு - சிதம்பரஸ்தலத்தை யடையும்படி யானவிருப்ப மிகுந்து அதற்குரிய நியமங்களைக்கொண்டு,— சிவார்ச்சனைக் கடன்கள் முற்றி-சிவபூசை முதலிய நித்திய கருமக்கடன்களை முடித்து,—மாதவர் மறையோர்க்கு ஏற்ற வந்தனை புரிந்து இறைஞ்சி - பெரியதவத்தை யுடைய முனிவர்களுக்கும் பிராமணர்களுக்கும் செய்யத்தக்க வழிபாடுகளைச் செய்து வணங்கி,—ஆதரம் மல்கப் போற்றி - அன்பு மிகும்படி துதித்து,—அவர் அருள பெற்றபின்னர் - அவர்களுடைய திருவருளைப் பெற்ற பின்பு.—எ. று. (ச)

கட்டுறு காம மாதி கட்டற விட்டு வட்டை
கிட்டி மற்றியாரிடத்துங் கேண்மைகூரடிசில் கொள்ளா
தட்டதன் சொன்றி யென்று மிசைந்த யலார்தங்கையி
னெட்டுணைப் பொருளுங் கொள்ளா திறைபுகழ் பரவியெய்தி

(இ-ள்) கட்டுறு காமம் ஆதி கட்டு அற விட்டு - கட்டுப்பாடு பொருந்திய காமமுதலியவைகளை முழுதும் விட்டு,—வட்டை கிட்டி-வழிக்கொண்டுவந்து,—கேண்மை கூர் யார் இடத்தும் அடிசில் கொள்ளாது - சிநேகமிகுந்த யாரிடத்தும் போசனஞ் செய்யாமல்,—என்றும் அட்டதன் சொன்றி மிசைந்து,—எப்பொழுதும். சமைக்கப்பட்ட தன் சொந்த போசனஞ் செய்து,—அயலார் தம் கையின் எள் துணைப் பொருளும் கொள்ளாது - அன்னியர்கையில் எள்ளளவு பொருளும் வாங்காமல்,—இறை புகழ் பரவி எய்தி - சிவபெருமானது கீர்த்திகளைத் துதித்துக்கொண்டு சென்று.—எ. று மற்று அசை. (ரு)

சென்றுல கத்துண் மிக்க தில்லையம் பதியி னெல்லை
துன்றியங் கற்றை யுண்டி துறந்துமுண் டிதமு மெய்தித்
தன்றுணைக் கங்கை யாதி சேவிக்குந் தகைமை பூண்ட
பொன்றரு புண்டரீகப் பொய்கையைக் கண்டுபோற்றி.

(இ-ள்) உலகத்துள் மிக்க அம் தில்லைப் பதியின் எல்லை சென்று துன்றி - உலகத்தின் கணுள்ள சிவஸ்தலங்களின் மேம்பட்டதாகிய அழகிய சிதம்பரத்தினது எல்லையிற் போய்ச் சேர்ந்து,—அங்கு அற்றை உண்டி துறந்து - அவ்விடத்து அன்றையத்தினம் போசனத்தை விட்டு உபவாசஞ் செய்து,—முண்டிதமும் எய்தி - க்ஷௌரமுஞ் செய்துகொண்டு,—தன் துணைக் கங்கை ஆதி சேவிக்குந் தகைமை பூண்ட - தனக்குத்தானே ஒப்பாகிய கங்கை முதலிய தீர்த்தங்கள் வழிபடுகின்ற தகுதியையுடைய,—பொன் தரு புண்டரீகப் பொய்கைக் கண்டு போற்றி - பொற்பிரகாசம்பொருந்திய புண்டரீகப் பொய்கையாகிய சிவகங்கையைத் தரிசித்துத் துதித்து. எ.று

அன்புடன் மூழ்கி யேறி யருட்சிவ லோகத் திற்றன்
றென்புலக் கிழவர் வாழச் செய்வன சேய்தே யலிகம்
பொன்புவி கன்னி யன்னம் பசுத்துகில் புகன்ற தான
மின்பொலி சடையாற் பேணும் விளங்கு வேதியர்பானல்கி

(இ-ள்) அன்புடன் மூழ்கி எறி - அன்போடு அச்சிவகங்கையில் ஸ்நானஞ் செய்து கரையேறி,—தன் தென் புலக்கிழவர் சிவலோகத்தில் வாழச் செய்வன செய்து - தன்னுடைய பிதிரர்கள் சிவலோகத்திற் போய் வாழும்படி அவர்களைக் குறித்துச் செய்யத்தகுவனவாகிய பிண்ட தருப்பணங்களைச் செய்து,—அஃகம் பொன் புவி கன்னி அன்னம் பசுத் துகில் புகன்ற தானம் - விரைதானம், சுவர்ணதானம் பூதானம், கன்னிகாதானம, அன்னதானம், கோதானம், வஸ்திரதானம், என்று சொல்லப்பட்ட தானங்களை,—மின் பொலி சடையான் பேணும் விளங்கு வேதியர் பால் நல்கி - மின்னலைப் போல் விளங்காநின்ற சடையையுடைய சிவபெருமானைப்பூசிக்கின்ற பிரகாசம்பொருந்திய சிவப்பிராமணர் களிடத்திற் கொடுத்து.எ.று.

ஆறுவெம் பகையை நூறி யருடரு மஞ்செ ழுத்தை
நூறுட னெண்கா லன்பா னுவன்றபின் மறைக ளின்னுந்
தேறருங் கருணைச் சோதித் திகழ்திரு மூலத் தானத்
தூறிய நேச மேன்மே லுள்ளிடை வளர வெய்தி,

(இ-ள்) ஆறு வெம்பகையை நூறி - காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்னும் கொடிதாகிய உட்பகையாறையுமழித்து,—அருள் தரும் அஞ்செழுத்தை நூறுடன் எண்கால் அன்பால் நுவன்றபின் - கிருபையைத் தருகின்ற ஸ்ரீ பஞ்சாட்சரத்தை நூற்றெட்டுத்தரம் அன்புடன் செபித்தபின்,—இன்னும் மறைகள் தேறும் அரும் கருணைச் சோதி திகழ் திருமூலத்தானத்து - இன்னமும் வேதங்களாலுந் தெளியப்படாத கிருபையையுடைய சோதி சொரூபமாய் விளங்குகின்ற சிவலிங்கப் பெருமான் எழுந்தருளியிராநின்ற திருமூலட்டானத்தினிடத்து,—ஊறிய நேசம் மேன் மேல் உள்ளிடை வளர எய்தி - சுரக்கின்ற அன்பானது மேலு மேலும் மனதினிடத்தி லதிகரிக்க அடைந்து,—எ. று. (அ)

சந்நிதி தன்னின் முக்கால் விதிப்படி தாழ்ந்தெ ழுந்து [ந்
பின்னரும் வலஞ்செய் தைங்காற் பெரும்பய னுறப்பணிந்த
தின்னபே ருருவஞ் செய்கை விதெனை விருக்கு மோராப்
பொன்னவிர் கொன்றை வேணிப் புனிதன்மேன் மகிழ்வுகூர,

(இ-ள்) சந்நிதி தன்னில் விதிப்படி முக்கால் தாழ்ந்து எழுந்து - அத்திரு மூலட்டானேசுரர் சந்நிதியில்விதிப்படி மூன்றுமுறை நமஸ்கரித்து எழுந்து,—பின்னரும் வலஞ்செய்து - அதன்பின் பிரதக்ஷிணஞ் செய்து,—பெரும்பயன் உற ஐங்கால் பணிந்து - பெரிய

பிரயோசனத்தை யடையும்படி ஐந்து முறை நமஸ்கரித்து,— அங்கு ஈது இன்ன பேர் உருவம் செய்கை என்று இருக்கும் ஓரா - அவ்விடத்தில் இது இன்ன பெயர்இன்னவடிவம் இன்னசெய்கை யுடையது என்று வேதங்களாலும் அறியப்படாத,—பொன் அவிர் கொன்றை வேணிப் புனிதன்மேல் மகிழ்வுகூர - பொன்மயமாய் விளங்காநின்ற கொன்றைப் பூமாலையை யணிந்த சடையையுடைய பரிசுத்தராகிய சிவபெருமா னிடத்துச் சந்தோஷமிகும்படி.— (௬)

வேறு.

காரண காரிய மாகி நிறைந்து கடந்து விளங்கு பெரும்
பூரண ஞான சுகோதைய நாத புரேச பராதிபநா
லாரண வாரண பேத மளித்த வகண்டித வண்டருட
ஞரண ஞன்முக ஞடரி தாகிய நாத வெனப்பரவா.

(இ-ள்) காரண காரியம் ஆகி நிறைந்து கடந்து விளங்கு பெரும் பூரண - காரணமாகியும் காரியமாகியும் உலகங்களில் வியாபித்து அவ்வுலகங்களுக்கு அதீதப்பட்டு விளங்காநின்ற பெரிய பூரண சொரூபரே,—ஞான சுக உதய - ஞானசுகத்திற் பிறந்தவரே,—நாத - தலைவரே,—புரேச - திரிபுரத்தை யெரித்தருளிய தலைவரே,—அண்டர் உடன் நாரணன் நான்முகன் நாடு அரிதாகிய நாத எனப் பரவா,—தேவர்களோடு விஷ்ணுவும் பிரமதேவரும் தேடுதற்கரிய தலைவரே என்று துதித்து.—எ. று. (௭௦)

பூதல மாடைக ளாடைக ளோடைகள் பூண்மகு டங்கடவுட்
டாதியர் கேதன முத்தணி சத்திர சாமர மின்னமிர்தந்
தீதறு மாமணி தூபம் விடாதொளிர் தீபமொ டின்னனபோ
லோதிய யாவையு மேதம றும்படி யுள்ள மகிழ்ந்துதவி.

(இ-ள்) பூதலம் - பூமிகளையும்,—மாடைகள் - பொன்களையும்,—ஆடைகள் - வஸ்திரங்களையும்,—ஓடைகள் - நெற்றிப்பட்டங்களையும், பூண் ஆபரணங்களையும்,—மகுடம் - முடிகளையும்,—கடவுள் தாதியர் - தேவ தாசிகளையும்,—கேதனம் - கொடிகளையும்,—அணி முத்து சத்திரம் - அழகிய முத்துக் குடைகளையும்,—சாமரம் - சாமரங்களையும்,—இன் அமிர்தம் - இனிய பஞ்சாமிர்தங்களையும்,—தீது அறு மாமணி - குற்றமற்ற பெரிய மணிகளையும்,—தூபம் - தூபத்தையும்,—விடாது ஒளிர் தீபம் - இடைவிடாது பிரகாசிக்கின்ற தீபங்களையும்,—இன்னனபோல் ஓதிய யாவும் - இவைபோல்வனவாகச் சொல்லப்பட்ட எல்லாவற்றையும்,—ஏதம அறு

படி - குற்றம் நீங்கும்படி,—உள்ளம் மகிழ்ந்து உதவி - மனமகிழ்ந்து அச்சிவலிங்கப் பெருமானுக்குக் கொடுத்து;—எ. று. (கக)

தண்ணளி கூரிம வானருள் சுந்தரி சந்நிதி யிற்பணிவுற் [ற்
றெண்ணிய வின்னன நல்கியிறைஞ்சுகவிங்கிவை யில்லையெனி
கண்ணிய வணுவள வாயினு நெஞ்சு களிக்க வளித்தருள்கூ
ரண்ணலை யன்பின் வணங்கின ரன்ப ரலாதவ ரன்பர்களே.

(இ-ள்) தண் அளிகூர் இமவான் அருள் சுந்தரி சந்நிதியில் பணிவுற்று - குளிர்ந்த கிருபை மிகுந்த இமயமலையரசன் பெற்றருளிய சிவகாமி யம்மையாருடைய சந்நிதியிற் போய் நமஸ்கரித்து,- எண்ணிய இன்னன நல்கி இறைஞ்சுக - மேல் எண்ணிச் சொல்லிய இவை போல்வனவாகிய பொருள்களை அவ்வம்மை யாருடைய சந்நிதியிற் கொடுத்து வணங்கக்கடவர்;—இங்கு இவை இல்லை எனில் - இவ்விடத்து மேற் சொல்லிய இப்பொருள்க ளில்லையாயின்,—கண்ணிய அணு அளவு ஆயினும் நெஞ்சு களிக்க அளித்து - நினைக்கத் தக்க அப்பொருள்களில் அணுவளவாயினும் மனமகிழும்படி கொடுத்து,—அருள் கூர் அண்ணலை அன்பின் வணங்கினர் - கிருபை மிகுந்த சிவபெருமானை அன்போடு வணங்கினவர்கள்,—அன்பர் அலாதவர் அன்பர்களே - அவர்கள் அன்புடையவர்க ளல்லாதவர்களாயிருந்தாலும் அவர்கள் அன்புடையவர்களே யாவார்கள்.—எ. று. ()

யாதுமி லாரெனி லிலைமல ராயினு மிட்டு வணங்குதலே[ ரே
நீதி யலாலெனெறி நீதிகொள் கைப்பொரு ணேர்படலொன்றில
லாதித னாலய மீதிறை சூடி யகற்றிய வன்றியவண்
போதரு செத்தை மலாதி யெடுத்தயல் போகடன்மாகடனே.

(இ-ள்) யாதும் இலார் எனில் - யாதொன்று மில்லாதவராயிருந்தாலும்.—இலை மலர் ஆயினும் இட்டு வணங்குதலே நீதி - பத்திர புட்பங்களாயினும் கொடுத்து வணங்குதலே முறைமையாகும்,- அலால் - அல்லாமல்,—நீதிநெறி கொள் கைப்பொருள் நேர்படல் ஒன்று இலரேல் - நீதி மார்க்கத்தில் சம்பாதிக்கப்பட்ட கைப் பொருளொன்றுங் கிடைத்தல் இலராயின்,—ஆதிதன் ஆலய மீது இறை சூடி அகற்றிய அன்றி - சிவபெருமானுடைய ஆலயத்தில் அச்சிவபெருமானுக்குத் தரித்துக்கழித்த நிர்மாலியமேயலலாமல்,— அவண் போதரு செத்தை மலாதி எடுத்து அயல் போகடன் மாகடனே - அவ்விடத்தில் நீக்கத்தக்க செத்தை மல்முதலியவைகளை எடுத்து பக்கத்திற் கொண்டுபோய்ப் போடுதல் பெரிய முறைமை யாகும்.—எ. று. (கங)

ஈதுமி லாரெனின் முன்பரி சாரக ரிதைய மகிழ்ந்திடநன்
கோதி வணங்க வலாது பணிந்தெழ லொழிவதுவேகருமம்
வேதமு மிப்படி நிச்சய மாக விளம்பிய தப்படியே
யாதி நெடும்பதி யண்ணல் பதந்தொழு மன்பின ரன்பர்களால்.

(இ-ள்) ஈதும் இலார் எனில் - இதுவுஞ் செய்ய முடியாதவராயின்,—முன் - சந்நிதானத்திலே,—பரிசாரகர் இதயம் மகிழ்ந்திட நன்கு ஓதி வணங்க - பரிசாரகர்களுடைய மனம் சந்தோஷிக்கும் படி உபசாரங்களைச் சொல்லி வணங்கக்கடவர்கள்;—அலாது பணிந்து எழல் ஒழிவதுவே கருமம் - அப்படியல்லாமல் நமஸ்கரித்து எழுந்து போவதே, முறைமையாகும்;—வேதமும் இப்படி நிச்சயமாக விளம்பியது - வேதமு மிவ்விதமாகவே உறுதியாகச் சொல்லுகின்றது;—அப்படியே ஆதி நெடும் பதி அண்ணல் பதம் தொழும் அன்பினர் அன்பினர்கள் - அவ்விதமாகவே முதன்மையாகிய பெரிய சிதம்பர ஸ்தலத்தி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கும் அன்பர்களே அன்பராவார்கள்.—எ. று ()

பின்னரு மாமகிழ் வால்வலம் வந்துபி றங்கிய பூவொருகா
னன்னில னூடு பணிந்துயர் சந்நிதி நண்ணி னிருந்தருள்கூர்
முன்னவர் பேணிய வக்கர மஞ்சு முயங்கி யுயிர்க்குயிரா
மின்னமிர் தந்தம துள்ளுற நூறுட னெட்டுரு வேறியபின்.

(இ-ள்) பின்னரும் மா மகிழ்வால் வலம் வந்து - அதன் பின்னும் பெரிய சந்தோஷத்தோடு பிரதக்ஷிணஞ் செய்து,—பிறங்கிய நல் நிலன் ஊடு மூ ஒருகால் பணிந்து - விளங்காநின்ற நல்லபூமியினிடத்தே மும்முறை நமஸ்கரித்து,—உயர் சந்நிதியின் நண்ணி இருந்து - உயர்வாகிய சந்நிதானத்திற் செவ்வையாக இருந்து,—உயிர்க்கு உயிராம் இன் அமிர்தம் உள்ளுற - உயிர்க்குயிராகிய இனிய அமிர்தம் போன்ற சிவபெருமானை மனதிற் பொருந்தும்படி தியானித்துக் கொண்டு,—அருள்கூர் முன்னவர் பேணிய அக்கரம் அஞ்சும் முயங்கி - கிருபை மிகுந்த பெரியோர்களால் விரும்பத்தக்க ஸ்ரீ பஞ்சாட்சரத்தை யுச்சரித்து,—நூறுடன் எட்டு உரு ஏறிய பின் - நூற்றெட்டுருச்செபித்தபின்பு.—எ று. (௧௬)

நின்று பணிந்தவ ணின்று மகன்றுந ணேயம் வளர்ந்
திடமுன், னென்றரி தான புலன்கர ணங்களு மொன்றின
ருள்ளொளியா, யென்று மரும்பொரு ளொன்று மறைக்குல
மென்று முரைத்திடமா, மன்று ணடப்புரி வள்ளன் மலர்ப்
பதம் வந்தெதிர் கண்டுதொழா.

(இ-ள்) நின்று பணிந்து - சந்நிதானத்தினின்று நமஸ்கரித்து,—அவண் நின்றும் அகன்று - அவ்விடத்தினின்று நீங்கி,—அருள் நேயம் வளர்ந்திட - கிருபையும் அன்பும் வளரும்படி,—முன் ஒன்ற அரிதான புலன் கரணங்களும ஒன்றினர் உள் ஒளியாய் என்றும் - முன்னே பொருந்துதற் கரிதான ஐம்புலன்களையுந்திரிகரணங்களையும் பொருந்தினவர்களாகிய பெரியோர்களுடைய மனதில் சோதி சொரூபமாய் விளங்குகின்றவரே என்றும்,—அரும் பொருள் என்றும் - கிடைத்தற்கரிய வஸ்துவே என்றும்,—மறைக்குலம் என்றும் உரைத்திட - வேதகூட்டங்கள் எப்பொழுதுந் தோத்திரஞ் செய்ய,—மா மன்றுள் நடம்புரி வள்ளல் மலர்ப்பதம் என்றும் தொழா – பெருமை பொருந்திய கனகசபையினிடத்தே திருநிருத்தஞ் செய்தருளாநின்ற நடேசப் பெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை எப்பொழுதும் வணங்கி.—எ. று. (கசு)

என்னுட லென்னுயி ரென்னுணர் வென்செய லென்பவிகந்துடை யோர், முன்னுணர் வாகிய பேருணர் வென்று முயங்கு புயங்கமணிப், பொன்னவை முன்னர் மகிழ்ந்து திகழ்ந்து புகழ்ந்துல கேழுடையா, யின்னமிர் தேபொரு ளேயரு ளேயென வின்புறு மன்புமிகா.

(இ-ள்) என் உடல் என் உயிர் என் உணர்வு என் செயல் என்ப இகந்து உடையோர்முன் - இது என் சரீரம் இது என்னுயிர் இது என்னறிவு இது என்னுடைய காரியம் என்று சொல்கின்றனவாகிய (அகங்கார மமகாரங்களை) விட்டவர்களாகிய பெரியோர்கள் முன்,—உணர்வு ஆகிய பேர் உணர்வு புயங்கம் முயங்கும் அணி பொன் அவை முன்னர் – ஞானமயமாகிய பெரிய சித்துருவாய் விளங்கா நின்ற சிவம் எப்பொழுதும் புயங்க நிருத்தஞ் செய்தருளுகின்ற அழகிய கனகசபையின்முன்னே நின்று,—மகிழ்ந்து - சந்தோஷமடைந்து,—திகழ்ந்து - பிரகாசித்து,—புகழ்ந்து - துதித்து,—எழுலகு உடையாய் - எழுலகங்களையு முடையவரே,—இன் அமிர்தே - இனியதேவாமிர்தமே,—பொருளே - வஸ்துவே,—அருளே - கிருபாரூபரே,—என இன்பு உறும் அன்பு மிகா - என்று ஸ்தோத்திரஞ் செய்து இன்பம் பொருந்திய அன்பு மிகுந்து.—எ. று. ()

ஆல மருந்தக ளீழலி லேழுல காளுடை யானுறையு
மூல நெடும்பதி யெய்தியிறைஞ்சிய முறைகுறை யாதிவனுஞ்

சீல முறும்படி நன்னிய மத்தொடு சேவை புரிந்தருளோர்
பா லுடை யாள்விடை யானட மாடிய பதமல ரிதையமுறா.

(இ-ள்) ஆல மருங்கு அதன் நீழலில் எழுலகு ஆளுடையான் உறைமையும் மூல நெடும்பதி எய்தி - ஆலவிருக்ஷத்தின் பக்கத்தில் அதனிழலில் எழுலகங்களையு மடிமையாக வுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருமூலட்டானமாகிய பெரிய க்ஷேத்திரத்தையடைந்து,—இறைஞ்சிய முறை குறையாது - வணங்கத்தக்க விதியிற்குறையாமல்,—இவணும் சீலம் உறும்படி நல் நியமத்தொடு சேவை புரிந்து - இவ்விடத்திலும் பரிசுத்தம் பொருந்தும்படி நல்ல நியமத்தோடு வழிபாடு செய்து,—அருள் உடையாள் ஓர்பால் உடையான் விடையான் நடமாடிய பத மலர் இதயம் உறா-அருட் சத்தியாகிய சிவகாமியம்மையை யோர்பாகத்திலுடையவனும் ரிஷபவாகனத்தை யுடையவனுமாகிய நடேசப்பெருமானுடை திருநிருத்தஞ் செய்தருளாநின்றதிருவடித் தாமரைமலர்களை மனதிற் பதித்து,—எ.று.

நாத புராதன ஞான வரோதய ஞான நடம்புரியும்
பாத நிராமய வாதி பரேச பராபர தத்துவநால்
வேத பாராயண சீதர னாயக வெற்பருள் கற்புமிகு
மாதொரு பா லுடை யாயென நின்று வழுத்திவணங்கிய பின்.

(இ-ள்) நாத - தலைவரே, புராதன் - பழமையாயுள்ளவரே,—ஞானவரோதய-ஞானமலையி லுதயமானவரே,—ஞான நடம்புரியும் பாத - ஞான நிருத்தஞ்செய்தருளாநின்ற திருவடியை யுடையவரே,—நிராமய - ஆணவமில்லாதவரே,—ஆதிபரேச-முதல்வர்களாகிய தேவர்களுக்குத் தலைவரே.—பராபர,—மேலானவரே,—தத்துவ - தத்துவசொரூபியே,—நால்வேத பாராயண - நான்கு வேதங்களாலும் பாராயணஞ் செய்யப்பட்டவரே,—சீதரன் நாயக - விஷ்ணுமூர்த்திக்குத் தலைவரே,—வெற்பு அருள் கற்பு மிகும் மாது ஒரு பால் உடையாய் என நின்று வழுத்தி வணங்கியபின் - இமயமலை பெற்றருளிய கற்பிலே மிகுந்த உமாதேவியாரை ஒருபாகத்திலே யுடையவரே என்று ஸ்தோத்திரஞ் செய்து வணங்கியபின்பு.எ.று.()

அருள்விடை பெற்றரு மாமறை சூழ்திரு வாலய வெல்லைகடந், தொருமை கொடத்தின மங்கு னுறைந்தென் றாழுதை யத்தி லெழுந், திருவினை செற்றிடு பங்கய வாவியி னினிது படிந்தருளான், மருவிய தான மிசைந்தன மாதவர் மறையவர் பாலருளி.

(இ-ள்) அருள் விடைபெற்று - கிருபையோடு சந்நிதானத்தி லநுமதிபெற்றுக்கொண்டு,—மா மறை சூழ் திருவாலய எல்லை கடந்து - பெரிய வேதங்கள் சூழ்ந்திருக்கின்ற திருக்கோயில் எல்லையைக்கடந்து,—ஒருமைகொள் அத்தினம் அங்ஙன் உறைந்து - ஒன்றாகிய அந்தத்தினத்தில் அங்ஙனம் வசித்து,— ஒளிகதிர் உதயத்தில் எழுந்து - ஒளிபொருந்திய சூரியோதயத்தில் எழுந்து,—இருவினை செறு இரு பங்கய வாவியின் இனிது படிந்து - நல்வினை தீவினையென்னு மிருவினைகளையுங் கெடுக்கத்தக்க பெரிய சிவகங்கையிலே நன்றாக ஸ்நானஞ் செய்து,—அருளால் மருவிய இசைந்தன தானம் மாதவர் மறையவர் பால் அருளி - கிருபையோடு கொடுத்தற்கு இசைந்த தானங்களைப் பெரியதவத்தையுடைய முனிவர்களிடத்தும் பிராமணர்களிடத்தும் கொடுத்து.—எ. று. (உ௦)

சீதர னாடரு மன்றி னடம்புரி சேவடி கண்டுடனே
பூதல வானவர் சைவர் தபோதனர் புந்திக ளித்திடுமா
றோதன நல்கி மகிழ்ந்து புகழ்ந்தரு ளுற்றவ ரேவலினா
லேதமில்போனக மோனமொ டுண்டிட லேயியல் பாகுமரோ

(இ-ள்) சீதரன் நாடு அரும் மன்றில் நடம்புரி சேவடி கண்டு - விஷ்ணு மூர்த்தியினாலுந் தேடுதற் கரிய கனகசபையில் திருநிருத்தஞ் செய்தருளா நின்ற சிவந்த திருவடிகளைத் தரிசித்து,—உடனே பூதலவானவர் சைவர் தபோதனர் புந்தி களித்திடுமாறு ஓதனம் நல்கி - உடனே பிராமணர்களும் சைவர்களும் முனிவர்களும் மனமகிழும்படி அன்னங் கொடுத்து,—மகிழ்ந்து புகழ்ந்து - சந்தோஷத்தோடு அவர்களைத் துதித்து,—அருள் உற்று - அவர்களுடைய கிருபையைப் பெற்று,—அவர் எவலினால் எதம் இல் போனகம் மோனமொடு உண்டிடல் இயல்பாகும் - அவர்களுடைய எவலினால் குற்றமில்லாததாகிய போசனத்தை மௌனமாக இருந்து புசித்தல் முறைமையாகும்.—எ. று. அரோ அசை. (உக)

மிக்க நலந்திகழ் புண்ட ரிகத்தட மீது படிந்துடனே
யக்கர பஞ்சையு னாறுட னெட்டுரு வங்ங னவிற்றி மதிச்
செக்கர் நறுஞ் சடை யானட மாடிய சேவடி கண்டவர்தா
மிக்கொடு வன்பவ மெய்தவிரும்பினு மெய்துவ ரோவிலையால்

(இ-ள்) மிக்க நலந் திகழ் புண்டரிகத்தடம் மீது படிந்து - மிகுந்த பயனைத் தரும்படி விளங்குகின்ற சிவகங்கையிலே ஸ்நா

ஞ் செய்து,—உடனே அங்஫ன் அக்கரம் அஞ்சையும் நூறுடன் எட்டுருவு நவிற்றி - உடனே அவ்விடத்திலே ஸ்ரீ பஞ்சாட்சரத்தில் நூற்றெட்டுருச் செபித்து,—மதிச் செக்கர் நறும் சடையான் நடம் ஆடிய சேவடி கண்டவர்தாம் - மூன்றாம் பிறையைத் தரித்த சிவந்த நல்ல சடையையுடைய நடேசப் பெருமானது திரு நிருத்தஞ் செய்தருளாநின்ற சிவந்த திருவடிகளைத் தரிசித்தவர்கள்,—இக் கொடு வன் பவம் எய்த விரும்பினும் எய்துவரோ - இந்தக்கொடிய வலிய பிறவியை அடைய விரும்பினாலும் அடைவரோ?—இலை-இல்லை;—எ. று. ஆல் அசை. (உஉ)

வேறு.

உற்ற விங்நெறி மூத்தின மைந்தின மோர்பக்க மோர் திங்கண், மற்றொ ராண்டுதம் மாயுவி னெல்லையவ் வளநகர் வைகிச்சீர், பெற்ற வேதியர் மாதவர்க் கொருமுட்டி பிச்சை யாயினு மன்பா, லெற்றை நாளு மிட் டுண்டலே நெறியலா துண்டலு மியல்பன்றால்.

(இ-ள்) உற்ற இங்நெறி மூத்தினம் ஐந்தினம் ஓர் பக்கம் ஓர் திங்கள் ஓர் ஆண்டு தம் ஆயுவின் எல்லை-பொருந்திய இந்தக் கிரமப் பிரகாரம் மூன்று தினமாயினும், ஐந்து தினமாயினும், ஓர் பக்ஷமாயினும், ஓர் மாதமாயினும் ஓர் வருஷமாயினும் தம் ஆயிசு பரியந்தமாயினும்,—அவ் வள நகர் வைகி - அந்தவளப்பம் பொருந்திய சிதம்பரஸ்தலத்திலிருந்து,—சீர் பெற்ற வேதியர் மாதவர்க்கு - சிறப்புப்பொருந்திய பிராமணர்களுக்கும் முனிவர்களுக்கும்,—எற்றை நாளும் அன்பால்ஒரு முட்டி பிச்சையாயினும் இட்டு உண்டலே நெறி - எந்தநாளும் அன்போடு ஒரு பிடி அன்னமாயினும் பிக்ஷை யிட்டு உண்ணுதலே முறைமை;—அலாது உண்டலும் இயல்பு அன்று - அப்படியல்லாமல் தாமே புசித்தல் முறைமை யல்ல எ. று. மற்று ஆல் அசை. (உங)

இல்ல றத்துட னிருப்பவ ருந்தமக் கிசைந்த செய் தருந் தாரேல், வல்வினைத் தொகை துய்ப்பவர் நிச்சய மறையெ லாம் புகழ்ந் தேத்தும், தில்லை யம்பதி நன்னெறி யுறைப வர் சிதம்பர நாதன்றன், மல்லன் மல்கிய சேவடி நாடொறும் வணங்குதல் வழக்காமரல்,

(இ-ள்) இல்லறத்துடன் இருப்பவரும் தமக்கு இசைந்த செய்து அருந்தாரேல் - இல்லறத்தி லிருப்பவர்களும் தங்கள் தங்களுக்கிய ன்ற தருமங்களைச் செய்து போசனஞ் செய்யாராயின்,—வினைத் தொகை துய்ப்பவர் - கூட்டமாகிய வினைகளை அனுபவிப்பவரா வார்,—நிச்சயம் - இது நிச்சயமாகும்,—மறையெலாம் புகழ்ந்து எத்தும் தில்லையம்பதி நல்நெறி உறைபவர் - வேதங்களெல்லாம் புகழ்ந்து துதிக்கின்ற சிதம்பரத்தில் நன்மார்க்கத்தோடு வசிப்பவர் கள்,—மல்கிய சிதம்பரநாதன்தன் சேவடி நாள்தொறும் வணங்கு தல் வழக்காம் - வளப்ப நிறைந்த சிதம்பரத்தி லெழுந்தருளியிருக் கும் நடேசப்பெருமானுடைய சிவந்த திருவடிகளை நாள்தோறும் வணங்குதல் முறையாகும்—எ. று. ஆல் அசை. (உச)

அனக மாதவ சைமினி முனிவகே ளரும்பெருநியமங்க, ணினது செய்கைகண் டுரைத்தன நீயுமந் நியமங்க டவறு மற், றினமு ஞானமு முத்தியு மாகிய சிவபரஞ் சுடராடுங், கனக வம்பலத் தாடலைக் கண்டுகண் கருத்தினுங் களிப்பா யால.

(இ-ள்) அனக மாதவ சைமினி முனிவ கேள் - ஆணவ மில்லாத பெரிய தவத்தையுடைய சைமினி முனிவனே கேட்பாயாக,-நினது செய்கை கண்டு அரும் பெரும் நியமங்கள் உரைத்தனம் - உனது செய்கையைப்பார்த்து அருமையாகிய பெரிய நியமங்களை எடுத்துச் சொன்னோம்;—நீயும் தினமும் அந்நியமங்கள் தவறுமல் - நீயும் நாடோறும் அந்த நியமங்களிற் றவறுமல்,—ஞானமும் முத்தியு மாகிய சிவபரம் சுடர் கனக அம்பலத்து ஆடும் ஆடலைக் கண்டு - ஞான மோக்ஷங்களைத் தரத்தக்க சோதி சொரூபராகிய சிவபெருமான் கனகசபையிற் செய்யப்படும் திரு நிருத்தத்தைத் தரிசித்து—கண் கருத்தினுங் களிப்பாய் - கண்கள்மனதினும் பார்க்கக் களிப்பை யடையும்படி சந்தோஷிப்பாயாக.—எ. று. ஆல் அசை. (உரு)

காலை வாயணி தில்லையம் பலத்தனைக் கைதொழச்செல் வோமென், றெனு மவ்வுரை கொண்டெழி னற்றையின் வினை யெலா மிரிந்தோடு, மாலு மன்புடன் சேறலிந் நாளுள நாமமே னியமித்தான், பால டைந்தவிப் பலத் தறி யாது செய் வல்வினை மாய்ந்தேகும்.

(இ-ள்) காலைவாய் - உதய காலத்திலே,—அணி தில்லை அம்பதி தனைக் கைதொழச் செல்வோம் என்று எனும் அவ்வுரை

கொண்டு எழின் - அழகிய சிதம்பரத்தைக் கைகுவித்து வணங்கப் போவோம் என்று சொல்லுகின்ற அவ்வார்த்தையைக் கொண்டு எழும்பினால்,—அற்றை வினை எலாம் இரிந்து ஓடும் - அன்றையத் தினம் செய்த பாவங்களெல்லா மூறிந்தோடும்; —ஆலும் அன்புடன் சேறல் இந்நாள் உளது ஆம் என நியமித்தால் - பொருந்திய அன்புடனே இன்ன நாளில் அந்த ஸ்தலத்துக்குப் போவோம் என்று ஏற்பாடுசெய்தால்,—மால் அடைந்த இப்பவத்து அறியாது செய் வல்வினை மாய்ந்து ஏகும் - மயக்கம் பொருந்திய இப்பிறப்பில் அறியாமற் செய்த கொடிய பாவங்களெல்லாம் கெட்டுப்போம்.—எ. று. ()

தொழுது மென்றெழி லிப்பவத் தறிந்துசெய் தொடரும் வல் வினைக் கூட்ட, முழுது மாய்ந்தறுங் கலைமறை யாகமு முற்றுமா மெழுத்தஞ்சா, லெழுதி வேய்ந்தசிற் றம்பலத் தெல்லையைக் காணின்முன் னெண்ணில்லாப், பழுது கூர்பிறப் பிடையறி யாதுசெய் பாவங்கண் மேவாவால்.

(இ-ள்) தொழுதும் என்று எழில் - சிதம்பரஸ்தலத்தை வணங்கு வோமென்று எழுந்தால்,—இப்பவத்து அறிந்து செய் தொடரும் வல்வினைக் கூட்டம் முழுதும் மாய்ந்து அறும் - இப்பிறப்பில் அறிந்து செய்த சஞ்சித வினைக்கூட்ட முழுதும் அழிந்து போம்;— கலைமறை ஆகமம் முற்றும் ஆம் எழுத்து அஞ்சால் எழுதி வேய்ந்த சிற்றம்பலத்து எல்லையைக் காணின் - சாஸ்திரங்களும், வேதங்களும் ஆகமங்களுமாகிய இவைக ளெல்லாவற்றாலும் ஸ்ரீ பஞ்சாட்சரத்தாலும் எழுதி வேயப்பட்ட திருச்சிற்றம்பலத்தின் எல்லையைத் தரிசித்தால்,—பழுதகூர் முன் எண்ணில்லாப் பிறப்பிடை அறியாது செய் பாவங்கள் மேவா - குற்றமிகுந்த முன் அளவில்லாப் பிறப்புகளில் அறியாமற் செய்த பாவங்கள் அடையாவாம்;— ஆல் அசை .எ. று. (உஎ)

பிறிந்த வல்வினை மாதவ கொடுமையிற் பிறங்கும்ங் தகன்விழ, வெறிந்த மூவிலைப் பரம்பரன் வடிவமா யிலங்குமப் பதிதன்னைச், செறிந்த டைந்தபோ தலகிலா முன்னைவெந் தீப்பிறப் புகடோறு, மறிந்து செய்வினை மறிந்துகுந் தவங்கள்வே றூற்றுவா ரறிவன்னே.

(இ-ள்) வல்வினை பிறிந்த மாதவ - கொடிய வினையினின்று நீங்கிய பெரிய தவத்தையுடைய சைமினியே;—கொடுமையில்

பிறங்கும் அந்தகன் வீழ எறிந்த மூவிலைப் பரம் பரன் வடிவமாய் இலங்கும் அப்பதி தன்னை - கொடுமையினால் விளங்குகின்ற இயம னானவன் கீழே விழும்படி வீசியெறிந்த மூவிலை வடிவாகிய சூலத் தையுடைய சிவபெருமானது வடிவமாய் விளங்குகின்ற அச்சிதம் பர ஸ்தலத்தை,—செறிந்து அடைந்த போது - நெருங்கிவந்து அடைந்த காலத்தில்,—அலகிலா முன்னை வெம் தீப் பிறப்புகள் தோறும் அறிந்து செய்வினை மறிந்து உகும் - அளவில்லாதன வாகிய மிகக் கொடிய முற் பிறப்புகடோறும் அறிந்து செய்த வினை கள் அழிந்து விடும்—,வேறு தவங்கள் ஆற்றுவார் அறிவு என்னோ - சிதம்பரஸ் தலத்தை அடையாமல் வேறு தவங்களைச் செய்பவர்க ளுடைய அறிவு யாதோ?—எ. று. (உஅ)

பங்க யத்தடங் கண்டபோ தந்தணன் பதம்பெற லாந் தீண்டிற், செங்கண் மாலரும் பதத்தினை யெளிதினிற் சேர லாங் குடங்கையுட், டங்கு தீர்தம துட்கொளி னுருத்திரன் றக்கவான் பதமெய்தும், பொங்கு மத்தட மூழ்கினன் மகே சுரன் பொற்பதம் புகலாகும்.

(இ-ள்) பங்கயத்தடம் கண்ட போது அந்தணன் பதம் பெற லாம் - சிவகங்கையைத் தரிசித்தால் அப்போதே பிரமலோகப் பதவியை யடையலாம்,—தீண்டில் செங்கண்மால் அரும் பதத் தினை எளிதினிற் சேறலாம் - அத்தீர்த்தத்தைப் பரிசித்தால் சிவ ந்த கண்களையுடைய விஷ்ணு மூர்த்தியினது அருமையாகிய வைகு ண்ட பதவியை எளிதாகப் பெறலாம்,—குடங் கையுள் தங்கும் தீர் தமது உள் கொளின் தக்க வான் உருத்திரன் பதம் எய்தும் - உள் ளங் கையிற் பொருந்திய தீர்த்தத்தைத் தாம் உட்கொண்டால் தகுதி பொருந்திய பெரிய ருத்திரர்களுடைய உலகத்தை யடையலாம்,— பொங்கும் அத்தடம் மூழ்கினல் மகேசுரன் பொன் பதம் பெற லாம் - பொலிவு பொருந்திய அத்தடாகத்திலே ஸ்நானஞ் செய்தால் மகேசுரனுடைய அழகிய லோகத்தை யடையலாம்.—எ. று. (உகூ)

சிந்தை யன்புகொ டகிலநா யகன்றனைத் திருமூலத் தானத்துள், வந்து கண்டவர் சதாசிவ பதத்திடை வைகுவர் பொன்மன்றத், தெந்தை யம்பிகை காணநின் றாடிய விருப தங் கண்டோர்க, ளந்த மொன்றிலா முத்தியக் கணத்திடை யுடைதனிச் சயமாமால்.

(இ-ள்) சிந்தை அன்பு கொடு அகில நாயகன் தனைத் திருமூலத் தானத்துள் வந்து கண்டவர் சதாசிவ பதத்திடை வைகுவர் - மனதில் அன்புவைத்து உலகநாயகனாகிய சிவபெருமானைத்திருமூலட்டானத்திலே வந்து தரிசித்தவர்கள் சதாசிவலோகத்தில் வசித்துக் கொண்டிருப்பார்கள்;—பொன் மன்றத்து அம்பிகை காண நின்று ஆடிய எந்தை இருபதங் கண்டோர்கள் அக்கணத்தே அந்தம் ஒன்றிலா முத்தி அடைதல் நிச்சயம் ஆம் - கனகசபையினிடத்திலே சிவகாமியம்மையார் காணும்படி நின்று திருநிருத்தஞ் செய்தருளிய எமது பிதாவாகிய நடேசப் பெருமானது இரண்டு திருவடிகளையுந் தரிசித்தவர்கள் அப்பொழுதே அழிதலில்லாத மோக்ஷத்தை யடைதல் நிச்சய மாகும்.— எ. று. ஆல் அசை. (கூO)

வேறு.

ஈச னுக்குப் பிழைத்தகொடும் பாவமுதற் பாவங்க ளியற்று துள்ள,நேசமுறச் சைவநூ லாய்ந்துணர்ந்து நின்ற நிலை நீங்கா தென்றும், பாசவினைப் பகைசாட வடிவுகொடு சிதம்பரத்துட் பதுமச் செந்தாள், வீசியொரு பொருளாடல் கண்டுறைந்தோ ருள்ளபடி வீடு சேர்வர்.

(இ-ளை) சிதம்பரத்துள் - சிதம்பர ஸ்தலத்தில்,—ஈசனுக்குப் பிழைத்த கொடும் பாவ முதல் பாவங்கள் இயற்றுது - சிவபெருமானுக்குப் பிழைசெய்தலாகிய கொடும் பாவ முதலிய பாவங்களைச் செய்யாது,—உள்ளம் நேசம் உற-மனதிலன்புபொருந்த,-சைவநூல் ஆய்ந்து உணர்ந்து - சிவசாஸ்திரங்களை யாராய்ந் தறிந்து,—நின்ற நிலை நீங்காது - தானிற்கின்ற ஆச்சிரமத்தில் தவறுமல்,—என்றும் பாசவினைப் பகைசாட - எப்பொழுதும் ஆன்மாக்களது மலசம்பந்தமாகிய வினைப்பகையை யழிக்கும் பொருட்டு,—ஒருபொருள் வடிவு கொடு பதுமச் செந்தாள் வீசியாடல் கண்டு உறைந்தோர் உள்ளபடி வீடு சேர்வார் - ஒப்பில்லாத முதற் பொருளாகிய பரசிவம் திருவுருவங் கொண்டு செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை நீட்டி யாடுகின்ற திருநிருத்தத்தைத் தரிசித்து வசித்தவர்கள் நிச்சயமாக மோக்ஷத்தை யடைவார்கள்.—எ. று. (கூச)

அப்பரிசொன் றிலரேனுஞ் சிதம்பரத்துட் சேவடிகண்டவரு மந்த. மெய்ப்பதியி லிருந்துமலர்ச் சேவடிகா ணுதங்ஙன் வியந்துளோரு, மெய்ப்பதியோ ரெப்பிறப்போ ரெவ்வி

ளையோ ராயினுமங் கிறந்து ளோருளு, செப்பரிய சாலோக முதன்முத்தி யடைந்தடைவிற் சிவத்தைச் சேர்வர்.

(இ-ள்) அப்பரிசு ஒன்று இலர் எனும் - மேற்சொல்லிய அத்தன்மைக ளில்லாத வர்களாயினும்,—சிதம்பரத்துள் சேவடி கண்டவரும் - சிதம்பரத்திலே நடேசப் பெருமானது சிவந்த திருவடிகளைத் தரிசித்தவர்களும்,—அந்த மெய்ப்பதியிலிருந்து மலர்ச் சேவடி காணுது வீய்ந்துளோரும் - அந்த அழிவில்லாத ஸ்தலத்திலிருந்து நடேசப்பெருமானது செந்தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளைத் தரிசியாம லிறந்தவர்களும்,—எப்பதியோர் எப்பிறப்போர் எவ்வினையோர் ஆயினும் - எந்த ஸ்தலத்தி லுள்ளவர்களாயினும், எந்த ஜாதியாராயினும், எந்தத்தொழிலை யுடையவராயினும்,—அங்கு இறந்துளோரும் - அந்தஸ்தலத்தி லிறந்தவர்களும்,—செப்பரிய சாலோகம் முதல் மூத்தியடைந்து - சொல்லுதற்கரிய சிவசாலோக்கிய முதலிய பதமுத்தியையடைந்து,—அடைவில் சிவத்தைச் சேர்வர் - பின் கிரமப்பிரகாரம் சிவசாயுச்சியமாகிய பரமுத்தியை அடைவர். எ - று. (கூஉ)

அழிவிலா வப்பதியி லிருந்துகொடு வினைபுரிந்தோ ரடைந்து வீழு, மொழிவிலா நரகத்தை மொழியுமா றெவன்கொலோ வுலவா வேத, வழியினு லுயர்முனிவ வென்னுமுரை செவிப்புகலு மயங்கி ஞான, விழியினு னெதிர்பணிந்து சைமினியஞ் சலிசெய்து விளப்பு வானல்.

(இ-ள்) உலவா வேத வழியினுலுயர் முனிவ - நீங்காத வேத மார்க்கத்திலுயர்ந்த சைமினிமுனிவனே,—அழிவு இலா அப்பதியிலிருந்து கொடுவினைபுரிந்தோர் - கெடுதலில்லாத அந்தஸ்தலத்திலிருந்து பாவங்களைச்செய்தவர்,—அடைந்து வீழும் ஒழிவு இலா நரகத்தை மொழியும் ஆறு எவன் கொலோ என்னும் உரை - அவர்கள் போய் விழுகின்ற அழிதலில்லாத நரகத்தைச் சொல்லும் விதம் எப்படி என்று சொல்லுகின்ற வார்த்தையானது,—செவிப்புகலும் - அச்சைமினிமுனிவருடைய காதில் நுழையவும்,—சைமினி மயங்கி - (அப்பொழுது) அச்சைமினிமுனிவர் மயங்கி,—ஞானவிழியினுன் எதிர் பணிந்து அஞ்சலி செய்து விளம்புவான் - ஞானதிருஷ்டியை யுடைய சூதமுனிவர் சந்நிதியில் நமஸ்கரித்து எழுந்து அஞ்சலியஸ்தராய் நின்று விண்ணப்பஞ்செய்வார். எ - று. ஆல் அசை. (கூகூ)

முடிவிலா வம்பலத்தி னடங்கண்டோர் முத்தரென வொழிந்தா யந்தப், படிவிடா தாகமவே தங்களெலா மையமறப் பகரா நின்ற, நெடியமா தவர்புகழப் பதியிருந்து வினைபுரிந் தோர் நீங்கொ ணாத, கொடியமா நிரயத்தோ ரென்றவுரை மாறன்றோ கூறுங் காலே.

(இ-ள்.) முடிவு இலா அம்பலத்தின் நடம் கண்டோர் முத்தர் என மொழிந்தாய் - முடிவில்லாத கனகசபையில் (நடேசப்பெருமான் செய்தருளுந்) திருநிருத்தத்தைத் தரிசித்தவர்கள் ஜீவன்முத்தராவார்கள் என்று திருவாய்மலர்ந்தருளினீர்,—அந்தப்படி ஆகம வேதங்கள் எல்லாம் ஐயம் அற விடாது பகராநின்ற - அப்படியே சிவாகமங்கள் வேதங்கள் எல்லாம் சந்தேக நீங்க இடைவிடாமல் சொல்லுகின்றன,—நெடிய மாதவர் புகழ் அப்பதி இருந்து வினைபுரிந்தோர் - பெரிய முனிவர்களாற் றுதிக்கப்பட்ட அச்சிதம்பரத்திலிருந்து பாவங்களைச் செய்தவர்கள்,—கூறுங்காலை நீங்கொணாத கொடிய மாநிரயத்தோர் என்ற உரை மாறு அன்றோ - சொல்லுமிடத்து நீங்கமுடியாத கொடிய பெரியநரகத்தையடைவார்கள் என்று சொல்லிய வார்த்தையானது விரோதமல்லாவா? எ - று. ()

ஐயமிக வையமெனக் கடைந்ததுநீ யையமற வருள்செயென்ன,மெய்யுணரு முனிவனு நன் றுரைத்தனைமைந் தாவெவர்க்கும் விளம்பொ ணாத, வுய்யுநெறி யாமிதனைக் கேட்கவிரும் பினைநேச வுள்ளங் கொண்டு, செய்யநெறி யுடையநினக் குள்ளபடி மொழிதுமெனச் செப்பு கின்றான்.

(இ-ள்) ஐய - சுவாமிகாள்,—எனக்கு ஐயம் மிக அடைந்தது - அடியேனுக்கு மிகவுஞ் சந்தேகமுண்டாயிற்று,—நீ ஐயம் அற அருள்செய் என்ன - (ஆதலால்) தேவரீர் சந்தேக நீங்கும்படி அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க,—மெய் உணரும் முனிவனும் மைந்தா நன்று உரைத்தனை - உண்மைப் பொருளையறிகின்ற சூதமுனிவரும் மைந்தனே நன்று சொன்னாய்,—எவர்க்கும் விளம்பொணாத உய்யும் நெறியாம் இதனைக் கேட்க விரும்பினை - யாவர்க்குஞ் சொல்லக்கூடாத கடைத்தேறு மார்க்கமாகிய இதைக் கேட்கவிரும்பினாய்,—செய்ய நெறியுடைய நினக்கு உள்ளம் நேசம் கொண்டு உள்ளபடி மொழிதும் எனச் செப்புவான் - சன்மார்க்கமுடைய உனக்கு மனதிற் பொருந்திய விருப்பத்தோடு உள்ளபடி சொல்லுகின்றோம் என்று சூதமுனிவர் சொல்லுகின்றார். எ - று.

எங்கண்ணு மியாரேனு மியற்றியநல் வினைதீமை யிர ண்டி னுள்ளும், பொங்குபய னொன்றொன்றே யழியாத பெரு ம்பற்றப் புலியூர் தன்னிற், றுங்கநெறி யோரேனு மறிவுடனு மறியாமை தொடர்ந்துஞ் செய்து, தங்குபெரு நல்வினைதீ வினையொன்று கோடியாய்த் தழைக்கு மன்றே.

(இ-ள்) எங்கணும் யாரேனும் இயற்றிய நல்வினை தீமை இரண்டினுள்ளும் - எவ்விடத்தும் யாராயினும் செய்த நல்வினை தீவினை என்னு மிரண்டினுள்ளும்,—பொங்கு பயன் ஒன்று ஒன்றே- பொலிவுபொருந்திய அவைகளின் பிரயோசனங்கள் ஒன்று ஒன்று கவே முடியும்,—அழியாத பெரும்பற்றப் புலியூர் தன்னில் ஒருகால த்திலும் அழியாததாகிய சிதம்பரத்தில்,—துங்கநெறியோரேனும் - மேலானமார்க்கத்திலொழுகுபவராயிருந்தாலும்,—அறிவுடனும் அறி யாமை தொடர்ந்தும் செய்து தங்குபெரு நல்வினை தீவினை - அறிந் தாயினும் அறியாமை யாலாயினும் தொடர்ச்சியாய்ச் செய்து தங்கிய பெரிய நல்வினை தீவினைகள்,—ஒன்றுகோடியாய் தழைக்கும் - ஒன்று அனந்தமாகச் செழித்தோங்கும், எ - று. அன்று எ அசை.

சீதமலர்ப் பொழிற்றில்லை யிருந்துதீ வினைபுரிந்தோர் தெய்வ மன்றுட், பாதமலர் கண்டுடனே முத்தரா தலினுனும் பலனு மனனோ, ரோதுவினைப் பயனூட்ட வுரனிலனென் பதுகொண்டு தண்டஞ் செய்தற், காதிபரம் பரன்காலற்கதி கார மவ்வளவுக் கமைத்தா னல்லன்.

(இ-ள்.) சீதமலர்ப் பொழில் தில்லை இருந்து தீவினைபுரிந்தோர்- குளிர்ச்சிபொருந்திய மலர்களையுடைய சோலைகளாற் சூழப்பட்ட சிதம்பரத்திலிருந்து பாவங்களைச் செய்தோர்,—தெய்வ மன்றன் பாத மலர் கண்டு உடனே முத்தர் ஆதலினால் - தெய்வத்தன்மை பொருந்திய கனகசபையிலெழுந்தருளியிருக்கும் நடேசப்பெருமா னுடைய திருவடித்தாமரைமலர்களைத் தரிசித்து உடனே ஜீவன் முத் தராவார். ஆதலினால்,—உம்பலனும் அன்னோர் ஓதுவினைப் பயன் ஊட்ட உரன் இலன் என்பது கொண்டு - எருமைக்கடா வாகனனா கிய இயமனும் அவர்களுக்கு மேற்சொல்லிய வினைப்பயனை யுண்பிக் கவலிமையில்லாதவன் என்பதை மனதுட்கொண்டு,—தண்டஞ்செ ய்தற்கு ஆதிபரம்பரன் காலற்கு அவ்வளவுக்கு அதிகாரம் அமைத் தான் அல்லன் - தண்டனை செய்தற்குச் சிவபெருமான் அவ்வியம னுக்கு அவ்வளவு அதிகாரங் கொடுத்தானல்லன், எ - று. (௩௭)

அன்னதனுக் கதிகார மப்பதிப்பால் வயிரவனுக் களித் தான் காலன், பன்னரிய வோரிருபத் தெண்கோடி நரகத் துட் பதுமத் தண்ண, றன்னுரிய கற்பமெலாம் புரிதண்ட மவ்வடுகன் றயங்கு சூலத், துன்னரிய நுனியிடையோர் கணப்போதிற் படுந்துயருக் கொவ்வா தம்மா.

(இ-ள்.) அன்னதனுக்கு அதிகாரம் அப்பதிப்பால் வைரவனுக்கு அளித்தான் - அப்படிப்பட்ட குற்றத்திற்குத் தண்டனை செய்யும்படியான அதிகாரத்தை அந்தஸ்தலத்தி லிருக்கின்ற வைரவருக்குக் கொடுத்தான்,—காலன் பன்னரிய ஓர் இருபத்துஎண் கோடி நரகத்துள் பதுமத்து அண்ணல் தன் உரிய கற்பம் எல்லாம் புரிதண்டம் - இயமனுனவன் சொல்லுதற்கரிய இருபத்தெட்டுக்கோடி நரகத்தில் பிரமகற்பகாலஞ் செய்யப்பட்ட தண்டனையானது,—அவ்வடுகன் தயங்கு எண்ணரிய சூலத்து நுனி இடை ஓர் கணப்போது படுந் துயருக்கு ஒவ்வாது - அவ் வைரவக் கடவுளுடைய (திருக்கரத்தில்) விளங்குகின்ற நினைத்தற்கரிய சூலப்படையினது நுனியில் ஒருக்ஷணகாலம் படுகின்ற துன்பத்திற்கொப்பாகாது. எ-று. அம்மா வியப்பிடைச்சொல். (கூ௪)

அத்தலத்தி னிடைக்கொடிய பாதகங்கள் புரிந்தோரை யனேகங் கோடி, நித்தமுறு கற்பமெல்லாம் பதிப்பாலன் கரதலத்து ணிகரிலாத,முத்தலையி னுனியினருங் கொடியவினைப் பெரும்பயன்கண் முடித்து நீங்கத், துய்த்திடுமா றுய்த்திடுவன் றுய்க்கும்போ துளதுயரஞ் சொல்லற் பாற்றே.

(இ-ள்.) அத்தலத்தினிடைக் கொடிய பாதகங்கள் புரிந்தோரை - அந்தஸ்தலத்தில் கொடிய பாவங்கள் செய்தவர்களை,—நித்தம் உறும் அனேகம் கோடி கற்பம் எலாம் - அழிவில்லாத அனேகங்கோடி கற்பகாலமெல்லாம்,—நிகரில்லாத பதிப்பாலன் கரதலத்துள் முத்தலையின் நுனியின் - ஒப்பில்லாத க்ஷேத்திர பாலனுகிய வைரவக்கடவுளினது திருக்கரத்திலுள்ள சூலாயுதத்தின் முனையில்,—அரும் கொடிய வினைப் பெரும் பயன்கள் முடித்து நீங்கத் துய்த்திடுமாறு உய்த்திடுவன் - அரிய கொடிய வினைகளினது பெரிய பலனை அனுபவித்து முடித்து நீங்க அனுபவிக்கும்படியாகச் செலுத்துவன்,—துய்க்கும் போது உள துயரம் சொல்லற் பாற்றோ - அவ்வினைப்பயன்களை அனுபவிக்கும் பொழுதுண்டாகும் துன்பஞ் சொல்லுந்தன்மையுடையதோ? எ-று. (கூரு)

பந்தமகற் றியதில்லை நகரடைந்துஞ் சிவகங்கை படி ந்து மன்றத், தந்தமிலான் றாள்கண்டு மத்தலத்திற் கொடுவி னைக ளந்தோ வந்தோ, தந்தமது மனனறியப் புரிவதே மூட ர்களென் சாற்றுகேன் யான், சிந்தை செயுந் தொறுமுடலந் துளங்குமென துளங்கம்பஞ் சேரு மன்றே.

(இ-ள்.) பந்தம் அகற்றிய தில்லை நகர் அடைந்தும் - பாசங் களை நீக்கிய சிதம்பரத்தையடைந்தும்,—சிவகங்கை படிந்தும் - சிவ கங்கையில் ஸ்நானஞ் செய்தும்,—மன்றத்து அந்தம் இலான் தாள் கண்டும் - கனகசபையிலெழுந்தருளியிராநின்ற முடிவில்லாதவரா கிய நடேசப்பெருமானது திருவடிகளைத் தரிசித்தும்,—அந்தோ அந்தோ - ஐயோ! ஐயோ!,—அத்தலத்தில் தம் தமது மனன் அறிய கொடுவினைகள் புரிவது மூடர்களே - அந்தஸ்தலத்தில் தங்கள் தங் களுடைய மனமறியும் படியான பாவங்களைச் செய்வது மூடர்களு டைய செய்கைகளேயாம்,—யான் என் சாற்றுகேன் - இதற்குயான் என்ன சொல்லுவேன்,—சிந்தை செயும் தொறும் உடலம் துளங் கும் - நினைக்குந்தோறும் என் சரீரம் நடுங்குகின்றது,—எனது உள் ளம் கம்பஞ் சேரும் - என் மனமும் நடுங்குகின்றது. எ-று. (சo)

செல்லாடல் புரிபொழில்சூழ் தில்லைமா நகரிருந்து தீங்கு செய்தல், பொல்லாது பொல்லாது கல்லாதோ ரறியா ரேற் புகல்வ தென்னே, சொல்லாதி மறைமுனிவ சிதம்பரங் கண் டிறைஞ்சுதற்குத் துளங்கா திங்ங, னில்லாது செல்வா யிக் கணந்தன்னிற் கொடியவினை நீத்து வாழ்வாய்.

(இ-ள்.) சொல் ஆதி மறை முனிவ - துதிக்கப்படுகின்ற முத ன்மையாகிய வேதத்தையறிந்த ஜைமினி முனிவனே!—செல் ஆடல் புரி பொழில் சூழ் தில்லை மாநகர் இருந்து தீங்கு செய்தல் பொல் லாது பொல்லாது - மேகங்கள் தவழுகின்ற சோலைகளாற் சூழப்ப ட்ட சிதம்பரஸ்தலத்திலிருந்து பாவங்களைச்செய்தல் கொடிது! மிக வும் கொடிது!!!,—கல்லாதோர் அறியாரேல் புகல்வதுஎன்-மூடர்கள் அறியாதிருப்பார்களாயின் அவர்களுக்குச் சொல்லுவது எப்படி?— சிதம்பரம் கண்டு இறைஞ்சுதற்குத் துளங்காது இங்ஙன் நில்லாது செல்வாய் - சிதம்பரத்தைத் தரிசித்து வணங்குதற்குச் சலனப்படா மலும் இவ்விடத்தில் நிற்காமலும் போகக்கடவாய்,—இக்கணம் தன் னில் கொடிய வினை நீத்து வாழ்வாய் - (அங்ஙனம் போனால்) இப் பொழுதே கொடிய பாவங்களினின்று நீங்கி வாழ்வாய். எ-று.(சக)

சீலமுறு நடங்கண்டங் கிருந்தமன னறியவினை செய்தோர் தானப், பாலவயி ரவன்கரத்துச் சூலநுனி யிடைவாதைப் பட்ட பின்னர், கோலமுறு மன்னையர்தம் முதரத்துக் குறுகுவரோ குறுகார் வெய்ய, நீலநிறக் காலனடுந் தண்டமுறா ருடன்சிவத்து ணித்த ராவர்.

(இ-ள்.) சீலம் உறும் நடம் கண்டு அங்கு இருந்து மனன் அறிய வினை செய்தோர் - பரிசுத்தம் பொருந்திய திருநிருத்தத்தைத் தரிசித்து அந்தஸ்தலத்திலிருந்து புத்திபூர்வமாகப் பாவங்களைச் செய்தவர்கள்,—தானப் பால வைரவன் கரத்துச் சூல நுனியிடை வாதைப்பட்ட பின்னர் - க்ஷேத்திரபாலராகிய வைரவக்கடவுளினது திருக்கரத்திலுள்ள சூலமுனையில் துன்பப்பட்ட பின்பு,—கோலம் உறும் அன்னையர் தம் உதரத்துக் குறுகுவரோ குறுகார் - அழகுபொருந்திய மாதாவினுடைய வயிற்றில்வந்து பிறப்பரோ? பிறவார்,—வெய்ய நீலநிறக் காலன் அடும் தண்டம் உறார் - கொடிய நீல நிறம்பொருந்திய இயமன் செய்யுந் தண்டனைக்குட்படார்கள்,—உடன் சிவத்துள் நித்தர் ஆவர் - உடனே சிவத்தோடு கலந்து அழிவில்லாதவர்களாவார்கள். எ - று. (சஉ)

பொங்குமறைச் சயிமினிவ நாதனடம் புரிந்தருளப் புரியின் வாழ்வோர், தங்கண்மன மறியாமல் வந்தகொடு வினைதனக்குத் தக்க சாந்தி, கங்கைமுத லாகியநற் றீர்த்தமெலாம் வணங்குசிவ கங்கை யென்னு, மங்கமலத் தடவாவி மூழ்குநெறி யறையக் கேட்டி.

(இ-ள்.) பொங்கு மறைச் சைமினிவ - பொலிவாகிய வேதத்தை யறிந்த சைமினியே,—நாதன் நடம்புரிந்தருள் அப்புரியில் வாழ்வோர் - எப்பொருட்குந் தலைவராகிய நடேசப்பெருமான் திருநிருத்தஞ் செய்தருளாநின்ற அச்சிதம்பரஸ்த்லத்தில் வசிப்போர்கள்,—தங்கள் மனம் அறியாமல் வந்த கொடுவினை தனக்குத் தக்கசாந்தி - தங்களிடத்து அபுத்திபூர்வமாகவந்த பாவத்துக்குத்தக்க பரிகாரம் யாதெனில்,—கங்கை முதலாகிய நல் தீர்த்தம் எல்லாம் வணங்கு சிவகங்கை யென்னு அம் கமலத் தடவாவி மூழ்குதலே - கங்கைமுதலாகிய புண்ணிய தீர்த்தங்களெல்லாம் வணங்குகின்ற சிவகங்கை யென்று சொல்லப்படும் அழகிய தாமரைகளையுடைய விசாலமாகிய புண்டரீகப் பொய்கையில் ஸ்நானஞ் செய்தலேயாம்,—மூழ்கும்

நெறி அறையக் கேட்டி - அத்தீரத்தில் ஸ்நானஞ் செய்யும் விதிக ளைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. எ - று. (சரு)

தன்னிகரா கியதில்லைத் தலத்துறைவோர் சிவகங்கை
தன்னின் மூழ்கி,னென்னலிராப் போதுதனி லடைந்தகொடு
வினையாவு நீங்கியுய்வ, ரன்னியதே யத்துறைவோ ரன்றடை
ந்து சிவகங்கை யாடப்பெற்றாற், பன்னுமறை முனிவர்களும்
பெறலரிய மகேசர்பதம் பற்றி வாழ்வார்.

(இ-ள்.) தன் நிகர் ஆகிய தில்லைத் தலத்து உறைவோர் சிவக ங்கை தன்னில் மூழ்கில் - தனக்குத்தானே ஒப்பாகிய சிதம்பரஸ்தல த்தில் வசிப்போர்கள் சிவகங்கையில் ஸ்நானஞ் செய்தால்,—தென் னல் இராப் போது தனில் அடைந்த கொடுவினை யாவும் நீங்கி உய் வர்-முதனாள் இராத்திரியிற் செய்த கொடியபாவங்களெல்லாம் நீங்கி உய்வர்,—அன்னிய தேயத்து உறைவோர் அடைந்து அன்று சிவக ங்கை ஆடப்பெற்றால் - அன்னியதேசத்திலிருப்பவர்கள் (அச்சிதம்ப ரஸ்தலத்தை) அடைந்து அன்றைத்தினம் சிவகங்கையில் ஸ்நான ஞ்செய்தால்,—பன்னும் மறைமுனிவர்களும் பெறல் அரிய மகேசர் பதம்பற்றி வாழ்வார் - துதிக்கின்ற வேதங்களை யறிந்த முனிவர்க ளும் பெறுதற்கரிய மகேசுர பதவியைப் பெற்று வாழ்வார்கள்.எ-று

திங்கள்சேய் புந்திகுரு புகர்காரி வாரத்துச் சென்று
மூழ்கி, னங்கடைவி னொன்றிரண்டு மூன்றுநான் கைந்தா
றென் றறைந்த நாளிற், றுங்கவினை யறுமருக்க வாரத்துச்
சுடரருக்கன் றோன்று முன்னம், பொங்குமலர்ச் சிவகங்கை
படியிலெழு நாள்வினைகள் போகு மன்றே,

(இ-ள்.) அங்கு திங்கள் சேய் புந்தி புகர் காரி வாரத்துச் சென்று மூழ்கின்,—அச்சிவகங்கையில் திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி என்னும் வாரங்களிற் போய் ஸ்நானஞ் செய்தால்,—அடைவின் ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு என்று அறைந்த நாளில் துங்கவினை அறும் - அவ்விடத்தில் முறை யே ஒருநாள் இரண்டுநாள் மூன்றுநாள் நாலுநாள் ஐந்துநாள் ஆறு நாட்களிற் செய்த பெரிய பாவங்கள் நீங்கும்,—அருக்க வாரத்துச் சுடர் அருக்கன் தோன்று முன்னம் பொங்குமலர்ச் சிவகங்கை படி யில் - ஞாயிற்றுக் கிழமையில் ஒளிபொருந்திய சூரியன் உதிப்பதற்

குமுன் பொலிவாகிய தாமரைமலர்களையுடைய அச்சிவகங்கையில் ஸ்நானஞ் செய்தால்,—எழு நாள் வினைகள் போகும் - எழு வாரங்களிலுஞ் செய்த பாவங்கள் நீங்கும். எ-று. அன்று ஏ அசை.

ஏருலவு வளர்மதியின் முதற்பக்கந் தனக்கொருநா ளிரண்டாம் பக்க, மோரிருநாண் முப்பக்க முந்நாண்மற் றையபக்க மொழியி னிவ்வா, றூருநிறை பௌரணையி னளவறிக குறைமதியி னந்த நாளிற், சீருலவு சிவகங்கை யாடினொரு திங்கள்வினை தீரு மன்றே.

(இ-ள்.) ஏர் உலவு வளர் மதியின் முதல் பக்கம் தனக்கு ஒரு நாள் - அழகுபொருந்திய பூர்வபக்ஷத்தில் முதற்பக்கமாகிய நந்தையில் ஸ்நானஞ்செய்தால் ஒருநாள்செய்த பாவமும்,—இரண்டாம்பக்கம் ஓர் இரு நாள் - இரண்டாம் பக்கமாகிய பத்திரையில் ஸ்நானஞ் செய்தால் இரண்டுநாள் செய்த பாவமும்,—முப்பக்கம் முந்நாள் - மூன்றும்பக்கமாகிய சயையில் ஸ்நானஞ் செய்தால் மூன்றுநாள் செய்த பாவமும்,—மற்றைய பக்கம் மொழியின் இவ்வாறு வினை நீங்கும் - மற்றை நாலாம் ஐந்தாம் பக்கங்களாகிய இருத்தை பூரணை என்னும் பக்கங்களிற் செய்த ஸ்நானபலத்தைச் சொல்லுமிடத்து நாலுநாள் ஐந்துநாள் செய்த பாவமுநீங்கும்,—ஊரும் நிறை பௌரணையின் அளவு அறிக - மிகவும் நிறைந்த பௌர்ணிமையையுடைய பூர்வபக்கத்திற் செய்த ஸ்நானபலத்தின் அளவை அறியக்கடவாய்,—குறை மதியின் அந்த நாளில் சீர் உலவு சிவகங்கை ஆடின் - தேய்பிறையாகிய அபரபக்ஷத்தில் மேற்சொல்லிய நந்தை முதலிய நாட்களில் சிறப்புப்பொருந்திய அச்சிவகங்கையில் ஸ்நானஞ்செய்தால்,—ஒரு திங்கள் வினை தீரும் - ஒருமாசஞ்செய்த பாவம் நீங்கும். எ - று. அன்று ஏ அசை. (சசு

வியன்மதியங் குறைபக்கத் தட்டமிக்குச் சதுர்த்தசிக்கு விதிபா தத்துக், குபர்திங்கட் பிறப்புகளுக் காதிரைநாட் கோவ்வொன்றுக் கோரோர் மாத, மியல்புறு மைப்பசிமாதப் புருசிக்கு முத்திங்க ளொழிற்றை யாடி,யயனமிவைக் காறு திங்களரு வினையகலு மந்நீ ராடல்.

(இ-ள்.) வியன் மதியம் குறை பக்கத்து அட்டமிக்கு - விரிந்த கிரணங்களையுடைய சந்திரன் தேய்கின்ற அபரபக்ஷத்து அஷ்டமியிலும்,—சதுர்த்தசிக்கு - சதுர்த்தசியிலும்,—விதிபாதத்துக்கு - விதி

பாதத்திலும்,—உயர் திங்கள் பிறப்புகளுக்கு - உயர்ந்த மாதப்பிறப்புகளிலும்,—ஆதிரை நாட்கு - திருவாதிரை நக்ஷத்திரத்திலும்,—அந்நீர் ஆடல் - அச்சிவகங்கை தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால்,—ஒவ் ஒன்றுக்கு ஓர் ஓர் மாதம் வினையகலும் - ஒவ்வொரு புண்ணிய காலங்களுக்கு ஒவ்வொரு மாதஞ் செய்த பாவம் நீங்கும்,—இயல்பு உறும் ஐப்பசி மாதப்புகுதிக்கு மூத்திங்கள் - இயல்பு பொருந்திய ஐப்பசிமாதப் பிறப்பாகிய விஷு புண்ணியகாலத்தில் ஸ்நானஞ்செய்தால் மூன்றுமாதங்களிற்செய்த பாவம் நீங்கும்,—எழில் தை ஆடி அயனம் இவைக்கு ஆறு ஆறு திங்கள் அருவினை அகலும் - அழகிய தை ஆடி ஆகிய உத்தராயணம் தக்ஷிணாயனம் என்னும் இரண்டு புண்ணிய காலங்களில் ஸ்நானஞ் செய்தால் அவ்வாறு மாதங்களிற் செய்த கொடிய பாவங்கள் நீங்கும்,—அந்நீர் ஆடல் - ஆதலால் அத்தீர்த்தத்தில் நீ ஸ்நானஞ் செய்யக்கடவாய். எ - று. (சஎ)

சித்திரைதிங் கட்புகுதி மார்கழியா திரைமாசித் திருமகத்தின், மெய்த்தடத்தின் மூழ்கினு லொவ்வொன்றுக் கோராண்டின் வினைகணீங்கும், தத்தமநெஞ் சறியாது செய்வினைக்குச் சாந்தியிவை தவத்தோய் தத்தஞ், சித்தமறி வல்வினைக்கு வயிரவன்மூ விலைநுதியிற் சேர்வா ரன்றே.

(இ-ள்.) தவத்தோய் - தவத்தையுடைய ஜைமினியே,—சித்திரை திங்கட் புகுதி - சித்திரை மாசப்பிறப்பாகிய விஷுபுண்ணிய காலத்திலும்,—மார்கழி ஆதிரை - மார்கழிமாதத் திருவாதிரையிலும்,—திரு மாசி மகத்தின் - அழகிய மாசி மகத்திலும்,—மெய்த்தடத்தின் மூழ்கினுல் - நிலையுள்ளதாகிய அச்சிவகங்கையில் ஸ்நானஞ் செய்தால்,—ஒவ் ஒன்றுக்கு ஓர் ஆண்டின் வினை நீங்கும் - ஒவ்வொரு புண்ணிய காலங்களுக்கும் ஒவ்வொரு வருஷஞ் செய்த பாவங்கள் நீங்கும்,—இவை தத்தம் நெஞ்சு அறியாது செய் வினைக்குச் சாந்தி - இவைகள் தங்கள் தங்களுடைய மனம் அறியாமற் செய்த பாவத்துக்குப் பரிகாரமாகும்,—சித்தம் அறி வல்வினைக்கு வைரவன் மூவிலை நுதியிற் சேர்வார் - மனமறியச் செய்த வலிய பாவத்துக்கு வைரவக்கடவுளின சூல முனையிற் சேர்வார்கள். எ-று அன்று ஏ அசை. (சஅ)

சீதமலர்ச் சிவகங்கை சிவனுருவே யென்றுதோர் தெண்ணீ ரென்னும், பாதகர்நான் முகன்வாழ்நா ளளவுநிர

யக்குழியிற் படிவர் நிந்தை, யோதினர்கள் சிவநிந்தை யுரைத்தவரே பூசனைக ளுவந்து செய்த, லாதிதனைப் பூசித்தலாமுண்மை யறைந்தனம்யா மறிவான் மிக்கோய்.

(இ-ள்.) அறிவான் மிக்கோய் - அறிவினால் மேம்பட்ட சைமினியே,—சீதம் மலர்ச் சிவகங்கை சிவன் உருவே என்னுதோர்-குளிர்ச்சி பொருந்திய மலர்களை யுடைய சிவகங்கையைச் சிவரூபம் என்று நினையாதவர்களும்,—தெள் நீர் என்னும் பாதகர் - தெளிந்த ஜலம் என்று நினைக்கின்ற பாவிகளும்,—நான்முகன் வாழ்நாள் அளவும் நிரயக் குழியில் படிவர் - நான்குமுகங்களையுடைய பிரமாவினது ஆயுளாகிய கற்பகாலம் வரைக்கும் நரகக் குழியில் விழுந்துகிடப்பர்,—நிந்தை ஓதினர்கள் சிவ நிந்தை யுரைத்தவரே - அத்தீர்த்தத்தை நிந்தை செய்தவர்கள் சிவநிந்தை செய்தவரே யாவார்கள்.—உவந்து பூசனைகள் செய்தல் ஆதிதனைப் பூசித்தலாம் - மனமகிழ்ந்து அத் தீர்த்தத்தைப் பூசைசெய்தல் சிவபெருமானைப் பூசை செய்தலே யாகும்,—யாம் உண்மை அறைந்தனம் - யாம் இவ்வுண்மைகளை உனக்குச் சொன்னோம். எ - று. (சக)

உடலிடைவெம் பிணியகலக் கல்வியொடு செல்வமெலாமுறச்சிறந்த, மடமகளிர் புணர்ச்சிபெற யாவருந்தன் வயத்தாக மனங்கொண் டந்தத், தடமதனின் மூழ்கினு லவையெய்துங் காவடியிற் றூங்கி யன்பா, னடைமருவி னோரடிக்கோர் பரிமேத மகப்பயனை நண்ணி வாழ்வார்.

(இ-ள்) உடல் இடை வெம்பிணி அகல - சரீரத்தின்கணுள்ள கொடிய வியாதிகள் நீங்கவும்,—கல்வி யொடு செல்வம் எலாம் உற - கல்வி செல்வங்கள் எல்லாம் அடையவும்,—சிறந்த மட மகளிர் புணர்ச்சி பெற - அழகும் இளமையும் பொருந்திய பெண்களுடைய இன்பத்தை யனுபவிக்கவும்,-யாவரும் தன் வயத்து ஆக மனங்கொண்டு-எல்லாரும் தன் வசப்படும்படி யாகவும் மனதிற் றியானித்துக்கொண்டு,—அந்தத் தடமதனில் மூழ்கினால் அவை எய்தும் - அந்தச்சிவகங்கையில் ஸ்நானஞ்செய்தால் முற்கூறிய அவைகள் அடையும்,—காவடியில் தாங்கி அன்பால் நடை மருவினோர் - அத்தீர்த்தத்தைக் காவடிகட்டித் தூக்கிக்கொண்டு அன்போடு நடந்தவர்கள்,-ஓர் அடிக்கு ஓர் பரிமேத மகப்பயனை நண்ணி வாழ்வார் - ஒரு அடிக்கு ஒரு அசுவமேதஞ்செய்த பலனை யடைந்து வாழ்வார்கள். எ-று.

படிபுகழச் சிவகங்கைப் பானீயந் தனைப்பானம் பண்ணிச் செல்வோ, ரிடிமுரசக் கொடியபடைச் சமர்க்களத்திலேறி னிவரே வெல்வர், கொடியவிலங் கிராக்கதர்பேய் பாரிடங்க ளிங்கிழையா குறிக்கிலாயு, முடிவினயற் பதிகொணர்ந் தந் நீர்பருகின் மகேசர்பத முத்தி சேர்வார்.

(இ-ள்) படி புகழ் அச்சிவகங்கைப் பானீயம் தனைப் பானம் பண்ணிச் செல்வோர் - பூமியிலுள்ளோர்களாற் றுதிக்கத்தக்க அச்சிவகங்கை தீர்த்தத்தை ஆசமனம் பண்ணினவர்கள்,—இடி முரசக் கொடிய படைச் சமர்க்களத்தில் எறினல் இவரே வெல்வர் - இடிபோல முழங்குகின்ற முரசவாத்தியத்தையுடைய கொடிய சேனைகள் பொருந்திய யுத்தகளத்திற் சென்றால் இவர்களே ஜெயிப்பார்கள்,—கொடிய விலங்கு இராக்கதர் பேய் பாரிடங்கள் இங்கு இழையா - அதுவன்றிக் கொடிய மிருகங்களும், இராக்ஷதர்களும், பேய்களும், பூதங்களும் தீங்கு செய்யாவாம்,—குறிக்கில் அயற்பதி ஆயுள் முடிவில் அந்நீர் கொணர்ந்து பருகின் மகேசர் பதமுத்தி சேர்வர் - ஆராயுமிடத்து அயலூரிலுள்ளவர்கள் மரணந்த காலத்தில் அச்சிவகங்கை தீர்த்தத்தைக் கொண்டுவந்து உட்கொண்டால் மாகேசுரருடைய பதமுத்தியை அடைவர். எ - று. (ருக)

அன்னதலத் தாதலயற் பதியாத லிருந்தரனை யந்நீர் தன்னான், மன்னியபூ சனையோருக் கீசர்பத மத்தோய மஞ்சனத்தாற், றன்னிகராஞ் சிவார்ச்சனையை நாடோறும் புரிவரேற் றுங்கள் செய்த, வின்னலுறு மபராத மென்பனவெல்லாம்பொறுப்ப னிமையோர் நாதன்.

(இ-ள்.) அன்ன தலத்து ஆதல் அயல் பதி ஆதல் இருந்து - அந்தஸ்தலத்திலாவது அயலூரிலாவது இருந்து,—அந்நீர் தன்னால் மன்னிய பூசனையோருக்கு ஈசர் பதம் - அத்தீர்த்தத்தினால் அவ்விடத்தில் பொருந்திய சிவபெருமானைத் திருமஞ்சன மாட்டுவித்துப் பூசை செய்விப்பவருக்குச் சிவபத முண்டாகும்,—அத் தோயமஞ்சனத்தால் தன்னிகராம் சிவார்ச்சனையை நாடோறும் புரிவரேல் - அத் தீர்த்த திருமஞ்சனத்தால் தனக்குத் தானே ஒப்பாகிய சிவபூசையைத் தினந்தோறும் செய்வாராயின்,—தாங்கள் செய்த இன்னல் உறும் அபராதம் என்பன எல்லாம் இமையோர் நாதன் பொறுப்பன் - அவர்கள் செய்த துன்பம்பொருந்திய குற்றங்கள் என்று

சொல்லப்பட்டவைக ளெல்லாவற்றையுந் தேவ நாயகனுகிய சிவ பெருமான் பொறுத்தருளுவன். எ - று. (௫உ)

தென்புலத்தார் தமைநோக்கி யந்நீராற் றருப்பணங்கள் செய்தா ராகிற், றன்பெரிய மூவகையிற் சுற்றமெலா நற்கதி யிற் சார்ந்து வாழ்வ, ரின்பமுறப் பொருள்வேண்டி யாடினு லங்க வைக ளெய்துமென்று, பம்புவிமீ திச்சையற மூழ்கி ஞன் மகேசர்பதம் வாய்க்கு மன்றே.

(இ-ள்.) தென் புலத்தார் தமை நோக்கி யந்நீரால் தருப்பணங் கள் செய்தா ராகில் - பிதிரர்களை நோக்கி அத்தீர்த்தத்தினுல் தருப் பணங்கள் செய்தாராகில்,—தன் பெரிய மூவகையில் சுற்றம் எலாம் நல் கதியில் சார்ந்து வாழ்வார் - தன்னுடைய பெரிய பிதிர்வர்க்கம் பிதாமகவர்க்கம் மாதுர் வர்க்கம் என்று சொல்லப்பட்ட மூவகைச் சுற்றத்தார்க ளெல்லாம் நன்மையாகிய மோக்ஷத்தை யடைந்து வாழ்வார்கள்,—இன்பம் உறப் பொருள் வேண்டி ஆடினுல் அங்கு அவைகள் எய்தும் - இன்பத்தையனுபவிக்கத்தக்க பொருளை விரு ம்பி அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால் அவ்விடத்தில் அப்பொ ருள் வந்து இடைக்கும்,—என்றும் அம்புவி மீது இச்சை அற மூழ் கினுல் மகேசர் பதம் வாய்க்கும் - எப்பொழுதும் அழகிய பூமியின் மேல் உள்ள மூவகை ஆசைகளும் நீங்கும்படி ஸ்நானஞ் செய்தால் மகேசருடைய பதவி கிடைக்கும். எ-று. அன்று ஏ அசை. (௫௩)

எங்குமிடை யறநிறைந்த பரம்பரனோர் தீர்த்தவடி வெய்தி நின்ற, பொங்குபுனற் சிவகங்கை யதன்பெருமை யாவரே புகலற் பாலார், திங்கள்வளர் பக்கத்திற் சதுர்த்தசி யிற் சனிவாரஞ் சேரின் மூழ்கிற், றங்கள்மன நினைத்தவெல் லாங் கூடி யரும் பெருவினையுந் தணந்து நீங்கும்.

(இ-ள்.) எங்கும் இடையற நிறைந்த பரம்பரன் ஓர் தீர்த்த வடிவு எய்தி நின்ற பொங்கு புனல் சிவகங்கை யதன்பெருமை - எவ் விடத்தும் இடைவிடாமல் வியாபித்து நிறைந்து நின்ற சிவபெரு மான் ஓர் தீர்த்த ரூபமாகப் பொருந்தி நின்ற பொலிவு பொருந்திய ஜலத்தையுடைய சிவகங்கையின் பெருமையை,—யாவரே புகலற் பாலார் - எவர்கள் எடுத்துச் சொல்லத்தக்கவர்கள்,—திங்கள் வளர் பக்கத்தில் சதுர்த்தசியின் சனிவாரம் சேரின் - சந்திரன் வளருகின்ற பூர்வபக்க சதுர்த்தசியில் சனிவாரம் வந்து கூடுமாயின்,—மூழ்கில்

தங்கள் மனம் நினைத்த எலாம் கூடி அரும் பெரும் வினையும் தணந்து நீங்கும் - (அப்பொழுது அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ் செய்தால் தங்கள் மனதில் நினைத்தவைகளெல்லாம் உண்டாய் அரிய பெரிய பாவங்கள் விட்டு நீங்கும் எ - று. (௧௪)

திங்கள்குரு மங்கலவா ரங்களிவை கலைமதியந் தேயும் பக்கத், தங்கண்முடி வறுப்பருவங் கூடியநா ளிந்திரவி யரவ நுங்கிப்,பொங்குதனுன் மிக்கதினச் சித்திரத்துப் புண்டரிகப் பொய்கை யாடிற், றங்குகொடும் பெருவினைக ளுள்ளவெலா மொழிந்துதவத் தலைவ ராவர்.

(இ-ள்.) அங்கண் - அத்தலத்தில்,—திங்கள் குரு மங்கலவாரங்கள் இவை - சோமவாரம் குருவாரம் மங்கலவாரம் என்னும் இத்தினங்களிலும்,—கலை மதியம் தேய் பக்கத்து முடிவு அறும் பருவம் கூடிய நாள் - கிரணங்களையுடைய சந்திரன் தேய்கின்ற அமரபக்ஷமானது முடிவையடைகிற காலம் கூடிய அமாவாசை தினத்திலும்,—இந்து இரவி அரவம் நுங்கிப் பொங்குதலால் மிக்க தினம்-சந்திரனையும் சூரியனையும் இராகு கேதுக்கள் என்னும் பாம்புகள் விழுங்கிப்பொலிதலால் மேன்மைபெற்ற கிரகண புண்ணிய காலங்களிலும்,—சித்திரத்துப் புண்டரிகப் பொய்கை ஆடில் - அழகையுடைய புண்டரீகப் பொய்கையாகிய சிவகங்கையில் ஸ்நானஞ் செய்தால்,—தங்கு கொடும் பெருவினைகள் உள்ள எலாம் ஒழிந்து தவத் தலைவர் ஆவார் - பொருந்திய கொடிய பெரிய பாவங்களாயுள்ளவைகளெல்லா நீங்கித் தவசிரேஷ்டராவார்கள். எ - று. (௧௫)

வந்துபடிந் தோர்விடுத்த வினைகளறக் கங்கைமுதன் மாதீர்த் தங்க, டந்தமது சுருதிகளாற் சிவகங்கை தினம்படிந்து சார்ந்து நின்ற, வந்தமிலா நன்குதவு மாசிமகத் தத்தீர்த்த மனைத்தும் வந்து, முந்துநெறி தமக்குரிய சத்திமுழுதுடன் மூழ்கி முதன்மை யெய்தும்.

(இ-ள்.) வந்து படிந்தோர் விடுத்த வினைகள் அற - தம்மிடத்தில் வந்து ஸ்நானஞ்செய்தவர்கள் கழித்துவிட்ட பாவங்கள் தம்மைவிட்டு நீங்கும்படி,—கங்கை முதல் மா தீர்த்தங்கள் தம் தமது சுருதிகளால் சிவகங்கை தினம் படிந்து சார்ந்து நின்ற - கங்கைமுதலிய பெரிய தீர்த்தங்களெல்லாந் தங்கள் தங்களுடைய மந்திரங்க

னால் சிவகங்கையில் நாடோறும் ஸ்நானஞ்செய்து தங்களுடைய இடத்தை அடைந்து நின்றன,—அத்தீர்த்தம் அனைத்தும் அந்தம் இலா நன்கு உதவும் மாசி மகத்து வந்து - மேற் சொல்லிய அந்தத் தீர்த்தங்களெல்லாம் அளவில்லாத புண்ணியங்களைக் கொடுக்கின்ற மாசிமகத்தில் வந்து,—மூந்துநெறி தமக்கு உரிய சத்தி முழுதுடன் மூழ்கி முதன்மை எய்தும் - மேற்சொல்லிய விதிப்படி தங்களுக்குரிய வலிமையோடு அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிரேஷ்டமடையும். எ - று. (௫௬)

இவ்வண்ண முறுமாசி மகத்தரிய சிவகங்கை யெய்தி மூழ்கின், மைவண்ண வினைநீங்கிச் சிவத்தடைவர் மன்றுடையான் மகிழ்சே வைக்குட், பொய்வண்ண மொழித்ததிரு வத்தயா மம்போலப் புகல்கால த்துண், மெய்வண்ண முறுமாசி மகத்தந்த நீராடன் மிக்க தம்மா.

(இ-ள்.) இவ்வண்ணம் உறும் மாசி மகத்து அரிய சிவகங்கை எய்தி மூழ்கின் - இந்தப்பிரகாரம் பொருந்திய மாசி மகந் தோறுங் கிடைத்தற்கரிய சிவகங்கையையடைந்து ஸ்நானஞ் செய்தால்,—மை வண்ண வினை நீங்கி சிவத்து அடைவர் - கருநிறம்பொருந்திய பாவத்தி னின்று நீங்கிச் சிவத்தோடு கலத்தலாகிய பரமுத்தியை யடைவர்,—மன்று உடையான் மகிழ் சேவைக்குப் புகல் காலத்துள் - கனகசபையி லெழுந்தருளியிருக்கின்ற நடேசப் பெருமான் மகிழும்படி வழிபடுதற்காகச் சொல்லப்பட்ட காலங்களுள்,—பொய் வண்ணம் ஒழித்த திரு அத்த யாமம் போல - பொய்ம்மையாகிய பாவங்களை நீக்கிய திருவத்தசாமதரிசனம் விசேஷமானதுபோல்,—மெய் வண்ணம் உறும் மாசி மகத்து அந்த நீர் ஆடல் மிக்கது - உண்மைபொருந்திய மாசி மகத்தில் அச்சிவகங்கை தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தல் விசேடமாகும். எ - று அம்மா வியப்பிடைச்சொல். ()

யாரேனுந் தங்கண்மன னறியாமற் செய்தவினை யெல்லா மல்லற், பாரேழெண் புண்டரிகச் சிவகங்கை யாடினூர் பற்றறத் தேருஞ்,சீரே று சயிமினிவ வுரைத்தவைக்கோ ரையமிலை தெரிதி யென்றான், கார்ஏறு கண்டத்தான் பெருமையெலாம் புராணத்தாற் காட்டு மேலோன்.

(இ-ள்) கார் ஏறும் கண்டத்தான் பெருமை எலாம் புராணத்தால் காட்டு மேலோன் - கருநிறம் பொருந்திய திருக்கண்டத்தையு

டைய சிவபெருமானது பெருமைகளெல்லாவற்றையும் புராணங்களாலறிவிக்கின்ற சூதமுனிவர் (சைமினி முனிவரைப் பார்த்து,)— சீர் எறு சைமினிவ - சிறப்புப் பொருந்திய சைமினி முனிவனே!— யாரேனும் தங்கள் மனன் அறியாது செய்த வினை எல்லாம் - யாவராயினும் தங்கள் மனமறியாமல் அபுத்தி பூர்வமாகச் செய்யப்பட்ட பாவங்களெல்லாம்,—மல்லல் பார் எழ் எண் புண்டரிகச் சிவகங்கை ஆடினல் பற்று அற்று எகும் - வளப்பம் பொருந்திய எழுலகத்தாராலும் மதிக்கத்தக்க புண்டரீகப் பொய்கையாகிய சிவகங்கையில் ஸ்நானஞ் செய்தால் அப்பாவசம்பந்தங் கொஞ்சமுமில்லாமல் நீங்கிப் போகும்,—உரைத்தவைக்கு ஓர் ஐயம் இல்லை-சொல்லிய இவைகளுக்கு யாதொரு சந்தேகமு மில்லை,—தெரிதி என்றான் - நீ அறிந்துகொள்வாயாக என்று சூதமுனிவர் சொல்லியருளினார். எ - று.()

நியமச் சருக்கமுற்றிற்று.

ஆயிரம் உள்படச் சருக்கம் - ரு - க்குத் திருவிருத்தம் சகஉ.

திருச்சிற்றம்பலம்.

———

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது.

# சோமநாதச்சருக்கம்.

சய மிகுந்தமெய்த் தவருறை தில்லையந் தலத்திடை யுறைவோர் தந், நியம முள்ளன கூறின மாறிலா நெடுவரைச் சிலை தாங்கும், புய முயங்கிய புராரியெம் பராபரன் பொருள் கவர்ந் தெடுத்தோர் தம், பய மிகுந்தவெங் கொடுவினைப் பெருமையின் பரிசினைப் பகர்கின்றாம்.

(இ-ள்.) சயம் மிகுந்த மெய்த் தவர் உறை அம் தில்லைத் தலத்து உறைவோர் தம் நியமம் உள்ளன கூறினம் - வலிமை மிகுந்த உண்மையாகிய தவத்தையுடைய முனிவர்கள் வசிக்கின்ற அழகிய சிதம்பரத்தில் வசிக்கின்றவர்களுடைய நியமங்களாயுள்ளவைகளை இதுவரையுஞ் சொன்னோம்,—மாறு இலா நெடுவரைச் சிலைதாங்கும் புய முயங்கிய புராரி எம் பரம் பரன் பொருள்-அழிதலில்லாத மகாமேருவை வில்லாகக்கொண்டு தாங்குகின்ற புயங்களையுடைய திரிபுரசம்மாரியாகிய எமது சிவபெருமானுடைய திரவியத்தை,— கவர்ந்து எடுத்தோர் தம் பயம் மிகுந்த வெம் கொடு வினைப் பெருமையின் பரிசினைப் பகர்கின்றாம் - அபகரித்துக்கொண்டு போனவர்களுடைய அச்சமிகுந்த வெவ்விய கொடிய பாவங்களின் மிகுதியின் தன்மையை எடுத்துச் சொல்லுவாம். எ - று. (௧)

சஞ்சி தத்துடன் வருவினை கடிந்திடுஞ் சயிமினி கரங் கூட்பி, யஞ்ச லித்துளங் குழைவுறப் புளகமோ டமர்ந்துதே சிகனுண்மை, நெஞ்ச முற்றிட விருந்துழி யருந்தவ நிருபனு மிவன்றன்மேல், விஞ்சு மற்புத நெஞ்சமவைத் தின்னமு மெய்ந்நெறி விரிக்கின்றான்.

(இ-ள்.) சஞ்சிதத் துடன் வருவினை கடிந்திடும் சைமினி கரம் கூப்பி அஞ்சலித்து - சஞ்சிதவினையோடு ஆகாமியத்தையும் ஒழிக்கின்ற சைமினி முனிவர் கைகுவித்து அஞ்சலி செய்து,—உளம் குழைவு உறப் புளக மோடு அமர்ந்து - மனங்கசிந்து புளகத்தோடு விருப்பமுற்று,—தேசிகன் உண்மை நெஞ்சம் உற்றிட இருந்துழி - ஆசாரியனுடைய உண்மையானது தன் மனதிற் றோன்றும்படி வீற்றிருக்கின்ற காலத்தில்,—அருந்தவ நிருபனும் - அரிய தவவேந்தராகிய சூதமுனிவரும்,—இவன் றன் மேல் விஞ்சும் அற்புதம் நெஞ்சம் வைத்து - இச்சைமினிமுனிவர்மேல் மிகுதியாகிய அன்பைத் தம் மனதில் வைத்து,—இன்னமும் மெய் நெறி விரிக்கின்றான் - இன்னமும் உண்மை மார்க்கங்களை எடுத்து விரித்துச் சொல்லுகின்றார். எ - று. (உ)

அத்த லத்தறி யாதுசெய் வினையறு மந்நெறி யுரைத்தோமுன், வைத்த வற்றினு நீக்கரி தாகிய வல்வினை யாதென்னி, னித்த வானவர் வேதியர் பொருள்கடந் நெஞ்சறி யார்கொண்டு, துயத்த கள்வர்வல் வினையது சாந்தியாற் றொலைக்கரி தாமன்றே.

(இ-ள்) அத் தலத்து அறியாது செய்வினை அறும் அந்நெறி முன் வைத்து உரைத்தோம் - அச் சிதம்பரத்தில் அபுத்தி பூர்வமாகச் செய்த பாவங்கள் நீங்கும் படியான மார்க்கத்தை முன்னமே சொன்னோம்,—அவற்றினும் நீக்கு அரிது ஆகிய வல்வினை யாது என்னில் - அப்பாவங்களைப் பார்க்கினும் நீக்குதற் கரிதாகிய கொடிய பாவம் எது என்னில்,—நித்த வானவர் வேதியர் பொருள்கள் தம் நெஞ்சு அறியார் கொண்டு துய்த்த கள்வர் வல்வினை - அழிவில்லாத தேவர்கள் பிராமணர்களாகிய இவர்களுடைய பொருள்களைத் தம் மனமறியாதவர்களாய் அபகரித்துக் கொண்டு போய்ப் புசித்த திருடர்களுடைய கொடிய பாவமாகும்,—அது சாந்தியால் தொலைக்க அரிதாம் - அப்பாவம் பிராயச்சித்தத்தால் நீக்குதல் அரிதாகும். எ-று. அன்று எ அசைகள். (ஙு)

கோதில் வேதியர் பொருளறி யாமையாற் கரவினிற் கொணர்ந்தோர்கள், போத நொந்ததிற் பதின்மடங் கதனொடு பொருள்கொடுத் தறிவில்லேன், றீது நீர்பொறு மெனவணங் கலுமவர் சிந்தையிற் களிகூர்ந்திப், பாதகப் பொறுத் தோமெனி லவ்வினை படர்ந்திடா திடைந்தோடும்.

(இ-ள்.) கோது இல் வேதியர் பொருள் அறியாமையால் கரவினில் கொணர்ந்தோர்கள் - குற்றமில்லாத பிராமணர்களுடைய திரவியத்தை அறியாமையால் திருடிக் கொண்டு போனவர்கள்,— போத நொந்து - மிகவும் வருத்தமுற்று,—அதில் பதின் மடங்கு பொருள் அதனொடு கொடுத்து - அப்பொருளைப்பார்க்கினும் பத்துப் பங்கு பொருள் அதனோடு சேர்த்துக் கொடுத்து,—அறிவு இலேன் இது நீர் பொறும் என வணங்கலும் - அறிவில்லாதவனாகிய அடியேன் செய்த குற்றத்தைத் தேவரீர் பொறுத்தருளுக என்று வணங்கின மாத்திரத்தில்,—அவர் சிந்தையில் களி கூர்ந்து இப்பாதகம் பொறுத்தோம் எனில் - அவர் மனதில் சந்தோஷ மிகுந்து இப்பாவத்தைப் பொறுத்துக் கொண்டோம் என்று சொன்னால்,—அவ்வினை படர்ந்திடாது இடைந்து ஓடும் - அப்பாவமானது பின்றொடராது முறிந்தோடும். எ - று. (ச)

அல்ல தவ்வினை யாற்றவோ ராறிலை யறிவிலா ரறிந்த, மல்லல் வேதியர் பொருள்கவர்ந் தாரெனில் வருமருவினையீட்டம்; மொல்லை யந்தணர் மகிழ்தரக் கடவுள ருவப்புறப் பலபூசை, தொல்லை யாகம முதலிய புரியினுந் தொலையுமோ தொலையாவாம்.

(இ-ள்.) அல்லது அவ்வினை ஆற்ற ஓர் ஆறு இலை - அதுவல்லாமல் அப் பாவத்தை நீக்க வேறொரு மார்க்கமு மில்லை,—அறிவிலார் அறிந்து அந்த மல்லல் வேதியர் பொருள் கவர்ந்தார் எனில் - மூடர்கள் மனமறிந்து அந்த வளப்பம் பொருந்திய பிராமணர்களுடைய திரவியத்தை அபகரித்துக் கொள்வார்களாயின்,—வரும் அரும் வினை ஈட்டம் - அதனால் வரும் அரிய பாவகூட்டங்கள்,—ஒல்லை அந்தணர் மகிழ்தர கடவுளர் உவப்பு உற - சீக்கிரத்திலே பிராமணர்கள் சந்தோஷிக்கும் படியாகவும், தேவர்கள் சந்தோஷிக்கும் படியாகவும்,—தொல்லை ஆகமம் முதலிய பலபூசை புரியினும் - பழமையாகிய ஆகம முதலியவைகளிற் சொல்லிய விதிப்படி பலவகைப்பட்ட பூசைகளைச் செய்தாலும்,—தொலையுமோ தொலையாவாம்-(அப் பாவங்கள்) நீங்குமோ? நீங்காவாம். எ - று. (ரு)

பொறையு ஞானமும் புலப்பகை சாடலும் புனிதன்மேலன்புங்கொண், டுறையு மேன்மைய ராயினுங் கரவினி லுணுவள வறியாமற், குறைவிலாவிடைக் கடவுடன் பொருடனைக்

கொண்டவல் வினைதீர்க்கு,முறைமை யென்றுமுண் டாகுமோ நரகிடை மூழ்குதன் முறையாமால்.

(இ-ள்.) பொறையும் ஞானமும் புலப்பகை சாடலும் புனிதன் மேல் அன்பும் கொண்டு அறையும் மேன்மையர் ஆயினும் - பொறுமையும் ஞானமும் ஐம்புலப் பகையைக் கெடுத்தலும், சிவபெருமானிடத்தே பொருந்திய அன்புமாகிய இவைகளை யுடையவர்களென்று சொல்லப்படுகின்ற மேன்மையை யுடையவர்களாயினும்,—குறைவு இலா விடைக் கடவுள் தன் பொருள் தனை - (இலக்கணங்களிற்) குறைவில்லாத இடபவாகனத்தை யுடைய சிவபெருமானது திரவியத்தை,—கரவினில் அணு அளவு அறியாமல் கொண்ட வல் வினை தீர்க்கும் முறைமை என்றும் உண்டாகுமோ - திருட்டினால் அணுவளவு சிறிய பொருளாயினும் அறியாமையால் அபகரித்துக் கொண்ட கொடிய பாவத்தை நீக்கு முறைமை எப்பொழுதாயினுமுண்டாகுமோ?—நரகு இடை மூழ்குதல் முறையாம் - நரகத்திலழுந்துதல் முறைமை யாகும். எ - று. ஆல் அசை. (சு)

அளவிலாச்சிவ பரம்பரன் பொருளினி லணுவள வறியாமற், களவு செய்தவர் மட்டல வன்னது காண்பவர் தாமும்போ, யுள நடுக்குறு நரகிடை மூழ்குத லுண்மையே யிது தன்னில், வள மிகுந்ததோ ரருங்கதை கேளென வகுத்துரை செய்கின்றான்.

(இ-ள்.) அளவு இலாச் சிவ பரம் பரன் பொருளில் அணு அளவு அறியாமல் களவு செய்தவர் மட்டு அல - முடிவில்லாத சிவபெருமானுடைய பொருளில் அணு அளவு அறியாமல் திருடினவர் மாத்திரமல்லாமல்,—அன்னது காண்பவர் தாமும் - அத்திருட்டைப்பார்த்துக்கொண்டிருந்தவர்களும்,—உளம் நடுக்கு உறும் நரகிடைப் போய் மூழ்குதல் உண்மையே - மனமானது நடுக்கத்தை யடையும்படி நரகத்திற்போய் அழுந்துதல் சத்தியமே,—இது தன்னில் வளம் மிகுந்த தோர் அரும் கதை கேள் என வகுத்து உரை செய்கின்றான் - இது விஷயத்தில் சிறப்பு மிகுந்த ஒரு அருமையாகிய சரித்திரம் உண்டு அதைச் சொல்லுகிறேன் கேட்பாயாக என்று சூதமுனிவர் விரித்துச் சொல்லுகின்றார். எ - று. (எ)

சீத நுண்டுளித் தரங்கமே லைத்திசைச் செழுங்கடற் றீரத்து, பாத லட்பெரி யோரிமை யோர்கிளை வழுத்தரும்

பரஞானச், சோதி நாயக னிடைவிடா துறைதருஞ் சோமநா தப்பேராற், பூத லந்தனிற் சிவபதி யுளதெனும் பொற்பதி யுளதம்மா.

(இ-ள்) சீதம் நுண் துளித் தரங்கம் மேலைத் திசைச் செழும் கடல் தீரத்து - குளிர்ச்சி பொருந்திய சிறிய துளிகளையுடைய அலை பொருந்திய மேற்றிசையின்கணுள்ள செழுமையாகிய சமுத்திரக்கரையில்,—மாதவப் பெரியோர் இமையோர் கிளை வழுத்து அரும் பரஞானச் சோதி நாயகன் இடைவிடாது உறை தரும் - பெரிய தவத்தையுடைய முனிவர்களும் தேவர்களுமாகிய இவர்கள் கூட்டங்கள் ஸ்தோத்திரஞ் செய்தற்கரிய மேலான ஞானச்செஞ் சோதியாகிய சிவபெருமான் இடைவிடாம லெழுந்தருளியிராநின்ற,—பூதலந் தனில் சிவபதி உளது எனும் பொற்பதி சோமநாதப் பேரால் உளது – பூலோகத்தில் ஒரு சிவலோகம் உண்டென்று சொல்லும் படியான அழகிய ஒரு ஸ்தலமானது சோமநாதம் என்னும் பெயரோடு இருக்கின்றது. எ - று. அம்மா வியப்பிடைச்சொல். (அ)

அந்தி வான்மதி மிலைச்சிய பரம்பா னணிவிழா வொலி வாச, மந்த மாருதம் வந்தசை பந்தரின் மாளிகை மணத்தோதை, சந்த னசல முலையவர் நடமிடுஞ் சரணநூ புரவோசை, சிந்து வார்திரை வாரிதி யரவமுஞ் சிறிதெனச் சேணோங்கும்.

(இ-ள்.) அந்தி வான் மதி மிலைச்சிய பரம்பரன் அணிவிழா ஒலி - அந்திக்காலத்தில் தோன்றுகின்ற பெரிய சந்திரனைத் தரித்த சிவபெருமானுடைய அழகிய திருவிழாவினது ஓசையும்,—வாச மந்த மாருதம் வந்து அசை பந்தரின் மாளிகை மணத்து ஓதை - வாசனை பொருந்திய இளந் தென்றல் வந்து உலாவுகின்ற பந்தல்களையுடைய வீட்டினிடத்துச்செய்கின்ற விவாக ஓசையும்,—சந்தன அசல முலையவர் நடமிடும் சரண நூபுர ஓசை—சந்தனக்கோலத்தை யணிந்த மலைபோன்ற முலைகளையுடைய பெண்கள் நடனஞ் செய்கின்ற பாதங்களில் அணிந்திருக்கின்ற சிலம்பினது ஓசையும்,—சிந்து வார் திரை வாரிதி அரவமும் சிறிது எனச் சேண் ஓங்கும் - சிதறுகின்ற நீண்ட அலைகளையுடைய சமுத்திர ஓசையும் சிறிது என்று சொல்லும்படி ஆகாயபரியந்த முயர்ந்து ஒலிக்கும். எ - று. (௯)

மறைக ளுள்ளன வாதலா லயன்பத மாகமம் வளர்நீதித், துறைக ளின்புற விளங்கலாற் றுளக்கிலாச் சிவபத மெ

னத் தோற்று, நறை மலர்த்திரு வாழ்தலா ஞாரண னற்பதம் போலாகு, நிறைய வானவர் செறிதலாற் றுறக்கமு நிகர்க்கு மப் புரமன்னோ.

(இ-ள்.) அப்புரம் - அச்சோமநாதம் என்னும் க்ஷேத்திரம்,— மறைகள் உள்ளன ஆதலால் அயன் பதம் - வேதங்கள் வழங்குகின்றன ஆதலால் பிரமலோகமும்,—ஆகமம் வளர் நீதித் துறைகள் விளங்கலால் துளக்கு இலாச் சிவபதம் எனத் தோன்றும் - சிவாகமங்களும், வளராநின்ற நீதிமார்க்கமும் இன்பமுண்டாகும்படி விளங்குகின்றமையால், அழிதலில்லாத சிவலோகமும போலத் தோன்றும்,— நறை மலர்த் திருவாழ்தலால் நாரணன் நற்பதம் போலாகும் - வாசனைபொருந்திய தாமரை மலரிலிருக்கின்ற சீதேவியானவள் வாழ்ந்துகொண்டிருத்தலால் விஷ்ணுவினுடைய உலகத்தையும் ஒத்திருக்கும்,—நிறைய வானவர் செறிதலால் துறக்கமும் நிகர்க்கும் - நிறையும்படி தேவர்கள் நெருங்கி யிருத்தலால் சுவர்க்க லோகத்தையும் ஒத்திருக்கும். எ - று. மன் ஓ அசைகள். (கO)

அறந் தயங்கலி னிலைபெறு மலைமக ளனையது புனைசெல்வத், திறந் தயங்கலிற் றிருமகள் புரைவது திகழ்தரு கலைநன்னூ, னிறந் தயங்கலி னளவறு கலைமக ணிகர்ப்பது பொறையுந்தன்,புறந் தயங்கலிற் புவிமக ளன்னதப் புரத்தையார் புகழ்கிற்பார்.

(இ-ள்.) அறம் தயங்கலில் நிலைபெறும் மலைமகள் அனையது - அத்தலத்தில் முப்பத்திரண்டு தருமமும் விளங்குகின்றமையால, அது நிலைபெற்ற பர்வதராஜ குமாரத்தியாகிய உமாதேவியாரை யொத்திருக்கின்றது,—புனை செல்வத் திறம் தயங்கலின் திருமகள் புரைவது - அழகுபொருந்திய செல்வக் கூட்டங்கள் விளங்கலால் மகாலக்ஷுமியை யொத்திருக்கின்றது,—திகழ் தரு நன்னூல் நிறந் தயங்கலின் அளவு அறு கலைமகள் நிகர்ப்பது,—விளங்காநின்ற நல்ல சாஸ்திரத்தினது பிரகாசம் விளங்குகின்றமையால், அளவில்லாத சாஸ்திரங்களையுடைய சரஸ்வதியை யொத்திருக்கின்றது,—பொறையும் தன் புறம் தயங்கலின் புவி மகள் அன்னது - பொறுமையுந் தன்பக்கத்தில் விளங்குகின்றமையால் பூமிதேவியை யொத்திருக்கின்றது,—அப்புரத்தை யார் புகழ்கிற்பார் - ஆதலால் அந்தஸ்தலத்தையாவர் புகழவல்லவர். எ - று. (கக)

பல்வளங்களும் படைத்தலான் மடற்றிகழ் பங்கயா சனன் போலுஞ், செல்வ மல்குவித் துயிர்பல வளர்க்கலாற் றிருநெடு மாலேய்க்கும், வல்வி னைத்தொகை மாய்த்தருள் வழங்கலான் மழுவலான் றனையொக்கு, மெல்வளர்ந்தெழு மாடமா ளிகைகளா லிலகிய புரமம்மா.

(இ-ள்.) எல் வளர்ந்து எழு மாட மாளிகைகளால் இலகிய புரம் - சூரிய மண்டலம் வரையில் ஓங்கி வளர்ந்து எழுகின்ற மாட மாளிகைகளால் விளங்காநின்ற அந்தஸ்தலமானது,-பல் வளங்களும் படைத்தலால் மடல் திகழ் பங்கயாசனன்போலும் - பல வளப்பங் களு முண்டாயிருத்தலால் இதழ்களால் விளங்குகின்ற தாமரையாச னத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரை யொத்திருக்கும்,—செல்வம் மல்கு வித்து உயிர் பல வளர்க்கலால் திரு நெடு மால் ஏய்க்கும் - செல்வத்தை நிறையச் செய்து பலவகைப்பட்ட உயிர்களை வளர்க்கி ன்றமையால் விஷ்ணு மூர்த்தியை யொக்கும்,—வல்வினைத் தொகை மாய்த்து அருள் வழங்கலால் மழுவலான் தனை ஒக்கும்-வலிய வினைக் கூட்டங்களை யொழித்துக் கிருபையைப் பாலித்தலால் மழுப்படை யை யேந்திய சிவபெருமானை யொக்கும். எ - று. அம்மா வியப்பி டைச்சொல். (கஉ)

பிருகு மாமுனி சபித்தலி னடைந்தவெம் பிறப்புக ளோர்பத்தின், றிருவிளங்கிய விதுகுலத் திடைவசு தேவன்பா லுதயஞ்செய், தருளு மாயவன் புதல்வரோ டத்தலத் தடை ந்துட றவிர்ந்தின்ப, மருவு தன் பெரும் பதம்புகுந் தானெ னில் வழுத்தலாம் படித்தன்றால்.

(இ-ள்.) பிருகு மா முனி சபித்தலின் - பிருகுமாமுனிவரால் சபிக்கப்பட்டமையால்,—அடைந்த வெம் பிறப்புகள் ஓர் பத்தின்- தா மெடுத்த கொடிய பிறவிகளாகிய பத் தவதாரங்களில்,—திரு விளங்கிய விது குலத்திடை வசு தேவன்பால் உதயம் செய்தருளும் மாயவன் - மகா லட்சுமி விளங்குகின்ற விது குலத்திலே பிறந்த வசுதேவரிடத்தில் (கிருஷ்ணனாக) அவதாரஞ் செய்தருளிய விஷ் ணுமூர்த்தியானவர்,—புதல்வ ரோடு அத் தலத்து அடைந்து - புத்தி ரர்களோடு அந்தஸ்தலத்தை யடைந்து,—உடல் தவிர்ந்து இன்பம் மருவும் தன் பெரும் பதம் புகுந்தான் எனில் - சரீரம் நீங்கி இன்பம் பொருந்திய தனது பெரிய பதவியாகிய வைகுண்டத்தை யடைந் தார் என்றால்,—வழுத்தல் ஆம் படித்து அன்று - துதிக்கும்படியான தன்மையை யுடையதாகும். எ - று. ஆல் அசை. (கங)

அளந்து காணவு நாவினாற் பகரவு மறிஞர்க்கு மரிதான, வளம்பெறுஞ் சவுராட்டதே யத்திடை மறைநெறிச் சிவநீதி, துளங்க லொன்றிலாப் பொற்பிர காசமாஞ் சோமநா தந்தன் னில்,விளங்கு கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை விழாநடந் ததுவன்றே.

(இ-ள்.) அளந்து காணவும் நாவினால் பகரவும் அறிஞர்க்கும் அரிதான வளம் பெறும் சவுராட்ட தேயத்து இடை - அளவைகளா லளவிட் டறியவும் வாக்கினாற் சொல்லவும் அறிவுடையோர்களுக் கும் அரிதாகிய வளப்பம் பொருந்திய சௌராஷ்டக தேசத்திலே,- மறைநெறிச் சிவநீதி துளங்கல் ஒன்று இலாப் பொன் பிரகாசம் ஆம் சோமநாதந் தன்னில் - வேதவழி யொழுகுகின்ற சிவதருமங்க ளிற் சிறிதுந் தவறுதலில்லாத பொற் பிரகாசம் பொருந்திய சோம நாதம் என்னும் ஸ்தலத்தில்,—விளங்கு கார்த்திகைத் திங்களில் கார்த்திகை விழா நடந்தது - விளங்குகின்ற கார்த்திகை மாசத்தில் திருக்கார்த்திகை யுற்சவம் நடந்தது. எ - று. அன்று ஏ அசை. ()

நவ்வி தங்கிய செங்கையோ னருச்சனை நயந்துமுப் போ துஞ்செய், செவ்வி யோன்சிவ சன்மனென் பவன்சிவ சிந்தை யந் தணர்கோமா, னெவ்விழாவினு நல்விழா விதுவென வேத் துகார்த் திகைத்திங்க, ளவ்வி ழாவணி யிறைஞ்சுவான் பரா பர னன்பரோ டணைவுற்றான்.

(இ-ள்.) நவ்வி தங்கிய செங்கையோன் அருச்சனை நயந்து முப்போதும் செய் செவ்வியோன் - மான் பொருந்திய சிவந்த திரு க்கரத்தையுடைய சிவபெருமானது பூசையை விருப்பத்தோடு காலை யுச்சி மாலை என்னு முக்காலங்களிலுந் தவறுமற் செய்கின்ற நன் மையை யுடையவனும்,—சிவ சன்மன் என்பவன் - சிவசன்மா என்னும் பெயரையுடையனும்,—சிவ சிந்தை அந்தணர் கோமான் - சிவத்தியானத்தை யுடைய சிவப்பிராமணர்களுக்குத் தலைவனுமாகிய அப்பிராமணன்,—எவ்விழாவினும் இது நல்விழா என ஏத்து - எந் தத் திருவிழாவினு மிது நல்ல திருவிழாவென்று யாவர்களுந் துதிக் கின்ற,—கார்த்திகைத் திங்கள் அவ் விழா வணி இறைஞ்சுவான் - கார்த்திகைமாதக் கார்த்திகை நக்ஷத்திரத்திற் செய்யப்படும் திருவி ழாவின் சிறப்பை வணங்கும் பொருட்டு,—பராபரன் அன்பரோடு அணைவுற்றான் - சிவனடியார்களோடு தானும் போய்ச் சேர்ந்தான்.

குட திசைக்கடற் படிந்தருட் டானங்கள் கொடுத்து மை யொருபாகக், கடவு டன்பதஞ் சோமஞ தத்திடைக் கருத்துறப் பணிந்தேத்தி,விடல ரும்பரி வுடன்மகிழ்ந் துறை பவன் விளங்குகார்த் திகை நன்ஞட், டொடரு மந்திபிற் றீபகா லத்தணி துற்றவா லயஞ் சேர்ந்தான்.

(இ-ள்.) குடதிசைக் கடல் படிந்து - மேற்றிசைக் கடலில் ஸ்நானஞ் செய்து,—அருள் தானங்கள் கொடுத்து - கிருபையோடு தானங்களைச் செய்து,—சோம நாதத்திடை உமை ஒரு பாகக் கடவுள் தன் பதம் கருத்துறப் பணிந்து எத்தி - சோமநாதமென்னும் ஆலயத்திற் போய் உமாதேவி பாகராகிய சிவபெருமானது திருவடிகளை மனதிற் பதித்து வணங்கித் துதித்து,—விடல் அரும் பரிவுடன் மகிழ்ந்து உறைபவன் - நீங்குதற்கரிய அன்போடு மகிழ்ந்து வசிப்பவனுகிய சிவ சன்மா வென்னும் ஆதிசைவப் பிராமணனுவன்,—விளக்குங் கார்த்திகை நல் நாள் தொடரும் அந்தியில் - விளங்காநின்ற திருக்கார்த்திகை நக்ஷத்திரங் கூடிய புண்ணிய காலத்தின் சாயங்காலத்தில்,—தீப காலத்து அணி துற்ற ஆலயம் சேர்ந்தான் - கார்த்திகை தீபம் வைக்குங்காலத்தில் அழகு பொருந்திய அவ்வாலயத்தை யடைந்தான். 'எ - று. (௧௧)

சென்று சந்நிதி சிறிதணித் தாகமுன் சேர்ந்த வன்பர்கள் கூட, நின்றி றைஞ்சுமவ் வெல்லேயி லிங்கிவ னிகர்ப்ப தோர்சிவற் கன்பன்,தன்று ணைக்கலேச் சோமசன் மப்பெயர் தரித்தரு ணெறியென்றுந், துன்று வேதிய னெருவ னவ் வெல்லேயிற் ருெழுதருகூற நின்ருன்.

(இ-ள்.) சந்நிதி சிறிது அணித்தாகச் சென்று சேர்ந்த அன்பர்கள் கூட - (அச்சிவசன்மன்) சந்நிதானத்திற் கொஞ்சஞ் சமீபமாகப் போய் முன் அவ்விடத்தில் வந்திருந்த அடியார்களோடு கூட,—நின்று இறைஞ்சும் அவ் வெல்லேயில் - நின்று வணங்குகின்ற அக்காலத்தில்,—இங்கு இவன் நிகர்ப்பது ஓர் சிவற்கு அன்பன் - இவ்விடத்தில் இச் சிவ சன்மனை ஒப்பவனுகிய ஒரு சிவனடியான்,—தன் துணைக் கலைச் சோமசன்மப் பெயர் தரித்து - தனக்குத் தானே ஒப்பாகிய சாஸ்திரங்களை யறிந்த சோமசன்மனென்னும் பெயரைத் தரித்து,—அருள் நெறி என்றும் துன்றுவேதியன் ஒருவன் – கிருபா மார்க்கத்திலேயே எப்பொழுதும் பொருந்தி நடக்கும் பிராமண

ஒருவன்,—அவ் எல்லையில் தொழுது அருகு உற நின்றான் - அக் காலத்தில் அச் சிவபெருமானை வணங்கிக்கொண்டு அச் சிவ சன்மா வின் பக்கத்திலே நின்றான். எ - று. (கஎ)

வரு நெருக்கினச் சோமசன் மன்றிகழ் வடிவுபட் டெரி கின்ற, திரு விளக்குநெய் யகலொடு வீழ்ந்தது தெரிந்துகண் டில னன்னோ,னருகு கண்டு நிற் குஞ்சிவ சன்மனொன் றறை ந்திலன் றிருநாளு, மொருவ விங்கிவர் தந்தமக் குரியன வுறைவிடந் தனையுற்றார்.

(இ-ள்.) வரு நெருக்கின் அச் சோம சன்மன் திகழ் வடிவு பட்டு - அடியார்கள் வருகின்ற நெருக்கத்தினலே அச் சோமசன்மா வுடைய விளங்காநின்ற சரீரம்பட்டு,—எரிகின்ற திருவிளக்கு நெய் அகலொடு வீழ்ந்தது - அவ்வாலயத்தில் எரிந்து கொண்டிருந்த திரு விளக்கு நெய் அகலோடு கீழேவிழுந்தது,—அன்னோன் தெரிந்து கண்டிலன் - அதனை அச் சோமசன்மன் அறிந்து பார்க்கவில்லை,— அருகு கண்டு நிற்கும் சிவ சன்மன் ஒன்றும் அறைந்திலன் - பக்கத் திற் பார்த்துக்கொண்டு நின்ற சிவசன்மன் ஒன்றும் பேசாதவனா யிருந்தான்,—திரு நாளும் ஒருவ இங்கு இவர் தம் தமக்கு உரியன உறை விடந்தனை உற்றார் - அத்திருவிழா முடிய அவ்விடத்திலிரு ந்த அவ் விருவர்களும் தங்கள் தங்களுக் குரியனவாகிய இருப்பிடத் தை யடைந்தார்கள். எ - று. (கஅ)

சிறிது நாட்கழித் துடன்சிவ சன்மனுந் திருவிளக் கத னெய் பார், மறிய வீழ்த்திய சோமசன் மனும்பொறை மாய் ந்தனர் மாய்ந்தந்தோ, செறியின் வானவ ராயினுந் தீய்த்தெ ழூந் தீச்சுர மென்றியாரு, மறிவு லைந்த விந் தாடவி யிடத்த டைந் தலகைய யின ரன்றே.

(இ-ள்.) சிறிது நாள் கழித்து - சிலநாள் சென்றபின்,— உடன் - உடனே,—சிவசன்மனும் - (திருவிளக்கு நெய் அகலுடன் விழக்கண்ட) சிவசன்மனும்,—திருவிளக் கதன் நெய் பார் மறிய வீழ்த்திய சோமசன் மனும் - திருவிளக்கு நெய் பூமியில் விழும்படி கீழே தள்ளிய சோமசன்மனும்,—பொறை மாய்ந்தனர் - உடற்பா ரம் நீங்கி இறந்தார்கள்,—மாய்ந்து - இறந்து,—அந்தோ-ஐயோ!— வானவாாயினும் செறியின் தீய்த்து எழும் தீச் சுரம் என்று யாரும் அறிவு உலைந்த - தேவர்களாயினும் நெருங்கினல் கருகிப் போகும்

படி செய்கின்ற அக்கினி மயமாகிய சுரவழி யென்று யாவருங் கலங்கும்படியான,—விந்த அடவி அடைந்து அலகை ஆயினர் - விந்தமலையின் பக்கத்திலுள்ள வனத்தை யடைந்து பேய் வடிவங் கொண்டார்கள். எ - று. அன்று ஏ அசை. (கக)

திரு விளக்குநெய் யகலொடு வீழ்த்திய சோமசன் மனுஞ் சேர்ந்த, வுருவி னொன்பது வாயிலிற் சீவிழ வுடன் புழுக் குடைந்துந்த, மருவு நாற்றமூன் றியோசனை நாற் றிசை வளர்ந் திட வுடல் வாடப், பெருகு நீரருந் தாகமும் பசியுமேற் பிறங்கவங் குலைகின்றான்.

(இ-ள்.) திரு விளக்கு நெய் அகலொடு வீழ்த்திய சோமசன்மனும் - திருவிளக்கு நெய் அகலுடன் கீழே விழும்படிச் செய்த சோமசன்மனும்,—சேர்ந்த உருவின் ஒன்பது வாயிலில் சீவிழ - பொருந்திய அவன் சரீரத்திலுள்ள ஒன்பது துவாரத்தின் வழியாக சீவடியவும்,—உடன் புழுக் குடைந்து உந்த - உடனே அதில் புழுக்கள் குடைந்து வருத்தவும்,—மருவு நாற்றம் மூன்று யோசனை நால் திசை வளர்ந்திட - அதிற் பொருந்திய துர் நாற்றமானது மூன்று யோசனை தூரம் நாலு திக்குகளிலும் வீசவும்,—உடல் வாட - சரீரம் வாட்ட மடையவும்,—பெருகும் நீர் அரும் தாகமும் பசியும் மேல் பிறங்க அங்கு உலைகின்றான் - மிகுந்த ஜலத்தை யுண்ணத்தக்க அரிய தாகமும் பசியும் மேன் மேல் வளர அவ்விடத்திலிருந்து வருந்துகின்றான். எ - று. (உ0)

திருவிளக்கு நெய் மெய்கொடு வீழ்த்திய எனவும் பாடம்.

கண்டு நின்றவச் சிவசரு மனுமிகக் கருதரு குறளாகிக், கொண்ட வெம்பசி மேற்கொள நாக்குமுக் கூப்பிடு வளர்ந்தந் தோ,மண்டு கண்களு மலையெனத் தளர்ந்தன வளருநா விழி யூனத், துண்ட வெம்பற வைக்குல மெறும்புணத் துயரடைந் தலமந்தான்.

(இ-ள்) கண்டு நின்ற அச்சிவ சருமனும் மிகக் கருதரும் குறள் ஆகி - (அத் திருவிளக்குக் கீழேவிழ) அதைப் பார்த்துக்கொண்டு நின்ற சிவ சன்மனும் மிகவும் நினைத்தற் கரிதாகிய பூதமாகி,—கொண்ட வெம் பசி மேல் கொள - அப்பூதம் கொண்ட கொடிய பசியானது அதிகரிக்க,—நாக்கு முக் கூப்பிடு வளர்ந்து - நாக்கானது மூன்று கூப்பிடுதூரம் வளர்ந்து,—அந்தோ மண்டு கண்களும் மலை

யெனத் தளர்ந்தன - ஐயோ நெருங்கிய கண்களும் மலையைப் போல் பருத்துத் தொங்கின,-வளரும் நா இழி ஊனை-வளருகின்ற நாக்கிலிருந்து வழிகின்ற மாமிசத்தை,—துண்ட வெம் பறவைக் குலம் எறும்பு ஊணத் துயர் அடைந்து அலமந்தான் - மூக்குக்களை யுடைய கொடிய பக்ஷி கூட்டங்களும் எறும்புகளும் உண்ண அத னால் துன்பமடைந்து கலக்கமுற்றான். எ - று. (உக)

வே று.

காணரிய விண்ணவர் கருத்தலை சுரத்தே
சேணிலகு சைவமுறு தெய்வவடி வென்ன
வாணவ மழித்ததன தாண்மை நிகரான
மாணவர்க ளெண்ணிலர் மருங்குற நெருங்க.

(இ-ள்.) காண் அரிய விண்ணவர் கருத்து அலை சுரத்தே - காணுதற்கரிய தேவர்களுடைய மனதை வருத்துகின்ற அச் சுரத்தில்,—சேண் இலகு சைவம் உறும் தெய்வ வடிவு என்ன - உயர்ந்து விளங்காநின்ற சைவ சமயத்திற் பொருந்திய தெய்வ வடிவமென்று சொல்லத்தக்க,—ஆணவம் அழித்த தனது ஆண்மை நிகரான- ஆணவமலத்தை நீக்கிய தனது ஆண்டகைமைக் கொப்பான,—மாணவர்கள் எண்ணிலர் மருங்குற நெருங்க - அளவில்லாத மாணாக்கர்கள் பக்கத்தில் நெருங்கிவரவும். எ - று. (உஉ)

மாலினை யடர்த்தவுரு மாணவர்கள் பேணு
மூலமறை யாகம மொழிந்துபுடை சூழ
வாலநிழ லின்றுமெனை யாளுடைய நாதன்
சீலமுனி வோர்களொடு சேர்வதனை மான.

(இ-ள்.) மாலினை அடர்த்த உரு மாணவர்கள் - மயக்கத்தை நீக்கிய வடிவத்தையுடைய மாணாக்கர்கள்,—பேணு மூல மறை ஆகமம் மொழிந்து புடை சூழ - விரும்பத் தக்கதாகிய பழமைபொருந்திய வேதங்களையும் ஆகமங்களையும் ஓதிக்கொண்டு பக்கத்திலே சூழ்ந்து வரவும்,—எனை ஆளுடைய நாதன் ஆல நிழல் நின்றும் - என்னையடிமையாகக்கொண்டருளிய சிவபெருமான் ஆலவிருக்ஷத்தி னிழலினின்று நீங்கி,—சீல முனிவர்கள் ஒடு சேர்வதனை மான - பரிசுத்தர்களாகிய முனிவர்களோடு பொருந்தி வருதலைப் போலவும். ()

வித்துரும வெற்பையொளிர் வெண்முகில் வளைந்தா
லொத்துவடி விற்றவள வொண்பொடி வடங்க

வத்தட வரைக்கணுத யாதப நிகர்ப்பத்
தத்துகதிர் வீசிய சடாமுடி தயங்க.

(இ-ள்.) வித்துரும வெற்பை ஒளிர்வெள் முகில் வளைந்தால் ஒத்து - பவளமலையை விளங்காநின்ற வெள்ளிய மேகமானது சூழ்ந்தாற்போல,—வடிவில் தவள வெள் பொடி வயங்க - சரீரத்தில் வெண்ணிறம் பொருந்திய விபூதியானது பிரகாசிக்க,—அத் தடவரைக்கண் உதய ஆதபம் நிகர்ப்ப - அப்பவள மலையினிடத்து உதயமாகின்ற சூரியனைப் போல,—தத்து கதிர் வீசிய சடாமுடி தயங்க - ததும்புகின்ற ஒளியை வீசுகின்ற ஜடாமுடியானது பிரகாசிக்கவும்.

தண்டரள வாளருவி தாழ்பவள வெற்பின்
வண்டவள நூலுமணி மார்பமும் வயங்கத்
துண்டமதி தாமரை தொடர்ந்துறைவ தென்னப்
புண்டரிக முகத்திடை பொலிந்தொளி விளங்க.

(இ-ள்.) பவள வெற்பின் தண் தரள வாள் அருவி தாழ் - பவளமலையினிடத்துக் குளிர்ச்சி பொருந்திய முத்துக்களோடு ஒளிபொருந்திய மலையருவி யொழுகுதல் போல்,—வண் தவள நூலும் மணி மார்பமும் வயங்க - வளப்பம் பொருந்திய வெள்ளிய முப்புரிநூலும் அம் முப்புரிநூலணிந்த அழகிய மார்பும் விளங்கவும்,—துண்ட மதி தாமரை தொடர்ந்து உறைவது என்ன - துண்டமாகிய மூன்றாம் பிறைச் சந்திரனானவன் தாமரை மலரினிடத்து வசித்தாற் போல,—புண்டரம் முகத்திடை பொலிந்து ஒளி விளங்க - திரிபுண்டரமானது முகத்தினிடத்துப் பொலிந்து பிரகாசிக்கவும். எ - று. (உ௫)

விண்டலமு மாதிரமு மேதினியு மாகங்
கொண்டதொரு சோதியது கொண்டுநிறை வெய்தக்
கண்டிகை யலங்கிய கலங்களி னிலங்க
வண்டகைய பட்டுடையின் வற்கலை வயங்க.

(இ-ள்.) விண் தலமும் மாதிரமும் மேதினியும் ஆகம் கொண்டது ஒரு சோதியது கொண்டு - ஆகாயத்தையும் அஷ்டதிக்குகளையும் பூமியையும் சரீரமாகக் கொண்டருளிய சிவபெருமானது சோதிசொரூபம் போல வடிவம் கொண்டு,—நிறைவு எய்தக் கண்டிகை அலங்கிய கலன்களின் இலங்க - (அச்சரீரம்) நிறையும்படி தரித்திருக்கின்ற ருத்திராக்ஷமாலையானது அசைகின்ற ஆபரணங்கள் போல்

விளங்கவும்,—வண் தகைய பட்டு உடையின் வற்கலை வயங்க - வளப்பம் பொருந்திய தகுதியாகிய பட்டு வஸ்திரம் போல் மரவுரியாகிய வஸ்திரம் விளங்கவும். எ - று. (உசு)

ஆவிநிக ரண்ணலை யகத்தினி லிருத்தி
நாவினிறை வற்குரிய மந்திர நவிற்றி
மேவவரு பாசவினை வீசியுயர் வாம
தேவனெனு மன்புடைய தெய்வமுனி வந்தான்.

(இ-ள்.) ஆவி நிகர் அண்ணலை அகத்தினில் இருத்தி - உயிர் போன்ற சிவபெருமானைத் தம் மனதிற் பதித்து,—நாவின் இறைவற்கு உரிய மந்திரம் நவிற்றி - நாவினால் சிவபெருமானுக்குரிய ஸ்ரீ பஞ்சாட்சர மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு,—மேவ வரு பாச வினை வீசி - தம்மை யடையும்படி வருகின்ற பாசங்களையும் வினைகளையு மொழித்து,—உயர் வாமதேவன் எனும் அன்புடைய தெய்வமுனி வந்தான் - உயர்வாகிய வாமதேவன் என்னும் பெயரையுடைய அன்பு பொருந்திய தெய்வத்தன்மையையுடைய ஒரு முனிவர் அவ்விடத்து வந்தார். எ - று. (உஎ)

அன்னவன் வரத்தினை வனத்தலகை யாகி
யின்னலுறு வோர்களிரு வோருமெதிர் கண்டார்
முன்னிறைவ னர்ச்சனை புரிந்தவருண் மொய்ம்பா
னன்னிமல னன்பனிவ னன்றென நினைந்தார்.

(இ-ள்) அன்னவன் வரத்தினை வனத்து அலகை யாகி இன்னல் உறுவோர்கள் இருவோரும் எதிர் கண்டார் - அவ்வாமதேவ முனிவர் வருதலை அவ்வனத்திற் பேய் பூத வடிவங்கொண்டு துன்பப் படுகின்ற சோமசன்மன் சிவசன்மன் என்னு மிருவர்களும் எதிரே கண்டார்கள்,—முன் இறைவன் அர்ச்சனை புரிந்த அருள் மொய்ம்பால் - முன்னமே இவர்கள் சிவபெருமானைப் பூசை செய்த திருவருளின் வலிமையால்,—இவன் அந் நிமலன் அன்பன் என நன்று நினைந்தார் - இம் முனிவர் அம் மலமுத்தராகிய சிவபெருமானது அடியவரென்று மிகவும் நினைத்தார்கள். எ - று. (உஅ)

சென்றனர் பணிந்தனர்கள் சேவடி மருங்கே
நின்றன ரிறைஞ்சியவர் நின்றநிலை காணு
வன்றருள் சுரந்துமுனி யங்கவர்க ளிந்தத்
துன்னுருவ மெய்தவரு தொல்வினை நினைந்தான்.

(இ-ள்) சென்றனர் - அவ்விருவர்களும் அவ் வாமதேவமுனி வரிடத்துப் போய்,—சேவடி பணிந்தனர்கள் - அம் முனிவருடைய சிவந்த திருவடிகளை வணங்கினார்கள்.—மருங்கே நின்றனர் - அவர் பக்கத்தில் நின்றார்கள்,—முனி அவர் அங்கு இறைஞ்சி நின்ற நிலை காணு - அம்முனிவர் அவ்விருவர்களும் அவ்விடத்தில் வணங்கி நின்ற தன்மையைப் பார்த்து,—அன்று அருள் சுரந்து - அப்பொழுது கிருபைகூர்ந்து,—அவர்கள் இந்தத் துன்று உருவம் எய்த வரு தொல்வினை நினைந்தான் - அவ்விருவர்களும் இந்த நெருங்கிய பூத பைசாசவடிவங்கொண்டு வருதற்குக் காரணம் யாதென்று அவர்களது பழவினைகளைத் தியானித்துப் பார்ப்பாராயினார். எ - று (உக)

அண்ணலிரு தாண்மல ரகத்துணெடு நேர
நண்ணரிய நன்னினைவி னண்ணியருண் ஞானக்
கண்ணிலிவர் முன்னைவினை கண்டவரை நோக்கி
யெண்ணரிய செய்தவ மிசைந்தவ னிசைப்பான்.

(இ-ள்.) எண் அரிய செய் தவம் இசைந்தவன் - அளவிடுதற்கரிய செப்பமாகிய தவத்தைச் செய்த அவ் வாமதேவ முனிவர்,—அண்ணல் இரு தாள் மலர் அகத்துள் நெடு நேரம் நண் அரிய நல் நினைவில் நண்ணி - சிவபெருமானது இரண்டு திருவடித்தாமரை மலர்களையும் தம் மனதினிடத்துப் (பதித்து) அனேக காலம் பொருந்துதற் கரிதாகிய நல்ல தியானத்திலிருந்து,—அருள் ஞானக் கண்ணில் இவர்முன்னை வினை கண்டு - கிருபை பொருந்திய ஞான திர்ஷ்டியால்இவ் விருவர்களும் முற்பிறப்பிற் செய்த வினைகளைக் கண்டறிந்து,-அவரை நோக்கி இசைப்பான் - அவ்விருவர்களையும் பார்த்துச் சொல்லுகின்றார். எ - று. (௩0)

பேதமை யடைந்துலவு பேயுருவி னின்றீர்
வேதியர்க ணீர்முனருள் வீடனைய சோம
நாதநகர் கார்த்திகை விழாநலனி னண்ணிக்
கோதில்பர மற்கொரு கொடும்பிழை புரிந்தீர்.

(இ-ள்.) பேதமை அடைந்து உலவும் பேய் உருவின் நின்றீர் - அறியாமையை யடைந்து திரிகின்ற பேய்வடிவங்கொண்டு நிற்கினறவர்களே!—நீர் முன் வேதியர் - நீங்களிருவரும் முற்பிறப்பில் பிராமணர்கள்,—அருள் வீடு அனைய சோமநாதன் நகர் கார்த்திகைவிழா நலனில் நண்ணி - கிருபை பொருந்திய மோக்ஷ நிலத்தை யொத்த

சோமநாதம் என்னும் ஸ்தலத்தில் கார்த்திகைமாசத்துத் திருக்கார்த்திகை உற்சவத்தில் நன்மையோடுபோய்,—கோது இல் பரமற்கு ஒரு கொடும் பிழை புரிந்தீர் - குற்றமில்லாத சிவபெருமானுக்கு ஒரு கொடிய குற்றத்தைச் செய்தீர்கள், எ - று. (கூக)

ஏதெனி னெருக்குறு மிடத்துடலி னானீ
சோதிகொள் விளக்கொடு துதைந்தநெய் கவிழ்த்தா
யோதுமதெ னீயுமவ ணுற்றவது கண்டு
மாதரென வொன்றுமுரை யாதயலி னின்றாய்.

(இ-ள்.) ஏது எனின் - அக்குற்றம் யாதென்று வினவுவீர்களாயின், சொல்லதும்,—நெருக்கு உறும் இடத்து - நெருக்கம்பொருந்திய இடத்தில்,—நீ - சோமசன்மனே நீ,—உடலினால் சோதி கொள் விளக் கொடு துதைந்த நெய் கவிழ்த்தாய் - உன் சரீரத்தினால் ஒளி பொருந்திய தீபத்தோடு பொருந்திய நெய்யையும் கவிழ்த்துவிட்டாய்,—நீயும் - சிவசன்மனே நீயும்,—ஓதும் அது அவண் உற்ற அது கண்டு - சொல்லப்பட்ட அக்குற்றம் அவ்விடத்தில் நடந்ததைப்பார்த்து,—மாதர் என ஒன்றும் உரையாது அயலில் நின்றாய் - பெண்களைப் போல ஒன்றும் சொல்லாது பக்கத்திலே நின்றாய். ()

மெய்பட விளக்கொடுநெய் வீழவது தாழா
தெய்தரிய தீயவினை யெய்திடலி னானீ
மொய்படர் புழுக்குடைய முற்றுமுடல் சீயே
பெய்திழிய வெய்துடைய பெய்துற வடைந்தாய்.

(இ-ள்.) மெய்பட விளக்கு ஒடு நெய் வீழ - சரீரமானது பட்ட அளவில் விளக்கும் நெய்யும் கவிழ்ந்து கீழேவிழ,—அது தாழாது எய்து அரிய தீய வினை எய்திடலினால் - அதனால் குறைவில்லாது அடைதற்கரிதாகிய பாவம் வந்தடைந்தபடியால்,—நீ மெய் படர் புழுக்குடைய உடல் முற்றும் சீயே பெய்து இழிய-சோமசன்மனே நீ நெருங்கிப் பரவுகின்ற புழுவானது குடைதலினாலே சரீரமுழுதும் சீயானது சொரிந்து ஒழுக,—வெய்து உடைய பெய் துறவு அடைந்தாய் - கொடுமை பொருந்திய துன்பத்தை யடைந்தாய். ()

வாய்ப்பவினு சண்டுமொரு வார்த்தைபுக லாத
நீப்பரிய தீவினையை நீப்பரிய நீயு
மேற்பறவை யுண்ணநெடு வெற்டனைய சண்முக்
கூப்பிடு வளர்ந்தநெடு நாக்கழி தொண்டாய்.

(இ-ள்.) வாய்ப்ப இது கண்டும் - பொருந்தும்படி இச்செய்கையைப் பார்த்தும்,—ஒரு வார்த்தை புகலாத நீப்பு அரிய தீவினையை நீப்பு அரிய நீயும் - ஒருவார்த்தையும் சொல்லாதபாடியால் நீங்குதற்கரிய பாவத்தை யொழிக்கக் கூடாத சிவசன்மனே நீயும்,—மேல் பறவை உண்ண நெடு வெற்பு அனைய கண் — மேலே பறக்கின்ற பக்ஷிகள் மாமிசத்தை யுண்ணும்படி நீண்ட மலைபோன்ற கண்களையும்,—மூக் கூப்பிடு வளர்ந்த நெடு நா - மூன்று கூப்பிடு தூரம் நீண்டு வளர்ந்த நாவையும்,—கடிது கொண்டாய் - சீக்கிரம் பெற்றுக் கொண்டாய். எ - று. (௩௪)

உழைக்கதி ரயிற்பர சுடைக்கடவு ளுக்குப்
பிழைத்தவர் தமக்கொரு பிழைக்குநெறி யுண்டோ
தழைத்ததுய ரத்தொடு தனித்தளவில் கற்ப
மிழைத்தநர கக்குழி யிடத்துலைவ ரன்றே.

(இ-ள்.) உழைக் கதிர் அயில் பரசு உடைக் கடவுளுக்குப் பிழைத்தவர் தமக்கு ஒரு பிழைக்கும் நெறி உண்டோ - மானையும், ஒளியும் கூர்மையும் பொருந்திய மழுப்படையையும் உடைய சிவபெருமானுக்குக் குற்றஞ் செய்தவர்களுக்கு ஒரு பிழைக்கும் வழியுண்டாகுமோ? (உண்டாகாது),—இழைத்த நரகக் குழி இடத்து - செய்யப்பட்ட நரகக்குழியிலே,—தழைத்த துயரத்து ஒடு - மிகுந்த துன்பத்தோடு,—தனித்து அளவு இல் கற்பம் உலைவர் - தனியே அளவில்லாத கற்பகாலங்கிடந்து வருந்துவர் எ-று. அன்று ஏ அசை.

முற்பகலி னீவிரருண் முக்கணிம லன்றாள்
பற்பகல் வணங்கிவரு பத்தியது தன்னா
னிற்பரிய விவ்வடிவி னின்றுவினை துய்த்துக்
கற்பமொ ரிரண்டிடை கடந்துகதி சேர்வீர்.

(இ-ள்.) நீவிர் - நீங்களிருவரும்,—முற்பகல் - முன்னாளில்,—அருள் முக்கண் நிமலன் தாள் பல் பகல் வணங்கி வரு பத்தியது தன்னால் - கிருபை பொருந்திய மூன்று கண்களையுடைய மலமுத்தராகிய சிவபெருமானது திருவடிகளைப் பலநாள் வணங்கிக் கொண்டு வருகின்ற பத்தியினால்,—நிற்பரிய இவ் வடிவின் நின்று வினை துய்த்து - நிலையில்லாத இந்த வடிவத்தோடு நின்று அவ்வினைப் பயனை அனுபவித்து,—கற்பம் ஓர் இரண்டு இடை கடந்து கதி சேர்வீர் - இரண்டு கற்பகாலம் சென்றபின் மோக்ஷத்தை யடைவீர்கள் எ-று.

நம்மையெதிர் கண்டுதொழு நாடருநலத்தா
லிம்மைசிவ சிந்தனை யிசைந்திடுவிர் பேயாய்
வம்முருவ மாறியருண் மன்னுமென யாமா
ரம்முதன்மை யெம்முதல்வ னன்றியெவர் வல்லார்.

(இ-ள்.) நாடரும் நம்மை எதிர் கண்டு தொழும் நலத்தால் - தேடுதற்கரிய நம்மை எதிரே கண்டு வணங்கிய நன்மையால்,— இம்மை சிவ சிந்தனை இசைந்திடுவிர் - இப்பிறப்பில் சிவத்தியான முடையவர்களாவீர்கள்,—பேயாய் வம் உருவம் மாறி அருள் மன்னும் என யாம் ஆர் - பேயாய் வருகின்ற இவ்வுருவம் நீங்கிக் கிருபையைப் பொருந்துவீர்களென்று சொல்ல நாமார்?—அம் முதன்மை எம் முதல்வன் அன்றி எவர் வல்லார் - அப்படிச் சொல்லத் தக்க முதன்மை எமது தலைவனாகிய சிவபெருமானுக்கன்றி வேறு யார் சொல்ல வல்லவர்? (ஒருவருமில்லை.) எ - று. (௯௭)

அந்தமி லரற்கொர்பிழை யஞ்சலர் புரிந்தோர்
பந்தமுறு தீவினைகள் பற்றற நினைக்கி
லெந்தையிறை வல்லனிம வான்மகளு நேய
மைந்தரிரு வோரும்து வல்லரென லாமோ.

(இ-ள்.) அந்தம் இல் அரற்கு ஓர் பிழை அஞ்சலர் புரிந்தோர் - முடிவில்லாதவராகிய சிவபெருமானுக்கு ஓர் குற்றத்தைப் பயப்படாமற் செய்தவர்கள்,—பந்தம் உறு தீவினைகள் பற்று அற நினைக்கில் - தங்களுடைய பாச பந்தத்தால் வந்த பாவங்களை முற்று நீக்க நினைத்தால்,—எந்தை இறை வல்லன் - எமது பரம பிதாவாகிய சிவபெருமானே (அப்பாவத்தை நீக்க) வல்லவனாவான்,—இமவான் மகளும் நேய மைந்தர் இருவோரும் வல்லர் எனல் ஆமோ - இமோற்பர்வதராஜ குமாரத்தியாகிய உமாதேவியாரும், விருப்பத்தைத் தருகின்ற (விநாயகர் சுப்பிரமணியர்) என்னும் இரண்டு புத்திரர்களும் அச் சிவத்துரோகத்தை நீக்கவல்லவர் என்று சொல்லக் கூடுமோ? (கூடாது.) எ - று. (௯௮)

அன்னபெரு வெம்பிழை யகற்றுவ னகற்று
னென்னுமது மந்தவிறை யேயறிவ னன்றி
யுன்னரிய வப்பிழையி னோர்க்கருள்செய் யானெம்
முன்னவ னெனத்தவர் மொழிந்தனர்க ளன்றே.

(இ-ள்.) அன்ன பெரு வெம் பிழை அகற்றுவன் அகற்றான் என்னும் அதும் - அந்த மகா பாவங்களை நீக்குவான் நீக்கமாட்டான் என்னுமச் செய்கை,—அந்த இறையே அறிவன் - அச் சிவபெருமானே அதனை அறிவன்,—அன்றி - அது வல்லாமல்,—உன்னரிய அப் பிழையினோர்க்கு எம் முன்னவன் அருள் செயான் எனத் தவர் மொழிந்தனர்கள் - நினைத்தற்கரிய அப் பாவிகளுக்கு எம் முதல்வனாகிய சிவபெருமான் திருவருள் செய்யமாட்டான் என்று முனிவர்கள் சொல்லியருளினார்கள். எ - று, அன்று ஏ அசை. (௩௯)

இவ்வுரைபொய் மெய்மையென லெங்குநிறை வெய்து
மவ்விமல னேயறிவ னஞ்சியெவ ரேனும்
வெவ்வலகை யாகியுழல் வீர்வினையை நாடித்
தெய்வமுதல் வற்கொர்பிழை செய்யவறி யாரால்.

(இ-ள்.) இவ் உரை பொய் மெய்மை எனல் - இவ்வார்த்தை பொய் மெய் யென்று சொல்லுதல்,—எங்கும் நிறைவு எய்தும் அவ்விமலனே அறிவன் - எங்கும் நிறைந்திருக்கும் மலமுத்தனாகிய அச் சிவபெருமானே அறிவான் (ஆகையால்,)—வெவ் அலகை ஆகி உழல் வீர் - கொடிய பேய் வடிவங்கொண்டு திரிகின்றவர்களே.—எவரேனும் வினையை நாடி - யாவராயினும் தாம் செய்த பாவத்தை ஆராய்ந்தறிந்து,—தெய்வமுதல்வற்கு ஓர் பிழை செய்ய அறியார் - தேவர்களுக்கு முதல்வனாகிய அச்சிவபெருமானுக்கு யாதொருகுற்றமுஞ் செய்யமாட்டார்கள். எ - று, ஆல் அசை. (௪0)

ஓதுமிரு கற்பமுடி வாதிபொலி சோம
நாதமுய ரன்பரொடு நண்ணிமு னிறைஞ்சி
யேதமற முத்திதனை யெய்துவது தீர்வா
லாதியிரு பாதமற வாமலிரு மென்றான்.

(இ-ள்.) ஓதும் இரு கற்பம் முடிவு ஆதி பொலி சோம நாதம் உயர் அன்பர் ஒடு நண்ணி - சொல்லப்பட்ட அவ் விரண்டு கற்பகால முடிந்தவுடனே சிவபெருமான் எழுந்தருளி யிராநின்ற சோமநாத மென்னும் ஸ்தலத்தில் மேன்மை பொருந்திய அடியார்களோடு நீங்களும் போய்,—முன் இறைஞ்சி - சந்நிதானத்தில் வணங்கி,—ஏதம் அற முத்திதனை எய்துவது தீர்வு - குற்றம் நீங்க மோக்ஷத்தையடைவது நிச்சயம்,—ஆதி இரு பாதம் மறவாமல் இரும் என்றான் - (ஆதலால்) அதுவரையும் அச் சிவபெருமானது இரண்டு திருவடி

களையும் மறவாமல் (தியானித்துக்கொண்டு) இருக்கவென்று (அவ்வாமதேவமுனிவர்) சொல்லியருளினர். எ - று. (௩௪)

என்றுமுனி கூறுதலு மொன்றுமொழி யாமற்
கன்றும்வினை தீர்வதொரு காலமுள தென்று
வன்றவ ரறிந்தனர் பணிந்தனர்க ளாடா
நின்றனர் மகிழ்ந்தனர் நிகழ்த்துவதை யென்னே.

(இ-ள்.) என்று முனி கூறுதலும் - என்று (இந்தப்பிரகாரம் வாமதேவமுனிவர்) சொல்லியருளவும்,—என்றும் ஒழியாமல் கன்றும் வினை தீர்வது ஒரு காலம் உளது என்று-எப்பொழுதும் நீங்காமல் வருத்துகின்ற பாவம் நீங்குதற்கு ஒரு காலம் உண்டாயிற்றென்று,—அன்று அவர் அறிந்தனர் - அப்பொழுது அவ்விருவர்களு மறிந்தவர்களாய்,—பணிந்தனர் - (அவ்வாமதேவமுனிவரை) வணங்கினர்கள்,— ஆடாநின்றனர் - சந்தோஷ மிகுதியால் ஆடினர்கள்,—மகிழ்ந்தனர் - சந்தோஷமடைந்தார்கள்,—நிகழ்த்துவதை என்னே - அச்சந்தோஷத்தை யெடுத்துச் சொல்வது எப்படி? ()

வேறு.

காம வெம்பகை கடந்தருட் கடலிடத் தழுந்துந்
தோம கன்ற நாற் சுருதியா கமநெறி துளங்கா
வாம தேவனு மருங்கின்மா ணக்கரை நோக்கி
யாமு ரைப்பன கேளுமென் றியம்பன்மே யினனால்.

(இ-ள்.) காம வெம் பகை கடந்து அருள் கடல் இடத்து அழுந்தும் - காமமாகிய கொடிய பகையை நீக்கிக் கிருபா சமுத்திரத்தினிடத்தே மூழ்குகின்ற,—தோம் அகன்ற நால் சுருதி ஆகம நெறி துளங்கா வாம தேவனும் - குற்ற நீங்கிய நான்கு வேதங்களிலும் ஆகமங்களிலுஞ் சொல்லிய வழியிற் றவறுதலில்லாத அவ்வாமதேவ முனிவரானவர்,—மருங்கின் மாணக்கரை நோக்கி - தமது பக்கத்திலிருக்கின்ற சிஷர்களைப்பார்த்து,—யாம் உரைப்பன கேளும் என்று இயம்பல் மேயினன் - நாம் சொல்வனவற்றைக் கேளுங்கள் என்று சொல்லத் தொடங்கினர். எ - று. ஆல் அசை. (௩௫)

என்ன கூறுகோ மீதோ ரற்புதந்தனை யந்தோ
முன்ன ரின்னவர் முப்பொழு தருச்சனை முயன்று
சென்னி வாண்மதி மிலைச்சிய தெய்வநா யகன்றா
டன்னை யல்லதோர் சார்விலாத் தகைமையோ ரோர்நாள்.

(இ-ள்.) அந்தோ ஈது ஓர் அற்புதந்தனை என்ன கூறுகோம் - ஐயோ இது ஓர் ஆச்சரியம் இதனை எவ்விதஞ் சொல்லுவோம்,— இன்னவர் - இவ்விருவர்களும்,—முன்னர் முப்பொழுது அருச்சனை முயன்று - முன்னமே திரிகாலங்களிலும் சிவபூசை செய்து,— சென்னி வாள் மதி மிலைச்சிய தெய்வ நாயகன் தாள் தன்னை அல்லது - திருமுடியில் ஒளிபொருந்திய சந்திரனைத் தரித்த தேவநாயகனாகிய சிவபெருமானுடைய திருவடிகளையல்லாமல்,—ஓர் சார்பு இலாத் தகைமையோர் - வேறொரு துணையுமில்லாத தன்மையையுடையவர்கள்,—ஓர் நாள் - ஒருநாள். எ - று. குளகம். (சச)

தோத்தி ரங்களாற் சுரர்புகழ் சோமநா தத்திற்
கார்த்தி கைத்திரு நாளினெய் கவிழ்த்தவ னிவன்முன்
பார்த்து நின்றவ னிவனிவர் பண்ணிய திதுவே
கூர்த்த வெம்பகைப் பேயுருக் கொண்டமை பாரீர்.

(இ-ள்.) சுரர் தோத்திரங்களால் புகழ் சோம நாதத்தில் - தேவர்கள் தோத்திரங்களாற் றுதிக்கத்தக்க சோமநாதம் என்னும் ஸ்தலத்தில்,— கார்த்திகைத் திருநாளில் - கார்த்திகை மாசத்துத் திருக்கார்த்திகையுற்சவத்தில்,—இவன், நெய் கவிழ்த்தவன் - இச் சோமசன்மன் திருவிளக்கோடு நெய்யைக் கீழே விழும்படி கவிழ்த்தவன்,—இவன் முன் பார்த்து நின்றவன் - இச் சிவசன்மன் அவ் விளக்கு நெய்யோடு கவிழ்ந்து விழும்போது சந்நிதானத்தில்பார்த்துக்கொண்டு நின்றவன்,—இவர் பண்ணியது இதுவே - இவர்கள் செய்த குற்றம் இதுவேயாம்,—கூர்த்த வெம் பகைப் பேய் உருக் கொண்டமை பாரீர் - (அதனால்) இவர்கள் மிகுந்த கொடிய பகையையுடைய பேய்வடிவங்கொண்டிருப்பதை நீங்கள் பாருங்கள்.எ-று

செய்தி நல்லற மென்றுளோன் செய்துமோ வென்று
ளெய்தி னூற்றுவா யென்பவ னெய்தினின் முடித்தோ
னெய்தி முற்றினோற் கெழிற்றுணை யாயுளோ னன்பு
பெய்து காத்துளோ ரைவர்க்கும் பெரும்பய னெக்கும்

(இ-ள்.) செய்தி நல் அறம் என்றுளோன் - செய்யக்கடவதாகிய நல்ல புண்ணியங்களைச் செய்வோம் என்று சொல்லுகின்றவனும்,—செய்துமோ என்றான் - அப்புண்ணியங்களைச் செய்ய வேண்டுமோ வென்று கேட்கின்றவனும்,—நொய்தின் ஆற்று வாய் என்பவன் - அப்புண்ணியங்களைச் சீக்கிரத்தில் செய்யக்கடவாய் என்று

சொல்பனும்,—நொய்தினின் முடித்தோன் - அப்புண்ணியத்தைச் சீக்கிரஞ் செய்து முடித்தவனும்,—எய்தி முற்றினோர்க்கு எழில் துணையாய் உளோன் - தான் போய் புண்ணியத்தைச் செய்து முடிப்பவருக்கு அழகிய துணையாகவுள்ளவனும்,—அன்பு பெய்து காத்துளோர் ஐவர்க்கும்-அன்புசெய்து அப்புண்ணியத்தைப் பரிபாலனஞ் செய்தவர்களாகிய இவ்வைவர்களுக்கும்,—பெரும் பயன் ஒக்கும் - அடையக்கூடிய பெரிய பலன் சமமாகும். எ - று. (௬௬)

அரிய நல்லற முற்றினோன் றன்னிலு மதனைப்
புரிநி யென்பவன் காப்பவன் புகலிரு வர்க்கும்
பெரிது மப்பயன் பதின்மடங் கென்றனர் பெருநூற்
குரிய மாந்தர்க டீவினை வழிக்குமீ தொக்கும்.

(இ-ள்.) அரிய நல் அறம் முற்றினோன் தன்னிலும் - அருமையாகிய நல்ல தருமத்தைச் செய்து முடித்தவனைப் பார்க்கினும்,—அதனைப் புரிதி என்பவன் காப்பவன் புகல் இருவர்க்கும் - அதனைச் செய் யென்று சொல்பவன் பாதுகாப்பவன் என்று சொல்லப்பட்ட இருவர்களுக்கும்,—பெருநூற்கு உரிய மாந்தர்கள் அப்பயன் பெரிது என்றனர் - பெரிய சாஸ்திரங்களை அறிதற் குரிய பெரியோர்கள் அப் புண்ணியபலன் பெரிதாகுமென்று சொல்லுவார்கள்,—தீவினை வழிக்கும் ஈது ஒக்கும் - பாவ வழிக்கும் இது போலவே ஒன்றுக் கொன்று பெரிதாகும். எ - று. (௬௭)

அல்லுலாங்க ளத் தண்ணறன் பொருள்கவர்ந் தோனை
வல்ல னாகிலவ் னவன்றலை துணிப்பதே வழக்கா
லொல்லை கோறலுண் டோன்றுணை யோனிவன் றன்னைக்
கொல்லி னின்னவன் முத்தியிற் கூட னிச்சயமே.

(இ-ள்) அல் உலாம் களத்து அண்ணல் தன் பொருள் கவர்ந்தோனை - இருணிறம்பொருந்திய திருக்கண்டத்தையுடைய சிவபெருமானுடைய திரவியத்தை அபகரித்த பாவியை,—வல்லனாகில் அவன் தலை துணிப்பதே வழக்கால் கோறல் - வலிமையுடையவனாயிருந்தால் அப்பாவியின் தலையை வெட்டுதல் முறையாதலால் கொல்லக்கடவன்,—உண்டோன் துணையோன் இவன் தன்னைக் கொல்லின் - அச்சிவத்திரவியாபகாரஞ் செய்து புசித்தவனும், அவனுக்குத் துணைவனுமாகிய இவர்களைக் கொன்றால்,—இன்னவன் முத்தியில் கூடல் நிச்சயம் - இவ்வாறு செய்த இவன் மோக்ஷத்தையடைதல் நிச்சயமாகும். எ - று, ஏ அசை. (௬௮)

கோறலுக் குறுதென்னி லக்கொடியவ னிருப்பிற்
பேறு சேரினு மிகந்துடன் பெயர்வதே கருமம்
மாற ணிந்தவற் கன்பரே லப்பொருள் கவர் வோர்க்
கூற நல்லுரை போதித்து மாற்றுத லுயர்வால்.

(இ-ள்.) சோறலுக்கு உறாது என்னில் - அப்பாவியைக் கொல்லுதற்கு முடியாதாயின்,—அக்கொடியவன் இருப்பில் பேறு சேரினும் உடன் இகந்து பெயர்வதே கருமம் - அப்பாவி யிருக்கு மிடத்திற் செல்வப்பேறு உண்டாவதா யிருந்தாலும் உடனே அவனை விட்டு நீங்கிப் போவதே முறைமையாகும்,—ஆறு அணிந்தவர்க்கு அன்பரேல் - கங்கையைத்தரித்த சிவபெருமானிடத்து அன்புடையவர்களா யிருந்தாலும்,—அப்பொருள் கவர்வோர்க்கு ஊற நல்லுரை போதித்து மாற்றுதல் உயர்வு - அச் சிவத்திரவியாபகாரஞ் செய்வோர்க்கு மனதிற் பதியும்படி நல்ல புத்திகளை யெடுத்துப் போதித்து அக்குற்றத்தை நீக்குவித்தல் மேன்மையாகும். எ-று. ஆல் அசை.

இத்த கைக் கொரு கருத்தில ராகிலீ சற்குப்
பத்தி யானெறி யான்மிகும் பரிசின ரேனு [த்த
மத்தனைப் பிழைத் தோர்களேற் பொருள்கவர்ந் தெடு
நித்த வஞ்சரைப் பார்ப்பரோ நீள்கதிக் குரியோர்.

(இ-ள்.) இத்தகைக்கு ஒரு கருத்திலர் ஆகில் - இப்படிச் செய்தற்கு மனமில்லாதவர்களாகில்,—ஈசற்குப் பத்தியால் நெறியால் மிகும் பரிசினர் எனும் - சிவபெருமானிடத்துப் பத்தியினாலும் நன்மார்க்கத்தினாலும் மேம்பட்டவர்களாயிருந்தாலும், - அத்தனைப் பிழைத்தோர்களே - அவர்கள் சிவபெருமானுக்குத் தீங்கு செய்தவர்களேயாவார்கள். (ஆதலால்),—நீள் கதிக்கு உரியோர் பொருள் கவர்ந்து எடுத்த நித்த வஞ்சரைப் பார்ப்பரோ - பெரிய மோக்ஷமடைதற்குரியவர்களாகிய பெரியோர்கள் சிவத்திரவியத்தை யபகரித்துக்கொண்டுபோன அழியாத வஞ்சகரைக் கண்ணாற் பார்ப்பர்களோ? பாரார்கள். எ - று. (௬0)

கரண மாறினு மப்பொருள் கவர்வரோ வறிந்தோ
ரரண மூன்றெரி யூட்டினோ னாலயத் திடையோர்
திரண மீசற்கு வேண்டல தாயினுஞ் சிந்தை
முரணுறக் கொண்டுளோ ரிருணிர யமூழ்கு வரால்.

(இ-ள்.) அறிந்தோர் கரணம் மாறினும் அப்பொருள் கவர்வரோ - அறிந்தோர்கள் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் கலங்கிய காலத்திலும் அச்சிவத்திரவியங்களை அபகரிப்பார்களோ? (அபகரியார்கள்.),—அரணம் மூன்று எரியூட்டினோன் ஆலயத்திடை ஓர் திரணம் - முப்புரத் தசுரார்களுடைய மூம் மதில்களையும் அக்கினிக்கு இரையாகக் கொடுத்தருளிய சிவபெருமானது ஆலயத்திலுள்ள ஒரு துரும்பானது,—ஈசற்கு வேண்டலது ஆயினும் - சிவபெருமானுக் குபயோக மில்லாததாயிருந்தாலும்,—சிந்தை முரண் உறக் கொண்டுளோர் இருள் நிரயம் மூழ்குவர் - மனதில் மாறுபாடு பொருந்த அச் சிவத்திரவியத்தை யபகரித்தவர்கள் இருள் மயமாகிய நரகத்தில் விழுந்தழுந்துவர். எ - று. ஆல் அசை.

கன்னி பாகமெய்ப் பரன்பொருட் காவலுக் குரியோர்
மன்ன ராயினும் யாவரே யாயினு மதியா
ரன்ன வான்பொருள் கவரிலீ ரைம்பது மடங்கு
துன்னு வல்வினை பெறுவர் முன் சொற்றவர் தம்மில்.

(இ-ள்) கன்னிபாகன் மெய்ப்பரன் பொருள் காவலுக்கு உரியோர் - உமாதேவியாரை யோர் பாகத்திலுடையவரும் உண்மை பொருந்திய மேலானவருமாகிய சிவபெருமானுடைய திரவியத்தைக் காவல் செய்கின்றவர்கள்,—அன்னவன் பொருள் கவரில் - அச்சிவ பெருமானுடைய திரவியத்தை யபகரித்தால்,—மன்னர் ஆயினும் யாவரே ஆயினும் மதியார் - அவர்கள் அரசராயிருந்தாலும் வேறே யாவர்களாயிருந்தாலும் அவர்களை மதிக்கமாட்டார்கள்,—முன் சொற்றவர் தம்மில் ஈரைம்பது மடங்கு துன்னு வல்வினைப் பெறுவர் - முன் சொல்லிய பாவிகளைப் பார்க்கினும் நூறு மடங்கு அதிகமாகப் பொருந்திய கொடிய பாவத்தை யடைவர். எ - று. (நிஉ)

சீல மாதவ ரிடைவிடாச் சிவாலயந் தனக்கென்
றேல நோக்கிய நறுமல ரிலைமுத லியவப்
பால சேத்திரங் கொடுமதன் படவிழித் தந்நா
ளால முண்டவற் கன்றியே யாவர்க்கு மாகா.

(இ-ள்) சீல மாதவர் இடைவிடா சிவாலயந் தனக்கு என்று ஏல நோக்கிய நறுமலர் இலை முதலிய - பரிசுத்தம் பொருந்திய பெரிய தவத்தையுடைய முனிவர்கள் இடைவிடாமல் வசிக்கின்ற சிவாலயங்களுக்கு என்று பொருந்தும்படி உண்டாக்கிய வாசனை

பொருந்திய புட்பம் பத்திர முதலியவைகள்,—பால் நேத்திரம் கொடு மதன்பட விழித்து - நெற்றிக்கண்ணினாலே மன்மத னிறக்கும்படி விழித்து,—அந்நாள் ஆலம் உண்டவற்கு அன்றி யாவர்க்கும் ஆகா - அக்காலத்தில் ஆலகாலத்தை யுண்டருளிய சிவபெருமானுக்குபயோகப்படுவதல்லாமல் வேறொருவருக்கும் பிரயோசனப்படாவாம். எ - று. (ருகூ)

வேறு.

அலை புனல் வேணி யண்ணலா லயந்தன்னி லென்றுந்
தலைமயி ரிறக்கிக் கோட றருக்கின் மெய்ப்பிடித் துக்கோடல்
குலதில தயிலம் வார்த்துக் கோடலா பத்துறு மன்
மலசல நீக்க லுந்தும் வாகனத் தேறிச் சேறல்.

(இ-ள்.) அலை புனல் வேணி யண்ணல் ஆலயம் தன்னில் - அலைபொருந்திய கங்கையைத் தரித்த ஜடையையுடைய சிவபெருமானது திருக்கோயிலில்,—என்றும் தலை மயிர் இறக்கிக் கோடல் - எப்பொழுதும் க்ஷௌரஞ் செய்வித்துக் கொள்ளுதல்,—தருக்கின் மெய்பிடித்துக் கோடல் - செருக்கினால் பிறரைக்கொண்டு தன் சரீரத்தைப் பிடிப்பித்துக்கொள்ளுதல்,—குல தில தயிலம் வார்த்துக் கோடல் - இனமாகிய எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல்,—ஆபத்துறுமல் மலசலம் நீக்கல் - யாதொரு ஆபத்தில்லாமலே மலசலங்கழித்தல்,—உந்தும் வாகனத்து ஏறிச் சேறல் - பெருமைபொருந்திய வாகனத்தின் மேலேறிச் செல்லுதல். எ - று. இது குளகம். (ருச)

அடிசினீ ரடைக்கா யாதி யானவை துய்த்த றுப்பல்
கொடியகா மாதிமாதர் கூட்டங்கள் கொடுங்கோள் பொய்மை
கடியபொல் லாமை கூறல் கம்பளா தியி னிருத்த
னெடியபோர்ச் சதுரங் காதி சூதினை நிகழ்த்தி யாடல்.

(இ-ள்.) அடிசில் நீர் அடைக்காய் ஆதி ஆனவை துய்த்தல் - அன்னம் சலம் வெற்றிலை பாக்கு முதலியவைகளையுண்டல்,—துப்பல் - எச்சிலுமிழ்தல்,—கொடிய காமாதி - கொடுமையாகிய காம முதலிய போக்கியங்களை அனுபவித்தல்,—மாதர் கூட்டங்கள் - பெண்கள் கூட்டத்திற் றனித்துப் போதல்,—கொடும் கோள் பொய்மை கடிய பொல்லாமை கூறல் - கொடுமையாகிய கோள் பொய் கொடிதாகிய கெட்ட வார்த்தைகளைச் சொல்லுதல்,—கம்பளாயிதின் இருத்தல் - இரத்தின கம்பள முதலிய ஆசனத்திருத்தல்,—நெடிய

போர் - மிகுந்த சண்டை செய்தல்,—சதுரங்காதி சூது இவை நிகழ்த்தியாடல் - சதுரங்கமாடுதல் முதலிய சூதுகளை யாடுதல். எ-று. ()

சொற்றநின் மாலி யத்தைச் சோமசூத் திரத்தைத் தூபி
நற்றட நிழலைக் கண்டு நடந்துமுன் கடந்து போதல்
கற்றைவார் சடையா னுக்குங் கதிர்ப்பலி பீடத் துக்கு
முற்றநன் னடுவே சேற லொழிந்த வருயர்ந்தோ ரன்றே.

(இ-ள்.) சொற்ற நின்மாலியத்தைச் சோம சூத்திரத்தைத் தூபி நற்றட நிழலைக் கண்டு முன் கடந்து நடந்து போதல் - சொல்லப்பட்ட நிர்மாலியம் சோமசூத்திரம் தூபி என்னும் இவைகளின் நல்ல விசாலமாகிய நிழலை முன்னே கண்டு அவைகளைத் தாண்டி நடந்து போதல்,—கற்றைவார் சடையானுக்கும் கதிர்ப்பலி பீடத்துக்கும் உற்ற நல் நடுவே சேறல் - கூட்டமாகிய நீண்ட சடையையுடைய சிவபெருமானுக்கும் ஒளிபொருந்திய பலிபீடத்துக்கும் பொருந்திய நல்ல மத்தியில் குறுக்கே போதல்,—ஒழிந்தவர் உயர்ந்தோர் - ஆகிய இக்குற்றங்களை நீக்கினவர்கள் பெரியோர்களாவார்கள். எ - று. அன்று ஏ அசைகள். (௫௬)

ஆதியா லயத்துட் கூவ லாதியா தியதீர்த் தத்தைத்
தீதுபோய்ப் புரித லந்தச் சிறப்புறுஞ் சிவதீர்த் தத்திற்
கோதுறு மசுத்தத் தோடு மூழ்குதல் குற்ற மென்றே
யோதிய வாகமங்க ளுபநிட தங்க ளன்றே.

(இ-ள்.) ஆதி ஆலயத்துக் கூவல் ஆதி ஆதிய தீர்த்தத்தைப் போய் தீது புரிதல் - சிவபெருமானுடைய திருக்கோயி லுள்ளிருக்கும் பரமானந்தகூப முதலாகிய முதன்மைபொருந்திய தீர்த்தத்திற் போய் அவைகளுக்குக் கெடுதி செய்தலும்,—அந்தச் சிறப்புறுஞ் சிவதீர்த்தத்தில் கோதுறும் அசுத்தத் தோடு மூழ்குதல் - அச்சிறப்புப் பொருந்திய சிவதீர்த்தங்களில் குற்றம்பொருந்திய அசுத்தத்தோடு மூழ்குதலும்,—குற்றம் என்றே ஆகமங்கள் உபநிடதங்கள் ஓதிய - குற்றமாகும் என்று சிவாகமங்களும் உபநிடதங்களும் சொல்லுகின்றன. எ - று. அன்று ஏ அசை. (௫௭)

ஈங்கிவர் துயரம் பாரீ ரென்றுமா னுக்கர்க் கோதி
யோங்குமஞ் செழுத்தை நாவி னுச்சரித் துளத்தி னுதன்
பூங்கழல் வைத்துத் தன்றன் பொருவிலாச் சிரயம் புக்கார்
றீங்ககல் வாம தேவத் தெய்வமா முனிவ னம்மா.

(இ-ள்.) ஈங்கு இவர் துயரம் பாரீர் என்று மாணாக்கர்க்கு ஓதி - இவ்விடத்தி னிற்கின்ற இவ்விருவர்களுஞ் சிவாபராதஞ் செய்தமையாற் படுகின்ற துன்பத்தைப் பாருங்களென்று தம் சீடர்களுக்குச் சொல்லி,—ஓங்கும் அஞ்சு எழுத்தை நாவின் உச்சரித்து - உயர்ச்சி பொருந்திய ஸ்ரீ பஞ்சாட்சரத்தை நாவினால் உச்சரித்துக்கொண்டு,—நாதன் பூங் கழல் உளத்தில் வைத்து - எப்பொருட்கு மிறைவராகிய சிவபெருமானுடைய அழகிய திருவடிகளை மனதிற்பதித்து,—தீங்கு அகல் தெய்வ வாமதேவ மாமுனிவன் தன் தன் பொருவில் ஆச்சிரமம் புக்கான் - குற்றம் நீங்கிய தேய்வத்தன்மை பொருந்திய அவ்வாமதேவமுனிவர் தம்முடைய ஒப்பில்லாத ஆச்சிரமத்திற்போய்ச் சேர்ந்தார். எ - று. அம்மா அசை. (௫அ)

தந்திர வேத நீதிச் சயிமினி முனிவ கேட்டி
யந்தணர் பொருளி லீச னரும்பெரும் பொருளி லுண்டா
முந்திய வியல்பு காண்டி மொழிந்தவஞ் ஞானந் தன்னால்
வந்ததீங் ககல வின்னும் வகுத்ததோர் வழியுண் டன்றே.

(இ-ள்.) தந்திர வேத நீதிச் சைமினி முனிவ கேட்டி - சிவாகமங்களிலும் வேதங்களிலுஞ் சொல்லிய நீதியையுடைய சைமினி முனியே கேட்பாயாக,—அந்தணர் பொருளில் ஈசன் அரும் பெரும் பொருளில் உண்டாம் முந்திய இயல்பு காண்டி - பிராமணர்களுடைய பொருள்களையும் சிவபெருமானுடைய பொருள்களையும் அபகரித்ததனு லுண்டாகிய முன் சரித்திரங்களைக் காண்பாயாக,—மொழிந்த அஞ்ஞானந் தன்னால் வந்த தீங்கு அகல - சொல்லப்பட்ட அஞ்ஞானத்தினு லுண்டாகிய குற்ற நீங்க,—இன்னும் வகுத்ததோர் வழி உண்டு - இன்னமும் வகுத்துச் சொல்லப்பட்ட வேறொருமார்க்கமு முண்டு. எ - று. அன்று ஏ அசை. (௫௯)

புண்டரீ கப்பு ரத்துப் பொருந்திய வினையை நீக்கி
மண்டிய பயனை நல்க வல்லதீர்த் தங்க ளோர்பத்
துண்டென வுரைத்தான் ஞால மேய்ந்திடக் கருணை போதக்
கொண்டரு மறைக ளெல்லாம் விளக்கிய குணக்குன் றன்னான்

(இ-ள்) புண்டரீகப் புரத்துப் பொருந்திய வினையை நீக்கி மண்டிய பயனை நல்க வல்ல தீர்த்தங்கள் ஓர் பத்து உண்டு என - புண்டரீகபுரம் என்னும் பெயரையுடைய சிதம்பரத்தினிடத்து ஆன்மாக்களைப் பொருந்திய வினைகளை நீக்கி மிகுந்த பலனைக் கொடுக்க

வல்ல தீர்த்தங்கள் பத்துண்டென்று,—மறைகளெல்லாம் விளக்கிய குணக் குன்று அன்னான் - வேதங்களெல்லாம் விளங்கச்செய்தருளிய குணமலைபோலும்வியாசமுனிவரானவர்,—கருணை போதக்கொண்டு - கிருபையை மிகவு முட்கொண்டு,—ஞாலம் உய்ந்திட உரைத்தான் - இப் பூவுலகத்தார் பிழைக்கும்படி திருவாய் மலர்ந்தருளினார்.

சோமநாதச்சருக்கமுற்றிற்று.

பாயிரம் உள்படச் சருக்கம் - ௬ - க்குத் திருவிருத்தம், ௩௪௪.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆறாவது.

# தீர்த்தச்சருக்கம்.

அரவுட னிதழி சூடு மண்ணறன் பொருளை வஞ்சக் [துப்
கரவினிற் கொண்டோ ரெய்துங் கடுங்கொடும் வினை தொகுத்
பரவினம் பரவுந் தில்லைப் பதியிடைக் கதிக ணல்கு
முரனுறு தீர்த்த மீரைந் துளவவை யுரைக்க லுற்றும்.

(இ-ள்.) அரவு உடன் இதழி சூடும் அண்ணல் தன் பொருளை - சர்ப்பத்தையுங் கொன்றைப்பூமாலையையுந் தரித்த சிவபெருமானுக்குரிய திரவியத்தை,—வஞ்சக் கரவினில் கொண்டோர் எய்தும் கடும் கொடும் வினை தொகுத்துப் பரவினம் - வஞ்சகமாகத் திருடிக் கொண்டவர்கள் அடையும் மிகுந்த கொடிய பாவங்களைத் தொகுத்துச் சொன்னோம்,—பரவும் தில்லைப் பதியிடை - (யாவர்களாலும்) துதிக்கத் தக்க சிதம்பரஸ்தலத்தில்,—கதிகள் நலகும் உரன் உறு

தீர்த்தம் ஈரைந்து உள - மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்க வலிமை பொருந்திய தீர்த்தங்கள் பத்திருக்கின்றன,—அவை உரைக்கல் உற்றும் - அத்தீர்த்தங்களின் மகிமை இனி யெடுத்துச் சொல்லத் தொடங்குவோம், எ - று. (க)

பராசரன் றனையன் பாதஞ் சைமினி பணிந்து போற்றித்
தராதல மெண்ணுந் தில்லைத் தலத்தினீ ரைந்து தீர்த்தம்
புராதன வுளவென் றுயப் புனிதமா கியதீர்த் தங்கள்
விராவிய தானப் பேர்கள் விளங்குற விளம்பு கென்றான்.

(இ-ள்.) பராசரன் தனயன் பாதம் சைமினி பணிந்து போற்றி - பராசரமுனிவரது புத்திரராகிய வியாசமுனிவருடைய திருவடிகளைச் சைமினிமுனிவர் வணங்கித் துதித்து,—புராதன - பழமையாயுள்ள ஆசாரியரே,—தராதலம் எண்ணும் தில்லைத் தலத்தினில் ஈரைந்து தீர்த்தம் உள என்றுய் - பூவுலகத்தார்களாற் றுதிக்கப்படுகின்ற சிதம்பரஸ்தலத்தில் பத்துத் தீர்த்தங்கள் இருக்கின்றனவென்று திருவாய் மலர்ந்தருளினீர்,-- அப் புனிதம் ஆகிய தீர்த்தங்கள் விராவிய தானப் பேர்கள் விளங்குற விளம்புக என்றான் - அப் பரிசுத்தமாகிய தீர்த்தங்கள் பொருந்திய இடங்களும் பெயர்களும் விளங்கும்படி திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தார்.

பாரிட மெண்ணுந் தில்லைப் பதியினி லெங்குந் தங்கு
நீரெலாந் தீர்த்த மாத னிச்சய மதனுண் முன்னங்
காருறு கண்ட னண்டங் காதலிற் பயந் துயர்ந்த
வாரியைக் குலக முய்ய வருளினு லருள் செய் தானல்.

(இ-ள்.) பார் இடம் எண்ணும் தில்லைப் பதியினில் எங்கும் தங்கும் நீர் எலாம் தீர்த்தம் ஆதல் நிச்சயம் - பூமியிலுள்ளவர்களாற் றியானிக்கப்பட்ட சிதம்பரஸ்தலத்தில் எந்த இடங்களிலுந் தங்கியிருக்கின்ற ஜலமெல்லாம் புண்ணிய தீர்த்தமாதல் நிச்சயம்,—அதன் உண்மை - அதன் உண்மையை,—முன்னம் - முன்னொருகாலத்தில்,—கார் உறு கண்டன் - கருநிறம் பொருந்திய திருக்கண்டத்தையுடைய சிவபெருமான்,—அண்டம் காதலில் பயந்து உயர்ந்த ஆரியைக்கு - அண்டங்களெல்லாவற்றையும் விருப்பத்தோடு பெற்றருளிய மேன்மையையுடைய உமாதேவியாருக்கு,—உலகம் உய்ய அருளினுல் அருள் செய்தான் - உலகத்தார்கள் உய்யும் பொருட்டுக் கிருபையோடு திருவாய் மலர்ந்தருளினுர், எ - று. ஆல் அசை. (௨)

பொற்கிரி புண்டரீக புரத்தினிற் றீர்த்தத் துண்மை
யெற்கிது தெரிவதல்லால் யாவரு முணர மாட்டார்
முற்கிரி வளைத்தெடுத்த முதல்வனுக் கன்பு பூண்டு
நிற்குநீ கேட்கலாகு மெனமுனி நிகழ்த்து கின்றார்.

(இ-ள்.) பொன்கிரி புண்டரீக புரத்தினில் தீர்த்தத்து உண்மை - பொன்மலைபோன்ற புண்டரீக புரமாகிய சிதம்பரஸ்தலத்திலுள்ள தீர்த்தங்களினுண்மைகள்,—இது எற்குத் தெரிவது அல்லால் - இது எனக்குத் தெரிவதே யல்லாமல்,—யாவரும் உணரமாட்டார் - வேறெவர்களு மறியமாட்டார்ச(ளாதலால்),—முன் கிரிவளைத்து எடுத்த முதல்வனுக்கு அன்பு பூண்டுநிற்கும் நீ - முன்னமே மகாமேருமலையை வில்லாகவளைத்துக் கையிலேந்திய முதல்வனாகிய சிவபெருமானிடத்து அன்புபூண்டு நிற்கின்ற நீ,—கேட்டல் ஆகும் என முனி நிகழ்த்துகின்றான் - கேட்டக்கூடுமென்று வியாசமுனிவர் சொல்லுகின்றார். எ - று. (ச)

சித்தென வசித்தை நீத்தோர் தெளிந்தபொன் மன்றஞ்சேர
வுத்தரத் துள்ள தென்று முயர்ந்ததீர்த் தத்துயர்ந்த
தெத்திசை யோரும் போற்று மெழிற்சிவ கங்கையார்க்கு
முத்தியை நல்குதீர்த்த முதலருட் டீர்த்தமாகும்.

(இ-ள்.) அசித்தை நீத்தோர் சித்து எனத் தெளிந்த பொன் மன்றம் சேர உத்தரத்து உள்ளது - அஞ்ஞானத்தை நீக்கிய சிவஞானிகள் ஞான சொரூபமென்று தெளிந்த கனகசபைக்கு அடுத்த வடபுறத்திலுள்ளதும்,—என்றும் உயர்ந்த தீர்த்தத்து உயர்ந்தது - எப்பொழுதும் உயர்வாகிய தீர்த்தங்களுக்கெல்லா மேலானதும்,—எத்திசை யோரும் போற்றும் எழிற் சிவ கங்கை - எத்திசையிலுள்ளவர்களுந் துதிக்கத்தக்கதுமாகிய அழகு பொருந்திய சிவகங்கையானது,—யார்க்கும் முத்தியை நல்கும் தீர்த்தம் - எவர்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்க தீர்த்தமாகும்,—முதல் அருள் தீர்த்தம் ஆகும் - (அது நடேசப்பெருமான் ஆன்மாக்களுய்யும்பொருட்டு) முதலிலே உண்டாக்கிய தீர்த்தமாகும். எ - று. (ரு)

நடம்பிறை பிரியா தோங்கு நற்றில்லை நகர்தனக்கு
வடகிழக் கிடையோர் தீர்த்த மறிகட லதுவாங் கொன்றைத்
தொடையவ னன்றியாரு முணர்கிலாத் தொன்மை தன்னு
லிடராக் குய்யதீர்த்த மெனப்பெய ரெய்திற் றுமால்.

(இ-ள்.) இறை நடம் பிரியாது ஒங்கும் நல் தில்லை நகர் தனக்கு வடகிழக்கு இடை ஓர் தீர்த்தம் - சிவபெருமான் திருநிருத்தமானது நீங்காதோங்குகின்ற நன்மைபொருந்திய தில்லைவனமாகிய சிதம்பரஸ்தலத்துக்கு வடகிழக்கின்கண் ஒரு தீர்த்தமுண்டு,—அது மறி கடல் ஆம் - அது அலைகளை வீசுகின்ற சமுத்திரமாகும்,—கொன்றைத் தொடையவன் அன்றி யாரும் உணர்கிலாத் தொன்மை தன்னால் - கொன்றைப்பூமாலையை அணிந்த சிவபெருமானே அன்றி வேறொருவருமறியக்கூடாத தன்மையினாலே,—இடர் அடாக் குய்ய தீர்த்தம் எனப் பெயர் எய்திற்று - (அது தன்னிடத்துவந்து ஸ்நானஞ்செய்தவர்களுக்குத்) துன்பத்தை யணுகவொட்டாத குய்ய தீர்த்தமென்னும் பெயர் பெற்றது. எ - று. ஆம் ஆல் அசைகள். (௬)

இறையிறை விக்குக்கூற விறைவிகந் தற்கியம்ப
வுறையயிற் கந்த னன்பாற் சனற்குமாரற் குரைப்ப
முறைமையி னவன்பாற் பெற்று முனிவர்தே வர்க்கிசைத்தே
னறையுமக் குய்யதீர்த்தப் பெருமையா ரறியவல்லார்.

(இ-ள்.) இறை இறைவிக்குக் கூற - சிவபெருமான் உமாதேவியாருக்குபதேசித்தருள,—இறைவி கந்தற்கு இயம்ப - அவ்வுமாதேவியார் முருகக்கடவுளுக்குபதேசித்தருள,—உறை அயில் கந்தன் அன்பால் சனற் குமாரற்கு உரைப்ப - உறையிலிருந்து விளங்குகின்ற வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள் அன்போடு சனற்குமாரமுனிவருக்குபதேசித்தருள,—அவன் பால் முறைமையில் பெற்று முனிவர் தேவர்க்கு இசைத்தேன் - அச்சனற்குமார முனிவரிடத்தில் நான் கிரமமாக உபதேசிக்கப்பெற்று முனிவர்களுக்குந் தேவர்களுக்கு முபதேசித்தேன்,—அறையும் அக் குய்ய தீர்த்தப் பெருமை யார் அறிய வல்லார் - இவ்வாறுபதேசிக்கப்பெற்ற அக்குய்யதீர்த்தத்தின் பெருமையை யாவர் அறிய வல்லவர்கள். எ - று. (௭)

திரைக்கடலெனுமத் தீர்த்தஞ் செப்பிடிற் றிசைகடோறு
முரைத்தயோ சனையினெல்லைபுரைத்ததெவ்விடத்துளோரும்
வரைக்கரும் பவங்கணீங்கி மாசிமா மகத்துமூழ்கி
னரைக்கர வசைத்த நம்ப னருட்பதம் பெறுதறிண்ணம்.

(இ-ள்.) திரைக் கடல் எனும் அத் தீர்த்தம் செப்பிடில் - அலைபொருந்திய சமுத்திர மென்னும் அக் குய்யதீர்த்தத்தின் பெருமையைச் சொல்லுமிடத்து,—திசைகடோறும் உரைத்த யோசனையின்

எல்லை உரைத்தது எவ்விடத்து உள்ளோரும் - எட்டுத் திசைக டோறுஞ் சொல்லப்பட்ட ஒரு யோசனை எல்லையாகக் கூறிய எவ்விடங்களிலுள்ள வர்களும்,—மா மாசி மகத்தில் மூழ்கில் - பெருமைபொருந்திய மாசி மாசத்தில் வருகிற மக நக்ஷத்திரபுண்ணியகாலத்தில் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால்,—அரைக்கு அரவு அசைத்த நம்பன் அரும்பதம் அடைதல் திண்ணம் - இடையில் சர்பத்தைக் கச்சையாகக்கட்டிய சிவபெருமானது பதவியை யடைதல் நிச்சயமாகும். எ - று. (௮)

கோலைத்தொழில் வடிவோ பொய்க்குக் கொள்கலந்தானோ
வெல்லை, தொலைத்தவெங் களவுவந்து தோன்றிய விடனோ
தீயோர், மலைத்ததீ வினைகள்வாழும் வாழ்க்கையோ வென்ன
மாறு, நிலைத்தனி நிரையமெல்லா மிசைபெற வருமோர் நீசன்

(இ-ள்.) கொலைத் தொழில் வடிவோ - கொலைத்தொழிலே ஓர் வடிவமோ,—பொய்க்குக் கொள்கலந் தானோ - பொய்யாகிய பொருளையடைக்கிவைத்திருக்கின்ற ஒரு பாத்திரமோ,—எல்லை தொலைத்த வெம் களவு வந்து தோற்றிய இடனோ - அளவில்லாத கொடிய திருட்டுகள் வந்து பிறக்குமிடமோ,— தீயோர் மலைத்த தீவினைகள் வாழும் வாழ்க்கையோ என்ன - கொடிய பாவிகள் செய்த பாவங்களெல்லாம் வாழுகின்ற வீடுதானோ என்று சொல்லும்படியாக,—மாறு நிலைத் தனி நிரயம் எல்லாம் இசைபெறவரும் ஓர் நீசன் - நீங்காத நிலைமையையுடைய ஒப்பற்ற நரகங்களெல்லாம் கீர்த்திபெறும்படி வருகின்ற ஒரு புலையன். எ - று. (௯)

மாசிமா மகத்துச் சொற்ற வரையறை யில்லாத்தீமை
நீசனங்கவனு நன்கு நினைந்திடா னதனின் மூழ்கித்
தேசுறு முத்திசேர்ந்தான் செப்புவ தென்னோ வென்று
மேசுவ தில்லாத் தீர்த்த மீதிரண் டாவதென்ப.

(இ-ள்.) மா மாசி மகத்து - பெருமைபொருந்திய மாசி மாசத்து மகநக்ஷத்திர புண்ணியகாலத்தில்,—சொற்ற வரை யறை இல்லாத் தீமை நீசன் அவனும் - மேற்சொல்லிய அளவில்லாத பாவங்களையுடைய புலையனாகிய அவனும்,—நன்கு நினைந்திடான் அதனின் மூழ்கி - (யாதொரு)புண்ணிய பலனையும் நினையாதவனாய் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து,—தேசு உறு முத்தி சேர்ந்தான் - பிரகாசம் பொருந்திய மோக்ஷத்தையடைந்தான்,—செப்புவது என்னோ -

அத்தீர்த்தத்தின்மகிமையைச்)சொல்லுவது எப்படி?—என்றும் ஏசுவது இல்லாத் தீர்த்தம் ஈது இரண்டாவது என்ப - எப்பொழுதுங் குற்றமில்லாத குய்யதீர்த்தமாகிய இதை இரண்டாவதுதீர்த்தமென்று சொல்லுவார்கள் (அறிந்தோர்கள்) எ - று. (௧௦)

தேவர்சூழ் மன்றினுக்குத் தென்றிசை நீசராதி
யர்வருஞ் சிவகங்கைப்பா லெய்திடப் பெறார்க ளென்று
தாவிலாச் சிரமத்தில்லோர் சாதிபே தத்தோர் மூழ்க
மூவிலை நுனியாலீசன் முயன்றுசெய் தீர்த்த முண்டால்.

(இ-ள்.) தேவர் சூழ் மன்றினுக்குத் தென்றிசை - தேவர்களாற் சூழப்பட்ட சனகசபைக்குத் தென் திசையில்,—நீசர் ஆதி யாவரும் சிவகங்கைப்பால் எய்திடப் பெறார்கள் என்று - நீசர் முதலிய இழிகுலத்தவர் யாவரும் சிவகங்கையில்வந்து ஸ்நானஞ்செய்யக் கூடாதவர்களாயிருக்கின்றார்களென்று திருவுளங் கொண்டு,—தாவில் ஆச்சிரமத்து இல்லோர் சாதிபேதத்தோர் மூழ்க - குற்றமில்லாத ஆச்சிரம ஒழுக்கத்திற் றவறிய பிரஷ்டர்களும், சாதிபேதமுடையவர்களு மூழ்கும் பொருட்டு,—ஈசன் மூவிலை நுனியால் முயன்று செய் தீர்த்தம் உண்டு - சிவபெருமான் இலைச்செறிவாகிய மூன்று தலையையுடைய சூலாயுதத்தினுனியால் முயற்சியோடு செய்தருளிய தீர்த்தமொன்றுண்டு. எ - று. ஆல் அசை. (௧௧)

ஆதிரை மதிதேய் பக்கத் தட்டமி மாதத்தோற்ற
மீதுறு மருக்கவாரம் விதிபாதங் குருவா ரங்கூ
டோதிய பருவமூன்று தினமுறு மோர்நாண் மூழ்கி
மாதவர்க் கிசைந்த தானம் வழங்கினோர் முத்தராவர்.

(இ-ள்.) ஆதிரை மதி தேய்பக்கத்து அட்டமி மாதத் தோற்றம் - திருவாதிரை நக்ஷத்திரம் சந்திரன் தேய்கின்ற அமரபக்ஷத்தட்டமி மாசப்பிறப்பு,—மீது ஊறும் அருக்கவாரம் குருவாரம் - அதற்குமேலும் பொருந்திய ஆதிவாரம் குருவாரம்,—கூடு விதிபாதம் - கூடிய வியதிபாதம்,—ஓதிய பருவ மூன்று தினம் - சொல்லப்பட்ட மூன்று பருவகாலங்கள் ஆகிய நாட்களில்,—உறும் ஓர் நாள் மூழ்கி - இவ்விதமாகப் பொருந்திய புண்ணிய காலங்கள் ஒன்றில் ஸ்நானஞ் செய்து,—மாதவர்க்கு இசைந்த தானம் வழங்கினோர் - மகா தவத்தையுடைய பெரியோர்களுக்குத் தம்மாலியன்ற தானங்களைச் செய்தவர்கள்,—முத்தர் ஆவர் - ஜீவன்முத்த ராவார்கள், எ - று.

எப்பரிசோர்க்குந் தீமை யிரிந்திட விறைவன் செய்யு
மப்பெருந் தீர்த்தமுன்னா ளாகமந் தன்னுள் வேங்கை
மெய்ப்பதன் காணலாலே வியன்புலி மடுவென் றுள்ள
தொப்பிலத் தீர்த்த மூன்றுந் தீர்த்தமாயுரைத்த தீர்த்தம்.

(இ-ள்.) எப்பரிசோர்க்கும் தீமை இரிந்திட இறைவன் செய்யும் அப்பெரும் தீர்த்தம் - எத்தன்மையோர்க்குந் தீவினைகள் நீங்கும்படி சிவபெருமான் உண்டாக்கிய அந்தப் பெரிய மூல தீர்த்தமானது,—முன் நாள் ஆம் - முன்னாளிலிருந்து,—மெய் வேங்கைப்பதன் அகம் தன்னுள் காணலாலே - (அது பின்மறைந்து போய் விட) அதை உண்மை பொருந்திய வியாக்கிரபாதமுனிவர் தம் அகக்கண்ணாற் கண்டு (மீட்டும் அத்தீர்த்தத்தை யுண்டுபண்ணின படியால்),—வியன் புலி மடு என்று உள்ளது - விசாலம்பொருந்திய புலிமடுவென்னும் பெயருண்டாயிற்று;—ஒப்பில் அத்தீர்த்தம் மூன்றுந் தீர்த்தமாய் உரைத்த தீர்த்தம் - ஒப்பில்லாத அத்தீர்த்தம் மூன்றுந் தீர்த்தமென்று சொல்லப்பட்ட தீர்த்தமாகும். எ - று. (௧௩)

குழைபொலி ஞானச்செந்தேன்குனிக்குமம்பலத்துமேல்பால்
மழமுனி பூசைசெய்யும் வளர்புலீச் சரத்து முன்னர்
விழைவுற வுளதகின்பேர் வியாக்கிர பாத தீர்த்த
மழகுற வதனை வானோர் சேவைசெய் தகலாரென்றும்.

(இ-ள்) குழை பொலி ஞானச் செந்தேன் குனிக்கும் அம்பலத்து மேல்பால் - (அன்பரது பத்திக்குக்) கனிந்து விளங்காநின்ற ஞானச் செந்தேனாகிய நடேசப்பெருமான் திருநிருத்தஞ் செய்தருளாநின்ற கனகசபைக்கு மேற் பக்கத்தில்,—மழமுனி பூசை செய்யும் வளர் புலீச்சரத்து முன்னர் - பாலமுனிவராகிய வியாக்கிரபாத முனிவர் பூசைசெய்து வளருகின்ற திருப்புலீச்சரத்துக்கு முன்னே,—விழைவு உற உளது - (யாவர்களும்) விரும்பும்படியான (ஓர் தீர்த்தம்) உண்டு,—அதன் பெயர் வியாக்கிரபாததீர்த்தம் - அதற்கு வியாக்கிரபாததீர்த்தமென்று பெயர்,—அழகுற அதனை வானோர் சேவை செய்து என்றும் அகலார் - அழகு பொருந்தும்படி அத்தீர்த்தத்தைத் தேவர்கள் வழிபாடு செய்து எப்பொழுதும் அவ்விடத்தை விட்டு நீங்கார்கள். எ - று. (௧௪)

வெய்யவன் சிறந்தவாரம் விதிபாத யோகந் துத்திப்
பையராத் திங்கடன்னைப் பருதியை விழுங்குங் கால

மொய்யல ரத்தீர்த்தத்தின் மூழ்கித்தம் வகைக் கீடான
செய்யதா னங்கள் செய்தோர் தீவினைமுழுதுந் தீர்வர்.

(இ-ள்.) வெய்யவன் சிறந்த வாரம் விதிபாத யோகம் துத்திப்பை அரா திங்கள் தன்னைப் பரிதியை விழுங்குங் காலம் - சிறப்புப் பொருந்திய ஆதிவாரம், விதியாதயோகம் புள்ளிபொருந்திய படத்தையுடைய இராகு கேதுக்கள் என்னும் பாம்புகள் சந்திர சூரியர்களை விழுங்குங் காலமாகிய கிரகணகாலம் என்று சொல்லப்பட்ட புண்ணிய காலங்களில்,—மொய் அலர் அத் தீர்த்தம் மூழ்கி - நெருங்கிய பூக்களையுடைய அவ் வியாக்கிரபாத தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து,—தம் வகைக்கு ஈடான செய்ய தானங்கள் செய்தோர் - தம் பொருளளவுக்கு ஏற்ற நன்மையாகிய தானங்களைச் செய்தவர்கள்,—தீவினை முழுதுந் தீர்வர் - பாவங்களெல்லாவற்றினின்றும் நீங்குவார்கள். எ - று. (கரு)

கன்னிஞாயிற்றின் வானக் கறைமதி குறைபக் கத்து
மன்னுமட்டமியின் மூழ்கித் தானமும் வழங்கி யங்ஙன்
முன்னவற் பணியி னோய்க ணரைதிரை மூப்புகாலந்
துன்னிறப் பொழியு நாலாஞ் சொற்றகுந் தீர்த்த மீதால்.

(இ-ள்.) கன்னி ஞாயிற்றின் - புரட்டாதி மாதத்து ஆதிவாரங்களிலும்,—வானக் கறை மதி குறை பக்கத்து மன்னும் அட்டமியின் - வானிற் சஞ்சரிக்கின்ற களங்கம்பொருந்திய சந்திரன் குறைகின்ற அமரபக்ஷத்து அட்டமியிலும்,—மூழ்கி - அவ் வியாக்கிரபாத தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து,—தானமும் வழங்கி - தானங்களையுஞ் செய்து,—அங்ஙன் முன்னவன் பணியின் - அத் தீர்த்தக்கரையிலெழுந்தருளி யிருக்கின்ற முதல்வராகிய திருப்புலீச்சுரரை வணங்கினால்,—நோய்கள் நரை திரை மூப்பு அகாலம் துன் இறப்பு ஒழியும் - வியாதிகளும் நரை திரை மூப்புகளும், அகாலத்திலிறத்தலாகிய துர்மரணங்களு நீங்கும்,—சொல் தகும் ஈது நாலாம் தீர்த்தம் - சொல்லப்பட்ட இது நாலாவது தீர்த்தமாகும். எ - று. ஆல் அசை.

இத் தீர்த்தத்தில் பிற்காலத்தில் திருநீலகண்ட நாயனாரும் அவர் மனைவியாரும் ஸ்நானஞ்செய்து இளமைப்பருவம் பெற்றமையால், அதுமுதல் இளமையாக்கிய தீர்த்தமென்று வழங்கிவருகின்றது.

சிதம்பரந் தனக்கு மேல்பாற் றிகழவோர் மடமுஞ்செய்து
பதஞ்சலி யிருந்துபூசை பண்ணலா லவன்பே ரேற்ற

விதந்திக ழனந்தீசத்து முன்னரே விண்ணோர் சூழற்
புதம் பெறச் சேவைசெய்யும் பொலிவுள தனந்ததீர்த்தம்.

(இ-ள்.) பதஞ்சலி சிதம்பரம் தனக்கு மேல்பால் திகழ ஓர் மடமும் செய்து இருந்து பூசை பண்ணலால் - பதஞ்சலிமுனிவர் சிதம்பரத்துக்கு மேற்றிசையில் விளங்கும்படியான ஒரு மட முண்டு பண்ணி அதிலிருந்து கொண்டு சிவபூசை செய்தபடியால்,—இதம் திகழ் அவன்பேர் எற்ற அனந்தீசத்து முன்னர் - இன்பத்தோடு விளங்காநின்ற அப்பதஞ்சலியின் பெயரைக் கொண்ட திருவனந்தேச்சுரத்துக்கு முன்னே,—விண்ணோர் சூழ் அற்புதம் பெறச் சேவை செய்யும் அனந்த தீர்த்தம் பொலிவு உளது - தேவர்கள் சூழ்ந்து மோக்ஷத்தை அடையும்படி வணங்குகின்ற அனந்த தீர்த்த மென்னும் பெயரையுடைய ஒரு தீர்த்தம் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. எ - று. (௧௭)

பருதிவா ரங்கடோறும் பருவங்க டோறுந் தீங்கு
வெருவவா திரையி னன்னாள் விதிபாதயோகம் பாந்த
ளிருசுடர் விழுங்குங்கால மனுவாதி யித்தீர்த் தத்தி
னருளினா டினரேன் முத்த ரஃறயினீ தஞ்சாந்தீர்த்தம்.

(இ-ள்.) தீங்கு வெருவ - தீமைகள் நீங்கும்படி,—பரிதிவாரங்கள் தோறும் - (ஒவ்வொரு மாதங்களிலும் வருகின்ற) ஆதிவாரங்களிலும்,—நல் ஆதிரை நாள் - நன்மை பொருந்திய திருவாதிரை நக்ஷத்திரங்களிலும்,—விதிபாத யோகம் - விதிபாத யோகங்களிலும்,—பாந்தள் இரு சுடர் விழுங்குங் காலம் - இராகு கேதுக்களென்னும் பாம்புகள் சந்திரர் சூரியர்களென்னும் இருவர்களையும் விழுங்குகின்ற காலமாகிய கிரகண புண்ணிய காலங்களிலும்,—மனுவாதி - மனுவாதி புண்ணிய காலங்களிலும்,—இத்தீர்த்தத்தில் அருளின் ஆடினரேல் - இவ்வனந்த தீர்த்தத்தில் அன்போடு ஸ்நானஞ் செய்வார்களாயின்,—முத்தர் - அவர்கள் ஜீவன் முத்தராவார்கள்; —அறையின் ஈது அஞ்சாம் தீர்த்தம் - சொல்லுமிடத்து இது ஐந்தாவது தீர்த்தமாகும். எ - று. (௧௮)

பெருமைகூ ரனந்தீ சத்து மேற்றிசைப் பிலத்தூணின்றும்
வருபதஞ் சலிமுன் னன்பால் வந்துதோன் றியதோரெல்லை
பொருவரு நன்றூநல்கும் புண்ணிய நண்ணுந் தீர்த்த
மருவினை யெவையு நீக்கு மதன்பெயர் நாகசேரி.

(இ-ள்.) பெருமை கூர் அனந் தீசத்து மேல் திசை - பெருமை பொருந்திய திருவனந்தீச்சுரத்துக்கு மேற்றிசையில்,—பிலத்துள் நின்று முன் வரு பதஞ்சலி - பிலத்துவாரத்தினின்றும் முன்னே தோன்றிய பதஞ்சலி முனிவர்,—அன்பால் வந்து தோன்றியது ஓர் எல்லை - அன்போடு (திருக்கைலாசமலையி னடியிலுள்ள ஒரு பிலத்துவார வழியாகப் பூமியில்) வந்து தோன்றியதாகிய ஓர் எல்லையானது,—பொருவரும் நன்கு நல்கும் புண்ணியம் நண்ணு தீர்த்தம் - உவமை சொல்லுதற்கரிய நன்மையைக் கொடுக்கின்ற புண்ணிய பலத்தை யடையத்தக்க தீர்த்தமாகும்,—அதன் பெயர் நாக சேரி - அத்தீர்த்தத்தின் பெயர் நாக சேரி,—அருவினை எவையும் நீக்கும் - (அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால்)அது கொடிய வினைகளெல்லாவற்றையும் நீக்கும். எ - று. (௧௯)

அருளுடன் கன்னிமாதத் தைம்பரு வங்க ளாதன்
மருவுமா யிலியம் வெய்யோன் வாரத்தி னாத லந்தக்
குருமலர்த் தீர்த்த மூழ்கிக் கூடிய தானஞ் செய்தோ
ரொருவுவர் வினையை யாறுந் தீர்த்தமீ துணர்வான்மிக்கோய்

(இ-ள்.) உணர்வான் மிக்கோய் - அறிவினன் மேம்பட்ட சைமினியே,—கன்னிமாசத்து ஐம்பருவங்களாதல் - புரட்டாதி மாசத்துப் பஞ்ச பர்வங்களிலாவது,—மருவும் ஆயிலியம் ஆதல் - பொருந்திய ஆயிலிய நக்ஷத்திரத்திலாவது,—வெய்யோன் வாரத்தில் ஆதல் - ஆதிவாரத்திலாவது,—அந்தக் குருமலர்த் தீர்த்தம் அருளுடன் மூழ்கி - அந்த நிறம்பொருந்திய பூக்களையுடைய நாகசேரி தீர்த்தத்தில் அன்போடு ஸ்நானஞ் செய்து,—கூடிய தானஞ் செய்தோர் - தம்மாலியன்ற தானங்களைச் செய்தவர்கள்,—வினையை ஒருவுவர் - இருவினைகளி னின்று நீங்குவர்;—ஈது ஆறும் தீர்த்தம் - இது ஆறுவது தீர்த்தமாகும். எ - று. (௨௦)

மட்டிலான் மன்றினுக்கு வடகுட திசையின் வானோ
ரிட்டமாம் பிரமதீர்த்தத் தெழிற்றையுண் மதிதேய் பக்கத்
தட்டமி மனுவினாதி யுகாதியி னன்பான் மூழ்கிச்
சிட்டர்பாற் றானஞ்செய்தோர் சிவகதி சென்று சேர்வார்.

(இ-ள்) மட்டு இலான் மன்றினுக்கு வடகுட திசையின் - அளவிடப்படாதவனாகிய நடேசப்பெருமான் எழுந்தருளியிராநின்றகனகசபைக்கு வடமேற்குத்திசையில்,—வானோர் இட்டமாம் பிரமதீர்த்தத்து - தேவர்களுக்கு விருப்பத்தைத் தரத்தக்கதாகிய பிரமதீர்த்

தத்திலே,—எழில் தையுள் மதி தேய் பக்கத்து அட்டமி - அழகு பொருந்திய தைமாசத்திலே சந்திரன் குறைகின்ற அமரபக்ஷத்து அஷ்டமியிலும்,—மனுவினாதி - மனுவாதி புண்ணியகாலங்களிலும்,—யுகாதியின் - யுகாதி புண்ணிய காலங்களிலும்,—அன்பால் மூழ்கி - அன்போடு (அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ் செய்து,—சிட்டர் பால் தானம் செய்தோர் - முனிவர்களிடத்தில் தானங்களைச் செய்தவர்கள்,—சிவகதி சென்று சேர்வார் - நன்மையாகிய மோக்ஷத்தையடைவார்கள். எ - று. (உக)

சிறந்தவித் தீர்த்த வாவித் தீரத்திற் பூசையோம
நிறந்தமந் திரநவிற்றி நிகழ்த்திெனான் றனந்த மங்கு
னுறைந்தவீ சனைப்பணிந்தா லுன்னிய தெய்து மென்பர்
லறைந்தவிப் பெரியதீர்த்த மதனையே ழாவ தென்ப.

(இ-ள்.) சிறந்த இத்தீர்த்த வாவித்தீரத்தில் - சிறப்புப்பொருந்திய இப்பிரமதீர்த்தமாகிய தடாகக் கரையில்,—பூசை ஓமம் நிரந்த மந்திரம் நவிற்றி நிகழ்த்தின் - சிவபூசையையும் யாகங்களையும் நிறைந்த மந்திரங்களையுச்சரித்துக்கொண்டு செய்தால்,—ஒன்று அனந்தம் - ஒன்று அனந்தமாகப் பெருகும்,—அங்கு உறைந்த ஈசனைப் பணிந்தால் - அத்தீர்த்தக்கரையி லெழுந்தருளி யிருக்கின்ற பிரமபுரீச்சுரனை வணங்கினால்,—உன்னியது எய்தும் - நினைத்த காரியம் கைகூடும்,—அன்பால் அறைந்த இப் பெரிய தீர்த்தம் அதனை எழாவது என்ப - அன்போடு சொல்லப்பட்ட பெருமை பொருந்திய இப்பிரம தீர்த்தத்தை எழாவது தீர்த்தம் என்று சொல்லுவார்கள் பெரியோர்கள். எ - று. (உஉ)

மதாசல முரித்தோன் வைகு மன்றத்து வடபா றன்னிற்
பிதாமகன் பிரிவாய் வைகும் பிரமசா முண்டி முன்னர்
சுதாசனர் புகழோர் தீர்த்தந் தோய்ந்தவர் தம்பா லீசன்
சதாமகிழ் தரலானுமந் தான்சிவப் பிரியை யாமால்.

(இ-ள்.) மதா சலம் உரித்தோன் வைகும் மன்றத்து வடபால் தன்னில் - மதம் பொருந்திய யானையை யுரித்தருளிய நடேசப் பெருமான் எழுந்தருளி யிராநின்ற கனகசபைக்கு வடதிசையில்,—பிதா மகன் பிரிவாய் வைகும் பிரம சாமுண்டிமுன்னர் - பிரமதேவருடைய ஒரு கூறாக எழுந்தருளி இருக்கும் பிரம சாமுண்டியாலயத்தின் முன்னே,—சுதாசனர் புகழ் ஓர் தீர்த்தம் - சுதாசனர்களாற் றுதிக்கப்பட்ட ஓர் தீர்த்தமுள்ளது,—தோய்ந்தவர் தம்பால் ஈசன்

சதா மகிழ் தரலால் - அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவரிடத்துச் சிவபெருமான் எப்பொழுதும் மகிழ்ந்து வீற்றிருத்தலால்,—நாமம் சிவப்பிரியை யாம் - அத்தீர்த்தத்தின் பெயர் சிவப்பிரியை யாகும். எ - று. தான் ஆல் அசை. (உரு)

மாதங்க டன்னிற் செய்யோன் வாரங்க டோறு மூழ்கி
னாதங் கடந்த ஞான நாடக னளவி லாத
வேதங் கடந்த நம்பன் வீட்டின்பந் தருவன் சேர்ந்தோ
ரேதங்க டங்கா தீர்த்த மெட்டாவ தெண்ணுங்காலே.

(இ - ள்.) மாதங்கள் தன்னில் செய்யோன் வாரங்கள் தோறும் மூழ்கின் - மாதங்கள்தோறும் வருகின்ற மங்கலவாரங்கள் தோறும் (அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ் செய்தால்,—நாதம் கடந்த ஞான நாடகன் - நாதத்துக்கு அதீதப்பட்ட ஞான நிருத்தத்தைச் செய்தருளுகின்றவரும்,—அளவு இலாத வேதம் கடந்த நம்பன் - அளவில்லாத வேதங்களுக்கு அதீதப்பட்ட நம்ப னென்னுந் திருநாமத்தை யுடையவருமாகிய சிவபெருமான்,—வீட்டு இன்பம் தருவன் - மோக்ஷானந்தத்தைக் கொடுத்தருளுவன்,—சேர்ந்தோர் ஏதங்கள் தங்கா - அத்தீர்த்தத்தை யடைந்தவர்களுக்குத் துன்பங்கள் அடையா;—எண்ணுங்கால் எட்டாவது தீர்த்தம் - ஆராய்ந்து பார்க்கு மிடத்து அது எட்டாவது தீர்த்தமாகும். எ - று. ஏ அசை. (உச)

விளங்குமிக் கதற்குத் தென்பால் வியாக்கிர பாத னல்கு
முளம்பர மற்க ளித்த வுபமன்னியற்குச் சென்னி
யிளம்பிறைவனைந்தோன் றந்த திலகுபாற்கடலென் றெங்கும்
வளம்பெறப் புகழுந்தீர்த்த மதனையார் வழுத்தற் பாலார்.

(இ-ள்.) விளங்கும் மிக்க அதற்குத் தென்பால் - விளங்காநின்ற மேன்மை பொருந்திய அச்சிவப் பிரியை யென்னுந் தீர்த்தத்திற்குத் தென்பக்கத்தில்,—வியாக்கிரபாதன் நல்கும் - வியாக்கிரபாத முனிவர் பெற்றருளிய,—உளம் பரமற்கு அளித்த உபமன்னியற்கு - தம் மனதைச் சிவபெருமானிடத்துப் பதித்த உபமன்னிய மகாமுனிவருக்கு,—சென்னி இளம் பிறை வனைந்தோன் தந்தது - திருமுடியினிடத்தே மூன்றாம்பிறைச் சந்திரனைத் தரித்தருளிய சிவபெருமான் அழைத்துக் கொடுத்ததாகிய,—இலகு பால் கடல் என்று எங்கும் வளம் பெறப் புகழும் தீர்த்தம் - விளங்காநின்ற திருப்பாற்கடலென்று எவ்விடத்துள்ளோரும் செல்வத்தைப் பெறும்படி துதிக்கின்ற தீர்த்தமாகும்,—அதனை யார் வழுத்தற் பாலார் - அத்தீர்த்தத்தின் பெருமையை யாவர் எடுத்துச் சொல்லத்தக்கவர்கள். எ - று. (உரு)

ஓதரும் பரமஞானத் துயர்ந்துப மன்னியன் முன்
மாதவர் வானோர்காணு வரம்பிலா மகங்க ளாய்ந்து
சீதரன் கண்ணன்வாசு தேவன்றன் சென்னி தன்னிற்
பாதம்வைத் தருளி னனப் பாற்கட லாடி யன்றே.

(இ-ள்.) ஓதரும் பரம ஞானத்து உயர்ந்த உபமன்னியன் - சொல்லுதற்கரிய மேலான ஞானத்தினாலுயர்ந்த உபமன்னிய மகாமுனிவர்,—அப்பாற்கடல் ஆடி - அத்திருப்பாற்கடலை யுண்டு,—தான் மாதவர் வானோர் காணு வரம்பு இலா மகங்கள் ஆய்ந்து - தாம் முனிவர்களும் தேவர்களும் அறியாத எல்லையில்லாத யாகங்களை ஆராய்ந்து செய்து,—சீதரன் கண்ணன் வாசுதேவன்றன் சென்னி தன்னில் பாதம் வைத்தருளினன் - சீதேவியைத் தரித்தவனாகியும், கருநிறத்தையுடையவனாகியும் வாசுதேவருடைய புத்திரனாகியும் உள்ள கிருஷ்ணனுடைய தலையில் தமது பாதத்தை வைத்தலாகிய திருவடி தீக்ஷை செய்தருளினர். எ - று. அன்று ஏ அசைகள். (உசு)

மேற்கட வுளர்கள்போற்ற வியன்முனி யுண்டு மூழ்கும்
பாற்கடற் றீர்த்தஞ் சென்று படிந்தவர் பயன்களெல்லா
மாற்கட வரை யுரித்தோன் வழங்குறப் பெறுவரீது
நூற்கடன்முறையா லொன்ப தாவதா நவலற் பாற்றே.

(இ-ள்.) மேல் கடவுளர்கள் போற்ற வியன் முனி உண்டு மூழ்கும் பாற்கடல் தீர்த்தம் சென்று படிந்தவர் - மேன்மை பொருந்திய தேவர்கள் துதிக்கும்படி பெருமைபொருந்திய உபமன்னிய மகாமுனிவர் உண்டு மூழ்கிய அத்திருப்பாற்கடற் றீர்த்தத்திற்போய் ஸ்நானஞ் செய்தவர்கள்,—மால் கடவரை யுரித்தோன் பயன்கள் எல்லாம் வழங்குறப் பெறுவர் - பெரிய மதமலையாகிய யானையையுரித்துப் போர்த்தருளிய சிவபெருமான் அதற்குத்தக்க பிரயோசனங்களெல்லாவற்றையுங் கொடுத்தருளப் பெறுவார்கள்,—ஈது நூல்கள் தன் முறை - இது சாஸ்திரங்களின் முறைமை,—ஒன்பது ஆவதா நவலற் பாற்று - (இத்திருப்பாற்கடல் தீர்த்தத்தை) ஒன்பதாவது தீர்த்தமாகச் சொல்லுந் தன்மையையுடையது. எ - று. ஆல் அசை.

ஆனந்த சபைக்குக் கீழ்பா லானந்த வடிவ மான
வான்ந்தை கூவ லானு ளதனைமுன் பார்த்துப் பார்த்தே
யானந்த நிருத்தஞ் செய்யா நின்றன ரழிவிலாத
வானந்தர் பரமானந்த கூபமென் றதற்கு நாமம்,

(இ-ள்.) ஆனந்த சபைக்குக் கீழ்பால் ஆனந்தவடிவமான ஆனந்தை கூவலானுள் - (எப்பொழுதும்) ஆனந்தமயமாய்விளங்காநின்ற கனகசபைக்குக் கீழ்த்திசையில் ஆனந்தவடிவமாகிய சிவகாமியம்மையார் ஒரு கூபவடிவமாய் விளங்குகின்றாள்,—அழிவு இலாத ஆனந்தர் - (யாதொரு காலத்தும்)நீக்கமின்றி விளங்குகின்ற சதானந்தராகிய நடேசப்பெருமான்,—அதனை முன் பார்த்துப் பார்த்தே ஆனந்த நிருத்தஞ் செய்யாநின்றனர் - அத்தீர்த்தத்தை முன்னே திருவருணோக்கஞ் செய்து செய்து ஆனந்ததாண்டவஞ் செய்தருளாநின்றனர்,—அதற்கு நாமம் பரமானந்தகூபம் என்றது - அத்தீர்த்தத்திற்குப் பெயர் பரமானந்தகூபம் என்றுசொல்லப்பட்டது. எ - று. ()

கொடியிடை பரமா னந்த கூபமென் றுருக்கோ டீர்த்தம்
படியிடை நவதீர் த்தங்கள் பற்பல தீர்த்த மற்று
மடிமிசைவந்து தாழ்ந்திங் கலகுறு மென்று லந்த
நெடியவான் றீர்த்தம் போலநினைத்திடி னிகழ்த்தில் யாதோ.

(இ-ள்.) கொடி இடை பரமானந்த கூபம் என்று உருக்கொள் தீர்த்தம் - கொடிபோன்ற இடையை யுடைய சிவகாமியம்மையார் பரமானந்த கூபமாக வடிவங் கொண்ட அத்தீர்த்தத்தை,—படி இடை நவதீர்த்தங்கள் - பூமியினிடத்துள்ள கங்கை யமுனை சரஸ்வதி துங்கபத்திரை நருமதை கோதாவிரி கிருஷ்ணு பவானி காவேரி என்னும் ஒன்பது புண்ணிய தீர்த்தங்களும்,—மற்றும் பல்பல தீர்த்தம் - மற்றுள்ள பலபல தீர்த்தங்களும்,—அடிமிசை வந்து தாழ்ந்து இங்கு அலகுறும் என்றால் - அப்பரமானந்த கூப தீர்த்தத்தின் திருவடியில் வந்து நமஸ்கரித்து இவ்விடத்திற் றங்குமாயின்,—அந்த நெடிய வான் தீர்த்தம் போல நினைத்திடில் நிகழ்த்தில் யாதோ - அந்த நீண்ட பெரிய தீர்த்தத்தைப்போல நினைக்குமிடத்தும் சொல்லுமிடத்தும் வேறு யாதிருக்கின்றது? எ - று. (உ௬)

நவமியிற் புகர்வாரத்தி னற்சுட ரிரண்டைப் பாந்தள்
கவர்தரு நாளின்மூழ்கிற் கடுங்கொடு வினைக ணீங்கும்
புவமதி வளர்பக்கத்துப் புகர்வாரந் தன்னி லொவ்வொன்
றிவையுறு நாளின்மூழ்கி னெய்தொணு நலங்க ளெய்தும்.

(இ-ள்) நவமியில்-(மாதந்தோறும்வரும்)நவமி திதிகளிலும்,—புகர்வாரத்தில் - சுக்கிரவாரங்களிலும்,—நல் சுடர் இரண்டைப்பாந்தள் கவர்தரும் நாளில் மூழ்கினால் - நன்மைபொருந்திய சந்திர சூரியர்களை இராகு கேதுக்களென்னும் பாம்புகள் விழுங்குகின்ற தின

மாகிய கிரகண புண்ணிய காலங்களிலும் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால்,—கடும் கொடும் வினைகள் நீங்கும் - கடுமையாகிய கொடிய பாவங்கள் நீங்கும்,—புவ மதி வளர்பக்கத்துப் புகர்வாரம் தன்னில் ஒவ்வொன்று இவை யுறும் நாளின் மூழ்கின் - புதிதாகிய சந்திரன் வளர்கின்ற பூர்வபக்ஷ சுக்கிரவாரத்திலும் அச்சுக்கிர வாரமும் நவமியுங் கூடிய தினத்திலும் சுக்கிரவாரமும் கிரகணமுங் கூடிய தினத்திலும் (அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ்செய்தால்,—எய்துஒணு நலங்கள் எய்தும் - அடையக் கூடாத பலன்களெல்லாம் வந்து அடையும், எ - று. (௯0)

பொருவிலைப் பசிமாதத்துப் புதுமதி வளர்பக் கத்து
வருநவ மியினின் மூழ்கில் வருங்கவி கல்வியெய்து
மொருதின மிடைவிடாம லோராண்டோ ருழுந்தி னெல்லை
யருடரு மந்நீருட்கொண் டவர்கவிக் கரச ராவர்.

(இ-ள்.) பொருவு இல் ஐப்பசி மாதத்துப் புதுமதி வளர்பக்கத்து வரும் நவமியில் மூழ்கில் - ஒப்பில்லாத ஐப்பசி மாதத்தில் புதிதாகிய சந்திரன் வளருகின்ற பூர்வபக்ஷத்தில் வருகின்ற நவமி திதியில் (அப்பரமானந்த கூப தீர்த்தத்தில்) ஸ்நானஞ் செய்தால்,—கவி வரும் கல்வி எய்தும் - கவிபாடும்படியான கல்வியுண்டாகும்,—ஓர் ஆண்டு ஒரு தினம் இடைவிடாமல் ஓர் உழுந்தின் எல்லை அருள் தரும் அந்நீர் உட்கொண்டவர் - ஒருவருஷகாலம் ஒவ்வொரு தினமும் இடைவிடால் ஓர் உழுந்தளவு கிருபையைத் தருகின்ற அத்தீர்த்தத்தை உட்கொண்டவர்கள்,—கவிக்கு அரசர் ஆவார் - கவிராஜராவார்கள், எ - று. (௯௧)

சுரர்குரு முன்னோ ராண்டு தூநிய மத்து நாளும்
வரமருளந்நீர் கொண்டே வாக்கிற்கு மன்ன னானான்
றிரமிது மலடி யன்பாற் றிருந்தவோ ராண்டே கொண்டா
லரனருட் கன்ப னுஞ்சே யலைவறப் பெறுவ ளன்றே.

(இ-ள்.) சுரர் குரு முன் ஓர் ஆண்டு தூநியமத்து நாளும் வரம் அருள் அந்நீர் கொண்டு வாக்கிற்கு மன்னன் ஆனான் - தேவகுருவாகிய வியாழபகவான் முன்னே ஒருவருஷம் பரிசுத்தமாகிய நியமத்துடன் தினந்தோறும் வரத்தைக் கொடுக்கின்ற (அப்பரமானந்த) தீர்த்தத்தை உட்கொண்டு வாக்குக்கு அரசனானான்,—இது திரம் - இது நிச்சயமாகும்,—மலடி அன்பால் திருந்த ஓர் ஆண்டுகொண்டால் - மலடியானவள் அன்போடு செவ்வையாக ஒருவரு

ஷம் (அத்தீர்த்தத்தை) உட்கொண்டு வருவாளாயின்,—அரன் அருட்கு அன்பன் ஆம் சேய் அலைவறப் பெறுவள் - சிவபெருமானுடைய திருவருளுக்கு அன்பனாகிய புத்திரனைத் துன்பம் நீங்கப் பெறுவாள். எ - று. அன்று ஏ அசைகள். (கூஉ)

யாவையுங் காமி யாம லியல்பினுட் கொண்டோர் வீடு
மேவுவர் மாசி தன்னின் வெண்மதி வளர்பக் கத்துத்
தாவிலா விளக்கங் கொண்ட சதுர்த்தசி மூழ்கின் முத்த
ராவரீ ரைந்தாந் தீர்த்த மாமிஃதறையி னம்மா.

(இ-ள்.) யாவையும் காமியாமல் இயல்பின் உட்கொண்டோர் வீடு மேவுவர்-ஒன்றையும் விரும்பாமல் இயல்பாக (அத்தீர்த்தத்தை) உட்கொண்டவர்கள் மோக்ஷத்தை யடைவார்கள்,—மாசிதன்னில் வெள் மதி வளர் பக்கத்துத் தாவு இலா விளக்கங் கொண்ட சதுர்த்தசி மூழ்கில் - மாசி மாசத்தில் வெள்ளிய சந்திரன் வளர்கின்ற பூர்வ பக்ஷத்துக் கெடுதலில்லாத பிரகாசம்பொருந்திய சதுர்த்தசிதிதியில் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால்,—முத்தராவர் - ஜீவன்முத்தராவார்கள்,—இஃது அறையின் ஈர் ஐந்தாம் தீர்த்தம் ஆம் - இது சொல்லுமிடத்துப் பத்தாவதுதீர்த்தமாகும். எ - று. அம்மா வியப்பிடைச்சொல். (கூகூ)

ஐந்திரண் டாமித் தீர்த்தத் தாடினோர் முத்த ரன்றிச்
சிந்தைசெய் தைமா தத்திற் றேய்மதிக் கிறுதி நாளின்
வந்திவை யடைவின் மூழ்கின் மறைமுடி விதுவென் றோது
மந்தமில் லாத முத்தி யடைவதற் கைய மின்றால்.

(இ-ள்.) ஐந்து இரண்டாம் இத் தீர்த்தத்து ஆடினோர் முத்தர்-பத்தாவது தீர்த்தமாகிய இப்பரமானந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் ஜீவன்முத்தராவார்கள்,—அன்றி - அது வன்றி,—சிந்தைசெய் தை மாதத்தில் தேய்மதிக்கு இறுதிநாளில்வந்து இவை அடைவின் மூழ்கின் - தியானிக்கத்தக்கதாகிய தைமாதத்தில் தேய்பிறையாகிய அமரபக்ஷத்துக் கடைநாளாகிய அமாவாசை புண்ணிய காலத்தில் இப்பத்துத் தீர்த்தங்களிலும் விதிப்படி ஸ்நானஞ் செய்தால்,—மறை முடிவு இது என்று ஓதும் - வேதத்தின் முடிவு இது வென்று சொல்லுகின்ற,—அந்தம் இல்லாத முத்தி அடைவதற்கு ஐயம் இன்று - முடிவில்லாததாகிய மோக்ஷத்தை யடைதற்குச் சந்தேகமில்லை. எ - று. ஆல் அசை. (கூச)

இன்னை தீர்த்தத் துண்மை யுமையவட் கெமையாளையன்
முன்னருணெறியே யானு மொழிந்தனன் மூவாத் தில்லை
நன்னக ருறைவோ ரெங்க ணம்பனைப் பிழைத்த தன்றிப்
பின்னறி யாது செய்த பிழையிவை மூழ்கிற் போமால்.

(இ-ள்.) இன்னை தீர்த்தத்து உண்மை உமையவட்கு எமை ஆள் ஐயன் முன் அருள் நெறியே யானும் மொழிந்தனன் - இத்தன்மையனவாகிய தீர்த்தங்களின் மகிமைகளை உமாதேவியாருக்கு எம்மை யாண்டருளுகின்ற சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய படியே யானும் (உங்களுக்குச்) சொன்னேன் (இது நிற்க),—மூவாத் தில்லை நல் நகர் உறைவோர் - கெடுதலில்லாத தில்லைவனமெனப் பெயரிய நல்ல சிதம்பரஸ்தலத்தில் வசிப்பவர்கள்,—எங்கள் நம்பனைப் பிழைத்தது அன்றி - எங்கள் சிவபெருமானுக்குக் குற்றஞ் செய்ததே யல்லாமல்,—பின் அறியாது செய்த பிழை - பின் அபுத்திபூர்வமாகச்செய்யப்பட்ட குற்றங்களும்,—இவைமூழ்கில் போம் - இப்பத்துத்தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தால் நீங்கிப் போகும். எ - று. ஆல் அசை. மொழிந்தனன் முனிவ தில்லை எனவும் பாடம்.

சுராசுரர் முனிவராதி சொல்லுமெல் லோரு மன்பா
னிராமயன் பரமா னந்த நிருத்தமுன் னுருத்தரித்த
பராபர லிங்கந் தில்லைப் பதியினுண் டாக்கிப் போற்றித்
தராதலத் துயர்ந்தா ரன்ன சாற்றுவன் றொகுத்துக் கேட்டி.

(இ-ள்.) சுரர் அசுரர் முனிவர் ஆதி சொல்லும் எல்லோரும் - தேவர் அசுரர் முனிவர் முதலாகச் சொல்லுகின்ற யாவர்களும்,—நிராமயன் பரமானந்த நிருத்தம் முன் - ஆணவமில்லாதவராகிய சிவபெருமான் பரமானந்த தாண்டவஞ் செய்தற்கு முன்னே,—உருத்தரித்த பராபர லிங்கம் - சகள நிட்கள ரூபங்கொண்ட சிவலிங்கப் பெருமானை,—தில்லைப் பதியின் உண்டாக்கி அன்பால் போற்றி - இச்சிதம்பரஸ்தலத்தில் பிரதிஷ்டைசெய்து பூசித்து,—தராதலத்து உயர்ந்தார் - இப்பூமியினிடத்தில் மேன்மையை யடைந்தார்கள்;—அன்ன தொகுத்துச் சாற்றுவன் கேட்டி - அச்சிவலிங்கங்களைத் தொகுத்துச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. எ - று. (௩௬)

பொதுவினிற் கீழ்பால் மாயோன் போற்றிமுன் கண்டெல்லோர்க்கு, மதிகமா யினனத் தான மரிச்சுர மதற்குத் தென்சார்பது மையா னன்கு கண்டு படைத்தவக் கமலேசத்தை,விதியினிற்பணிந்தோர்சிந்தைவிரும்பியதெய்திவாழ்வார்.

(இ-ள்) பொதுவினில் கீழ்பால் - கனகசபைக்குக் கீழ்த்திசையில்,—முன் மாயோன் கண்டு போற்றி எல்லோர்க்கும் அதிகம் ஆயினன் - முன்னே விஷ்ணுமூர்த்தியானவர் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து பூசித்து எல்லாத் தேவர்களினும் மேலானவராயினர்,—அத்தானம் அரீச்சுரம் - (அதனால்) அந்த ஆலயத்துக்கு அரீச்சுரமென்று பெயர்;—அதற்குத் தென்சார் - அவ்வரீச்சுரத்துக்குத்தென் பக்கத்தில்,—அங்கண் பதுமையான் நன்கு கண்டு படைத்த அக்கமலேசத்தை - அவ்விடத்தில் தாமரையாசனராகிய பிரமதேவர் விருப்பத்தோடு உண்டுபண்ணி பூசைசெய்த கமலேசுரமுடையானை,—விதியினில் பணிந்தோர் சிந்தை விரும்பியது எய்தி வாழ்வார் - விதிப்படி வணங்கினவர்கள் தங்கள் மனதில் விரும்பிய பேற்றை யடைந்து வாழ்வார்கள். எ - று. (கூஎ)

மற்றதன் றென்பா லன்பால் வலாரிமுன் கண்டுதீங்கு
செற்றவிந் திரீசமீதிற் றெக்கணந் தன்னில் வன்னி
முற்றகக் கண்டவக்கி னீச்சுர முயங்கி யேத்தப்
பெற்றவர் நினைத்தவெல்லாம் பெறுவரங் கதற்குத் தென்னர்.

(இ-ள்) அதன் தென்பால் வலாரி அன்பால் முன் கண்டு தீங்கு செற்ற இந்திரீசம் - அக்கமலேசுரத்துக்குத் தென்பக்கத்தில் இந்திரனானவன் அன்போடு முன்னே பிரதிஷ்டைசெய்து பூசித்துத் தனக்குள்ள பாவத்தை நீக்கிக்கொண்ட இந்திரேச்சுரத்தையும்,—ஈதின் தெக்கணம் தன்னில் வன்னி முன் தகக்கண்ட அக்கினீச்சுரம் - இவ்விந்திரேச்சுரத்துக்குத் தென்பக்கத்தில் அக்கினி தேவன் முன்னமே தகுதியோடு பிரதிஷ்டை செய்து பூசித்த அக்கினீச்சுரத்தையும்,—முயங்கி ஏத்தப் பெற்றவர் நினைத்த எல்லாம் பெறுவர் - முயற்சியோடு (தரிசித்துத்) துதித்தவர்கள் தாங்கள் நினைத்த பேறுகளெல்லாவற்றையும் அடைவர்கள்,—அங்கு அதற்குத் தென்னர் - அவ்விடத்திலுள்ள அவ்வக்கினீச்சுரத்துக்குத்தென்பக்கத்தில். எ-று மற்று ஏ அசைகள். (கூஅ)

அருக்கன் முன் கண்டிறைஞ்சு மருக்கேசம் பணியிலெந்நோய்
வருக்கமும் போமதற்கு வடகிழக் கிடைநா வல்லி
யிருட்கெடக் கண்ட மேவாங்கா ரேசத்தை நேசித்தோர் தூற்
பெருக்கிடை மூழ்கி வாக்கும் பெறுவரங் கதற்குத்தென்னார்.

(இ-ள்) அருக்கன் முன் கண்டு இறைஞ்சும் அருக்கேசம் பணியில் எந்நோய் வருக்கமும் போம் - சூரியனானவன் முன்னே

பிரதிஷ்டை செய்து பூசித்து வணங்கிய அருக்கேசுரமுடையாரை வணங்கினால் எந்த நோய்க் கூட்டங்களும் நீங்கும்,—அதற்கு வட கிழக்கிடை - அவ்வருக்கேசுரத்துக்கு வடகிழக்கில்,—நா வல்லி இருள் கெடக் கண்ட ஓங்காரேசத்தை நேசித்தோர் - சரஸ்வதியா ன்வள் (அஞ்ஞானமாகிய) இருள் நீங்கும்படி பிரதிஷ்டை செய்து பூசித்த ஓங்காரேசுரத்தை விருப்பத்தோடு வணங்கினவர்கள்,—நூல் பெருக்கிடை மூழ்கி வாக்கும் பெறுவர் - சாஸ்திர வெள்ளத்திலழு ந்தி கல்வியைப் பெற்றுக் கொள்ளுவார்கள்,—அதற்குத் தென்சார்- அவ் வோங்காரேசுரத்துக்குத் தென்பக்கத்தில். எ - று. (௩௯)

வருணன்முன் பிரம கத்தி மாற்றுவான் கண் டிறைஞ்சு
மருள்வரு ணேச முன்ன ரறையரீச் சுரத்துக் கீழ்பாற்
றிருவளர் நந்தி யெம்மான் செய்தநந் தீசஞ் செம்பொன்
னுருமலி பொதுவிற் றென்பாலுள்ளனவுரைப்பக்கேண்மோ.

(இ-ள்.) வருணன் முன் பிரமகத்தி மாற்றுவான் கண்டு இறை ஞ்சும் அருள் வருணேசம் - வருணனானவன் முன்னொருகாலத்தில் தனக்குண்டாகிய பிரமகத்தியை நீக்கிக் கொள்ளும் பொருட்டுப் பிர திஷ்டை செய்து பூசித்து வணங்கிய திருவருளைத் தருகின்ற வரு ணேச்சுரமும்,—முன்னர் அறை அரீச்சுரத்துக் கீழ்பால் - முன் சொல்லிய அரீச்சுரமுடையார் கோயிலுக்குக் கீழ்பக்கத்தில்,—திரு வளர் நந்தி எம்மான் செய்த நந்தீசம் உள்ளன - திருவருட்செல்வம் வளரப்பெற்ற எமது திருநந்திதேவர் பிரதிஷ்டை செய்து பூசித்த நந்திகேசுரமும் இருக்கின்றன,—செம்பொன் உரு மலி பொதுவின் தென்பால் உள்ளன உரைப்பக் கேண்மோ - செம்பொன் வடிவாய் விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்துக்குத் தென்பக்கத்திலுள்ள ஸ்த லங்களைச் சொல்லுகின்றேன் கேட்பீர்களாக. எ - று. (௪0)

கந்தன் மாமுகன் வசிட்டன் வாமனன் கபிலன் கற்க
னிந்திரசித்து வாலி தாரையோ டெமன்சா முண்டி
சுந்தர வால கில்லி யவக்கிரி சுவேத கேசன்
சந்தமார் குமிகள் கண்டோ ரிவைநிற்கச் சபைக்குமேல்பால்

(இ-ள்.) கந்தன் மாமுகன் வசிட்டன் வாமனன் கபிலன் கற் கன் இந்திரசித்து வாலி தாரை ஓடு எமன் சாமுண்டி சுந்தர வால கில்லி யவக்கிரி சுவேதகேசன் சந்தமார் குமிகள் கண்டோர் - சுப்பி ரமணியக்கடவுள் விநாயகக்கடவுள் வசிட்டமுனிவர் வாமனமுனி வர் கபிலமுனிவர் கற்கமுனிவர் இந்திரசித்து வாலி தாரை எமன்

சாமுண்டி அழகுபொருந்திய வாலகில்லி யவக்கிரி சுவேதகேசன் என்னு மிவர்கள் அழகுநிறைந்த சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து பூசைசெய்தார்கள்,—இவை நிற்க - இவை நிற்க,—சபைக்கு மேல்பால் - கனகசபைக்கு மேற்றிசையில். எ - று. (௬௧)

அகத்தியன் கடவுட் டச்ச னனந்தன் பாரத் துவாசன்
மிகத்திகழ் கமடன் வாயு வியாக்கிர பாதன் வேதா
மகத்தொழிற் குண்டினன் சாத்திகன் வற்சன்வாட்களன்றீங்
குகத்திகன் கவுசிகன் வாலிக னுருப்ப சியென் றுள்ளோர்.

(இ-ள்) அகத்தியன் கடவுள் தச்சன் அனந்தன் பாரத்துவாசன் மிகத் திகழ் கமடன் வாயு வியாக்கிரபாதன் வேதா மகத்தொழில் குண்டினன் சாத்திகன் வற்சன் வாட்களன் தீங்கு உகத்திகன் கௌசிகன் வாலிகன் உருப்பசி என்று உள்ளோர் - அகஸ்தியமுனிவர் தேவதச்சன் ஆதிசேஷன் பாரத்துவாசமுனிவர் மிகவும் விளங்காநின்ற கமடன் வாயு வியாக்கிரபாதமுனிவர் பிரமா யாகத்தொழிலைச் செய்கின்ற குண்டினன் சாத்திகன் வற்சன் வாட்களன் தீங்கைச் செய்கின்ற உகத்திகன் கௌசிகமுனிவர் வாலிகன் உருப்பசி என்று சொல்லப்பட்டவர்களும். எ - று. குளகம். (௬௨)

சித்துருக் கோசங் கண்டு சிறந்தவர் வடபா றன்னி
லத்திரி வாம தேவ னளகையோன் பிருகு மாணி
பத்திர னளன் வியாதன் பத்திரா கவனால் வேதக்
கொத்துணர்கணமன்றெய்வச்சதானந்தன்குறிகள்செய்தோர்.

(இ-ள்.) சித்து உருக் கோசம் கண்டு சிறந்தவர் - ஞானவடிவாகிய சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து பூசித்து சிறப்பையடைந்தவர்களாவார்கள்,—வடபால் தன்னில் - அக்கனகசபைக்குவடதிசையில்,—அத்திரி வாமதேவன் அளகையோன் பிருகு மாணிபத்திரன் நளன் வியாதன் பத்திராகவன் நால்வேதக் கொத்து உணர்கணமன் தெய்வச் சதானந்தன் குறிகள் செய்தோர் - அத்திரிமுனிவர், வாமதேவமுனிவர், குபேரன், பிருகுமுனிவர், மாணிபத்திரன், நளன், வியாசமுனிவர், பத்தியையுடைய இராமன், நான்கு வேதங்களின் நுட்பங்களை அறிந்த கணமன், தெய்வத்தன்மை பொருந்திய சதானந்தமுனிவர் என்னுமிவர்கள் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்தார்கள்.

எண்டரு மிவர்களன்றி யளவிலோ ரின்ன செய்தோர்
கண்டவர் பேறா லுண்மைக் கதிசிவ லிங்காம

மண்டலத் திடை வழங்கு மாதவம் புக ழிரண்டு
முண்டதனா லெல்லோர்க்கு முறுதிமற் றதின்வே றுண்டோ

(இ-ள்) ஏண் தரும் இவர்கள் அன்றி அளவு இலோர் இன்ன செய்தோர் - மதிக்கத்தக்கவர்களாகிய இவர்களேயல்லாமல் வேறும் அனேகர்கள் இவ்வாறே சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து பூசித்திருக்கிறார்கள்,—கண்டவர் பேரால் உண்மைக் கதி சிவ லிங்கநாமம் மண்டலத் திடை வழங்கும் – அச்சிவலிங்கங்களைப் பிரதிஷ்டை செய்தவர்களுடைய பேரால் அழிதலில்லாத மோக்ஷத்தைக்கொடுக்கின்ற அச் சிவலிங்கங்களுக்கு இப்பூமியினிடத்தே நாமதேயங்கள் வழங்கி வருகின்றன,—அதனால் எல்லோர்க்கும் மாதவம் புகழ் இரண்டும் உண்டு - அதனால் யாவர்களுக்கும் பெரிய தவப்பயனும் கீர்த்தியுமாகிய இரண்டும் உண்டாகும்,—அதில் உறுதி வேறு உண்டோ - அதைப்பார்க்கினும் உறுதிப் பொருள் வேறொன்றுண்டோ? இல்லை.

பெருமறை யுணர்ந்து ஞானம் பிறங்கியமுனிவ வஞ்சக்
கருநெறி மாற்றவெண்ணுங் காதலோர் செய்த வெல்லா
மொருவழி தொகுத்து ரைத்தே னுரைக்குமிச் சைவலிங்கத்
திருவுருக் கண்டிறைஞ்சிற் சிவகதி யடைத றிண்ணம்.

(இ-ள்.) பெரு மறை உணர்ந்து ஞானம் பிறங்கிய முனிவ - பெருமையாகிய வேதத்தை அறிந்து ஞானத்தினால் விளங்கிய சைமினிமுனியே?—வஞ்சக் கரு நெறி மாற்ற எண்ணும் காதலோர் செய்த எல்லாம் ஒருவழி தொகுத்து உரைத்தேன் - மாறுபாடு பொருந்திய பிறவிமார்க்கத்தை நீக்க எண்ணுகின்ற விருப்பத்தையுடைய பெரியோர்கள் பிரதிஷ்டைசெய்த சிவலிங்கங்களெல்லாவற்றையும் ஒருவாறு தொகுத்துச் சொன்னோம்,—உரைக்கும் இச் சைவ லிங்கத் திரு உருக் கண்டு இறைஞ்சில் சிவகதி அடைதல் திண்ணம் - மேற் சொல்லப்பட்ட இச்சிவலிங்கத் திருமேனிகளைத் தரிசித்து வணங்கினால் நன்மைபொருந்திய மோக்ஷத்தை அடைதல் நிச்சயமாகும். எ – று. (சரு)

அன்றியுந் தில்லை தன்னி லுறைந்தறி யாது செய்த
துன்றிய வினைக ளிந்தச் சுடர்ச் சிவ லிங்கநேச [பொன்
மொன்றிய கருத்தாற் கண்டங்கிறைஞ்சினோர்ொழிவர் செம்
மன் றுடை யார்ப்பிழைத்த றுய்த்தன்றி பாறு தன்றே.

(இ-ள்) அன்றியும் - அதுவல்லாமலும்,—இந்தச் சுடர்ச் சிவ லிங்கம் - மேற் சொல்லப்பட்ட இந்த ஒளிபொருந்திய சிவலிங்கங் களை,—நேசம் ஒன்றிய கருத்தால் கண்டு இறைஞ்சினோர் - அன்பு பொருந்திய மனத்தொடு தரிசித்து வணங்கினவர்கள்,—தில்லை தன் னில் உறைந்து அறியாது செய்த துன்றிய வினைகள் ஒழிவர் - சிதம் பரத்திலிருந்து அறியாமற்செய்த நெருங்கிய பாவங்களினின்று நீங் குவர்;—செம்பொன் மன்று உடையார்ப் பிழைத்தல் - செம்பொன் மயமாகிய கனகசபையிலெழுந்தருளி யிருக்கின்ற நடேசப்பெருமா னுக்குக் குற்றம் செய்தல்,—துய்த்து அன்றி மாறாது-அனுபவித்தா லல்லாமல் நீங்காது. எ - று. அன்று ஏ அசைகள். (௯௬)

புனிதற்குப் பிழைத்தாற் கோடி புண்ணியஞ் செய்து நீக்க
மனிதரோ வானோர் யாரோ வல்லவ ரில்லை யிந்த
நனிதரு மிலிங்கத் துக்கு ணற்சிதம் பரம்போ லோங்கு
மினியவீ ரைந்து தீர்த்தத் திலகுமச் சைவக் கங்கை.

(இ-ள்.) புனிதற்குப் பிழைத்தால் - பரிசுத்தராகிய சிவபெரு மானுக்குத் தவறு செய்தால்,—மனிதரோ வானோர் யாரோ கோடி புண்ணியஞ்செய்து நீக்க வல்லவர் இல்லை-மனிதர்களாயினும் தேவ ர்களாயினும் வேறு யாவர்களாயினும் கோடிபுண்ணியங்களைச் செய் தாலும் அக்குற்றத்தை நீக்கவல்லவர்க ளாகார்கள்;—(அதுவன்றி) நனி தரும் இலிங்கத்துக்குள் நல் சிதம்பரம் போல் - மிகவும் (மோ க்ஷத்தைச்) தரத்தக்கதாகிய சிவலிங்கங்களுக்குள் மிகுந்த புண்ணி யத்தைத் தரத்தக்க சிதம்பரலிங்கம்போல்,—இனிய ஈரைந்து தீர்த் தத்தும் இலகும் அச் சைவக்கங்கை ஓங்கும் - புண்ணியத்தைத் தர த்தக்க இப்பத்துத் தீர்த்தங்களுக்குள் (மேலாக) விளங்குகின்ற அச் சிவகங்கையானது உயர்வுடையதாகும். எ - று. (௯௭)

பத்தரா யுள்ளார் தீர்த்தப் பரிசுகேட் டாட வென்றுஞ்
சித்தமா றீர வீசன் சிவகங்கை வடிவாய் நின்று
னெத்தகை யென்கோ வீரே ழுலகத்திலெத்தீர்த் தத்து
முத்தம தீர்த்த மீது சத்திய வுரையா மன்றே.

(இ-ள்) பத்தராய் உள்ளார் தீர்த்தப் பரிசு கேட்டு - அடியார்க ளாயுள்ளவர்கள் இப்பத்துத் தீர்த்தங்களின் தன்மையைக் கேட்டு,- சித்தமால் தீர என்றும் ஆட ஈசன் சிவகங்கை வடிவாய் நின்றான் - அவ்வடியார்கள் மனமயக்க நீங்கும்படி எம்பொழுதும் ஸ்நானஞ்செ ய்யும் பொருட்டுச் சிவபெருமான் சிவகங்கைவடிவமாய் நின்றருளி

றூர்,—எத்தகை என்கோ - (ஆதலால்) இத்தீர்த்தத்தை எத்தன்மையுடையதென்று யான் சொல்லுவேன்,—ஈது ஈரேழுலகத்தில் எத்தீர்த்தத்தும் உத்தம தீர்த்தம் - இச்சிவகங்கை பதினாலுலகங்களிலுமுள்ள எல்லாத் தீர்த்தங்களிலு மேலான தீர்த்தமாகும்,—சத்திய உரையாம் - இது உண்மைவாக்காகும். எ-று. அன்று எ அசைகள்.

நற்பதி யவற்றுட் டில்லை நகர்பெரி திமையோர் தம்முட்
பொற்பொது நாதன்மிக்கோன் புவனத்துட்டீர்த்தந்தம்முண்
முற்பட வுயர்ந்த தியான்முன் மொழிசிவ கங்கை யென்று
மற்புதத் திவற்று ளொவ்வொன் றனைவர்க்கு மளிக்குமுத்தி.

(இ-ள்.) நல் பதி அவற்றுள் தில்லை நகர் பெரிது - புண்ணியத்தைத் தரத்தக்க சிவஸ்தலங்களுள் தில்லைவனமாகிய சிதம்பரஸ்தலமேமேலானது,—இமையோர் தம்முள் பொன் பொது நாதன் மிக்கோன் - தேவர்களுக்குள் அச்சிதம்பரத்திலெழுந்தருளி யிருக்கும் பொன்னம்பலவாணராகிய நடேசப்பெருமானே மேலானவர்,—புவனத்துள் தீர்த்தம் தம்முள் முன்பட உயர்ந்து யான்முன் மொழி சிவ கங்கை - உலகத்திலுள்ள புண்ணியதீர்த்தங்களுள் முதன்மைப் படும்படி உயர்ந்தது யான் முன் சொல்லிய சிவகங்கையே யாகும்,—என்றும் அற்புதத்து - எப்பொழுதும் அற்புதமுடையதாகும்,—இவற்றுள் ஒன்று ஒன்று அனைவர்க்கும் முத்தி அளிக்கும் - தலம் மூர்த்தி தீர்த்தமென்னு மிவற்றுள் ஒவ்வொன்றே எல்லாருக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கும். எ - று. (௬௧)

இத்தகை மூன்று மோர்பா லியைந்ததென் றாலடைந்தோர்
முத்தியிற் புகுவ ரென்று மொழிந்திட வேண்டு மோவிம்
மைத்த வெம் பிறப்பொழிப்போர் வருந்திய மன்று ளென்று
முத்தம னாடுந் தில்லை யுறுவதே யுறுதி யாகும்.

(இ-ள்.) இத்தகை மூன்றும் ஓர்பால் இயைந்தது என்றால் - இந்தத் தகுதிபொருந்திய தலம் மூர்த்தி தீர்த்தம் என்னு மூன்றுவிசேடமும் ஒரிடத்திற் பொருந்திய தானால்,—அடைந்தோர் முத்தியில்புகுவர் என்று மொழிந்திட வேண்டுமோ - அம்மூன்றையும் ஒருங்கடைந்தவர்கள் மோக்ஷத்தை யடைவர்கள் என்று சொல்லவும் வேண்டுமோ?—இம் மைத்த வெம் பிறப்பு ஒழிப்போர் - இந்த மயக்கத்தைத் தருகின்ற கொடிய பிறவியை நீக்க விரும்புவோர்,—உத்தமன் என்றும் ஆடும் தில்லை மன்றுள் வருந்தியும் உறுவதே உறுதியாகும் - மேலானவராகிய சிவபெருமான் எப்பொழுதும் ஆனந்த

தாண்டவஞ் செய்தருளாநின்ற தில்லையம்பலமாகிய சிதம்பரத்தில் வசிப்பதே உறுதிப்பொருளாகிய மோக்ஷமாகும். எ - று. (ரு0)

மடலவிழ் பொழில்சூழ் தில்லை மாநக ருள்ள தீர்த்தம்
படரொளிச் சைவ கோசப் பரிசிவற் றுண்மை யுன்ற
னிடமுறு காதல் கண்டங் கிசைத்தன மென்றான் ஞானச்
சுடரொரு வடிவ மான சுகன்றனைப் பயந்த தூயோன்.

(இ-ள்.) மடல் அவிழ் பொழில் சூழ் தில்லை மா நகர் உள்ள தீர்த்தம் - இதழ் விரியப் பெற்ற பூஞ்சோலையாற் சூழப்பட்ட தில்லைவனமாகிய சிதம்பரத்தின்கணுள்ள தீர்த்தங்கள்,—படர் ஒளிச் சைவ கோசப் பரிசு - விரிந்த சோதிமயமாகிய சிவலிங்கங்களின் தன்மைகள்,—இவற்று உண்மை-ஆகிய இவைகளின் உண்மைகளை,—ஞானச்சுடர் ஒரு வடிவமான சுகன் தனைப் பயந்த தூயோன் - ஞானச் செஞ்சோதியாகிய பிரமமே ஒரு வடிவமாக வந்தவதரித்த சுகப்பிரம முனிவரைப் பெற்றருளிய பரிசுத்தராகிய வியாசமுனிவர்,—உன்தன் இடம் உறு காதல் கண்டு இங்கு இசைத்தனம் என்றான் - உன்னிடத்திற் பொருந்திய விருப்பத்தைப் பார்த்து நாம் இப்பொழுது உனக்குச் சொன்னோம் என்று சொல்லியருளினார். எ - று. (ருக)

திர்த்தச்சருக்கமுற்றிற்று.

பாயிரம் உள்படச் சருக்கம் - எ - க்குத் திருவிருத்தம். ருஉரு.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது.

# திருச்சிற்றம்பலச் சருக்கம்.

தேட ரும்பலந் தரும்பெருந் தீர்த்தத்தின் பெருமை
கூடுமா றுரைத் தனமினிக் குறிக்கரி தான
வாட கஞ்செறிந் திலங்குசிற் றம்பலத் துண்மை
நீடு மாதரம் பெருகுற நிகழ்த்தலுற் றனமால்.

(இ-ள்.) தேடு அரும் பலம் தரும் பெருந் தீர்த்தத்தின் பெருமை கூடு மாறு உரைத்தனம் - தேடுதற்கரிய பலனைக் கொடுக்கின்ற பெரிய தீர்த்தத்தின் மகிமையைக் கூடியவரையிற் சொன்னோம்,— இனிக் குறிக் கரிதான ஆடகம் செறிந்து இலங்கு சிற்றம்பலத்து உண்மை - இனிமேல் நினைத்தற்கரிய பொற்பிரகாசம் பொருந்தி விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தினது மகிமையை,—நீடும் ஆதரம் பெருகுற நிகழ்த்தல் உற்றனம் - மிகுந்த ஆசையானது அதிகரிக்கும் படி சொல்லத் தொடங்கினோம். எ - று. ஆல் அசை. (க)

வாத ராயணன் புகன்றிட மகிழ்ந்து மெய்ஞ்ஞானப்
போத மாதவச் சைமினி புளகமெய் போர்ப்பத்
தாது லாவிய தாமரைத் தடங்கணீர் பொழிய
மீது கைத்தலங் குவித்தொரு வினவுரை செய்தான்.

(இ-ள்.) வாதராயணன் புகன்றிட - வியாசமுனிவர் சொல்ல,- மெய்ஞ்ஞானப் போத மாதவச் சைமினி மகிழ்ந்து - உண்மைஞானத்தையும் பெரிய தவத்தையுமுடைய சைமினிமுனிவர் மன மகிழ்ந்து,—மெய் புளகம் போர்ப்ப - சரீரமானது புளகத்தையடைய,— தாது உலாவிய தாமரைத் தடம் கண் நீர் பொழிய - மகரந்தம் பொருந்திய தாமரைமலர்போலும் விசாலமாகிய கண்களினின்றும் ஆன

ந்தபாஷ்பஞ் சொரிய,—கைத் தலம் மீது குவித்து-கைகளைத் தமது சிரசின்மேற் குவித்துக் கொண்டு நின்று,—ஒரு வினா உரை செய்தான் - ஒருவார்த்தை கேட்டார். எ - று. (உ)

நார ணன்கம லாசனன் முதலியர் நாடும்
வார ணங்குற வளர்முலை மலைமக ளுடனெங்
கார ணன்கை லைக்கிரி யுளனெனக் கழறு
மார ணங்களு மாகம பேதமு மனைத்தும்.

(இ-ள்.) நாரணன் கமலாசனன் முதலியர் நாடும் - விஷ்ணுமூர்த்தி தாமரையாசனராகிய பிரமதேவர் முதலிய தேவர்கள் தேடுகின்ற,—வார் அணங்கு உற வளர்முலை மலைமகளுடன் எம் காரணன்-கச்சுக்குத் துன்பமுண்டாகும்படி வளருகின்ற ஸ்தனங்களையுடைய உமாதேவியாரோடு எமது மூலகாரணராகிய சிவபெருமான்,—ஆரணங்களும் ஆகம பேதமும் அனைத்தும் கைலைக்கிரி உளன் எனக் கழறும் - வேதங்களும் ஆகமங்கள் பலவுமாகிய எல்லாம் திருக்கைலாசமலையி லெழுந்தருளியிருக்கின்றான் என்று சொல்லுகின்றன. ()

சொற்ற தின்னவை யன்றியுஞ் சுராதிபர் முனிவர்
மற்று முள்ளவர் யாவருங் கண்டெதிர் வணங்கப்
பெற்று மீடரக் கண்டன மெண்டகு பெரியோ
யெற்றை நாளினு முளதிதற் கில்லையா மையம்.

(இ-ள்.) எண் தகு பெரியோய் - யாவராலு மதிக்கத்தக்க பெருமை யுடையவரே,—சொற்றது இன்னவை அன்றி - சொல்லப்பட்ட இவைகளே யன்றி,—சுராதிபர் முனிவர் மற்றும் உள்ளவர் யாவரும் எதிர் கண்டு வணங்கப் பெற்று மீள்தரக் கண்டனம் - தேவர்களு முனிவர்களு மற்றுள்ள யாவர்களும் சந்நிதானத்திற் போய்த் தரிசித்து வணங்கிக்கொண்டு திரும்பிவருதலை யாங்கள் பார்த்தோம்,—எற்றை நாளிலும் உளது - அத்திருக்கைலாசமலை எக்காலத்திலும் அழிவின்றி யிருக்கும்,—இதற்கு ஐயம் இல்லை - இதற்குச் சந்தேக மில்லை. எ - று. ஆம் அசை. (ச)

அன்றி யுஞ்சிவ பரம்பர னவர தமும்பொன்
மன்றி னீடருள் வடிவமாய் மலைமகள் காணத்
தன்ற னிச்சையிற் றழைத்தவா னந்ததாண் டவமே
யென்று மொப்பறப் புரிகுவ னென்றினி திசைத்தாய்.

(இ-ள்.) அன்றியும் - இதுவல்லாமலும்,—சிவபரம் பரன்-பராபரனாகிய சிவபெருமான்,—அனவரதமும் - நாடோறும்,—பொன் மன்றில் - கனகசபையினிடத்தில்,—நீடு அருள் வடிவமாய் - மிகுந்த திருவருளே திருமேனியாகக் கொண்டு நின்று,—மலைமகள் காண - பர்வதராஜ குமாரத்தியாகிய சிவகாமியம்மையார் தரிசிக்கும் படி,—தன் தன் இச்சையில் - தனது விருப்பப்படி,—தழைத்த ஆனந்த தாண்டவம் என்றும் ஒப்பு அறப் புரிகுவன் என்று இனிது இசைத்தாய் - செழித்து விளங்காநின்ற ஆனந்த தாண்டவத்தை எப்பொழுதும் ஒப்பில்லாமற் செய்தருளுவன் என்று மகிழ்ச்சியோடு சொல்லியருளினீர். எ - று. எ அசை. (௫)

துன்று பேரரு ளுடையநீ துகளறப் புகன்ற
தென்று முண்மையே யாயினு முணர்ச்சியி னமையா
தின்றெனக் கைய மிவ்வுரை யீந்தமை தீர
வுன்ற னித்திரு வாக்கினு லுரையென வுரைத்தான்.

(இ-ள்.) துன்று பேர் அருள் உடைய நீ துகள் அறப் புகன்றது என்றும் உண்மையே ஆயினும் - மிகுந்த பெரியகிருபையையுடைய தேவரீர் குற்றம் நீங்கச் சொல்லியது எப்பொழுதும் உண்மையாயிருந்தாலும்,—இன்று எனக்கு உணர்ச்சி யின்மையால் - இப்பொழுது அடியேனுக்கு நல்லறிவில்லாமையால்,—இவ்வுரை ஐயம் ஈந்தமை தீர - தேவரீர் சொல்லிய இவ்வார்த்தையானது சந்தேகத்தைக் கொடுத்தமை நீங்கும்படி,—உன் தனித் திருவாக்கினல் உரை என உரைத்தான் - உம்முடைய ஒப்பில்லாத திருவாக்கினற் சொல்லியருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார். எ - று. (௬)

மதியி னுலுயர் சைமினி வாசகங் கேளா
வதிச யத்துட னருளொடு மகமிக மகிழ்ந்து
விதிவிடா மறை நெறியெலாம் விளம்பிய வாக்கான்
முதிரு மாதவ னிறைதிரு வருட்கடன் முயங்கா.

(இ-ள்.) மதியினல் உயர் சைமினி வாசகம் கேளா - அறிவினலுயர்ந்த சையினிமுனிவர் சொல்லிய வார்த்தையைக் கேட்டு,—அதிசயத்துடன் அருளொடும் அகம் மிக மகிழ்ந்து - ஆச்சரியத்தோடும் கிருபையோடும் மிகவும் மன மகிழ்ச்சியடைந்து,—விதிவிடா மறை நெறி எலாம் விளம்பிய வாக்கால் முதிரும் மாதவன் - விதித்து வருத வேதமார்க்கங்களெல்லாம் சொல்லிய திருவாக்கால் மேன்மையையடைந்த வியாசமுனிவர்,—நிறை திருவருள் கடல் முயங்கா - நிறைந்த திருவருளாகிய கடலிலழுந்தி. எ - று. இது குளகம். (எ)

மூல காரண மாகிய முதல்வனை முன்ன
மால நீளிலைப் பாயலோ னன்பினால் வினய
தேலு மிவ்வுரை நன்றுநீ கேட்டனை யெழில்கூர்
சில மாதவ கேளெனச் செப்பன்மே யினனால்.

(இ-ள்.) மூலகாரணம் ஆகிய முதல்வனை - மூலகாரணராகிய சிவபெருமானை,—முன்னம் ஆல நீள் இலைப் பாயலோன் அன்பினால் வினயது - முன்னொருகாலத்தில் ஆலமரத்தினது நீண்ட இலையைச் சயனமாகக் கொண்ட விஷ்ணுமூர்த்தியானவர் அன்போடு கேட்டதாகிய,—ஏலும் இவ் வுரை நீ நன்று கேட்டனை - பொருந்திய இவ்வுபதேச மொழியை நீ விரும்பிக்கேட்டாய்,—எழில் கூர் சீல மாதவ கேள் எனச் செப்பல் மேயினன் - அழகினால் மிகுந்த பரிசுத்தம் பொருந்திய பெரிய தவத்தையுடைய சைமினியே நீ கேட்பாயாக என்று சொல்லத்தொடங்கினார். எ - று. ஆல் அசை.

தெரிவ ரும்பெரு மறையெலாந்திரண்டதோவுயர்ந்தோர்
புரியு நல்லற வடிவமோ பொலிவுறு மமுதங்
கிரி யுருப்படைத் தெழுந்ததோ கிளக்குமா றென்னோ
வரி யயற்கரி யானுறை யணிக்கைலாயம்.

(இ-ள்.) அரி அயற்கும் அரியான் உறை அணிக் கைலாயம் - விஷ்ணுமூர்த்திக்கும் பிரமதேவருக்குங் காணுதற்கரியவராகிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற அழகிய திருக்கைலாசமலையானது,—தெரி வரும் பெரு மறை எலாம் திரண்டதோ - அறிதற் கரிதாகிய பெரிய வேதங்களெல்லா மொன்றாகத் திரண்டதோ?—உயர்ந்தோர் புரியும் நல் அற வடிவமோ - பெரியோர்களாற் செய்யப்பட்ட நல்ல தருமவடிவமோ?—பொலிவு உறும் அமுதம் கிரி உரு படைத்து எழுந்ததோ - பிரகாசம் பொருந்திய அமிர்தமானது மலை வடிவு பெற்று எழுந்ததோ?—கிளக்கு மாறு என்னோ - இவற்றுள் சொல்லும் விதம் யாதோ? (அறியேன்.) எ - று. (கூ)

படியி லக்கிரி விரைந்துறப் பணிந்துசெல் லிமையோர்
முடி தயங்குபொற் றொடைமிக விழ்ந்தன முயங்கு
நெடிய கோடரப் பாதவ நிறைமலர் பூத்த
கடிவி ளங்கிய கடுக்கையங் கானமே யனைய.

(இ-ள்.) படியில் அக்கிரி விரைந்து உறப் பணிந்து செல் இமையோர் முடி தயங்கு பொன் தொடை மிக வீழ்ந்தன - ஒப்பில்

லாத அத்திருக்கைலாச மலையினிடத்து விரைந்து போய் நமஸ்கரித்துச் செல்லுகின்ற தேவர்களுடைய முடிகளில் விளங்கிய பொன்னரிமாலைகள் மிகவும் வீழ்ந்து கிடத்தலானவை,—முயங்கு நெடிய கோடரப் பாதவம் நிறைபூத்த-பொருந்திய நீண்ட கிளைகளையுடைய மரங்கள் நிறையப் பூத்திருக்கின்ற,—கடி விளங்கிய கடுக்கை அம் கானமே அனைய - வாசனைபொருந்திய கொன்றை மரங்களின் அழகிய காட்டை யொத்திருக்கின்றன. எ - று. (கO)

முருகர் தாதைதன் செவித்துணை முறைமுறையன்பாற்
பருகு மாறெதிர் பாடுநர் பாட்டிசை தன்னாற்
பொருவில் வெள்ளியங் குவடுகள் புளகமோ டிளகி
யுருகி யோடல்போன் மருவுவெள் ளருவிக ளுளவால்.

(இ-ள்.) மருவு வெள் அருவிகள் - அக்கைலாசமலையிற் பொருந்திய வெள்ளிய அருவிகளானவை,—முருகர் தாதை தன் செவித்துணை முறை முறை அன்பால் பருகு மாறு - முருகக்கடவுளினது பிதாவாகிய சிவபெருமானது இரண்டு திருச்செவிகளு முறை முறை யாக அன்போடு பருகும்படி,—பாடுநர் பாட்டு இசை தன்னால் - பாடுகின்றவர்களுடைய பாட்டிசையினால்,—பொருவில் வெள்ளி அம் குவடுகள் புளகமோடு இளகி உருகி ஓடல் போல் உள - ஒப்பில்லாததாகிய (அத்திருக்கைலாசமலையிலுள்ள) வெள்ளிமயமாகிய அழகிய அம்மலைச் சிகரங்கள் புளகத்தோடு உருகி ஓடுதலை ஒத்திருக்கின்றன. எ - று. ஆல் அசை. (கக)

கங்கை யாயிர முகத்தினாற் கண்ணுதற் கலந்த
பொங்கு பேருரை பொருளெனப் பொலிந்தகா ளிந்தி
நங்கை யெண்ணிலா முகத்தின னண்ணலே போலுந்
துங்க மாமதந் திசைதொறும் பெருகிய சூழல்.

(இ-ள்.) சூழல் - அத்திருக்கைலாசமலைச்சாரலில்,—துங்க மா மதம் திசை தொறும் பெருகிய - உயர்ச்சி பொருந்திய யானையின் மதநீரானது திக்குகள் தோறும் பெருக்கெடுத் தோடுவன,—கங்கை ஆயிர முகத்தினால் கண்ணுதல் கலந்த பொங்கு பேர் உரை - கங்கையானவள் ஆயிரமுகங்களினால் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைச் சேர்ந்தாளென்று சொல்லுகின்ற பொலிவு பொருந்திய பெரியவார்த்தையை,—பொருள் எனப் பொலிந்த காளிந்தி நங்கை - சகிக்கமாட்டாளென்று சொல்லும்படி விளங்குகின்ற யமுனையென்னும் பெண்ணானவள்,—எண் இலா முகத்தினால் நண்ணலே போ

னும் - அளவில்லாத மூகங்களோடு அச்சிவபெருமானைச் சேர்தலை யொத்திருந்தன. எ - று. (கஉ)

கடிகொ ணெய்தல்செங் கமலங்க ணிரைநிரை கலந்த
நெடிய வான்சுனை யுமையிறை நிகர்த்திடும் பவளக்
கொடிப டர்ந்தவெண் சிகரியிற் குதிகொள்பே ரருவி
யடிகள் வேணியுங் கங்கையு மனையசில் லிடங்கள்.

(இ-ள்.) சில் இடங்கள் - அத்திருக்கைலாச மலையினது சிலவிடங்களில்,— கடி கொள் நெய்தல் செங்கமலங்கள் நிரை நிரை கலந்த நெடிய வான் சுனை - வாசனைபொருந்திய நீலோற்பல மலர்களும் செந்தாமரை மலர்களும் வரிசை வரிசையாகக் கலந்து ஓங்கின்ற நீண்டபெரிய சுனைகளானவை,—உமை இறை நிகர்த்திடும் - உமாதேவியாரையும் சிவபெருமானையு மொத்திருக்கும்,—பவளக் கொடி படர்ந்த வெள் சிகரியில் குதிகொள் பேர் அருவி - பவளக் கொடிகள் படர்ந்திருக்கின்ற அம் மலையினுச்சியிலிருந்து குதித்தோடுகின்ற பெரிய அருவிகளானவை,—அடிகள் வேணியும் கங்கையும் அனைய - சிவபெருமானுடைய ஜடையையும் அச்சடையிலிருக்கின்ற கங்கையையு மொத்திருக்கின்றன. எ - று. (கங)

பாக சாதனன் கடவுளர் பணிமதிக் கைலை
நாக மீதகல் வெள்ளிடை நண்ணிநண் ணரிய
மாக மூடுற வளர்கரி கிரிபாற் கடல்வாய்
மேக சாலங்க ளுலாவிய வியப்பினை நயக்கும்.

(இ-ள்.) பாகசாதனன் கடவுளர் பணியும் அக் கைலை நாக மீது - தேவேந்திரனுந் தேவர்களும் வணங்குகின்ற அத் திருக்கைலாசமலையின்மேல்,—அகல் வெள் இடை நண்ணி நண் அரிய மாகம் ஊடு உற வளர் கரி கிரி - பரந்த வெளியிடத்திற் பொருந்தி அடைதற்கரிதாகிய ஆகாயத்தை யளாவும்படி வளருகின்ற யானைகளும் மூங்கில்களும்,—பாற் கடல் வாய் மேக சாலங்கள் உலாவிய வியப்பினை நயக்கும் - திருப்பாற்கடலினிடத்தே மேக கூட்டங்கள் சஞ்சரிக்கின்ற மேன்மையை யொத்திருக்கும். எ - று. (கச)

விஞ்சு வெண்பளிக் ககலிடை விரும்பரம் பையர்செம்
பஞ்சு தோய்பதச் சுவடுசெம் பதுமமென் றயன்று
முஞ்சு னைக்கணு மலரொழித் தளிகண்மொய்ப்பனபார்த்
திஞ்சொ லன்னவர் குறுநகை வளமுறு மொருசார்.

(இ-ள்.) ஒரு சார் - அம்மலையினோர்பக்கத்தில்,—விஞ்சு வெள் பளிக்கு அகல் இடை விரும்பு அரம்பையர் - மேம்பட்ட வெள்ளிய பளிங்குக் கற்களாலாகிய அகன்ற இடத்தில் விருப்பத்தோடிருக் கின்ற தெய்வப் பெண்களினது,—செம்பஞ்சு தோய் பதச் சுவடு - செம்பஞ்சுக் குழம்பு தோயப்பெற்ற பாதச்சுவட்டை,—அளிகள் - வண்டுகளானவை,—அயல் சூழ் அம் சுனைக்கண் ஆர் அலர்ஒழித்து- பக்கத்திற் சூழ்ந்திருக்கின்ற அழகிய சுனையினிடத்துப் பொருந்திய பூக்களைவிட்டு விட்டு,—செம்பதுமம் எனமொய்ப்பன்-செந்தாமரை மலரென்று நினைத்து மொய்ப்பனவாம்,—இஞ்சொல் அன்னவர் பார்த்து வளம் குறுநகை உறும் - இனியசொற்களையுடைய அத் தெய்வப் பெண்கள் பார்த்து அழகுபொருந்திய புன்சிரிப்பைக் கொள்ளுவார்கள். எ - று. (கரு)

இறுதி யில்லவற் றொழக்கிரி யெழுந்தவெண் சுடர்மேற்
குறுகி மீண்டெழும் விண்ணவர் விமானகோ டிசடா
முறுகு மூழிநாட் பெருங்கடன் மூழ்கியு முதித்து
மறுவி லாதவ ரிரதமேல் வயங்குவ போலும்.

(இ-ள்.) அக்கிரி எழுந்த வெள் சுடர் - அத்திருக்கைலாச மலை மேலெழுந்த வெள்ளிய கிரணங்களானவை,—இறுதி இல்லவன் தொழ - முடிவில்லாதவராகிய சிவபெருமானை வணங்குதற்கு,— மேல் குறுகி மீண்டு எழும் விண்ணவர் விமான கோடிகள் - மேலே சமீபித்துத் திரும்பி எழும்பி வருகின்ற தேவர்களுடைய அநேக விமானங்கள்,—முறுகும் ஊழி நாள் பெரும் கடல் மூழ்கியும் உதித்தும் மறுவு இலாதவர் இரதம் மேல் வயங்குவ போலும் - கொதித் தெழுகின்ற ஊழிக்காலத்திற் பெருகிய சமுத்திரத்தி லழுந்தியும் பின் தோன்றியும் அதனாற் கெடுதலில்லாதவர்களாகிய தேவர்கள் இரதங்கள்மேற் பிரகாசித்துக்கொண்டிருத்தலை யொக்கும். எ - று.

வயங்கு மண்டமே லக்கிரி யொளியெழன் மார்பிற்
புயங்க னம்பிகைக் கன்புசெய் வதுபொருள் வேணி[ன்
யியங்கு கங்கையாள்பிறந்தகத்தெழுதல்போன்றிடும்வா
முயங்கு தாரகை யந்த நீர் மொக்குளே யொக்கும்.

(இ-ள்.) வயங்கும் அண்டம்மேல் அக்கிரி ஒளி எழல் - பிரகா சிக்கின்ற ஆகாயத்திற்கு மேல் அத்திருக்கைலாச மலையின் ஒளியா னது வீசுதல்,—மார்பில் புயங்கன் அம்பிகைக்கு அன்பு செய்வது - மார்பினிடத்தே சர்ப்பத்தை ஆபரணமாகத் தரித்திருக்கின்ற சிவபெ

ருமான் உமாதேவியாரிடத்து அன்புவைத்தொழுகுதலை,—வேணி இயங்கு கங்கையாள் பொருள் - அச்சிவபெருமானுடைய ஜடையினிடத்தே பொருந்திய கங்கையானவள் சகிக்கமாட்டாதவளாய்,—பிறந்த அகத்து எழுதல் போன்றிடும் - தாம்பிறந்த இடத்திற்கு எழுந்து போகுதலை யொத்திருக்கும்,—வான் முயங்கு தாரகை - ஆகாயத்திற் பொருந்திய நக்ஷத்திரங்கள்,—அந்த நீர் மொக்குளே ஒக்கும் - அக்கங்காஜலத்தின் குமிழியை யொத்திருக்கும். எ - று. (கஎ)

வீடி லாப்பெருங் கடவுளர் விமானமொன் றேடொன்
றூடு தாக்கிய முழக்கமு மொடுங்க மேல்கிளரும்
கோடு காட்டிய முகனிகர் குஞ்சர முழக்கந்
தேடு வாற்கரி யானுறை திருமலைச் சூழல்.

(இ-ள்.) தேடும் மாற்கு அரியான் உறை திருமலைச் சூழல் - தேடுகின்ற விஷ்ணுமூர்த்திக்குங் காணுதற் கரியவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற அத்திருக்கைலாசமலையின் சாரலில்,—கோடு காட்டிய முகன் நிகர் குஞ்சர முழக்கம் - கொம்புகள் வெளியேதோன்றும்படிப் பொருந்திய முகத்தையுடையதாரகாசுரனை யொத்த யானையினதுசத்தமானது,—வீடு இலாப் பெருங் கடவுளர் விமானம் - அழித லில்லாதவர்களாகிய பெரிய தேவர்களுடைய விமானங்கள்,—ஊடு ஒன்று ஓடு ஒன்று தாக்கிய முழக்கமும் ஒடுங்க மேல் கிளரும் - மத்தியில் ஒன்றோடொன்று மோதுதலினாலுண்டாகின்ற சத்தமுங் கீழ்ப்படும்படி மிகுந்தொலிக்கும். எ - று. (கஅ)

கோடுகாட்டியமுகன் என்பதற்கு விநாயகக்கடவுளென்றுதல் கயமுகாசுரனென்றுதல் பொருள்கொள்ளினும் பொருந்தும்.

விடை யுயர்த்தவற் றொழுதெழும் விண்ணவர் மகுடத்
தொடையு மாலய ரூர்தியிற் றுதைந்துநீர் சிறகுங்
கடவு ளீசனூர் குஞ்சரக் களிமதச் சுவடு
மிடைவி டாதன வக்கிரி யெழில்வழி யெல்லாம்.

(இ-ள்.) அக்கிரி எழில் வழி எல்லாம் - அத்திருக்கைலாசமலையினது அழகிய வழிகளெல்லாம்,—விடை உயர்த்தவன் தொழ எழும் விண்ணவர் மகுடத் தொடையும் - ரிஷபத்தைக் கொடியாக வுயர்த்திய சிவபெருமானை வணங்கும் பொருட்டு எழுந்து செல்லுந் தேவர்களுடைய மகுட கூட்டங்களும்,—மால் அயர் ஊர்தியில் துதைந்து நீர் சிறகும் - விஷ்ணு பிரமாக்களுடைய வாகனங்களாகிய கருடன் அன்னம் என்னும் இரண்டு பக்ஷிகளும் நெருங்கி வரு

தலால் உதிர்ந்து கிடக்கின்ற சிறகுகளும்,—கடவுள் ஈசன் உளர் குஞ்சரக் களிமதச் சுவடும் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் ஏறிச் செலுத்துகின்ற வெள்ளையானையினது களிப்பைத் தருகின்ற மதம்பாய்ச் சுவடும்,—இடைவிடாதன-இடைவிடாமலிருக்கின்றன.

அண்டர் நாயகற் பணிதரக் காலமென் றணைந்து
கண்ட பேர்புகன் மொழிவருங் கடவுளர் செங்கை
முண்டகங் கட்கு முகவன சங்கட்கு முமதி
கொண்ட பேரொளி யிரவியோ குவிந்தலர்ந் தனவால்.

(இ-ள்.) அண்டர் நாயகன் பணிதரக் காலம் என்று அணைந்து கண்ட பேர்கள் - தேவநாயகனாகிய சிவபெருமானை வணங்குதற்கேற்ற கால மிதுவென்று வந்து தரிசித்தவர்கள்,—கடவுள் செம்கை முண்டகங்கட்கும் முகவனசங்கட்கும் - (அவ்விடத்துள்ள) தேவர்களது சிவந்த கைகளாகிய தாமரைமலர்கள் குவிந்திருத்தற்கும் முகங்களாகிய தாமரை மலர்கள் மலர்ந்திருத்தற்கும்,—கொண்ட - (சிவபெருமானது திருமுகமண்டலத்தை யிடமாகக்) கொண்ட,—மு மதி பேர் ஒளியோ இரவி பேர் ஒளியோ - பூரணைச்சந்திரனது பெரிய ஒளியினாலோ? சூரியனது பெரிய ஒளியினாலோ?—குவிந்து அலர்தன் - குவிந்தன அலர்ந்தன எ - று. ஆல் அசை. (உ0)

பேர் ஒளி என்பதையும், ஐய ஒகாரத்தையும் மதியென் பதனோடுங் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.

சிவபெருமானது திருமுகத்தின்கண் சோம சூரியர்களுடைய ஒளி விரவிக் காணப்படுதலால், எவ்வொளியினால் குவிதலு மலர்தலு முண்டானதோ? என ஐயத்திற் கிடமுண்டாயிற்று.

மு மதி என்பது - முமதியென விகாரமாயிற்று.

அடியி றைஞ்சிமீள் கடவுள ரமலனின் றெம்பான்
முடி துளக்கினன் பார்த்தனன் முகமலர்ந் தன்னோர்
படி யிலாமொழி பகர்ந்தனன் மகிழ்ந்தன னென்னு
நெடிய பேரொலி மறையொலி சிறிதென நிமிரும்.

(இ-ள்.) அடி இறைஞ்சி மீள் கடவுளர் - சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு திரும்பிவருகின்ற தேவர்கள்,—அமலன் இன்று எம்மால் முடி துளக்கினன் - மலமுத்தராகிய சிவபெருமான் இப்பொழுது எங்களுக்குச் சிரக்கம்பஞ் செய்தருளினார்,—பார்த்தனன் - திருவருணோக்கஞ் செய்தருளினார்,—முகமல

ர்ந்தனன் - திருமுகமலர்ந்தருளினர்,—படியிலா மொழி பகர்ந்தனன் - ஒப்பில்லாத திருவார்த்தைகள் சொல்லியருளினர்,—மகிழ்ந்தனன் என்னும் நெடிய பேர் ஒலி - சந்தோஷகரங்கொண்டருளினர் என்று (ஒருவரோடொருவர்) பேசிக்கொள்ளுகின்ற மிகுந்த பெரிய சத்தமானது,—மறை ஒலி சிறிது என நிமிரும் - வேதஓசை சிறிது என்று சொல்லும்படி மிகுந்தொலிக்கும். எ - று. (உக)

கருது நாரத ராதியர் கானயா ழிசையுஞ்
சுருதி யோசையு மந்தர துந்துபி முழக்கு
முருகு மெய்த்தவத் தடியவர் சிவாகமத் தொலியு
மருவு மேற்கட லோதையின் வளர்ந்தெழு நாளும்.

(இ-ள்.) கருது நாரதர் ஆதியர் கான யாழ் இசையும் - தியானிக்கத்தக்க நாரதர் முதலிய முனிவர்களாற் பாடப்படுகின்ற இசை பொருந்திய வீணையினோசையும்,—சுருதி ஓசையும் - வேதாத்தியயன ஓசையும்,—அந்தர துந்துபி முழக்கமும் - தேவதுந்திபியினோசையும்,—உருகும் மெய்த்தவர் சிவாகமத்து ஒலியும் - மனமுருகுகின்ற உண்மையாகிய தவத்தினையுடைய முனிவர்களது சிவாகம ஓசையும்,—மருவும் எழ் கடல் ஓதையின் நாளும் வளர்ந்து எழும் - பொருந்திய சத்த சமுத்திர ஓசையினும் நாள்தோறு மிகுந்தொலிக்கும். ()

உலகி னுள்ளன வொளியெலா மோரிடத் தெய்தி
யிலகு கோபுர மண்டபந் தெற்றிக ளெயில்க
ளலகின் மாளிகை சூளிகை யாயின வென்னக்
குலவு கின்றவக் கிரியினெம் பரம்பரன் கோயில்.

(இ-ள்.) அக்கிரியின் எம் பரம் பரன் கோயில் - அத்திருக்கைலாச மலையினிடத்துள்ள எமது சிவபெருமானது ஆலயத்தில்,—உலகின் உள்ளன ஒளி எலாம் ஓர் இடத்து எய்தி - உலகங்களிலுள்ள பிரகாசங்களெல்லாம் ஓரிடத்தில் வந்தடைந்து,—இலகு கோபுரம் - விளங்காநின்ற திருக்கோபுரங்களும்,—மண்டபம் - மண்டபங்களும்,—தெற்றிகள் - தெற்றியம்பலங்களும்,—எயில்கள் - திருமதில்களும்,—அலகில் மாளிகை - அளவில்லாத மாளிகைகளும்,—சூளிகை-மதிலுறுப்புக்களும் ஆகிய இவைகளினிடத்து,—ஆயின என்னக் குலவுகின்ற - உண்டாயிருக்கின்றன வென்று சொல்லும்படி பொருந்துகின்றன. எ - று. (உங)

அண்ட கோளகைப் பரப்பெலா மலர்கதிர் பரப்புஞ்
சண்ட சூரிய ரளவிலார் சாரினங் கவர்முன்

கண்ட தாரகைக் கணமென வொளிகெடல் சோதி
கொண்ட மண்டப மொன்றதக் கோயிலி னுளதால்,

(இ-ள்.) அக்கோயிலின் - அத்திருக்கைலாசத்தினிடத்திலுள்ள ஆலயத்தில்,—கோளகை யண்டப் பரப்பெலாம் அலர் கதிர் பரப்பும் சண்ட சூரியர் அளவு இலார் சாரின் - வட்டமாகிய அண்டப்பரப்புக்களெல்லாவற்றினும்விரிந்த கிரணங்களை வீசுகின்ற உக்கிரமாகிய சூரியர்களனேகர்களடைந்தால்,—அங்கு அவர் முன் கண்ட தாரகைக் கணம் என - அப்பொழுது அச் சூரியர்களுடைய சந்நிதியிற் றோன்றிய நக்ஷத்திர கூட்டங்கள் ஒளிமழுங்குதல் போல்,—ஒளிகெட்ச் சோதி கொண்ட மண்டபம் ஒன்றது உளது - (அச்சூரியர் முதலானவர்களுடைய) பிரகாசமு மழுங்கும்படியான மிகுந்த பிரகாசத்தைக் கொண்டிருக்கின்ற மண்டபமொன்றிருக்கின்றது. எ - று. ()

இன்ன பேரொளி யின்னதொப் பெனவிசைக் கரிய
வன்ன மண்டப மன்பர்தம் முள்ளமோ வேதச்
சென்னி யோவறி யோமதிற் றிகழரி யணைமேற்
றன்னை நேருமை யுடனருட் டலைவன்வீற் றிருந்தான்.

(இ-ள்.) இன்ன பேர் ஒளி இன்னது ஒப்பு என இசைக்க அரிய - இந்த மண்டபத்தினது பெரிய ஒளியானது இன்னதற்குச் சமானமென்று சொல்லுதற்கரிய,—அன்னமண்டபம் - அந்தமண்டபமானது,—அன்பர் தம் உள்ளமோ - அடியார்களுடைய இருதயமோ?—வேதச் சென்னியோ அறியோம் - வேதங்களின் சிரசோ? அறியோம்;—அதில் திகழ் அரி அணை மேல் - அம்மண்டபத்தில் விளங்குகின்ற சிம்மாசனத்தின்மேல்,—தன்னை நேர் உமை உடன் அருள் தலைவன் வீற்றிருந்தான் - தனக்குத்தானே ஒப்பாகிய உமாதேவியாரோடு கிருபை பொருந்திய சிவபெருமான் எழுந்தருளியிருந்தார். எ - று. (உ௫)

அடர்ந்த தாலவட் டங்களு மொலியலு மசையத்
தொடர்ந்த வீசணி கோலெழச் சுடர்முடிக் கங்கைத்
தடந்திரைக்கொழுந்தெழுந்துவீழ்தகையெனப் பாசங்
கடந்த தொண்டர்சண் மருங்குறக் கவரிமே லிரட்ட.

(இ-ள்.) அடர்ந்த தாலவட்டங்களும் ஒலியலும் அசைய - நெருங்கிய விசிறிகளும் ஒலியலும் அசையவும்,—தொடர்ந்து வீசு அணி கோல் எழ - பிடித்து வீசுகின்ற அழகிய காம்புகள் எழும்படியாகவும்,—சுடர் முடிக் கொழுந்து தடம் திரைக் கொழுந்து எழு

ந்து வீழ் தகை என்-சோதிசொரூபராகிய அச்சிவபெருமானுடைய திருமுடியிலுள்ள கங்கையினது பெரிய அலைக்கொழுந்தானது மேலெழும்பிக் கீழேவிழுகின்ற தன்மைபோல்,—பாசம் கடந்த தொண்டர்கள் மருங்கு உறக் கவரிமேல் இரட்ட - பாசத்தினின்று நீங்கிய அடியார்கள் (சிவபெருமானது) பக்கத்திற் பொருந்தும்படி சாமரங்களை மேலே வீசவும். எ-று. இதுமுதல் கரு பாடல் குளகம்.

தோட லர்ந்தபொன் னிதழியந் தொங்கலுந் திங்கட்
கோட லர்ந்தவெண் சோதியுங் கொடும்பணிச் சுடிகை
மாட லர்ந்தசெம் மணிகளுங் கங்கையும் பவளக்
காட லர்ந்தெனச் சடாடவிக் கதிர்திசை விளங்க.

(இ-ள்.) தோடு அலர்ந்த பொன் இதழியம் தொங்கலும் - இதழ்விரியப்பெற்ற பொன்னிறம்பொருந்திய கொன்றைப்பூமாலையும்,-கோடு திங்கள் அலர்ந்த வெண் சோதியும் - வளைவாகிய சந்திரனிடத்திருந்து விரிந்த வெள்ளிய பிரகாசமும்,—கொடும் பணிச் சுடிகை மாடு அலர்ந்த செம்மணிகளும் - கொடிய சர்ப்பங்களின் உச்சியினிடத்திருந்துண்டாகிய சிவந்த இரத்தினங்களும்,—கங்கையும் - கங்கையும்,—பவளக் காடு அலர்ந்தென சடாடவிக் கதிர் - பவளக்காடானது விரிந்தாற்போன்ற சடைக்காடுகளுமாகிய இவைகளின் கிரணங்கள்,—திசை விளங்க-அஷ்ட திக்குகளிலும் பிரகாசிக்கவும் (உஎ)

மீது சாத்திய விளம்பிறை விளங்கிய தவளச்
சோதி தாக்கிய தெனநுதற் புண்டரஞ் சுடர
மாது பார்த்துள மகிழ்தர வயங்குசெங் கனிவாய்ப்
போது பூத்தபுன் முறுவலுஞ் செவ்வியும் பொலிய.

(இ-ள்.) மீது சாத்திய இளம் பிறை - திருமுடியின்மேலணிந்த மூன்றாம்பிறையினது,—விளங்கிய தவளச் சோதி தாக்கியது என நுதல் புண்டரம் சுடர - பிரகாசிக்கின்ற வெண் சோதியானது படிந்ததென்று சொல்லும்படி திருநுதலிலணிந்த திரிபுண்டரம் பிரகாசிக்கவும்,—மாது பார்த்து உளம் மகிழ்தர - உமாதேவியார்தரிசித்து மனமகிழ்ச்சியடையவும்,—வயங்கு செங்கனிவாய்ப் போது பூத்த புன் முறுவலும் - விளங்காநின்ற சிவந்த கொவ்வைக்கனிபோன்ற திருவாயாகிய மலரினிடத்துண்டாகிய திருப்புன்முறுவலும்,—செவ்வியும் - அழகும்,—பொலிய - பிரகாசிக்கவும். எ - று. (உஅ)

செழுங்க திர்க்கருங் கொடியெனப் புரூரங்க டிகழ
மொழிந்த பேரொளி யிடைவிடா தடையுமுச் சுடர்வந்

தெழுந்த லர்ந்தசெந் தாமரை யெனவரு ளெவர்க்கும்
பொழிந்தி டுந்திரு நயனமும் வதனமும் பொலிய.

(இ-ள்.) செழும் கதிர்க் கரும் கொடி எனப் புருவங்கள் திகழ - செழிய ஒளிபொருந்திய கருங்கொடி போலப் புருவங்கள் பிரகாசிக்கவும்,—மொழிந்த பேர் ஒளி இடைவிடாது அடையும் முச்சுடர் வந்து எழுந்து அலர்ந்த செந்தாமரை என-சொல்லப்பட்ட பேரொளியானது இடைவிடாமற் பொருந்திய சோம சூரியாக்கினி யென்னும் முச்சுடர்களும் வந்து உதையமானகாலத்தில் மலர்ந்த செந்தாமரை மலர் போல,—எவர்க்கும் அருள் பொழிந்திடும் திருநயமும் வதனமும் பொலிய - யாவர்களுக்குங் கிருபையைப் பாலிக்கின்ற திருநேத்திரங்களுந் திருமுகமும் பிரகாசிக்கவும். எ - று. (உகூ)

பேதி யாவொளிப் பரிதியர் பன்னிரு பெயரு
மேதி லுற்பவித் தாரிவற் றன்றியென் றிசைக்குஞ்
சோதி வீசிய காதிடைக் குண்டலச் சுடர்க
ளாதி வாண்முகத் தாமரைக் கயலொளி யெறிப்ப.

(இ-ள்.) பேதியா ஒளிப் பரிதியர் பன்னிரு பெயரும் - வேறுபடாத ஒளியையுடைய சூரியர்கள்பன்னிருவரும்,—இவற்று அன்றி இவர் எதில் உற்பவித்தார் என்று இசைக்கும் சோதி வீசிய காதிடைக்குண்டலச் சுடர்கள் - இவைகளிடத் தல்லாமல் இச் சூரியர்கள் எதி லுற்பவித்தார்களென்று சொல்லும்படி ஒளியை வீசாநின்ற திருச்செவிகளினிடத்துள்ள குண்டலங்களாகிய சூரியர்கள்,—ஆதி வாள் முகத் தாமரைக்கு அயல் ஒளி எறிப்ப - சிவபெருமானது ஒளிபொருந்திய திருமுகத்தாமரைமலருக்குப் பக்கத்தில் ஒளியை வீசவும். எ - று. (௩0)

அண்டம் யாவையு மளித்தருள் கண்டமு மணிகண்
மண்டு மேருவுஞ் சிறிதென வளர்புய நான்குந்
துண்ட வெண்பிறை நுதற்றிருத் துணைமுலைச் சுவடு
கொண்ட சாந்தணி மார்பமு மாரமுங் குலவ,

(இ-ள்.) அண்டம் யாவையும் அளித்தருள் கண்டமும் - அண்டங்களெல்லாவற்றையுங் காத்தருளிய திருக்கண்டமும்,—மணிகள் மண்டு மேருவும் சிறிது என வளர் புயம் நான்கும் - இரத்தினங்கள் நெருங்கியிருக்கின்ற மகாமேருவுஞ் சிறிதென்று சொல்லும்படி பருத்து வளருகின்ற நான்கு திருப்புயங்களும்,—துண்ட வெண்

பிறை நுதல் திருத்துணை முலைச் சுவடு கொண்ட சாந்து அணி மார்பமும் ஆரமும் குலவ - தண்டமாகிய வெள்ளிய மூன்றும் பிறையைப் போன்ற நெற்றியையுடைய உமாதேவியாரது அழகிய இரண்டாகிய ஸ்தனத்தழும்பு அழுந்தப்பெற்ற சந்தனத்தை யணிந்த திருமார்பும், அதிலணிந்திருக்கின்ற முத்துமாலையும் விளங்கவும், ()

வரத முந்திக ழபயமும் வயங்குறத் தயங்கும்
பரசு மானுடன் பங்கயச் செங்கை மீதொளிர
விரவு பேரொளித் தமனிய வாடைமேல் விளங்க
விரவி யெண்ணில ரிருப்பெனச் சேவடி யிலங்க.

(இ-ள்.) வரதமும் திகழ் அபயமும் வயங்குற - வரதாஸ்தமும் விளங்காநின்ற அபயாஸ்தமும் பிரகாசிக்கவும்,—மானுடன் தயங்கும் பரசும் பங்கயச் செங்கை மீது ஒளிர - மானும் பிரகாசிக்கின்ற மழுவும் செந்தாமரை மலர்போன்ற சிவந்த திருக்கரங்களிற் பிரகாசிக்கவும்,—விரவு பேர் ஒளித்தமனிய ஆடை மேல் விளங்க - பொருந்திய பெரிய ஒளியையுடைய பீதாம்பரமானது திருமேனியிற் பிரகாசிக்கவும்,—இரவி எண்ணிலர் இருப்பு எனச் சேவடி இலங்க - சூரியர்கள் அளவில்லாதவர்களுடைய வாசஸ்தானமென்று சொல்லும்படி சிவந்த திருவடிகள் பிரகாசிக்கவும். எ - று. (கூஉ)

வாட்ட முந்துமாற் கரும்பணி வடிவமு மாற்றி
நாட்ட முந்தருங் களிற்றணி வதனநா யகனுந்
தோட்ட ருந்துழாய் வராகமித் தூநில மெடுத்த
கோட்டை முன்பறித் தருளயிற் குமரனுஞ் சூழ.

(இ-ள்) வாட்டம் முந்து மாற்கு பணி அரும் வடிவமும் மாற்றி - வாட்ட மேம்பட்ட விஷ்ணுமூர்த்திக்கும் வணங்குதற்கரிய திருவுருவங்களை நீக்கி,—நாட்டமுந் தரும் அணி களிற்று வதன நாயகனும் - திருவருணோக்கத்தைத்தருகின்ற அழகியயானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளும்,—தோடு அரும் துழாய் வராகம் இத் தூநிலம் எடுத்த கோட்டை முன் பறித்தருள் அயில் குமரனும் சூழ - இதழ்களையுடைய அரிய துளபமாலையை யணிந்த விஷ்ணுமூர்த்தியாகிய பன்றியினது, இப்பரிசுத்தமாகிய பூமியை மேலெடுத்த கொம்பை முன்னே பறித்தருளிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளும் பக்கத்திற் சூழவும். எ - று. (கூகூ)

மிடைந்த வைம்பொறி வென்றருள் விளைவினு லுருகி
யுடைந்த வுள்ளமும் விழிசொரி வெள்ளமு முலகுந்

கடந்த செய்கையுங் கம்பமும் புளகமு நீறு
மடைந்த மேனியு முடையமெய் யடியவர் மகிழ.

(இ-ள்.) மிடைந்த ஐம்பொறி வென்று - நெருங்கிய பஞ்சேந்திரியங்களையுஞ் செயித்து,—அருள் விளைவினால் உருகி - கிருபையானது உண்டாகின்றமையால் மனமுருகி,—உடைந்த உள்ளமும் - நெகிழ்ந்த மனமும்,—விழி சொரி வெள்ளமும்-கண்களிடத்திலிருந்து சொரிகின்ற சிவானந்தக்கண்ணீரினது வெள்ளமும்,—உலகும் கடந்த செய்கையும்-பிரபஞ்சவாழ்க்கையைக் கடந்த செய்கையும்;- கம்பமும் புளகமும் நீறும் அடைந்த மேனியும் உடைய மெய் யடியவர் மகிழ - கம்பிதமும் புளகமும் திருநீறும் பொருந்திய திருமேனியையுமுடைய மெய்யடியார்கள் மகிழ்ச்சியடையவும். எ - று. (கூச

சடைவி ளங்கிய மவுலியுந் தடம்புய நான்கும்
விடமி லங்கிய கண்டமும் விழியொரு மூன்று
முடைய நாயக னுவந்துறை யுள்ளமும் படைத்துத்
தொடரு மன்புறு கணநிபர் தொகுதிகள் சூழ.

(இ-ள்.) விளங்கிய சடை மௌலியும் - விளங்காநின்ற ஜடாமுடியும்,—தடம் புயம் நான்கும் - விசாலமாகிய நான்கு திருப்புயங்களும்,—விடம் இலங்கிய கண்டமும் - ஆலகாலம் விளங்கிய திருக்கண்டமும்,—விழி யொரு மூன்றும் - திரிநேத்திரங்களும்,— உடைய நாயகன் உவந்து உறை உள்ளமும் படைத்து - ஆகிய இவைகளையுடைய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருக்கத்தக்க உள்ளத்தையும் பெற்று,—தொடரும் அன்பு உறு கணநிபர் தொகுதிகள் சூழ - சம்பந்தமாகிய அன்புபொருந்திய சிவகண நாதர்களுடைய கூட்டங்கள் சூழவும். எ - று. (கூடு)

நடம லர்ப்பதத் தருள்பெறு நந்தியெம் பெருமான்
சுடர்ம லர்க்கரப் பிரம்பினாற் சுரர்கணத் தொகுதி
யிடைநெ ருங்குபு நீக்கிநின் றிலகுகோ புரத்துக்
கடையி னிற்பவர் பெயரெதிர் கைகுத் தியம்ப.

(இ-ள்.) நட மலர்ப் பதத்து அருள் பெறு எம் நந்திப் பெருமான் - திருநிருத்தஞ் செய்தருளாநின்ற நடேசமூர்த்தியினது செந்தாமரை மலர்போன்ற திருவடியினது கிருபையைப் பெற்ற எமது திருநந்திதேவரானவர்,—சுடர் மலர்க் கரப் பிரம்பினால் - ஒளிபொருந்திய செந்தாமரை மலர்போன்ற திருக்கரத்திலுள்ள வேத்திரப்

படையினால்,—இடை நெருங்குபு சார் கணத்தொகுதி நீக்கி கை குவித்து எதிர் நின்று - மத்தியில் நெருங்கிய தேவகணங்களின் கூட்டங்களை விலக்கி கைகளை அஞ்சலியாகக்குவித்துக் கொண்டு சந்நிதானத்தில் நின்று,—இலகு கோபுரத்துக் கடையில் நிற்பவர் பெயர் இயம்ப - விளங்குகின்ற திருக்கோபுரவாசலுக்குக்கடைசியில் நிற்கின்றவர்களுடைய பெயர்களை எடுத்துச் சொல்லவும். எ-று. ()

படைத்த வின்னன படைப்பதாய் நினைவவின் னணீ
யடைத்த வித்தொழிற் காவன வருளுதி யளியார்
விடைத்த னிக்கொடி யாயென விழுந்தெழுந் திறைஞ்சா
நடைத்தி கழ்ந்தமா மறைகொண்டு நான்முகன் பரவ.

(இ-ள்) நான் முகன் - நான்குதிருமுகங்களையுடைய பிரமதேவரானவர்,—இன்னன படைத்த - அடியேனால் இதுவரையும் இன்ன இன்ன ஜீவன்கள் படைக்கப்பட்டன,—இன்னன படைப்பதாய் நினைவ - இன்ன இன்ன ஜீவன்கள் படைப்பதாய் நினைத்திருக்கப்படுவன,—அணி ஆர் தனி விடைக் கொடியாய் - அழகு பொருந்திய ஒப்பற்ற ரிஷபக் கொடியையுடையவரே,—நீ அடைத்த இத்தொழிற்கு ஆவன அருளுதி என விழுந்து இறைஞ்சா எழுந்து - அடியேனுக்கு ஒப்படைத்த இப்படைத்தற் றொழிலுக்கு ஆகவேண்டுவனவற்றைக் கட்டளையிட்டருளுக வென்று கீழேவிழுந்து நமஸ்கரித்து எழுந்து,—நடைத் திகழ்ந்த மாமறை கொண்டு பரவ - வாசகரூபமாய் விளங்குகின்ற பெரிய வேதவாக்கியங்களாற் றோத்திரஞ் செய்யவும். எ - று. (கூஎ)

அரக்க ராற்றலுந் தயித்திய ராற்றலு முலகிற்
றுரக்கு மாற்றலுள் ளனவெலாந் துரந்துநின் னருளாற்
புரக்கு மாறெலாம் புரந்திடா நின்றன யாவுங்
கரக்கு நாதவென் றச்சுதன் கைகுவித் திசைப்ப.

(இ-ள்) அரக்கர் ஆற்றலும் - இராக்ஷதர்களுடைய வலிமையையும்,—தயித்தியர் ஆற்றலும் - அசுரர்களுடைய வல்லமையையும்,—உலகில் துரக்கும் ஆற்றல் உள்ளன எல்லாம் துரந்து - உலகத்தில் நீக்கத்தக்க வலிமைகளா யுள்ளனவாகிய எல்லாவற்றையு நீக்கி,—நின் அருளால் புரக்கும் ஆறு எலாம் புரந்திடா நின்றனன் - தேவரீரது திருவருளாற் காக்கத் தக்க வழிகளெல்லாஞ் சென்று காத்தற் றொழிலைச் செய்து கொண்டிருக்கின்றேன்,—அருளால் கரக்கும் நாத என்று அச்சுதன் கை குவித்து இசைப்ப - கிருபையால்

மறைந்து நின்றருளுகின்ற தலைவரே என்று விஷ்ணுமூர்த்தி கைக ளைக் குவித்துத் தோத்திரஞ் செய்யவும். எ - று. (௬அ)

நின்றன ணியாவுங் கரக்குநாத எனவும் பாடம்.

முற்று மாகிய திருவுரு முழுதையும் பாராக்
கொற்ற வெற்பினிற் சிறகினைக் குறைத்தும்வாய் மடித
லற்ற வச்சிரன் மலர்பொழிந் தாயிரங் கண்கள்
பெற்ற பேறெலாம் பெற்றுமுன் பணிந்தனன் பெருக.

(இ-ள்.) கொற்ற வெற்பினில் சிறகினைக் குறைத்தும் வாய் மடிதல் அற்ற வச்சிரன் - வெற்றிபொருந்திய மலைகளினது சிறகு களை அறுத்தும் முனை மழுங்குதலில்லாத வச்சிராயுதத்தை யுடைய தேவேந்திரன்,—முற்றும் ஆகிய திருவுரு முழுதையும் பாரா - (சித சித்து என்னும் பிரபஞ்சம்) முழுதுந் தாமாகிய திருவுருவ முழுதை யும் பார்த்து,—மலர் பொழிந்து - புட்ப மாரி பொழிந்து,—ஆயிரங் கண்கள் பெற்ற பேறு எலாம் பெருகப் பெற்று - தாம் ஆயிரங்கண் கள் பெற்றதனால் பெறும் பேறுகளை எல்லாம் மிகவும் பெற்று,— முன் பணிந்தனன் - சந்நிதானத்தில் நமஸ்கரித்தான். எ - று. (௬௯)

தணிவி லச்சமோ டந்தக னிறைஞ்சிடச் சலதி
மணிக டூவினன் வருணன் முன் வணங்குற மார்பி
னணிபி றழ்ந்தன திருத்தநின் றளகையர் கோனும்
பணிய மற்றைய நால்வரு மிறைஞ்சினர் பரவ.

(இ-ள்.) அந்தகன் தணிவு இல் அச்சமோடு இறைஞ்சிட - இய மனானவன் நீங்காத அச்சத்தோடு வணங்கவும்,—வருணன் சலதி மணிகள் முன் தூவினன் வணங்குற - வருணனானவன் சமுத்திரத் திலுள்ள முத்து முதலிய இரத்தினங்களைக் கொண்டுவந்து சந்நிதா னத்தில் அர்ச்சித்து வணங்கவும்,—அளகையர் கோனும் மார்பின் அணி பிறழ்ந்தன திருத்த நின்று பணிய - அளகாபுரிக்கு அரசனா கிய குபேரனும் மார்பினிடத்திலுள்ள ஆபரணங்கள் புரண்டு கிடப் பனவற்றைச் செவ்வையாக்கும்படி நின்று வணங்கவும்,—மற்றைய நால்வரும் தாழ்ந்தனர் பரவ - இவர்களொழிந்த அக்கினி நிருதி வாயு ஈசான னென்னும் நால்வர்களும் வணங்கினவர்களாய் நின்று துதி க்கவும். எ - று. (௭0)

அந்த மொன்றுமில் லாதவ னணிந்தவெண் ணீறுஞ்
சுந்த ரங்களுக் குறைபுளாந் துகளிலா வடிவுந்

தந்த பேரொளிப் பெருமையாற் றம்மொளி மழுங்கு
மிந்து சூரிய ரிருமருங் கிறைஞ்சிநின் றேத்த.

(இ-ள்.) அந்தம் ஒன்றும் இல்லாதவன் அணிந்த வெள் நீறும் - முடிவில்லாதவராகிய சிவபெருமான் அணிந்திருக்கின்ற வெள்ளிய விபூதியும்,—சுந்தரங் களுக்கு உறையுளாம் துகள் இலா வடிவும் - அழகுகளுக்கு இருப்பிடமாகிய குற்றமில்லாத திருவுருவமுமாகிய இவைகள்,—தந்த பேர் ஒளிப் பெருமையால் - கொடுத்த பெரிய ஒளியினது மிகுதியினால்,—தம் ஒளி மழுங்கும் இந்து சூரியர் இரு மருங்கு இறைஞ்சி நின்று எத்த - தங்கள் பிரகாசங்கள் குறைந்த சந்திர சூரியர்கள் இரண்டு பக்கத்தும் வணங்கி நின்று துதிக்கவும்.

பெருத்த வெம்பவப் பிணிக்கொரு மருந்தெனப் பேணி
மருத்து வாதிப ரிருவரும் வணங்கினர் பரவ
வருத்தி கூருமெண் வசுக்களு மகங்குழைந் தேத்த
வுருத்தி ராதிப ரவர்பதி னொருவரு மிறைஞ்ச.

(இ-ள்.) மருத்து ஆதிபர் இருவரும் - தேவமருத்துக்களிருவரும்,—பெருத்த வெம்பவப் பிணிக்கு ஒரு மருந்து எனப் பேணிவணங்கினர் பரவ - மிகுந்த கொடிய பிறவிப்பிணிக்கு ஒப்பில்லாத மருந்தென்று விரும்பி வணங்கினவர்களாய்த் துதிக்கவும்,—அருத்தி கூரும் எண் வசுக்களும் அகம் குழைந்து எத்த - அன்புமிகுந்த அஷ்டவசுக்களும் மனங்கரைந்து துதிக்கவும் - உருத்திராதிபர் அவர் பதினொருவரும் இறைஞ்ச - உருத்திரர்களுக்குத் தலைவராகிய எகாதசருத்திரர்களும் வணங்கவும். எ - று. (௪௨)

கின்ன ராதிபர் தொழுதெழக் கிம்புரு டேசர்
சென்னி தாழ்த்திட மாதவர் சித்தர்கள் போற்றப்
பன்ன காதிபர் பணிந்தெழச் சாரணர் பரவ
வின்ன போற்பதி னெண்கணத் தேனைய ரிறைஞ்ச.

(இ-ள்.) கின்னராதிபர் தொழுது எழ - கின்னரர்களுக்குத்தலைவர்களாயுள்ளவர்கள் நமஸ்கரித்து எழும்பவும்,—கிம்புருட ஈசர் சென்னி தாழ்த்திட - கிம்புருடர்களுக்குத் தலைவர்களாயுள்ளவர்கள் சிரசால் வணங்கவும்,—மாதவர் சித்தர்கள் போற்ற - பெரிய தவத்தையுடைய முனிவர்களுஞ் சித்தர்களும் துதிக்கவும்,—பன்னக அதிபர் பணிந்து எழ - நாகராஜாக்கள் வணங்கி எழவும்,—சாரணர் பரவ - சாரணர்கள் துதிக்கவும்,—இன்னபோல் எனைப் பதினெண் கணத்தவர் இறைஞ்ச - இவைகள் போல் மற்றப் பதினெண்கணத்தவர்களும் வணங்கவும். எ - று. (௪௩)

இலங்கு மேழிசை யாழெடுத் தியாவரு முருகத்
துலங்கு நாரதர் தும்புரு முதலியர் பாட
வலங்கன் மாமணி யணிகல னணிந்தபொற் கொடிபோ
னலங்கொள் பூண்முலை யரம்பையர் நாடகம் புரிய.

(இ-ள்.) துலங்கும் நாரதர் தும்புரு முதலியர் இலங்கும் எழ் இசை யாழ் எடுத்து யாவரும் உருகப் பாட - விளங்குகின்ற நாரதர் தும்புருவர் முதலானவர்கள் பிரகாசம் பொருந்திய சப்த சுரங்களோடு கூடிய வீணையை எடுத்து யாவர்களும்மனமுருகும்படி இசைப்பாட்டைப் பாடவும்,—நலம் கொள் பூண் முலை அரம்பையர் அலங்கல் மா மணி அணிகலன் அணிந்த பொன் கொடி போல் நாடகம் புரிய - அழகு பொருந்திய ஆபரணங்களையணிந்த முலைகளையுடைய தெய்வப்பெண்கள் மாலைகளையும் பெரிய இரத்தினங்களாற் செய்யப்பட்ட ஆபரணங்களையு மணிந்த பொற் கொடிபோல நின்று நிருத்தஞ் செய்யவும். எ - று. (சச)

முகந்த பாடலை யாடலை முழவினை தொலியைத்
திகழ்ந்து வந்துமங் கவர்பெறத் திருமுக மலர்ந்து
மிகந்த ஞானமா தவர்க்கரு ளெழின்மறைப் பயன்கள்
பகர்ந்து மாமலை மடந்தையைப் பன்முறை பார்த்தும்.

(இ-ள்) முகந்த பாடலை ஆடலை முழவினது ஒலியைத் திகழ்ந்து உவந்தும் - விரும்பத்தக்க பாடல்களையும் ஆடல்களையும் மத்தள ஓசையையும் அறிந்து மகிழ்ந்தும்,—அங்கு அவர் பெறத் திருமுகம் மலர்ந்தும் - அவ்விடத்துள்ளவர்கள் பயனடையும்படி திருமுகமலர்ச்சியை யடைந்தும்,—இகந்த ஞான மாதவர்க்கு அருள் எழில் மறை பயன்கள் பகர்ந்தும் - பிரபஞ்ச ஆசையை வெறுத்த ஞானத்தையுடைய முனிவர்களுக்கு உபதேசிக்கத்தக்க அழகிய வேதங்களின் பொருள்களைப் போதித்தும்,—மலை மடந்தையைப் பன்முறை பார்த்தும் - பர்வதராஜ குமாரத்தியாகிய உமாதேவியாரைப் பலமுறை பார்த்தருளியும். எ - று. (சரு)

இலகு வானவர் முனிவர ரிவர்முதற் கணங்க
ளலகி லாதவ ரவரவர் விரும்பின வளித்து
மலரு ளானெடு மான்மக வானிவர் வினவ
வுலக வாழ்க்கைக்கு வேண்டுவ வுவந்தருள் செய்தும்.

(இ-ள்.) இலங்கு வானவர் முனிவரர் இவர் முதல் கணங்கள் அலகிலாதவர் அவர் விரும்பின அளித்தும் - விளங்காநின்ற தேவர்

கள் முனிவர்கள் முதலாகிய சிவகணங்கள் அளவில்லாதவர்கள் அவ ரவர்கள் விரும்பியவற்றைக்கொடுத்தருளியும்,—மலர் உளான் நெடு மால் மகவான் அவர் உலக வாழ்க்கைக்கு வேண்டுவன வினவ - தாம ரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவர் விஷ்ணுமூர்த்தி தேவேந் திரன் முதலானவர்கள் தங்கள் தங்கள் உலகவாழ்க்கைக்கு வேண்டு வனவற்றைக் கேட்க,—உவந்து அருள் செய்தும் - அவர்களுக்கு மகிழ்ச்சியோடு வேண்டுவனவற்றைக் கொடுத்தருளியும். எ - று. ()

அருகி ருந்தருண் முருகவே ளமுதுகு மழலைத்
திருமொழிக் குள மகிழ்வுறத் திருச்செவி தாழ்த்துந்
தருண வாதபத் தண்டையந் தாள்படத் திருமெய்
யுருகி யும்புயந் தழுவியு முவப்புட னகைத்தும்.

(இ-ள்.) அருகு இருந்தருள் முருகவேள் அமுது உகும் மழ லைத் திருமொழிக்கு உளம் மகிழ்வு உறத் திருச்செவி தாழ்த்தும் - தமது பக்கத்திலிருக்கின்ற முருகக்கடவுளுடைய அமிர்தம் போல் சொரிகின்ற அழகிய மழலைச் சொல்லுக்கு மனமகிழ்ச்சி பொருந்த திருச்செவிகொடுத்தும்,—தருண ஆதபத் தண்டை அம் தாள் படத் திருமெய் உருகியும் புயம் தழுவியும் உவப்புடன் நகைத்தும் - இள ஞ்சூரியனையொத்த தண்டையை அணிந்த அழகிய அம் முருகக்கட வுளது திருவடியானது தமது திருமேனியிற்பட்ட மாத்திரத்தில் மனமுருகியும் புயத்திற் றழுவியும் சந்தோஷத்துடன் திருப்புன்மு றுவல் செய்தும். எ - று. (சஎ)

துன்று பேரருட் கடலிருந் தருளிய தோற்ற
மென்ற னாவினு லுரைத்திடற் கரியதவ் வெல்லை
நின்ற மாதவ னிருந்தரு ணிமலனை யிறைஞ்சி
யொன்று ணர்த்துவ துளதென வுரைத்தன்மே யினனுல்

(இ-ள்.) துன்று பேர் அருள் கடல் இருந்தருளிய தோற்றம் என்றன் நாவினுல் உரைத்திடற்கு அரியது - நெருங்கிய பெரிய கிருபாசமுத்திரமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திரு வோலக்கத்தை யென்னுடைய நாவினுல் சொல்லுதற்கரிதா யிருக் கின்றது;—அவ்வெல்லை - அப்பொழுது,—நின்ற மாதவன் - அவ் விடத்தில் நின்ற விஷ்ணுமூர்த்தியானவர்,—இருந்தருள் நிமலனை இறைஞ்சி - அங்கெழுந்தருளி யிருக்கின்ற மலமுத்தராகிய சிவபெ ருமானை வணங்கி,—உணர்த்துவது ஒன்று உளது என உரைத்தன்

மேயினன் - தேவரீருக்கு அடியேன் அறிவிக்க வேண்டிய விண்ணப்பமொன்றிருக்கின்றதென்று சொல்லத் தொடங்கினர். எ - று. () ஆல் அசை.

வே று.

அண்டமளவ வற்றனவு மவ்வண்டத் தெல்லையிலா வணுவுமோங்கக், கொண்டதிரு வருள்சுரந்து கோமளவல் லியுநீயுங் குலவாநின்ற, வெண்டகைய கைலைவரை யென்றுமினி துறைகின்று யென்று நாதச், சண்டமறை பலகோடி யெண்ணரிய சிவாகமமுஞ் சாற்று நிற்கும்.

(இ-ள்.) அண்டம் அளவு அற்றனவும் அவ் அண்டத்து எல்லையிலா அணுவும் ஓங்கத் திருவருள் சுரந்து கொண்ட கோமள வல்லியும் நீயும் - அண்டங்கள் பலவும், அவ்வண்டங்களிலுள்ள அளவில்லாத அணுவும் உயரும்படியாகத் திருவருள் சுரக்கப்பெற்ற அழகிய கொடிபோன்ற உமாதேவியாருந் தேவரீரும்,—குலாவாநின்ற எண் தகைய கைலைவரை என்றும் இனிது உறைகின்றாய் என்று - பொருந்தியிராநின்ற மதிக்கத்தக்க திருக்கைலாசமலையில் எப்பொழுது இனிதாக வீற்றிருக்கின்றீர் என்று,—சண்ட நாத மறைப்பலகோடி எண் அரிய சிவாகமமும் சாற்று நிற்கும் - வேகத்தோடு ஒலிக்கின்ற வேதங்கள் பலவும் அளவிடுதற்கரிய சிவாகமங்களுஞ் சொல்லுகின்றன. எ - று. (சுக)

பொன்மயமா கியசடிலப் புனிதபரம் பரனன்றிப் புகலொணுத, சின்மயவம் பரமாகித் திகழ்தில்லை யம்பலத்துச் சிந்தைக்கெய்தா, நின்மயமிக் கானந்த நிருத்தமன வரதமுநீ நீங்கா யென்னுந், தன்மையது தெரியும்வகை யடியேற்குப் பேரருளாற் சாற்று கென்றான்.

(இ-ள்.) பொன் மயம் ஆகிய சடிலப் புனித - பொற்பிரகாசம் பொருந்திய சடையையுடைய பரிசுத்தரே!—புகலொணுத சின்மய அம்பரம் ஆகித் திகழ் - சொல்லமுடியாத ஞானகாசமாய் விளங்குகின்ற,—தில்லையம்பலத்து - தில்லைவனத்தின்கணுள்ள சபையினிடத்தில்,—நீ - தேவரீர்,—சிந்தைக்கு எய்தா நின்மய மிக்கு ஆனந்த நிருத்தம் நீங்காய் என்னும் தன்மையது - மனதுக் கெட்டாத தேவரீரது அழகு மிகுந்த ஆனந்த தாண்டவம் எப்பொழுது நீங்காதுசெய்தருளுகின்றீர் என்னுந் தன்மையை,—அடியேற்குத் தெரியும் வகை பேர் அருளால் சாற்றுக என்றான் - அடியேனுக்குத் தெரியும்படி

மிகுந்த கிருபையோடு திருவாய் மலர்ந்தருளவேண்டு மென்று (விஷ்ணுமூர்த்தியானவர்) விண்ணப்பஞ்செய்தார். எ - று. (ருo)

வேதநான் முகன்றிகழும் விரிஞ்சனுதவிய வெழிலான் மிகுந்த வண்ட, நாதனாகிய திருமா லுரைசெய்த மொழி கேளா ஞானானந்த,போதனாய்ப் பரையாதி விருப்பறிவு தொழிலாயிப் புவனம் பெற்றாள், காதனா யகனுள்ள மகிழ்ந்து திரு வாய்மலர்ந்தான் கருணை கூர.

(இ-ள்.) வேத நான்முகன் திகழும் விரிஞ்சன் உதவிய எழிலால் மிகுந்த அண்ட நாதனாகிய திருமால் உரை செய்த மொழி - வேதத்தையறிந்த நான்கு முகங்களையுடையவரும் விளங்காநின்ற விரிஞ்சனென்னும் திருநாமத்தையுடையவருமாகிய பிரமதேவராற் சிருஷ்டிக்கப்பட்ட அழகினால்மிகுந்த அண்டங்களுக்குத் தலைவராகிய விஷ்ணுமூர்த்தி விண்ணப்பஞ் செய்த வார்த்தையை,—ஞான ஆனந்த போதனாய் - ஞானானந்தத்தைப் போதிப்பவராய்,—பரை ஆதி விருப்பு அறிவு தொழிலாய் இப்புவனம் பெற்றாள் காதல் நாயகன் கேளா-பராசத்தி முதலாகிய இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி ரூபமாயதிட்டித்து நின்று இப்புவனங்களைப்பெற்றருளிய உமாதேவியாரால் விரும்பப்பட்ட நாயகரா யெழுந்தருளியிராநின்ற சிவபெருமான் கேட்டருளி,—கருணை கூர உள்ளம் மகிழ்ந்து திருவாய் மலர்ந்தான் - கிருபைமிகும்படி திருவுளமகிழ்ந்து திருவாய்மலர்ந்தருளினார். எ - று. (ருக)

கேட்டவுரை மிக்குய்ய நாற்பொருளு மடைவுபெறக் கேட்டு ளோரும், வேட்டதுவு மிலையாமு முரைத்ததுவு மிலை யெவர்க்கும் விளம்பொ ணாது, நாட்டமல ரளித்தென்பா லன்புடையார் களினுன்னி னுட்ட யாவர், தோட்டலர்சூழ் துழாய்முகிலே யாதலினு லதுநினக்குச் சொல்ல லாகும்.

(இ-ள்.) தோட்டு அலர் சூழ் துழாய் முகிலே - இதழ்கள் விரியப்பெற்ற துளபமாலையணிந்த மேகவர்ணனாகிய விஷ்ணுவே,—கேட்ட உரை - நீ கேட்ட வார்த்தையானது,—மிக்கு உய்ய நாற்பொருளும் அடைவு பெறக் கேட்டுளோரும் - மிகவும் உய்யும்படி சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு பொருள்களையும் கிரமப்படி கேட்ட சனகர் முதலிய முனிவர்களும்,—வேட்டதுவும் இலை - விரும்பிக் கேட்கவுமில்லை,—யாம் உரைத்ததுவும் இலை - யாம் ஒருவருக்குஞ் சொல்லவுமில்லை,—எவர்க்கும் விளம்பொணாது-

அது ஒருவருக்குஞ் சொல்லவுங் கூடாது;—நாட்ட மலர் அளித்து என் பால் அன்பு உடையார்களில் உன்னின் நாட்ட யாவர் - கண்க ளாகிய மலர்களைக் கொண்டு நம்மை அர்ச்சித்து நம்மிடத்து அன்பு டையவர்களில் உன்னைப்பார்க்கினும் யாவரிருக்கின்றார்,--ஆதலினால் அது நினக்குச் சொல்லல் ஆகும் - ஆகையால் அதை உனக்குச் சொல்லத் தகும். எ - று. (௬உ)

அறையளவின் மூவகையா ருயிர்க்கெல்லா மாருயிரா யனந்த மாகிக், குறைவகல வெங்கண்ணு மெஞ்ஞான்று நிறை ந்தியல்பாய்க் குலவா நின்றே, மறைமொழியா கமம்புகன்ற வெல்லையிலாப் பகிரண்ட வருக்கந் தன்னி, லிறையுமெமை யன்றியொரு பொருளுமிலை யீதுண்மை யிசைக்குங் காலை.

(இ-ள்.) அறை அளவில் - சொல்லுமிடத்து,—மூவகை ஆர் உயிர்க்கு எல்லாம் ஆர் உயிராய் - தேவர் மனிதர் நரகர் என்னும் மூவகையாக நிறைந்த ஆன்மாக்களுக்கெல்லாம் பரமான்மாவாய்,—அகண்டமாகி - கண்டிக்கப்படாததாய்,—குறைவு அகல எங்கண்ணும் எஞ்ஞான்றும் நிறைந்து இயல்பாய்க் குலவா நின்றேம் - குறைவு நீங்க எவ்விடத்தும் எந்நாளும் வியாபித்து இயல்பாகப் பொருந்தி நிற்கின்றேம்,—மறை மொழி ஆகமம் புகன்ற எல்லை இலாப் பகிரண்ட வருக்கம், தன்னுள் இறையும் எமை அன்றி ஒரு பொருளும் இலை -வேதவாக்கியங்களாலும் ஆகமங்களாலுஞ் சொல்ல ப்பட்ட அளவில்லாதபகுப்புக்களையுடைய அண்டப்பகுதிகளுள்ளே கொஞ்சமும் எம்மையன்றி யாதொரு பொருளுமில்லை,—இசைக்கு ங்காலை இது உண்மை - சொல்லுமிடத்து இது உண்மையாகும். ()

உலகமெலாம் விளக்கமுற வுலகமெலாம் புகழ்ந்தேத்து முதய பானு, குலவுபெருங் கிரணங்கள் பரப்பிமிக நிறைந்தி லங்குங் கொள்கை போல, வலமுறவெங் கணுமாக நிறைந் திருப்ப மாயிடினு மண்டந் தன்னுட், சிலபொருளின் மிகவிள ங்கிச் சிலபொருளிற் சிறிதிலங்கிச் சிறந்து நிற்போம்.

(இ-ள்.) உலகம் எலாம் விளக்கம் உற உலகம் எலாம் புகழ்ந்து எத்தும் உதய பானு - உலகங்களெல்லாம் பிரகாசத்தை யடையும் படிக்கும் உலகத்தார்களெல்லாம் புகழ்ந்து துதிக்கும்படிக்கும் உதய மாகின்ற சூரியனானவன்,—குலவு பெரும் கிரணங்கள் பரப்பி மிக நிறைந்து இலங்கும் கொள்கை போல - பொருந்திய கிரணங்களைப் பரப்பிக்கொண்டு மிகவும் நிறைந்து பிரகாசிக்கின்ற தன்மையைப்

போல்,—வலம் உற எங்கணும் ஆக நிறைந்து இருப்பம் ஆயிடினும்- வெற்றிபொருந்தராம் எவ்விடத்து நிறைந்திருப் போயினும்,—அண்டம் தன்னுள் சில பொருளின் மிக விளங்கிச் சில பொருளிற் சிறிது இலங்கிச் சிறந்து நிற்போம் - அண்டங்களிடத்துள்ள சில பொருள்களில் மிகப்பிரகாசித்தும் சிலபொருகளிற் சிறிது பிரகாசித்தும் சிறப்புற்று நிற்போம். எ - று. (௩௪)

ஆதபன்றன் சுடரெங்கு நிறைந்தாலுங் ககனத்தி லரிது காண்டற், கோதுமுயர் பாதவங்க டன்னில்விளக் கந்திகழு முரைக்கு மந்தப், பாதவங்க டன்னிலுநற் றருப்பணத்தி லொளி தழைக்கும் பகரா நின்ற, கோதிறருப் பணந்தனிலும் படிகத்தி னுருவின்மிகக் குலவுஞ் சோதி.

(இ-ள்.) ஆதபன் தன் சுடர் எங்கும் நிறைந்தாலும் ககனத்தில் காண்டற்கு அரிது - சூரியனுடைய ஒளியானது எவ்விடத்திலு நிறைந்திருந்தாலும் ஆகாயத்திற் காணுதல் அரிது;—ஓதும் உயர் பாதவங்கள் தன்னில் விளக்கம் திகழும் - சொல்லப்பட்ட உயர்வாகிய மரங்களில் பிரகாச மிகவுண்டாகும்,—உரைக்கும் அந்தப் பாதவங்கள் தன்னிலும் நல் தருப்பணத்தில் ஒளி தழைக்கும் - சொல்லப்படுகின்ற அந்த மரங்களைப் பார்க்கினும் நல்ல கண்ணாடியில் மிகுந்த ஒளியுண்டாகும்,—பகராநின்ற கோதில் தருப்பணந் தனிலும் படிகத்தினுருவின் சோதி மிகக் குலவும் - சொல்லப்படுகின்ற குற்றமற்ற கண்ணாடியைப் பார்க்கினும் படிகத்திற் பிரகாசமிகவுண்டாகும். எ - று. (௩௫)

ஒளிருமுப லந்தனிலும் பருதிகாந் தந்தன்னி லுவமை யில்லாத், தெளிவுதிகழ் குருச்சுடரும் வெம்மையு முண்டாகு மலர்ச்செந்தேன் காலு, மளிமருவு துழாயலங்கற் கேசவநம் பேருருவு மதுவே போல, விளிவுமகிழ் விசந்துறையு நெறியறிவி லலைவகல விளங்கு வாயால்.

(இ-ள்.) ஒளிரும் உபலம் தனிலும் பரிதி காந்தந் தன்னில் உவமை இல்லாத் தெளிவு திகழ் குருச் சுடரும் வெம்மையும் உண்டாகும் - விளங்காநின்ற அப்படிகக் கல்லைப்பார்க்கினும் சூரிய காந்தத்தினிடத்தில் ஒப்பில்லாத தெளிவுபொருந்திய நிறத்தையுடைய பிரகாசமும் வெப்பமுமுண்டாகும்;—மலர்ச் செந்தேன் காலும் அளி மருவு துழாய் அலங்கல் கேசவ - சிவந்த பூந்தேனைச் சொரிகின்ற வண்டுகள் பொருந்திய துளபமாலையையணிந்த விஷ்ணுவே,—

அதுவே போல் - அதுபோல,—நம் பேர் உருவும் இளிவு மகிழ்வு இகந்து உறையும் - நம்முடைய பெரிய வடிவமும் இகழ்ச்சியையும் மகிழ்ச்சியையுங் கடந்து வசிக்கும்,—நெறி அறிவில் அலைவு அகல விளங்குவாய் - உண்மைமார்க்கத்தை யறியும் உனது அறிவினால் உன்மனதிலுள்ள திரிபு நீங்க அறிந்துக் கொள்ளக்கடவாய். எ - று. ஆல் அசை. (கூசு)

எங்குநிறைந் திருந்தாலு மெமையொருவ ரீதென்ன
வெண்ண மாட்டா, ரங்கிதுவே யியல்பென்று மாயிடினு நில
மாக்க ளன்பாற் செய்த, தங்குசிவ லிங்கத்தி னெமைக்காண
லாகுமது தன்னைப் பற்றத், துங்கநெறித் தவர்கண்ட சிவகோ
சந் தனின்மிகவுஞ் சுடரா நிற்போம்.

(இ-ள்.) எங்கும் நிறைந்து இருந்தாலும் எம்மை ஒருவர் ஈது என்ன எண்ணமாட்டார் - நாம் எவ்விடத்தும் சர்வவியாபியாய் நிறைந்திருந்தாலும் எம்மை ஒருவரும் இன்னதன்மையுடையனென்று நினைக்கமாட்டார்கள்,—என்றும் இதுவே இயல்பு ஆயிடினும் - எப்பொழுதும் இதுவே இயல்பாயிருந்தாலும்,—நில மாக்கள் அன்பால் செய்த தங்கு சிவலிங்கத்தின் எமைக் காணலாகும் - பூமியிலுள்ள மனிதர்கள் அன்போடு ஸ்தாபனஞ் செய்து நாம் தங்கியிருக்கக் கூடிய சிவலிங்கத்தில் எம்மைத் தரிசிக்கலாகும்,—அது தன்னைப் பற்றத் துங்க நெறித் தவர் கண்ட சிவகோசம் தனில் மிகவும் சுடரா நிற்போம்-அதைப் பார்க்கினும் உயர்வாகிய சன்மார்க்கத்தையுடைய முனிவர்களால் தாபிக்கப்பட்ட சிவலிங்கத்தில் மிகவும் விளங்காநிற்போம். எ - று. அங்கு அசை. (கூஎ)

செறியுநெறித் தவர்கண்ட வருட்சிவகோ சந்தனிலுந்
திகழ்ச யம்புக், குறியினிடை மிகவிளக்கங் கொண்டிருப்ப
மச்சயம்புக் குறியிற் பார்க்கப், பொறிமருவு திருமார்ப
புண்டரிக புரப்பொதுவிற் போதந்தன்று, லறிவரிய பரவிள
க்க முடனுறைது மறையுமிதற் கைய மின்றால்.

(இ-ள்.) பொறி மருவு திருமார்ப - இலக்ஷுமிபொருந்திய மார்பையுடைய விஷ்ணுவே,—செறியும் நெறித் தவர் கண்ட அருட் சிவ கோசம் தனிலும் திகழ் சயம்புக் குறியினிடை மிக விளக்கங் கொண்டிருப்பம் - மிகுந்த சன்மார்க்கத்தையுடைய முனிவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட கிருபையையுடைய ஆருடலிங்கத்தைப்பார்க்கிலும் விளங்காநின்ற சுயம்புலிங்கத்தினிடத்தில் மிகவும் விளங்கிக்கொ

ண்டிருப்போம்,—அச் சுயம்புக் குறியிற் பார்க்க புண்டரிகப் புரப் பொதுவில் போதம் தன்னால் அறிவு அரிய பரவிளக்கம் உடன் உறைதும் - அச்சுயம்புலிங்கத்தைப் பார்க்கினும் புண்டரீக புரமெ ன்று சொல்லப்பட்ட சிதம்பரத்தினிடத்துள்ள கனகசபையில் ஞானத்தினாலு மறிதற்கரிய மேலான பிரகாசத்தோடு வீற்றிருப் போம்,—அறையும் இதற்கு ஐயம் இன்று - சொல்லப்பட்ட இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. எ - று, ஆல் அசை. (நிஅ)

சொற்பயிலு மொழியுண்மை யுண்மையரு ளுருவாகித் துகளொன் றில்லாப், பொற்படரு மானந்தப் பொது விடத் தின் மிகவிளங்கும் பொலிவுமன்றி, யற்புதமா மானந்த மெம க்குண்டா மாதலினா லச்சபைக்குச், சிற்பரவா னந்தசபை யெனுநாம மெஞ்ஞான்றுந் திகழா நிற்கும்.

(இ-ள்.) சொல் பயிலும் மொழி உண்மை - சொல்லப்பட்ட இவ்வார்த்தை உண்மையாகும்,—உண்மை அருள் உருவாகித் துகள் ஒன்று இல்லா பொன் படரும் ஆனந்தப் பொதுவிடத்தில் மிக விள ங்கும் பொலிவு அன்றி - உண்மைபொருந்திய கிருபாரூபமாய் யாதொ ருகுற்றமுமில்லாத பொற்பிரகாசம் பொருந்தி ஆனந்தமயமாய் விளங்காநின்ற கனகசபையினிடத்தில் மிக விளங்கிக்கொண்டிருக் கும் பிரகாசமேயல்லாமல்,—அற்புதமாம் ஆனந்தம் எமக்கு உண் டாம் - ஆச்சரியகரம் பொருந்திய மகிழ்ச்சியானது எமக்குண்டா கும்,—ஆதலினால் அச்சபைக்கு பர ஆனந்த சிற் சபை எனும் நாமம் எஞ்ஞான்றும் திகழா நிற்கும் - ஆகையால் அக்கனகசபை க்கு மேலான ஆனந்தத்தை விளைக்கின்ற சிற்சபை என்னுந் திருநா மம் எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்கும். எ - று. (நிக)

தனதெனது தவிர்ந்தருளே சார்ந்துடையோ ருளக்க மலந் தன்னி னீங்காக், கனகசபை போலெமக்கு விளக்கமுட னானந்தங் கதிக்க நல்க, வினதெனவே றோரிடமு மிலையதனா லற்புதத்தோ டிசைந்து கூற, வனவரத வானந்த தாண்ட வமே புரிந்தங்கு னமரா நின்றோம்.

(இ-ள்.) தனது எனது தவிர்ந்து அருளே சார்ந்து உடையோர் உளக் கமலம் தன்னில் நீங்காக் கனகசபை போல் - அகங்கார மமகா ரங்களை விட்டுக் கிருபையைப் பொருந்தின ஞானிகளுடைய இருத யகமலத்தை விட்டு நீங்காத கனகசபையைப்போல்;—எமக்கு விள க்கமுடன் ஆனந்தம் கதிக்கநல்க இனதெண வேறு ஓரிடமும் இலை-

எமக்குப் பிரகாசத்தோடு மகிழ்ச்சியை மிகவும் கொடுக்க இதைப் போல வேறோரிடமு மில்லை;—அதனால் அற்புதத்தோடு இசைந்து கூற அனவரத தாண்டவமே புரிந்து அங்ஙன் அமரா நின்றோம் - அத்தன்மையினால் நாம் ஆச்சரியத்தோடு பொருந்தி யாவருந் துதிக்கும்படி எப்பொழுதுந் திருநிருத்தத்தைச் செய்து கொண்டு அவ்விடத்தில் நாம் வீற்றிருக்கின்றோம், எ - று. (௬0)

செங்கதிரின் பேரொளிக்குத் திவாகராகாந் தங்களகஞ் சேர்த லின்றிப், பொங்குதலா லுறக்காந்தி பொலியுமா றுதவியது போல வுண்மை, தங்குபொது வானந்த வடிவான தன்மையாற் றன்பாற் றங்கு, மெங்குநிறை யெமக்குமிகு விளக்கமுட னானந்த மென்று நல்கும்.

(இ-ள்.) செங்கதிரின் பேர் ஒளிக்குத் திவாகர காந்தங்கள் அகம் சேர்தலின்றிப் பொங்குதலால் - சூரியனுடைய பெரிய ஒளியினாலே சூரியகாந்தங்கள் உள்ளடங்குதலில்லாமல் மிகுதலால்,— காந்தி உறப் பொலியுமாறு உதவியது போல - காந்திபொருந்தப் பிரகாசிக்கும்படி செய்த தன்மையைப்போல்,—உண்மை தங்கு பொது ஆனந்த வடிவான தன்மையால் - உண்மைபொருந்திய கனகசபையானது ஆனந்தவடிவமாய் விளங்குந் தன்மையினாலே,— தன் பால் தங்கும் எங்கும் நிறை எமக்கும் மிகு விளக்கம் உடன் என்றும் ஆனந்தம் நல்கும் - தன்னிடத்திற் றங்கியிராநின்ற எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற நமக்கும் மிகுந்த பிரகாசத்தோடு எப்பொழுதும் மகிழ்ச்சியைக் கொடுக்கும், எ - று. (௬௧)

சத்தியமாய்ச் சித்துருவாய்ப் பேரொளியா யருள்வடிவாய்த் தன்னே ரின்றி, நித்தமுமாம் பொதுவுண்மை யின்னுநீ கேட்டியே னிகரொன் றில்லா, மித்திரகாந் தமுமிந்து காந்தமும்வெங் கதிரியங்கு வெய்யோன் றிங்க, டத்தமநற் கிரணமுறத் தீரங் குண்டான தன்மை போல.

(இ-ள்.) சத்தியமாய் - உண்மையாய்,—சித்துருவாய் - ஞானவடிவாய்,—பேரொளியாய் - மிகுந்த ஜோதிமயமாய்,—அருள் வடிவாய் - திருவருள்வடிவாய்,—தன் நேர் இன்றி - தனக்கொப்பில்லாததாய்,—நித்தமும் ஆம் - அழிவில்லாததுமாய் இராநின்ற,—பொது உண்மை - கனகசபையினது உண்மையை,—இன்னும் நீ கேட்டியேல் - இன்னமும் நீ கேட்பாயாயின் (சொல்லுகின்றோம்),—நிகர் ஒன்று இல்லா மித்திர காந்தமும் இந்து காந்தமும் - ஒப்பில்லாதன

வாகிய சூரிய காந்தமுஞ் சந்திரகாந்தமும்,—வெங்கதிர் இயங்கும் வெய்யோன் திங்கள் தத்தம் நல் கிரணம் உற - கொடிய கிரணத்தோடு சஞ்சரிக்கின்ற சூரிய சந்திரர்களுடைய நல்ல கிரணங்கள் பொருந்த,—அங்கு தீ நீர் உண்டான தன்மைபோல - அப்பொழுது நெருப்பும் நீரும் உண்டான தன்மையைப் போல். எ - று. குளகம்.

## வேறு.

மன்றகம் பரமா னந்த வடிவமே யந்த மன்றத்
தொன்றுநாம் பரமா னந்த வுருவமே யதனு லென்று
நின்றருட் பரமா னந்த நிருத்தமே புரிது மெங்குந்
துன்றிநின் றிடினு மங்ஙன் ரோற்றுதும் விளக்க மோங்க.

(இ-ள்.) மன்றகம் பரமானந்த வடிவமே - அந்தக்கனகசபையானது பரமானந்தவடிவமாகும்,—அந்த மன்றத்து ஒன்றும் நாம் பரமானந்த வுருவமே - அந்தக் கனகசபையினிடத்து வீற்றிராநின்ற நாம் பரமானந்தவடிவமாகவே விளங்குவோம்,—அதனுல் - அக்காரணத்தால்,—என்றும் நின்று அருட் பரமானந்த நிருத்தமே புரிதும் - எப்பொழுதும் அச்சபையினிடத்து நிலைபெற்றிருந்து கிருபையோடு பரமானந்த தாண்டவமே செய்து கொண்டிருப்போம்,—எங்கும் துன்றி நின்றிடினும் - (காந்தத்துள் நெருப்பும் நீரும் பொருந்திநின்றற்போல) எவ்விடத்து மறைந்து வியாபித்திருப்பினும்,—அங்ஙன் விளக்கமே ஓங்கத் தோற்றுதும் - அக்கனக சபையினிடத்து மாத்திரம் (சூரிய சந்திரர்களுடைய சந்நிதியில் மேற் சொல்லிய காந்தங்கள் நெருப்பு நீரும் சொரிவது போல) யாவர்களுக்குங் கிருபைப் பாலித்துக் கொண்டு விளங்கி நிற்போம். எ - று. (௬௫)

எங்கணு மிதுபோ லில்லை யெண்ணருங் கிரிக டம்முட்
புங்கவ மான வெள்ளிப் பொருப்பகந் தன்னின் மன்னித்
தங்குநம் பிரிவி ைென்று தமனியப் பொதுவி னென்றுந்
துங்கமோ டகண்ட மாகி யுறைகின்றேஞ் சுருதி போறற்.

(இ-ள்.) எங்கணும் இது போல் இல்லை - எவ்விடத்தும் இது போல் நாம் விளங்கிக்கொண்டிருப்போமில்லை,—எண் அரும் கிரிகள் தம்முள் புங்கவம் ஆன வெள்ளிப் பொருப்பகம் தன்னில் நம் பிரிவின் ஒன்று மன்னித் தங்கும் - துதித்தற்கரிய மலைகளுக்குள் மேன்மை பொருந்திய திருக்கைலாசமலையினிடத்தில் நமது அம்சத்தில் ஒருபாகம் நிலைபெற்றுத் தங்கியிருக்கும்,—தமனியப் பொதுவின் என்றும் துங்கமோடு அகண்டமாகிச் சுருதி போற்ற உறைகி

றோம் - கனகசபையினிடத்தில் எப்பொழுதும் உயர்வோடு அகண்டாகார சொரூபமாய் வேதங்கள் துதிக்கும்படி நாம் வசித்துக்கொண்டிருப்போம். எ - று. (சச)

படைத்தலே யாதி யாய வைந்தொழிற் பரிசு மென்று
நடத்துவா னினைந்திவ் வெள்ளி நகத்துறை தலினாற் செவ்வி
மடற்றுழாய் மாலை யாய்நீ வாசவன் முதலி யோர் நம்
மிடத்துறு தொழிலுக் கேற்ற தியாவுமீ கின்றோ மென்றும்.

(இ-ள்.) மடல் துழாய் மாலையாய் - இதழ்விரியப்பெற்ற துளப மாலையையுடைய விஷ்ணுவே,—படைத்தலே ஆதியாய ஐந்தொழில் பரிசும் என்றும் நடத்துவான் நினைந்து - சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்களின் தன்மையை எப்பொழுதும் நடத்தும்பொருட்டு யாம் நினைந்து,—இவ் வெள்ளி நகத்து உறைதலினால் - இக் கைலாசமலையினிடத்து நாம் வீற்றிருத்தலினால்,—நீ வாசவன் முதலியோர் ஆம் இடத்து உறு தொழிலுக்கு ஏற்றது யாவும் என்றும் ஈகின்றோம் - உன்னிடத்தும் இந்திரன் முதலிய தேவர்களிடத்தும் பொருந்திய கிருத்தியங்களுக்குப் பொருத்தமாகியவைகளெல்லாம் எப்பொழுதுங் கொடுக்கின்றோம். எ - று. (சரு)

பொற்புறு புண்டரீக புரத்திடைப் பரமா னந்தத்
தற்புத வெள்ளந் தன்னி னகமகிழ்ந் தினிதி ருப்பஞ்
சொற்படர் முத்தி வேண்டுஞ் சுராதிபர் சேவை செய்து
நிற்பரெந் நாளு மெம்மை நினைவிடை நீங்கி டார்கள்.

(இ-ள்.) பொற்பு உறு புண்டரீகப் புரத்து இடை அற்புத பரம ஆனந்த வெள்ளம் தன்னில் அகம் மகிழ்ந்து இனிது இருப்பம் - அழகுபொருந்திய சிதம்பரத்தில் நாம் யாவரும் ஆச்சரியப்படத்தக்க சிவானந்த வெள்ளத்தில் மனமகிழ்ந்து இனிதாக வீற்றிருப்போம்,—சொல் படர் முத்தி வேண்டும் சுராதிபர் எந்நாளும் சேவை செய்து நிற்பர் - துதிக்கத்தக்க மோக்ஷத்தை விரும்புந் தேவர் முதலானவர்கள் எப்பொழுதும் நம்மைச் சேவித்துக்கொண்டு நிற்பார்கள்,—எம்மை நினைவிடை நீங்கிடார்கள் - நம்மைத் தியானித்தலை விட்டு நீங்கார்கள். எ - று. (சசு)

அம்பிகை கலையி னென்றிவ் வணிக்கை லைப்பா னிற்பச்
செம்பொனம் பலத்து ளொன்றுந் திருந்துபூ ரணமாய் நிற்பத்
தும்பிமா முகத்து மைந்தன் சுடரயிற் கந்த னந்தி
பம்புறு கணங்க ளன்பர் பகருமிப் பரிசே நிற்பர்.

(இ-ள்.) அம்பிகை கலையின் ஒன்று இவ் அணிக் கைலைப் பால் நிற்ப - உமாதேவியாருடைய கலைகளிலொன்று இந்த அழகிய கைலாசமலையினிடத்து இருக்க,—செம் பொன் அம்பலத்துள் என்றும் திருந்து பூரணமாய் நிற்பள் - செம்பொன் மயமாகிய கனகசபையினிடத்தில் எப்பொழுதுந் திருந்திய பூரண கலையோடு வீற்றிருப்பள்,—மா தும்பி முகத்து மைந்தன் சுடர் அயில் கந்தன் நந்தி பம்பு உறு கணங்கள் அன்பர் பகரும் இப்பரிசே நிற்பர் - பெரிய யானைமுகத்தையுடைய விநாயகனும் ஒளிபொருந்திய வேலாயுதத்தையுடைய முருகனும் நந்தியும் நெருங்கிய நமது கணங்களும் நமதடியார்களும் சொல்லப்பட்ட இவ்விதமாகவே வீற்றிருப்பார்கள், எ - று. (௬௭)

அளவிலாப் பரமா னந்த வம்பலந் தன்னி லென்று
முளமகிழ்ந் திச்சை யாக வுறைத னிச்சயமே வாசத்
துளவமா முகிலோ யின்னுஞ் சுரா திபர் தரா தலத்தோர்
வளமுறப் போற்ற வன்பான் மகிழ்ந்துறை தலங்களுண்டால்.

(இ-ள்.) வாசத் துளப மா முகிலோய் - வாசனைபொருந்திய துளபமாலையையணிந்த பெரிய மேகநிறத்தை யுடைய விஷ்ணுவே,—அளவிலாப் பரமானந்த அம்பலம் தன்னில் என்றும் உளம் மகிழ்ந்து இச்சையாக உறைதல் நிச்சயம்-அளவிடப்படாத மேலான ஆனந்தத்தைத் தரத்தக்க கனகசபையினிடத்தில் எப்பொழுதும் மனமகிழ்ந்து விருப்பத்தோடு வீற்றிருத்தல் நிச்சயமாகும்,—இன்னும் - (இந்தஸ்தலமேயல்லாமல்) இன்னமும்,—சுராதிபர் தராதலத்தோர் வளம் உறப் போற்ற அன்பால் மகிழ்ந்து உறை தலங்கள் உண்டு - தேவர்களும் மனிதர்களும் தாங்கள் விரும்பிய செல்வங்களைப் பெறும்படி துதிக்க, நாம் அன்போடு மகிழ்ந்து வீற்றிருக்கின்ற வேறு ஸ்தலங்களும் உண்டு. எ - று. ஆல் அசை. (௬௮)

முழுவது முரைத்து மென்னின் முற்றுமோ முற்று தேனுஞ்
செழுநில னிடத் தனந்தந் திகழ்பதி யாத லாலே
விழுமிய பதியவற்றுள் விளம்புதுஞ் சிலவென் றன்பால்
வழுவையின தண்மெய்போர்த் தவள்ளலங் கருள்செய் கின்றான்

(இ-ள்) செழு நிலன் இடத்துத் திகழ்பதி அனந்தம் - வளப்பம் பொருந்திய பூமியினிடத்து விளங்குகின்ற ஸ்தலங்கள் அளவில்லாதன உண்டு,—முழுவதும் உரைத்தும் என்னின் முற்றுமோ - அந்தஸ்தலங்களின் மகிமை முழுமையுஞ் சொல்லுவோமாயின்

முடிவு பெறுமோ? (பெறாது);—முற்றுமேனும்-அவை முடிவு பெறு வாயினும்,—அவற்றுள் விழுமிய சிலபதி அன்பால் விளம்பதும் என்று - அந்தஸ்தலங்களுள் மேலாகிய சிலஸ்தலங்களை அன்போடு நாம் உனக்குச் சொல்லுகிறோமென்று,—வழுவையின் அதள் மெய் போர்த்த வள்ளல் அங்கு அருள் செய்கின்றான் - யானையின் தோலைத் திருமேனியிற் போர்த்தருளிய சிவபெருமான் அவ்விடத்தில் (அவ்விஷ்ணுமூர்த்திக்குத்) திருவாய் மலர்ந்தருளுகின்றார்.எ - று. ()

வே று.

இடருற் றவருக் கிடரற்றிடவும் மிமையோர் முதலோர் தொழுதுய்ந் திடவுந், தொடரெப் புவனங் களுநன் னெறியே சூழும்படியாம் வாழுங்கிரியா, லடர்பொய்ப் பிறவிக் கடன் மூழ் கினர்சென் றாறும்படிவந் தேறுங் கரைமெய்க், கடவுட் கிரியென் பனவுட் புகலுங் கடவுட் கிரியிக் கயிலைக்கிரியே.

(இ-ள்) கடவுள் கிரி என்பன உள்புகலும் கடவுள் கிரி இக் கைலைக்கிரி - தெய்வத்தன்மை பொருந்திய மலைகளுள் மேலான தென்று சொல்லப்பட்ட தெய்வமலையாகிய இக்கைலாசமலையா னது,—இடர் உற்றவருக்கு இடர் அற்றிடவும்-துன்பத்தை யடை ந்தவர்களுக்குத் துன்பநீங்கவும்,—இமையோர் முதலோர் தொழுது உய்ந்திடவும் - தேவர்கள் முதலானவர்கள் வணங்கிக் கடைத்தேற வும்,—தொடர் எப்புவனங்களும் நன்னெறியே சூழும்படி யாம் வாழும் கிரி - தொடர்ச்சி பொருந்திய எல்லாவுலகத்தார்களும் நன் மார்க்கத்தை யடையும்படி யாம் வீற்றிருக்கின்ற மலையாகும்;—அடர் பொய்ப் பிறவிக் கடல் மூழ்கினர் சென்று ஆறும்படி வந்து ஏறும் கரை - (அதுவன்றி) அம்மலையானது வருத்துகின்ற நிலையில்லாத பிறவிக்கடலி லழுந்தினவர்கள் அத்துன்ப நீங்கும்படி வந்து ஏறுகி ன்ற கரையாகும்,—மெய் - இது சத்தியம். எ - று. ஏ ஆல் அசை.

பூதாதி படைத்தவ னீமுதலோர் புகழும் புகழிற் பொலிவெய் தியவக், கேதார மெனுந்தல னிற்களிகூர் கேதா ரமெனப் பெயர்பெற் றயரும், வேதாகமநூ னெறிமா முனிவன் மிருமன் புடனே தருவந் தனைசெய், தாதார மெனக்கரு திப்புணியு மவனுக் கருள்செய் தமர்கின் றனமால்.

(இ-ள்.) பூதாதி படைத்தவன் நீ முதலோர் புகழும் - பிருதுவி முதலிய பூத முதலானவைகளைச் சிருஷ்டித்த பிரமதேவனும் நீ முத லிய தேவர்களுந் துதிக்கின்ற,—புகழில் பொலிவு எய்திய அக்கே

தாரம் எனும் தலனில் - கீர்த்தியினாற் பிரகாசத்தை யடைந்த அத்திருக்கேதாரம் என்னும் ஸ்தலத்தில்,—உயரும் வேத ஆகம நூல் நெறி மா முனிவன்-உயர்வாகிய வேதாக்மசாஸ்திர முறைமையை அனுஷ்டிக்கின்ற பெருமை பொருந்திய ஒரு முனிவன்,—கேதாரம் எனப் பெயர் பெற்று - கேதாரமுனியென்று நாமதேயத்தைப் பெற்று,—மிகும் அன்பு உடனே தகு வந்தனை செய்து ஆதாரம் எனக் கருதிப் பணியும் - மிகுந்த அன்புடனே தகுதி பொருந்திய வழிபாடுகளைச் செய்து நம்மையே ஆதாரமாகக் கருதி வணங்குவான்;—அவனுக்கு அருள் செய்து அமர்கின்றனம் - நாம் அம்முனிவனுக்கு அனுக்கிரகஞ் செய்து அவ்விடத்தில் வீற்றிருக்கின்றோம். எ - று. ஆல் அசை. (எக)

தலனெண் பிருகுத் தவமா முனிதன் சாபத் தொடர்பால் வசுதேவ னணிக், குலநந் தனனு னபிறப் பிடையுன் சூலமைந்த ருடன்முடி வெய்திமிகும், பொலனொன் றியநின் பதமெய்திடமுண் பொற்பா லுதவும் பொலிவுந் நெறியும், நலனும் புகழும் பெருகுஞ் சோம நாதந் திகழுண் டருணன் னகரம்.

(இ-ள்.) தலன் எண் மாதவ பிருகு முனிதன் சாபத் தொடர்பால் - பூலோகத்தாரான் மதிக்கத்தக்க பெரியதவத்தையுடையபிருகுமுனிவருடைய சாபத்தினால்,—வசுதேவன் அணிக்குல நந்தனன் ஆன பிறப்பிடை - வசுதேவருடைய அழகிய குலத்திற் புத்திரனாகப் பிறந்த கிருஷ்ணவதாரத்தில்,—உன்குல மைந்தருடன் முடிவு எய்தி - உன்குலத்திற் பிறந்த புத்திரர்களோடு இறந்து,—மிகும் பொலன் ஒன்றிய நின் பதம் எய்திட - மிக்க அழகினையுடைய உன் பதவியை யடையும் பொருட்டு,—முன் - முன்னாளில்,—பொற்பால் உதவும் - அழகோடு உண்டாக்கிய,—பொலிவும் நெறியும் நலனும் புகழும் பெருகும் திகழ் அருள் நல் நகரம் சோமநாதம் உண்டு - பிரகாசமும் நன்மார்க்கமும் இன்பமும் கீர்த்தியுமாகிய இவைகளைப் பெருகும்படி விளங்கக் கொடுக்கின்ற நல்லநகரமாகிய சோமநாதமென்னுமொரு ஸ்தலமுண்டு. எ - று. (எஉ)

ஆசிற் பயிலும் பூசற் புலனற் றந்தக் கரணப் பந்தங் கெடுவோர், மாசற் றடையும் பரமுத் தியவண் மாணப் பெறுவோர் பெறுமா றருளப், பாசத் தளைதீர் நேசத் துலகம் பழியா மறைநூல் வழியா லெமைநீ, பூசித் திடுமெய்க் காசிப் பதியிற் புவனா திபனென் றமர்கின் றனமால்.

(இ-ள்.) ஆசில் பயிலும் பூசல் புலன் அற்று அந்தக் கரணப் பந்தம் கெடுவோர் - குற்றத்திற் பழகுகின்ற விரோதத்தையுடைய ஐம்புலன்களையுமடக்கி அந்தக்கரணங்களையும் பாசங்களையுங் கெடுப்பவர்களாகிய முனிவர்களும்,—மாசு அற்று அடையும் பரமுத்தி அவன் மாணப் பெறுவோர் - குற்றமற்று அடைகின்ற மேலான மோக்ஷத்தை அவ்விடத்தில் மிகப் பெறுகின்றவர்களும்,—பெறுமாறு அருள - பெற்றுக்கொள்ளும்படி நாம் கொடுத்தருள,—பாசத் தனை திர் நேசத்து உலகம் பழியா மறை நூல் வழியால் எமை நீ பூசித்திடு மெய்க் காசிப் பதியில் - பாசத்தினின்று நீங்கி விருப்பத்தோடு பெரியோர்களாற் றுதிக்கப்படுகின்ற வேதவிதிப்படி எம்மை நீ பூசை செய்கின்ற அழிவில்லாத காசிக்ஷேத்திரத்தில்,- புவனாதிபன் என்று அமர்கின்றனம் - விசுவநாத னென்னும் பெயரோடு நாம் வீற்றிருக்கின்றோம். எ - று. ஆல் அசை. (எ௩)

மேலைச் சலதிப் பாலத் திடையெம் விண்கோ நகர்போ
லெண்கோ கரணத், தேலத் திகழ்வா னவரா யுளர்வந் தெமை
வந் தனைசெய் திடயா முறைதுந், தாலக் கிரியுட் பெரிதென்
பதுவுந்தனையே நினைவார் வினைசா டுவதும், பாலொத் தமொ
ழிப்பரையா முறையும் பதியுந் திரு நீடுபருப்பதமே.

(இ-ள்.) மேலைச் சலதிப்பால் இடை விண் கோநகர் போல் எண் எம் கோகரணத்து - மேலைச்சமுத்திரக்கரையினிடத்துள்ள சுவர்க்கலோகம்போல் மதிக்கத்தக்க எமது திருக்கோகரணத்தில்,—திகழ் வானவராய் உளர் வந்து எமை வந்தனை செய்திட யாம் உறைதும் - விளங்குகின்ற தேவர்களாயுள்ளவர்கள் வந்து நம்மைப் பொருந்த வழிபாடுசெய்ய நாம் அந்தஸ்தலத்தில் வீற்றிருப்போம்,—தாலக்கிரியுள் பெரிது என்பதுவும் தனையே நினைவார் வினைசாடுவதும் - பூமியினிடத்துள்ள மலைகளுள் பெரிதென்று சொல்லத் தக்கதாயும், தன்னைத் தியானிப்பவர்களுடைய வினைகளைக் கெடுக்கத்தக்கதாயும்,—பால் ஒத்த மொழிப் பரை யாம் உறையும் பதியும் - பால் போன்ற மதுரித்த சொல்லையுடைய உமாதேவியும் நாமும் வீற்றிருக்கத்தக்க ஸ்தலமாயு முள்ளது,—திருநீடு பருப்பதம் - அழகினால் மிகுந்த ஸ்ரீ பருப்பதம். எ - று. ஏ அசை. (எ௪)

தேனு றருவித் தரளத் திரள்சேர் திருவேங் கடமென்
றுயர்ரோங் கலினின், ருனு நெறிகூ றறிவா லெமைநீ யன்பால்
பழிபட் டென்பூ டுருகத், தானு னெனுமா றிகழ்வோர், புக

மூந் தகுபொன் முகலிக் கரையிற் பொழிலிற், கானார் தரு தென் கயிலைக் கிரியென் காளத் தியெமக் காள்பொற் பதியே.

(இ-ள்) தேன் ஆறு அருவித் தரளத் திரள் சேர் திருவேங்கடம் என்று உயர் ஓங்கலில் - தேனாறும் மலையருவியும் முத்துக்கூட்டங்களைச் சேர்த்துக்கொண்டு வருகின்ற திருவேங்கடமென்று சொல்லப்பட்ட மேன்மை பொருந்திய மலையில்.—நீ நெறி கூர் அறிவால் எமை அன்பால் வழிபட்டு என்பு ஊடுருக நாம் நின்றாம் - விஷ்ணுவே நீ சன்மார்க்கமிகுந்த உன்னுடைய நல்லறிவால் எம்மை அன்போடு வணங்கி எலும்பு நெக்கு நெக்குருகும்படி நாம் வீற்றிருந்தோம்,—தான் நான் எனும் ஆறு இகழ்வோர் புகழும் தகும் பொன் முகலிக்கரையில்,—தான் நான் என்னும் அகங்கார மமகார மார்க்கங்களை இகழ்ந்து நீக்கிய முனிவர்கள் துதிக்கின்ற தகுதிபொருந்திய பொன் முகலியாற்றங்கரையிலுள்ள,--பொழிலில் கான் ஆர் தரு தென் கைலைக்கிரி என் காளத்தி - சோலையினிடத்தில் வாசனைநிறைந்த தென்கைலாசமென்று சொல்லப்பட்ட திருக்காளத்தி மலையே,—எமக்கு ஆள் பொன் பதியே - நாம் ஆளத்தக்க அழகிய ஸ்தலமாகும்.

காலங்க ளறிந்து நமைப்பரவிக் கடவுட் டிரளோ டுயரத் திகிரிப், பாலன் புடனின் றார்வங் கொடுநீ பணியப் படியிற் படர்கோ டரமா, மூலந் தனிலெவ் வுலகும் முயிரும் முழுதுந் தருவா டொழுதர்ச் சனையா, மேலுந் தவமும் பயனும் பெறயா மிச்சித் துறையுங் கச்சிப் பதியே.

(இ-ள்.) உயர் அத்திகிரிப்பால் - உயர்வுபொருந்திய அந்தத் திருக்காளத்திமலைக்குப் பக்கத்தல்,—நீ கடவுள் திரளோடு காலங்கள் அறிந்து அன்புடன் நின்று ஆர்வம்கொடு நமைப்பரவிப் பணிய- நீ தேவகூட்டங்களோடு வந்து சமயமறிந்து அன்போடு நின்று விருப்பத்துடன் நம்மைத் தோத்திரஞ் செய்து வணங்கும் பொருட்டு,— கச்சிப்பதி — காஞ்சிபுரத்தில்,—படியில் படர் கோடர மா மூலந் தனில் - பூமியில் படர்ந்திருக்கின்ற கொம்புகளையுடைய மா மரத்தடியில்,—எவ் உலகும் உயிரும் முழுதும் தருவாள் தொழுது - எல்லாவுலகங்களையும் அவ்வுலகங்களிலுள்ள ஆன்மாக்கள் முழுதும் பெற்றருளிய உலகமாதாவாகிய காமாக்ஷியம்மையார் வணங்கி,— அர்ச்சனையால் எலும தவமும் பயனும் பெற - நம்மைப் பூசித்தலினால் பொருந்திய தவமும் பலனும் பெறும்படி,—யாம் இச்சித்து உறையும் - நாம் விருப்பத்தோடு வசிப்போம், எ - று. ஏ அசை. ()

மலையா ளுடனே ருருவா யுறைதும் மகிடானனனு முயர்தா னவருந், தொலையா வரமும் முரமுந்தலையுந் தோளு ங் களமுந் தாளுந் துணிபட், டுலையா வொழியக் கலையாண் மகிழ்தந் துடையாள் புனையுந் தொடைவா கைபெறு, மலையா மறைநற் கலைமா தவர்பே ரருணா டருள்கூ ரருணா சலமே.

(இ-ள்.) மகிடானனனும் உயர் தானவரும் - எருமைக்கடாமு கத்தையுடைய மகிடாசுரனும் உயர்ச்சிபொருந்திய அசுரர்களும்,— தொலையா வரமும் உரமும் தலையும் தோளும் களமும் தாளும் துணி பட்டு உலையா அழிய - அவர்களுடைய அழியாத வரங்களும் மார் பும் சிரசும் புயமும் கழுத்தும் காலுமாகிய இவைகள் வெட்டுப்பட்டு வருந்தி யழியும்படி,— கலையாள் மகிழ்தந்து உடையாள் புனையும் வாகைத் தொடை பெறும் மலையாம்-கலைவாகனத்தையும் விரும்பத்த க்கசாஸ்திரமாகியவஸ்திரத்தையுமுடையதுர்க்கையானவள் ஜெயங் கொண்டு,அணியத்தக்கவெற்றிமாலையைப்பெற்றமலையாகிய,—மறை நல்கலைமாதவர் பேர்அருள்நாடு அருள்கூர் அருணாசலம்-வேதங்களையு நல்ல சாஸ்திரங்களையு மறிந்த பெரிய தவத்தையுடைய முனிவர்கள் கிருபையோடு தேடுகின்ற கிருபைமிகுந்த அருணாசலமென்று சொல் லப்பட்ட திருவண்ணாமலையில்,—மலையாள் உடன் ஓர் உருவாய் உறைதும்-இமையமலையிற் பிறந்த உண்ணாமுலையோடு ஒருருவமாய் நாம் வசித்துக் கொண்டிருப்போம். எ - று. ஏ அசை. (எஎ)

உறுகா தலினு லுலகந் தொழுயா முறைகின் றதுவெம் புலநீள் வழியே, மறுகா நெறிமெய்ச் சிவபோ தமிகும்மாசற் றவர்தா நேசிப் பதுவாற், சிறுகா லுடனே யறுகால்பயிலுஞ் சீதப் பொழிலா மோதத் தொகைவிண், குறுகா விமையோர் மகிழக் கமழுங் கொற்றந் திகழுங் கோபற் பதமே.

(இ-ள்.) வெம் புலம் நீள் வழியே மறுகாநெறி மெய்ச் சிவ போதம் மிகும் மாசு அற்றவர் தாம் நேசிப்பது - கொடிய பஞ்சேந்தி ரியங்களின் வழியே மனதைச் செலுத்தி மயங்காத மார்க்கமாகிய உண்மை பொருந்திய சிவஞானமிகுந்த குற்றமற்ற பெரியோர்கள் விரும்பத்தக்கதும்,—சிறுகாலுடன் அறுகால் பயிலும் சீதப் பொழில் ஆமோதத் தொகை விண் குறுகா - தென்றற் காற்றோடு வண்டுக ளுஞ் சஞ்சரிக்கின்ற குளிர்ச்சிபொருந்திய சோலையினிடத்துள்ள வாசனைக்கூட்டமானது சுவர்க்கலோகத்திற் சென்று,—இமையோர் மகிழும் கொற்றம் திகழும் - தேவர்கள் மகிழத்தக்கதும் வெற்றியி

னால் விளங்கத்தக்கதுமான,—கோ பற்பதம் - கோபற்பதமென்னும் ஸ்தலமும்,—உலகம் உறு காதலினால் தொழ யாம் உறைகின்றது - பெரியோர்கள் மிகுந்த விருப்பத்தோடு வணங்கும்படி யாம் வீற்றிருக்கின்றதாகும். எ - று. ஏ அசை. (எஅ)

வழுவிந்த வினைப்பகை சாய்தரவும் மாயைக் கலையா வழிவெய் திடவுந், தழுவுங் கருமா மலமற் றிடவுந் தற்போ தமறச் சிற்போ தமிகுந், தொழுகும் படியும் பெறினிங் கிதுபோ லுளதோ விலையென் றுயர்மா மறைநூன், முழுதுந் தெரிமா தவர்தா மகலா முதுகுன் றமுநம்பதியென் றுணரே.

(இ-ள்.) வழுவு இந்த வினைப்பகை சாய்தரவும் - குற்றம்பொருந்திய இந்த இருவினைகளாகிய பகையழியவும்,—மாயைக் கலையா அழிவு எய்திடவும் - மாயையானது தம்மைவிட்டு நீங்கி அழியவும்,—தழுவும் கரு மா மலம் அற்றிடவும் - தம்மைப்பற்றித் திருக்கின்ற கரிய பெரிய மலநீங்கவும்,—தற்போதம் அறச் சிற்போதம் மிகுந்து ஒழுகும் படியும் பெறின் - ஆன்மபோதம் நீங்க உண்மை ஞான மிகுந்து நடக்கும்படிக்கும் பெற்றால்,—இங்கு இதுபோல் உளதோ - இந்தஸ்தலம்போல் வேறொன்றுண்டோ?—இலை என்று - (அதுபோல) வேறொருஸ்தலமுமில்லை என்று,—உயர் மா மறை நூல் முழுதும் தெரி மாதவர்தாம் அகலா முது குன்றமும் - உயர்வாகிய பெரிய வேதமுழுதுமறிந்த பெரிய தவத்தையுடைய முனிவர்கள் நீங்காத விருத்தாசலமும்,—நம் பதி என்று உணர் - நாம்வசிக்கும்ஸ்தலமாகுமென்று அறிந்து கொள்ளக்கடவாய். எ-று. ஏ அசை.

விண்டா ரணியெண் புகழ்வீ டணனின்மேலன் புடனே பூசித், துனையுங், கொண்டா ரகல்போ தினினு வனிழற் குழை வொன் றறயா முறைகின் றநலங், கண்டா தரவா லப்பொற் பதியைக் கடவா தயனின் றியல்பா லெமைநீ, தண்டா மறையா ளுடனே பணியுந் தகைமைப் பதியத் தந்திப்பொழிலே.

(இ-ள்.) அத் தந்திப் பொழில் - அத்திருவானைக்காவானது,—விண் தாரணி எண் புகழ், வீடணன் நின் மேல் அன்புடனே பூசித்து - சுவர்க்கலோகத்தாரும் பூலோகத்தாரும் மதிக்கத்தக்க கீர்த்தியையுடைய விபிஷணன் உன்மேல் வைத்த அன்போடு உன்னைப் பூசைசெய்து,—உனையும் கொடு ஆறு அகல் போதில் - உன்னையும் அழைத்துக் கொண்டு இந்தவழியாகச் செல்லுகின்ற காலத்தில்,—

நாவல் நிழல் குறைவு ஒன்று அற யாம் உறைகின்ற நலம் கண்டு - நாவன்மரத்து நிழலில் யாதொரு குறைவுமில்லாமல் நாம் வசித்துக் கொண்டிருக்கின்ற அற்புதத்தைக் கண்டு,—நீ ஆதரவால் அப் பொற்பதியைக் கடவாது அயல் நின்று - நீ விருப்பத்தோடு அந்த அழகிய திருவானைக்காவை விட்டு நீங்காது பக்கத்திலே நின்று,—தண் தாமரையாளுடனே பணியும் தகைமைப்பதி - குளிர்ச்சிபொருந்திய தாமரையாசனியாகிய இல்க்ஷ்மியோடு வணங்குந் தகுதிபொருந்திய ஸ்தலமாகும். எ - று. (அ0)

கருத்திற் கலனென் றிலர்நின் றிலகுங் கதியீ தெனநூல் விதியா னினைபூந், துருத்திப் பதியும் பிறவிக் கடலின் றுணை யிங் ககலும் புணையென் றறிவைத், திருத்தித் தெளிவித் தளிகூர் முதியோர் சேருந் திருநல்லூரும் பணிவோ, ரருத்தித் துயரற் றவலஞ் சுழியு மகிழ்வா லுறைநந் திகழ்மா நகரம்.

(இ-ள்.) கருத்தில் கலன் ஒன்று இலர் நின்று இலகும் கதி ஈது என - மனதில் யாதொரு களங்கமுமில்லாத பெரியோர்கள் நிலைபெற்று விளங்குகின்ற மோக்ஷத்தைத் தரத்தக்க ஸ்தலம் இது வென்று,—நூல் விதியால் நினைபூந்துருத்திப் பதியும் - சாஸ்திரவிதிப்படி தியானிக்கத்தக்க திருப்பூந்துருத்தியென்னும் ஸ்தலமும்,—அளிகூர் முதியோர் பிறவிக் கடலின் துணை அகலும் புணை இங்கு என்று - கிருபை மிகுந்த பெரியோர்கள் பிறவிக்கடலினளவைக்கடக்குந் தெப்பம் இவ்விடத்துள்ளதென்று,—அறிவைத் திருத்தித் தெளிவித்துச் சேரும் - தங்கள்புத்தியைச் சீர்திருத்தித் தெளியும்படியாகச் செய்துவந்தடைகின்ற,—திரு நல்லூரும் - திருநல்லூர் என்னும் ஸ்தலமும்,—பணிவோர் அருத்தித் துயர் அற்ற வலஞ்சுழியும் - வணங்கு மடியார்களது ஆசையையும் அதனாலுண்டாகிய துன்பத்தையு நீக்குந் திருவலஞ்சுழி யென்னும் ஸ்தலமும்,—மகிழ்வால் உறை நம் திரு மா நகரம் - சந்தோஷத்தோடு வீற்றிருக்கத்தக்க நம்முடைய அழகிய பெரிய ஸ்தலங்களாகும். எ - று. (அக)

வடந்தாழ் முலையாண்மணிமார் பகநீவந்தித் தெமையே சிந்தித் ததிருக், குடந்தா புரியுங் கடல்சூழ் நிலனிற் குலவுஞ் சிவலோ கமிதென் றருளைத், தொடர்ந்தார் பணியும் புகழ்வுந் திகழ்வுந் தொலையா விடைமா மருதுந் தருமத், திடந்தா னிசுரா வடுதண் டுறையு மெப்போ தநமக் கியல்பா மிடமே.

(இ-ள்.) வடம் தாழ் முலையாள் மணிமார்பக நீ - மாலைகள் தொங்குகின்ற ஸ்தனங்களையுடைய மகாலட்சுமி வசிக்கின்ற அழ

கிய மார்பையுடைய விஷ்ணுவே நீ - எமையே வந்தித்து சிந்தித்த திருக்குடந்தா புரியும் - நம்மையே வழிபட்டுத் தியானித்த கும்ப கோணமென்னும் ஸ்தலமும்,—அருளைத் தொடர்ந்தார் கடல் சூழ் நிலனில் குலவுஞ் சிவலோகம் இது என்று பணியும் புகழ்வும் திகழ்வும் தொலையா இடை மா மருதும் - கிருபாசம்பந்தர்களாகிய பெரியோர்கள் கடலாற் சூழப்பட்ட பூமியினிடத்துப் பொருந்திய சிவலோக மிது வென்று வணங்கத்தக்க கீர்த்தியும் பிரகாசமு நீங்காத திருவிடைமருதூரென்னும் ஸ்தலமும்,—தருமத்து இடம் நிகர் தண் ஆவடு துறையும் - தருமத்துக்கு இருப்பிடமாகிய (தனக்குத் தானே)ஒப்பாகிய திருவாவடுதுறை யென்னும் ஸ்தலமும்,—எப்போதும் நமக்கு இயல்பு ஆம் இடம் - எப்பொழுது நாம் இயல்பாக வீற்றிருக்கத்தக்க ஸ்தலங்களாகும். எ - று. தான் ஏ அசைகள். (அ௨)

பயிலா விமையோர் பணிநம் பதியே பணியிற் றணியப் பரவைத் திரையிற், றுயிலா வுயிரும் புவனத் திரளுஞ் சுருதித் தொகையும் பொருளுந் தருநஞ், சயிலா திபமான் மயிலா யெமையே தனிவந் தனைசெய் நனிகொண் டதுமா, மயிலா லவியம் புயல்போ லதிரும் மயிலா டுதுறைத் திருமா நகரம்.

(இ ள்.) பணியில் தணிய பரவைத் திரையில் துயிலா உயிரும் புவனத் திரளும் சுருதித் தொகையும் பொருளும் தரும் நம் சைலாதிபமான் - நமது ஏவலிற்கீழ்ப்பட்டு அலைகளையுடைய பிறவிக்கடலிற் கிடந்து தூங்குகின்ற ஆன்மாக்களையும், அவ்வான்மாக்களுக்கு இருப்பிடமாகிய கூட்டத்தையுடைய சகல புவனங்களையும், வேத கூட்டங்களையும் சகல திரவியங்களையும் பெற்ற நம்முடைய பர்வத ராஜகுமாரத்தியாகிய உமாதேவியானவள், மயிலாய் - மயில் ரூபமாய்,—எமையே நனி தனி வந்தனை செய் கொண்டதும் - நம்மையே மிகவும் ஒப்பற்ற பூசை செய்யும்படி பெற்றுக்கொண்டதும்,—மா மயில் ஆல இயம் புயல்போல் அதிரும் மயிலாடுதுறைத் திரு மாநகரம் - பெருமை பொருந்திய மயில்கள் நிருத்தஞ் செய்ய வாத்தியங்கள் மேகம்போலச் சப்திக்கின்ற திருமயிலாடுதுறை யென்று சொல்லப்பட்ட அழகிய பெரிய மாயூர மென்னும் ஸ்தலமும்,—இமையோர் பலர் பணி நம் பதியே - தேவர்கள்அனேகர் வந்து வணங்குகின்ற நமது ஸ்தலமேயாகும். எ - று. (அ௩)

முருகார் தருமா யிரமா மலரான் முன்னுள் வழிபட்டுன்னு தரவால், வருநா ளொருநாண் மலர்முன் மறையக்

குறையா வகையுன் றன்கண் மலரா, லருளா லெமையர்ச் சனைசெய் திடயா முடனே மகிழ்வுற் றுடனே யுதவுந், திரு வார் பெருவிண் ணிழியா னமெனுந் திருவீ ழியுநந் திகழ்மாந கரம்,

(இ-ள்.) உன் ஆதரவால் - விஷ்ணுவே உன்னுடைய விருப்பத்தினாலே,—முன் நாள் - முன்னொருநாளில்,—முருகு ஆர் தரும் ஆயிரம் மா மலரால் வழிபட்டு வரும் நாள் ஒருநாள் - வாசனைபொருந்திய ஆயிரந் தாமரைமலரால் நம்மை அர்ச்சித்துக்கொண்டு வருகின்ற நாளில் ஒருநாள்,—முன் மலர் மறைய - முன்சொல்லிய ஆயிரம் பூக்களில் ஒரு பூ மறைந்து போய்விட,—குறையா வகை உன் தன் கண் மலரால் அருளால் எமை அர்ச்சனை செய்திட - அவ்வொருபூவுங் குறையாதிருக்கும்படி உனது கண்ணாகிய தாமரை மலரால் அன்போடு நம்மைப்பூசைசெய்ய,-யாம் மகிழ்வுற்று உடனே அடல் நேமி உதவும் திரு ஆர் பெருவிண் இழி விமானம் எனும் திரு வீழியும் - நாம் மனமகிழ்ந்து உடனே வலிமைபொருந்திய சக்கிராயுதத்தைக்கொடுத்த அழகுபொருந்திய பெரிய விண்ணிழிவிமானமென்று சொல்லப்பட்ட ஆலயத்தை யுடைய திருவீழிமிழலையும்,—நம் திகழ் மா நகரம் - நம்முடைய விளங்குகின்ற பெரிய ஸ்தலமாகும். எ - று. (௩௪)

தள்ளற்கரி தாம் வினை சாடியெழுஞ் சம்பாதி சடாயு வெனும்பெருமைப், புள்ளுக்கர சானவ ரெம்மையருட் பொற்பூ டணையா முற்பூ சனைசெய். துள்ளக் களிமேல் கொள்ளப் புவிமே லுண்டா மெவ்ருங் கொண்டா சுறுநோய், வெள்ளத் துலையா துமருத் துவனாய் மெவும் பதியவ் வேளூர் நகரம்.

(இ-ள்.) அவ் வேளூர் நகரம் - அவ்வேளூரென்னும் பெயரையுடைய வைத்தீஸ்வரன் கோயிலானது.—தள்ளற்கு அரிதாம் வினை சாடி எழும் சம்பாதி சடாயு எனும் பெருமைப் புள்ளுக்கு அரசு ஆனவர் - நீங்குதற்கரிய வினைகளைக் கெடுத்து எழுகின்ற சம்பாதி சடாயுவென்று சொல்லப்பட்ட பெருமை பொருந்திய பக்ஷிராஜாக்கள் இருவரும்,—எம்மை அருள் பொற்பூடு அணையா - எம்மிடத்தில்(கிருபைசெய்யென்று)அழகோடு வந்து சேர்ந்து,—முன் பூசனை செய்து உள்ளக் களி மேல் கொள்ள - முன்னாளில் நம்மைப்பூசித்து மனமகிழ்ச்சி யதிகரிக்கும்படியாயும்,—புவிமேல் உண்டாம் எவரும் கொண்டு ஆசு உறும் நோய் வெள்ளத்து உலையாது - பூமியினிடத்

துள்ள யாவர்களும் குற்றம் பொருந்திய வியாதியென்னும் வெள்ளத்திற்கிடந்து வருந்தாதிருக்கும் படியாயும்,—மருத்துவனாய் மேவும் பதி - நாம்வைத்தியனாய் வீற்றிருக்கின்ற (நமது) ஸ்தலமாகும்.எ-று.

மடனாண் மலரான் முதலா மிறையோர் வந்தித் துலவா வரமெய் திடநம், மிடனா தரவா லிடமா யுறையும் மிமையந் தருசீ ருமைமங் கையுடன், றடனா னிலமே முதலா முலகஞ் சாயும் படிவந் தெழுபே ரிறுதிக், கடனான் மறைசூழ் கலமே லுறையுங் கதிர்பொற் புரிசைக் காழிப் பதியே.

(இ-ள்.) கதிர் பொன் புரிசைக் காழிப் பதி - ஒளியை வீசுகின்ற பொன்மயமாகிய மதிலாற் சூழப்பட்ட சீர்காழி யென்னும் ஸ்தலமானது,—மடல் நாள் மலரான் முதலாம் இறையோர் வந்தித்து உலவா வரம் எய்திட - இதழ்களையுடைய அன்றலர்ந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவர் முதலிய தேவர்கள் வழிபாடுசெய்து நீங்காத வரத்தையடைய,—நம் இடன் ஆதரவால் இடமாய் உறையும் இமயம் தரு சீர் உமை மங்கையுடன் - நமது இடதுபாகத்தை இடமாகக் கொண்டு வீற்றிருக்கின்ற இமயமலைபெற்ற சிறப்புப்பொருந்திய உமாதேவியாரோடு,—தடன் நானிலமே முதலாம் உலகம் சாயும்படி வந்து எழு பேர் இறுதிக்கடல் - விசாலமாகிய பூமி முதலாகிய உலகங்களெல்லாம் அழியும்படி வந்தெழுகின்ற யுக முடிவிலுண்டாகிய கடலில்,—நால் மறை சூழ் கலமேல் உறையும் - நான்கு வேதங்களுஞ் சூழும்படி தோணியின்மேல் நாம் வீற்றிருக்கும் (ஸ்தலமாகும்.) எ - று. ஏ அசை. (அகூ)

வேறு.

பொதியின்மலைத் திருமுனிவன் பொன்னிபடிந் தெமைப்பூசை புரிவா னெண்ணி, விதிமுறையத் தலத்தணுக நின்னைப்போன் முக்கோடி மிக்க நன்னூன், மதிபுனையு மகத்தியர்கள் பணிந்ததெனச் சரீரமிலா மாற்றந் தோற்ற, வதிசயித் தெய்தினனதனற் றிருக்கோடிக் காவனத்து நகர்ந்தானம்.

(இ-ள்) திருக் கோடிக்கா வனத்து - திருக்கோடிக்காவென்னும் வனத்தினிடத்தில்,—பொதிய மலைத் திருமுனிவன் பொன்னி படிந்து எமைப் பூசை புரிவான் எண்ணி விதிமுறை அத்தலத்து அணுக - பொதிய மலைகணுள்ள அகஸ்தியமுனிவர் காவிரியாற்றில் ஸ்நானஞ் செய்து எம்மைப் பூசிக்கும்படி நினைந்து விதிப்படி அத்திருக்கோடிக்காவில் வந்து சேர,—நின்னைப்போல் மிக்க நன்னூல்

மதிபுனையும் முக்கோடி அகஸ்தியர்கள் பணிந்தது எனச் சரீரம் இலா மாற்றம் தோற்ற - (அப்பொழுது அவ்விடத்தில்) அகஸ்தியனே உன்னைப்போல் மேன்மைபொருந்திய நல்ல சாஸ்திர ஞானத்தையுடைய மூன்றுகோடி அகஸ்தியர்கள் வந்து வழிபட்ட ஸ்தலமிது வென்று ஓர்சரீரிவாக்கு உண்டாக,—அதிசயித்து எய்தினன் - ஆச்சரியத்தோடு அவ்வகஸ்தியமுனிவர் அவ்விடம் வந்து சேர்ந்தார்,—அதனால் - அப்படியிருத்தலினால்,—நகர் நம் தானம் - அத்திருக்கோடிக்காவும் நம்முடைய ஸ்தலமாகும். எ - று. (அஎ)

விஞ்சைநூ லவர்புகழத் திகழுமங் கலக்குடியும் வெய்ய தண்ட, வஞ்சனூ ரடையாத மகிழ்ச்சிதரு மாந்துறையு மய ங்கு மஞ்சு, மஞ்சநூ றினரகலா வக்கினே சப்பெயரோ டமர் ந்தியா யோங்குங், கஞ்சனூ ரும்பணிலக் கருமுகிலே நம்பதி யாக் கருதுவாயே.

(இ-ள்.) பணிலக் கருமுகிலே - சங்கைத்தரித்த கரிய மேகம் போன்ற விஷ்ணுவே,—விஞ்சை நூலவர் புகழத் திகழும் மங்கலக் குடியும் - வித்தியாதரர்கள் துதிக்கத்தக்க திருமங்கலக்குடியென்னும் ஸ்தலமும்,—வெய்ய தண்ட வஞ்சன் ஊர் அடையாத மகிழ்ச்சி தரு மாந்துறையும் - கொடிய தண்டத்தைச் செய்கின்ற கபடத்தையுடைய எமதருமராஜனுடைய நகரத்தை யடையாத மகிழ்ச்சியைக் கொடுக்கின்ற திருமாந்துறை யென்னும் ஸ்தலமும்,—மஞ்சு மயங்கும் அஞ்சும் நூறினர் அகலா அக்கினேசப் பெயர் ஒடு அமர்ந்து யாம் ஓங்கும் கஞ்சனூரும் - மேகங்கள் தவழுகின்ற பஞ்சேந்திரியங்களை வென்ற பெரியோர்கள் வசிக்கின்ற அக்கினேசனென்னு நாமத்தோடு நாம் வீற்றிருக்கின்ற உயர்வாகிய கஞ்சனூரென்னும் ஸ்தலமும்,—நம் பதியாக் கருதுவாய் - நம்முடைய ஸ்தலமாக நீ நினைக்கக் கடவாய். எ - று. ஏ அசை. (அஅ)

முத்திநெறிப் பயனுதவு முக்குளங்கள் செறிந்தார முய ங்கு சோலை, வித்துருமக் கொடிகடலிற் செங்கதிரின் கிளை மொன விரிவெண் காடுந், தத்துதிரைக் கடற்றரள நிலவெறிக்க வழகெறிக்குஞ் சாய்க்கா டென்னு, முத்தமநற் றலமுமில கிமையமரு ளுமையுடனு முறையுந் தானம்.

(இ-ள்.) முத்தி நெறிப்பயன் உதவும் முக் குளங்கள் - மோக்ஷமார்க்கத்தின் பயனைக் கொடுக்கின்ற முக்குள தீர்த்தங்களையும்,— ஆரம் செறிந்து முயங்கு சோலை - சந்தனமரங்கள் நெருங்கி வளருகி

ன்ற சோலைகளையும்,—கடல் செங்கதிரின் கிரணம் என விரி வித்து ருமக் கொடி வெண் காடும் - கடலிற்றோன்றிய சூரிய கிரணம் போல ஒளியை வீசுகின்ற பவளக்கொடிகளையுமுடைய திருவெண் காடென்னும் ஸ்தலமும்,—தத்து திரைக் கடல் தாளம் நிலவு எறிக்க அழகு எறிக்கும் சாய்க்காடு என்னும் உத்தம நல் தலமும் - ததும்புகின்ற அலைகளையுடைய கடலினிடத் துண்டாகிய முத்துக்கள் நிலவை வீச அதனால் அழகு பொருந்திய திருச்சாய்க்காடென்னும் மேலான நல்ல ஸ்தலமும்,—இமயம் அருளும் உமையுடன் நாம் இலகி உறையும் தானம் - இமயமலை பெற்ற பார்வதியோடு நாம் விளங்கிக்கொண்டிருக்கும் ஸ்தலங்களாகும். எ - று. (அகூ)

பொருவரிய நெடுஞ்சையப் பொருப்பெழுந்து கடல்புணர்ந்த பொன்னி யாற்றுண், மருவுமண லடுத்தகரை மணலிவைக ணங்குறியே வளங்க ளோங்குந், திருநதியி னிருபாலு மொருகாலு மகலாத தெய்வத் தானங், கருதி லனை சங்க ளுள வங்கவற்றுட் சிலவுனக்குக் கழறினோயால்.

(இ-ள்.) பொருவு அரிய நெடும் சையப் பொருப்பு எழுந்து கடல் புணர்ந்த பொன்னியாற்றுள் மருவு மணல் - உவமை சொல்லுதற்கரிய நீண்ட சையகிரியினின்று மெழுந்து கடற்சங்கம முற்ற காவிரியாற்றிற் பொருந்திய மணலும்,—அடுத்த கரை மணல் - அவ்வாற்றினது அடுத்த கரையிலுள்ள மணலும்,—இவைகள் நம் குறியே - ஆகிய இவைகள் நமது குறியாகிய இலிங்கமாகும்,—வளங்கள் ஓங்கும் திருநதியின் இருபாலும் ஒருகாலும் அகலாத தெய்வத் தானங்கள் அனேகங்கள் உள-வளப்பமிகுந்த அக்காவிரியாற்றினது இரண்டுபக்கங்களிலும் நாம் ஒருகாலமும் நீங்காது விளங்குகின்ற தெய்வஸ்தலங்கள் பல இருக்கின்றன,—கருதில் அவற்றுள் சில உனக்குக் கழறினோம் - நினைக்குமிடத்து அவைகளுள் சில ஸ்தலங்களைமாத்திரம்உனக்கு நாம்எடுத்துச் சொன்னோம்.எ-று.ஆல் அசை.

ஆற்றரிய தீவினை களுளவேனு மிலவேனு மங்ஙன்வந்து, தோற்றுமுயி ரானவெலா நித்தமிகு முத்திபெறத் துளங்கா தீயும், போற்றுமய ரண்டபுரு டன்றனரு ளிலகாதி புண்டரீகத், தேற்றதனி யர்லயபாங் திகழாரூர் மறைவனம்யா மிருக்குமெல்லை.

(இ-ள்.) அங்ஙன் வந்து தோற்றும் உயிரான எலாம் - அந்தஸ்தலங்களில் வந்து பிறக்கின்ற உயிர்களெல்லாம்,—ஆற்றரிய தீவினை

கள் உளவேனும் இலவேனும் - பொறுத்தற்கரிய தீவினைகளைச் செய்தனவாயிருந்தாலுஞ் செய்யாதனவா யிருந்தாலும்,—நித்தம் மிகு முத்தி பெறத்துளங்காது ஈயும் - அழிவில்லாத மேன்மை பொருந்திய மோக்ஷத்தை யுடையும்படி கெடுதலில்லாமற் கொடுக்கும்,— போற்றும் உயர் அண்ட புருடன் தன் அருள் இலகு ஆதி புண்டரீகத்து எற்ற தனி ஆலயம் ஆம் திகழ் ஆரூர் - யாவர்களுந் துதிக்கின்ற விராட்புருடனுடைய கிருபையால் விளங்குகின்ற மூலாதார கமலத்தினிடத்திற் பொருந்திய ஒப்பற்ற ஆலயமாக விளங்குகின்ற திருவாரூரும்,—மறைவனம் - வேதங்களாற் பூசிக்கப்பட்ட வேதாரணியமும்,—யாம் இருக்கும் எல்லை - நாம் வீற்றிருக்கும் ஸ்தலங்களாகும்.

கந்தமலர்க் கணைவருத்த வன்னை தனைப்புணர்ந்துபெருங் காதலோங்கத், தந்தைதனைக் கொலைசெய்து தொலைவரிய பாதகங்க டாங்கி நொந்த, சிந்தையுடன் வந்தணைந்த வந்தணன்மா முத்தியினைச் சேரநல்கு, மிந்தநெறிப் பொன்மதில்சூழ் தென்மதுரை யெமக்கினிய தெந்தஞான்றும்.

(இ-ள்.) இந்த நெறி பொன் மதில் சூழ் தென் மதுரை - இந்த வழியிற் றோன்றுகின்ற பொன்மயமாகிய மதிலாற் சூழப்பட்ட தென்னாட்டிலுள்ள மதுரைமாநகரமானது,—கந்த மலர்க் கணை வருத்த அன்னை தனைப் புணர்ந்து - (மன்மதனது) வாசனைபொருந்திய புட்பபாணமானது வருத்தத்தைச் செய்ய அதனால் தன் தாயைப் புணர்ந்து,—பெரும் காதல் ஓங்க தந்தை தனைக் கொலை செய்து - மிகுந்த காமமானது மேன்மேலு மதிகரிக்க அதற்கிடையூறாயிருந்த தன் பிதாவைக் கொன்று,—அரிய பாதகங்கள் தாங்கி நொந்த சிந்தையுடன் வந்து அணைந்த அந்தணன் - கொடிய பாவங்களைச் சுமந்து அதனால் வருந்திய மனதோடு வந்து சேர்ந்த அப்பிராமணனை,—மா முத்தியினைச் சேர நல்கும் - பெரிய மோக்ஷத்தையடையும்படியான பலனைக் கொடுக்கும்;—எந்த ஞான்றும் எமக்கு இனியது - (ஆதலால்) அது எக்காலத்தும் நமக்கு இன்பத்தைத் தரத்தக்க ஸ்தலமாகும். எ - று. (கூஉ)

விலங்கரிய தவப்பிருகு முனியுரையான் மானிடனா மிக்கமண்மேல், வலந்திகழுந் தசரதன்றன் மைந்தனிரா கவனெனநீ வந்துதோன்றி, யிலங்கையரை யன்றலைபத் தறுத்தலாற் பிரமகத்தி யெய்தநெஞ்சங், கலங்கிநமைக் கண்டர்ச்சித் துயர்ந்தவிரா மீசுரநங் காதன்மூதூர்.

(இ-ள்.) நீ - விஷ்ணுவே நீ,—விலங்கு அரிய தவப் பிருகுமுனி உரையால் - நீங்குதற்கரிய தவத்தையுடைய பிருகுமுனிவருடைய சாபத்தால்,—மண் மேல் - பூமியினிடத்தில்,—வலம் திகழும் தசரதன் மைந்தன் இராகவன் என வந்து தோன்றி - வெற்றியினால் விளங்கிய தசரதனுடைய குமாரனாகிய இராகவனென்னும் பெயரோடு வந்து பிறந்து,—இலங்கை யரையன் தலை பத்து அறுத்தலால் பிரமகத்தி எய்த - இலங்காபுரிக்கரசனாகிய இராவணனுடைய பத்துத் தலைகளையு மறுத்தலா லுண்டாகிய பிரமகத்தியானது உன்னை வந்தடைய,—நெஞ்சம் கலங்கி - அதனால் மனக்கலக்கமடைந்து,—நமைக் கண்டு அர்ச்சித்து உயர்ந்த இராமேச்சுரம் - நம்மை (,அச்சமுத்திர மத்தியில்) பிரதிஷ்டை செய்து பூசைபண்ணி மேன்மையை யடைந்ததாகிய இராமேச்சுரமும்,—நம் காதல் மூதூர் - நாம் விருப்பத்தோடு வீற்றிருக்கின்ற பழய ஸ்தலமாகும். எ - று. (கூ௩)

எண்டருமப் பதியவற்றுட் சதாசிவமே வடிவாகி யிருப்போமந்தப், புண்டரிக புரமெமது பேருருவம் புவனமுதற் புகன்ற யாவும், விண்டபர மானந்த வுருவமாங் கினிதுறைது மிகுமவ் வெல்லை, கண்டதுகண் மணற்சுக்கா னங்குறிநீ ருள்ளசிவ கங்கை யாமால்.

(இ-ள்.) எண் தரும் அப்பதி யவற்றுள் சதாசிவமே வடிவாகி இருப்போம் - மதிக்கத்தக்க அந்தஸ்தலங்களில் சதாசிவவடிவமாகிய இலிங்கவடிவாக யாம் வீற்றிருப்போம்,—அந்தப் புண்டரிகப் புரம் எமது பேர் உருவம் - அந்தப் புண்டரீக புரமென்று சொல்லப்பட்ட சிதம்பரஸ்தலமானது எமது பெரிய வடிவமாகும்,—புவன முதல் புகன்ற யாவும் விண்ட பரமானந்த வுருவம் - பூமி முதலாகச் சொல்லப்பட்ட சரா சரங்களெல்லாம் கடந்த பரமானந்த வடிவத்தோடு,—ஆங்கு இனிது உறைதும் - அவ்விடத்தில் இன்பத்தோடு நாம் வீற்றிருப்போம்,—மிகும் அவ்வெல்லை கண்ட துகள் மணல் சுக்கான் நம்குறி - மேலான அந்தஸ்தலத்தினெல்லைக்குள் உண்டாகிய தூசுகளும் மணல்களும் சுக்கான் கற்களும் நமது வடிவமாகிய இலிங்கரூபமாகும்,—உள்ள நீர் சிவகங்கை ஆம் - அவ்விடத்துள்ள தீர்த்தங்களெல்லாம் சிவகங்கைதீர்த்தமாகும். எ - று. ஆல் அசை. (கூ௪)

தடமருவு நலமுறுமத் தனித்தில்லை நகர்நாப்பண் டன்னின் மன்னும், புடவிமுத லோரைந்து மகத்துவமாங் காரமெனப் புகலு மோரே, ழுடைவுதிக பூாவரணப் பிரமாண

மூலத்துக் கப்பா லுஞ் சென், றுடையவடி படைத்தளவி
லொளிகிளரக் கிளர்சயில மொன்றுண் டன்றே.

(இ-ள்.) தடம் மருவும் நலம் உறும் அத் தனித் தில்லை நகர் நாப்பண் தன்னில் மன்னும் - விசாலம் பொருந்திய நன்மை மிகுந்த அந்த ஒப்பில்லாத தில்லைவனத்தினது நடுவிற் பொருந்தியிருக்கின்ற,—புடவி முதல் ஓர் ஐந்து மகத்துவம் ஆங்காரம் எனப் புகலும் அடைவு திகழ் ஓர் எழ் ஆவரணப் பிரமாணம் - பிருதுவிமுதல் ஐந்து பூதங்களும் மகதத்துவம் அகங்காரதத்துவம் என்று சொல்லப்பட்டுக் கிரமமாக விளங்கியெழும் எழு ஆவரணப் பிரமாணத்தையும்,—மூலத்துக்கு அப்பாலுஞ் சென்று உடைய அடி படைத்து - பிரமாண்டத்துக்கு அப்பாலுஞ் சென்றிருக்கின்ற அடியையும் பெற்று,—அளவில் ஒளி கிளரக் கிளர் சைலம் ஒன்று உண்டு - அளவில்லாத சோதியானது விளங்கும்படி பிரகாசிக்கின்ற மலையொன்றுண்டு. எ - று. அன்று ஏ அசை. (௬௫)

அக்கிரியின் வடபாலுந் தென்பாலுங் குடபாலு மாகித்
தோற்று, மெய்க்கனகக்கொடுமுடிமூன் றுட்புவியான் மறைந்தவைகள் விளங்கித் தோன்றூ, தக்கவட பாற்சிகரந் தளங்
களா யிரம்படைத்த சலசந் தன்னை, யொக்குமதனடுப்பொகு
ட்டொத் திலிங்கவுரு வங்கொடுநா முறைகின் றேமால்.

(இ-ள்.) அக்கிரியின் வடபாலும் தென்பாலும் குடபாலும் ஆகித் தோற்றும் மெய்க் கனக கொடு முடி மூன்றுள் - அந்த மலையின் வடபக்கத்தும் தென்பக்கத்து மேற்பக்கத்து முள்ளனவாய்த் தோன்றும் நிலைபெற்ற பொன்மயமாகிய மூன்று கொடி முடிகள்,—புவியான் மறைந்து அவைகள் விளங்கித் தோன்றூ - பூமியில் மறைக்கப்பட்டு அக்கொடுமுடிகள் வெளியே விளங்கித் தோன்றாவாம்,—தக்க வடபால் சிகரம் தளங்கள் ஆயிரம் படைத்த சலசம் தன்னை ஒக்கும் - தகுதிபொருந்திய வடபக்கத்திலுள்ள கொடுமுடி ஆயிரம் இதழ்களையுடைய தாமரை மலரை யொத்திருக்கும்,—அதன் நடுப் பொகுட்டு ஒத்து நாம் இலிங்க உருவம் கொடு உறைகின்றேம் - அத்தாமரைமலரி னடுவிலுள்ள கொட்டையை யொத்து நாம் இலிங்கவடிவங்கொண்டு வீற்றிருக்கின்றேம். எ - று. ஆல் அசை. (௬௬)

அச்சிகரச் சலசவித ழாயிரநே ரிடங்கடொறு மமர்ந்து
தோன்று, மெச்சிவலிங் கம்புகலி னீரைஞ்ஞூ றுளவளவில்
விண்ணோ ரன்பா, லிச்சைபெற வருச்சிப்பர் மானிடர்கண்

டறிந்திறைஞ்சி யேத்த வெய்தா, நிச்சயமாய்நடுவுறையு மிக்க சிவக் குறிதனையாம் நீங்கோ மென்றும்.

(இ-ள்.) அச்சிகரச் சலச இதழ் ஆயிரம் நேர் இடங்கள் தொறும் அமர்ந்து தோன்றும் - அம்மலைச் சிகரமாகிய தாமரையினது ஆயிரம் இதழ்களிற் பொருந்திய ஸ்தலங்கள் தோறு மிருந்து தோன்றுகின்ற,—எச் சிவலிங்கம் புகலின் ஈர் ஐஞ்ஞூறு உள - எல்லாச் சிவலிங்கங்களையு மளவிட்டுச் சொல்லுமிடத்து ஆயிரம் உள்ளன;—அளவில் விண்ணோர் அன்பால் இச்சை பெற அருச்சிப்பர் - (அச்சிவலிங்கங்களை) அளவில்லாத தேவர்கள் அன்போடு தாம் விரும்பியவைகளைப் பெறும் பொருட்டுப் பூசை செய்வார்கள்,—மானிடர் கண்டு இறைஞ்சி ஏத்த எய்தா நிச்சயமாய் நடுவு உறையும் மிக்க சிவக்குறிதனை யாம் என்றும் நீங்கோம் - மனிதர்கள் தரிசித்து வணங்கித் துதிக்கக்கூடாததாய் அழிவில்லாததாய் அத்தாமரை மலரினடுவில் வீற்றிருக்கும் மேன்மைபொருந்திய சிவலிங்கத்தை விட்டு நாம் எப்பொழுதும் நீங்கோம். எ - று. (௬எ)

அருளுருவக் குறியெவைக்கும் பற்றுயோ ராலினுக் கங் கடுதத தென்சார், மருவுறுமிப் பிரமாண்ட மூலத்திற் கிழெய்து மரபினாலே, பொருளினுக்குமூலமாய்க் காரணமாய் விளங்கலாற் புவனங்காக்குந், திருமறுமார் பகராமந் திருமூலத் தானமெனத் திகழாநிற்கும்.

(இ-ள்.) புவனம் காக்கும் திருமறு மார்பக - உலகங்களைக் காக்கின்ற இலக்குமிபொருந்திய மார்பையுடைய விஷ்ணுவே,—அருள் உருவக் குறி - திருவருள் வடிவாகிய அச்சிவலிங்கம்,—எவைக்கும் பற்றாய் - எல்லாவற்றிற்கும் ஆதாரமாய்,—ஓர் ஆலினுக்கு அடுத்த தென்சார் மருவு உறும் - அவ்விடத்தில் உள்ள ஓர் ஆலமரத்துக்குச் சமீபமாய்த்தென்பக்கத்திற் பொருந்தியிருக்கும்;—இப் பிரமாண்ட மூலத்தின் கீழ் எய்தும் மரபினாலே - இப்பிரமாண்டத்தின் மூலாதாரத்தின்கீழ்ப் பொருந்தியிருக்கின்ற தன்மையினாலும்,—பொருளினுக்கு மூலமாய்க் காரணமாய் விளங்கலாலே - எல்லாப் பொருளுக்கும் மூலமாயுங் காரணமாயும் விளங்குகின்ற படியினாலும்,—திருமூலத்தானம் எனத் திகழா நிற்கும்-திருமூலட்டான மென்னும் பெயர் விளங்கிக் கொண்டிருக்கும். எ - று. (௬அ)

தானவர்விஞ் சையர்சித்தர் சாரணர்பா ரிடமலகை தாபதேசர், வானவர்கந் தருவரிராக் கதரியக்கர் கிம்புருடர் வான

வாசி, யானவர்கின் னரர்கெருட ருரகர்தா ரகைபோகத் தவ
னியோரு, மேனையமா னிடர்யாரும் பூசைபுரிந் தேத்துவரவ்
விலிங்கந்தன்னே.

(இ-ள்.) அவ் இலிங்கம் தன்னை - அத்திருமூலட்டானத்திலெ
ழுந்தருளியிருக்குஞ் சிவலிங்கப் பெருமானை,—தானவர் விஞ்சையர்
சித்தர் சாரணர் பாரிடம் அலகை தாபதேசர் வானவர் கந்தருவர்
இயக்கர் வானவாசியானவர் கின்னரர் கெருடர் உரகர் தாரகை போ
கத்து அவனியோரும் - அசுரர் வித்தியாதரர் சித்தர் சித்தி பெற்ற
வர் பூதங்கள் பேய்கள் முனிவர்கள் தேவர்கள் கந்தருவர்கள் இயக்க
ர்கள் ஆகாசத்தில் சஞ்சரிக்கின்றவர்களாகிய சந்திர சூரியர் முதலா
னவர்கள் கின்னரர்கள் கெருடர்கள் நாகர்கள் நக்ஷத்திரங்கள் போ
கபூமியில் வசிக்கின்றவர்களாகிய இவர்களும்,—ஏனைய மானுடர்
யாவரும் பூசை புரிந்து ஏத்துவர் - மற்றை மனிதர்களுமாகிய யாவர்
களும் பூசைசெய்து துதிப்பார்கள். எ - று. (௯௯)

விற்பொலிதென் பாற்சிகரங் கனகசபை யெனுமுண்மை
விளம்பக் கேட்டி, கற்பனைக ளிகந்துயர்ந்த தற்பரசை தன்னி
யத்தைக் கலைவே தங்கள், பொற்புடைய கனகவெளிக் கொப்
பென்று புகன்றனபொற் பொதுவு மாறு, தற்புதநம் பேரு
ருவே யாதலாற் சின்மயமே யைய மின்றால்.

(இ-ள்.) தென்பால் வில் பொலி சிகரம் கனகசபை எனும் -
விஷ்ணுவே முன் சொல்லிய மலையின் தென்பக்கத்திலுள்ள சிகரம்
கனகசபையென்று சொல்லப்படும்;—உண்மை விளம்பக்கேட்டி -
அதன் உண்மையைச்சொல்லுகிறேன் கேட்பாயாக,—கற்பனைகள்
இகந்து உயர்ந்த தற்பர சைதன்னியத்தை - கற்பனைக்கு அதீதப்
பட்ட உயர்வாகிய தனக்கு மேலான சைதன்னியமாகிய சிவத்தை,—
கலை வேதங்கள் பொற்பு உடைய கனக வெளிக்கு ஒப்பு என்று புக
ன்றன - சாஸ்திரங்களும் வேதங்களும் அழகுபொருந்திய பொன்மய
மாகிய ஆகாசத்துக்கு ஒப்பென்று சொல்லின,—பொன் பொதுவும்
மாறு அற்புத நம் பேர் உருவே - அக்கனகசபையும் நீங்காத ஆச்ச
ரியகரத்தையுடைய நமது பெரிய வடிவமே யாகும்,—ஆதலால் சின்
மயமே - ஆதலால் அது ஞானமயமேயாகும்;—ஐயம் இன்று - இதற்
குச் சந்தேகமில்லை. எ - று. ஆல் அசை. (௧௦௦)

அன்னதுகொண் டதுகனக சபையெனநம் மாலறைந்த
தறவோர் மிக்க, பொ ன்னிலகு சிகரத்திற் பொலிதலாற்பொற்

பொதுவாய்ப் புகன்றா ரென்று, மன்னுதம னியத்தானம் மனுவெழுதி வானவர்கள் வகுத்த லாலே, தன்னிகர்பொன் னம்பலமென் றறிந்துரைத்தார் தராதலமேற் றங்குமாக்கள்.

(இ-ள்.) அன்னது கொண்டு நம்மால் அது கனகசபை என அறைந்தது - அக்காரணத்தால் நம்மால் அச்சபைக்குக் கனகசபை யென்று சொல்லப்பட்டது;—மிக்க பொன் இலகு சிகரத்திற் பொலிதலால் அறவோர் பொன் பொதுவாய்ப் புகன்றார் - மிகுந்த பொற்பிரகாசம் பொருந்திய சிகரத்தினாற் பிரகாசித்தலினால் முனிவர்களும் அச்சபைக்குக் கனகசபையென்று சொன்னார்கள்,—வானவர்கள் மன்னு தப்னியத் தானம் என்று மனு எழுதி வகுத்தலாலே - தேவர்கள் பொன்னாலாகிய ஸ்தானமென்று மந்திரங்களெழுதி வகுத்துத் துதிக்கின்றமையால்,—தரா தல மேல் தங்கு மாக்கள் தன் நிகர் பொன்னம்பலம் என்று அறிந்து உரைத்தார் - பூமியினிடத்துள்ள மனிதர்கள் தனக்குத் தானே ஒப்பாகிய பொன்னம்பலம் என்று அறிந்து சொன்னார்கள். எ - று. (கூ0க)

ஆராத நாதபர சித்தானந் தத்துருவ மாநமக்குப், பேரானந் தந்தரலா லானந்த சபையெனப்பேர் பெற்ற தியார்க்குந், தேராநற் சின்மயமாய் விளங்கலாற் றிருச்சிற்றம் பலமென் றுள்ள, தோராழி நெடுமாலே யதனுண்மை விரித்தெளிதி னுரைக்கற் பாற்றோ.

(இ-ள்.) ஓர் ஆழி நெடுமாலே - ஒப்பில்லாத சக்கிராயுதத்தைத் தரித்த விஷ்ணுவே,—ஆராத நாத பர சித் ஆனந்த உருவம் ஆம் நமக்கு - தெவிட்டாத நாதத்தையுடைய மேலாகிய ஞானானந்தவடிவமாகிய நமக்கு,—பேர் ஆனந்தம் தரலால் ஆனந்தசபை எனப் பேர் பெற்றது - மிகுந்த ஆனந்தத்தைத் தருதலால் (அச்சபைக்கு) ஆனந்தசபை யெனப் பெயர் பெற்றது;—யார்க்கும் தேராத நல் சின்மயமாய் விளங்கலால் திருச்சிற்றம்பலம் என்று உள்ளது - யாவராலுந் தெளிய முடியாத நல்ல ஞானமயமாய் விளங்குதலால் திருச்சிற்றம்பலம் என்று சொல்லப்பட்டது;—அதன் உண்மை விரித்து எளிதின் உரைக்கற் பாற்றோ - அத்திருச்சிற்றம்பலத்தின் உண்மையை எளிதாகச் சொல்லுந் தன்மையை யுடையதோ? (அன்று.) எ-று. ஓ அசை. (கூ0உ)

மற்றுமுள தலங்களினுங் கலைதங்க வெமக்குடைய வடிவந் தில்லை, நற்றலமீ தினிதினுறைந் தெஞ்ஞான் றுமிகவிளக்க

நண்ணு நிற்போஞ், சொற்றிடுமங் கவற்றிந்த விளக்கமிலை சீராட்புருடத் தொல்லோனுள்ளப், பொற்றளவா ரிசமீ தாத லால் யாவையினும் பொலிவுண் டாகும்.

(இ-ள்) மற்றும் உள தலங்களில் நம் கலை தங்க தில்லை எமக்கு உடைய வடிவம் - மற்றுள்ளனவாகிய ஸ்தலங்களில் எமது கலைகளில் ஒவ்வொன்று தங்கியிருக்க, தில்லைவனமாகிய சிதம்பரம் எமதுவடிவமாகும்,—நல் தலம் ஈது - இது நல்ல ஸ்தலமாகும்,—என்ஞான்றும் இனிது உறைந்து மிக விளக்கம் நண்ணு நிற்போம் - எப்பொழுதும் நாம் அந்தஸ்தலத்தில் இனிதாக வீற்றிருந்து மிகவும் பிரகாசத்தைப் பொருந்தி நிற்போம்,—சொற்றிடும் அங்கு அவற்று இந்த விளக்கம் இலை - சொல்லப்பட்ட மற்ற ஸ்தலங்களில் இந்தப் பிரகாச மிராது;—ஈது சுராட் புருடத் தொல்லோன் பொன் தள உள்ள வாரிசம் - இச்சிதம்பரம் விராட்புருடனாகிய முன்னோனது பொன்மயமாகிய இதழ்களையுடைய இருதயகமலஸ்தானமாகும்,—ஆதலால் யாவையினும் பொலிவு உண்டாகும் - ஆகையால் இச்சிதம்பரம் எல்லாஸ்தலங்களினும் பிரகாசமுள்ளதாகும். எ-று.

உரைக்குமது நிச்சயமப் புண்டரிக புரமுமத னூடே யிந்தத், தரைக்குண்மறைந் திலகுசுடர் பொற்சிகரப் பொற் கிரியுஞ் சாற்றுகின்ற, வுரைக்கரிய பகிரண்ட ரண்டங்களிறுதிபெற மருவுநாளும், விரைக்கமல மலர்மருவு திருமார்ப வழியாமல் விளங்குமன்றே.

(இ-ள்.) விரைக் கமல மலர் மருவு திரு மார்ப - வாசனைபொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இலக்குமி வசிக்கின்ற மார்பையுடைய விஷ்ணுவே!—அப் புண்டரிகபுரமும் - அந்தப் புண்டரிகபுரமாகிய சிதம்பரமும்,— அதன் உள்ளே இந்தத் தரைக்குள் மறைந்து இலகு சுடர் பொன் சிகரப் பொன்கிரியும் - அச்சிதம்பரத்தின் நடுவில் இப்பூமிக்குள் மறைந்து விளங்குகின்ற ஒளியையுடைய பொன்மயமாகிய சிகரங்கள் பொருந்திய அழகிய மலையுமாகியஇவைகள்,—சாற்றுகின்ற வரைக்கு அரிய பகிர் அண்டர் அண்டங்கள் இறுதி பெற மருவும் நாளும் அழியாமல் விளங்கும் - சொல்லப்படுகின்ற அளவிடுதற்கரிய பகுப்பையுடைய தேவர்களும் அண்டங்களும் அழிவையடையும்படி பொருந்திய யுகாந்த காலத்திலும் அழியாமல் விளங்கிக் கொண்டிருக்கும்,—உரைக்கும் அது நிச்சயம் - நாம் சொல்லுகின்ற அது நிச்சயமாகும் எ-று. அன்று ஏ அசை.

செப்பரிய நம்முருவப் பொற்பதிநம் மருளுருவஞ் சிதையாதென்று, மப்பதியு மப்பதிசேர் பரமானந் தக்கூவற் கடுத்தமேல்பா, லொப்பரிய சிவகங்கைத் தென்பானின் றன்பாலிவ் வுமைகண்டேத்தெம், மெய்ப்பரமா னந்தநட மங்கொருகாற் கண்டவரே விடுசேர்வார்.

(இ-ள்.) செப்பு அரிய நம்முடைய பொன்பதி நம் அருள் உருவம் - சொல்லுதற்கரிய நம்முடைய அழகிய ஸ்தலமாகிய சிதம்பரம் நம்முடைய திருவருள் வடிவாகும்;—என்றும் சிதையாது - அது எப்பொழுதும் அழியாது;—அப்பதியும் - அச்சிதம்பரஸ்தலமும்,—அப்பதிசேர் பரமானந்த கூவற்கு அடுத்த மேல் பால் - அச்சிதம்பரத்திற் பொருந்திய பரமானந்த கூவ தீர்த்தத்துக்குச் சமீபத்தின் மேல்பக்கத்திலும்,—ஒப்பரிய சிவகங்கைத் தென்பால் நின்று - உவமை சொல்லுதற்கரிய சிவகங்கை தீர்த்தத்தின் தென்பக்கத்திலும் நின்று,—அன்பால் இ உமை கண்டு எத்து எம் மெய்ப் பரமானந்த நடம் அங்கு ஒருகால் கண்டவரே வீடு சேர்வார் - அன்போடு இச்சிவகாமியம்மையார் தரிசித்துத் துதிக்கின்ற எமது சச்சிதானந்த தாண்டவத்தை அவ்விடத்து ஒருமுறை தரிசித்தவர்களே மோக்ஷத்தை யடைவார்கள், எ - று. (௧0௫)

குடதிசையிற் கொடுமுடிப்பா லெமைக்கருதிக் கந்தருவர் குலவும்வானோ, ரடன்முனிவர் சித்தர்முத லிருப்பரெனவருள்செய்தா னருளாலண்டந், தொடர்புடைய சராசரமாய்த் தொல்லுயிராய்ப் பல்லுயிர்க்குந்துணையாய்நாதம், படர்மறையாய் மறைமுடியாய் முடியாத பராபரமாம் பரமானந்தன்.

(இ-ள்.) அண்டம் தொடர்பு உடைய சர அசரமாய் - அண்டங்களிற் பொருந்தி யிராநின்ற சரம் அசரம் என்னும் பொருளாயும்,—தொல் உயிராய் - பழய ஆன்மாக்களாயும்,—பல் உயிர்க்கும் துணையாய் - பலவகைப்பட்ட ஆன்மாக்களுக்குந் துணையாயும்,—நாதம் படர் மறையாய் - இசைபொருந்திய வேதங்களாயும்,—மறை முடிவாய் - அவ்வேதங்களின் முடிவாயும்,—முடியாத பரா பரமாம் பரமானந்தன் - அவ்வேத முடிவாலு மளவிடப்படாத பராபரவஸ்துவாயு முள்ள பரமானந்த சொரூபியாகிய சிவபெருமான்,—குடதிசையின் கொடுமுடிப்பால் - அம்மலையின் மேற்றிசையின் சிகரத்தினிடத்தில்,—கந்தருவர் குலவும் வானோர் அடல் முனிவர் சித்தர் முதல் - கந்தருவர்களும் பொருந்திய தேவர்களும் தவ வலியையு

டைய முனிவர்களும் சித்தர் முதலானவர்களும்,—இருப்பர் என அருளால் அருள் செய்தான் - வசித்துக் கொண்டிருப்பார்களென்று கிருபையோடு திருவாய் மலர்ந்தருளினார். எ - று. (௪0௬)

ஆதிமறைத் திருவாக்கா லருள்செய்த வுரைகேளா வன்பு மிக்கோன், மாதவனு மிறைவபரம் பரவமல பகவமிக வயங்கும் வெள்ளிப், பூதரகா தரமொழித்த புனிதசிதம் பர வென்று போற்றிசெய்ய, பாதமலர்த் துணைபலகாற் பணிந் தெழுந்து நேசமுடன் பகருகின்றான்.

(இ-ள்.) அன்பு மிக்கோன் மாதவனும் - அன்பினான் மேம்பட்டவராகிய விஷ்ணுமூர்த்தியும்,--ஆதி மறைத் திருவாக்கால் அருள் செய்த உரை கேளா - முதல்வராகிய சிவபெருமான் வேதத்தைச் சொல்லிய திருவாக்கினால் அருளிச்செய்த வார்த்தையைக்கேட்டு,—இறைவ - தலைவரே,—பரம் பர - மேலானவரே,—அமல - மலமுத்தரே,—பகவ - அறுகுணமுடையவரே,—மிகவிளங்கும் வெள்ளிப் பூதர காதரம் ஒழித்த புனித - மிகவும் விளங்காநின்ற வெள்ளிமலையாகிய கைலாசமலையினிடத்து வைக்கப்பட்ட விருப்பத்தை நீக்கிய பரிசுத்தமுடையவரே!—சிதம்பர - ஞானாகாசரூபரே;—என்று போற்றி - என்று ஸ்தோத்திரஞ் செய்து,—செய்ய பாத மலர்த்துணை பல கால் பணிந்து எழுந்து - செந்தாமரை மலர்போன்ற இரண்டு திருவடிகளையும் பலமுறை நமஸ்கரித்து எழுந்து நின்று,—நேசம் உடன் பகருகின்றான் - விருப்பத்தோடு விண்ணப்பஞ் செய்வாராயினார். எ - று. (௪0௭)

நின்னுடைய கருணையினா னினக்குரிய பதிதோறு நின்னையேத்தி, மன்னியுறைந் தனனிந்தப் புண்டரிக புரத்திடைநான் மறைகள்சூழப், பொன்னவையி னின்றாடு மானந்த தாண்டவம்யான் போற்றிக்கண்டு, முன்னிமகிழ்ந் திறைஞ்சியுறைந் திடுமாறென் சிந்தைமான் முயங்கிற்றன்றே.

(இ-ள்.) நின்னுடைய கருணையினால் நினக்கு உரிய பதிதோறும் நின்னை எத்தி மன்னி உறைந்தனன் - தேவரீருடைய கிருபையினாலே அடியேன் தேவரீர் எழுந்தருளியிருக்கின்ற ஸ்தலங்கள் தோறும் போய்த் தேவரீரை ஸ்தோத்திரஞ் செய்து வசித்துக்கொண்டிருந்தேன்;—இந்தப் புண்டரிக புரத்திடை நால் மறைகள் சூழப் பொன் அவையில் நின்று ஆடும் ஆனந்த தாண்டவம் - இந்தப்புண்டரீகபுரமென்னுஞ் சிதம்பரத்தில் நான்கு வேதங்களுஞ் சூழ்

ந்து நிற்கப் பொன்னம்பலத்தினின்றுஞ் செய்கின்ற ஆனந்த தாண்டவத்தை,—யான் கண்டு போற்றி முன்னி மகிழ்ந்து இன்றுஞ் சும் ஆறு என் சிந்தை மால் முயங்கிற்று - அடியேன் தரிசித்துத் துதித்துத் தியானித்து மகிழ்ந்து வணங்கும்படி என்னுடைய மனதில் ஆசையுண்டா யிருக்கின்றது. எ - று. (௪௦அ)

வானவர்நா யகநினது திருவுள்ளத் தருளிலரேன் மனிதர்வானோ, ரேனையயா வருமந்தத் தலமிதையந் தன்னுலுமெண்ணமாட்டார், யானுனது திருவருளுக் குரியேனின் கருணையினு லெய்தற்கெய்தா, ஞானமணி யம்பலத்தினுடகங் கண் டிறைஞ்சுநெறி நல்காயென்றான்.

(இ-ள்.) வானவர் நாயக – தேவநாயகனே,—மனிதர் வானோர் ஏனைய யாவரும் நினது திருவுள்ளத்து அருள் இலரேல் - மனிதர்களாயினும் தேவர்களாயினும் மற்றுள்ள யாவர்களாயினும் தேவரீரது திருவுள்ளத்திற் றோன்றுங் கிருபையை யடையாதவர்களாயின்,— அந்தத் தலம் இதயம் தன்னுலும் எண்ணமாட்டார் - அந்தச் சிதம்பரஸ்தலத்தை மனதினுலு நினைக்க மாட்டார்கள்,—யான் உனது திருவருளுக்குரியேன் - அடியேன் தேவரீரது திருவருளுக்குப் பாத்திரமாக வுடையவன். (ஆகையால்),—நின் கருணையினல் - தேவரீரது திருவருளினுலே,—எய்தற்கு எய்தா ஞான மணி அம்பலத்தின் நாடகம் கண்டு, இறைஞ்சும் நெறி நல்காய் என்றான் - அடையக்கூடாத ஞானமயமாகிய அழகிய திருச்சிற்றம்பலத்திற் செய்தருளுகின்ற தேவரீரது திருநிருத்தத்தைத் தரிசித்து வணங்குமார்க்கத்தையுபதேசித் தருளுகவென்று (விஷ்ணுமூர்த்தி) பிரார்த்தித்தார். எ – று. (௪௦௯)

ஆயவுரை கேட்டருளி நெடுமாலே நமக்குரிய வன்பர் நம்மை, நேயமுட னினைந்துரிய நாமமுட னங்கதையேநிகழ்த்திக்கேட்டு, மாயைவினைப் பகைநூறி யானந்தக் கடன்மூழ்கி வாழாநின்ற, தூயவறி வுடனிருப்ப ரென்ஞான்று மாசையிடைத் தொடர்புகொள்ளார்.

(இ-ள்.) ஆய உரை கேட்டருளி - விஷ்ணுமூர்த்தி விண்ணப்பஞ்செய்ததாகிய இவ்வார்த்தையைச் (சிவபெருமான்,கேட்டருளி,— நெடுமாலே - எ விஷ்ணுவே,—நமக்கு உரிய அன்பர் - நம்முடைய அடியார்கள்—நம்மை நேயம் உடன் நினைந்து - நம்மை யன்போடு தியானித்துக் கொண்டு,—உரிய நாமம் உடன் நம் கதையே நிகழ்

த்தி - நமக்குரிய நாமங்களோடு நம்முடைய சரித்திரங்களையே சொல்லிக் கொண்டும்,—மாயை வினைப்பகை நூறி - மாயாசம்பந்தத்தாலுண்டாகிய இருவினைப்பகையை யழித்தும்,—ஆனந்தக் கடல்மூழ்கி வாழாநின்ற தூய அறிவுடன் எஞ்ஞான்றும் இருப்பர் - சிவானந்தக் கடலிலமுழ்ந்தி வாழுகின்ற பரிசுத்தமாகிய ஞானத்தோடு எந்நாளும் வாழ்ந்து கொண்டிருப்பார்கள்;—ஆசை இடைத் தொடர்பு கொள்ளார் - (பிரபஞ்ச) இச்சையில் சம்பந்தப்படமாட்டார்கள். எ - று ()

உரியரெமக் கவர்தம்மி லுயர்ந்தோர்க ளொத்தோர்வே றுரைக்கவுண்டோ, வரியதிது வெனவவருக் கெஞ்ஞான்றும் யாதுமிலை யளவில்லாத, விரிவுறுமுப் புவனத்து மில்லாத பொருளேனும் விரும்புவாரேற், பெரிதுமகிழ்ந் தருளுவதே யெம்முடைய நன்னியமம் பேசுங்காலே.

(இ-ள்.) எமக்கு உரியர் - அவர்கள் நமக்குரியவர்களாவார்கள்,—அவர் தம்மில் உயர்ந்தோர்கள் ஒத்தோர் வேறு உரைக்க உண்டோ - அவர்களைப்பார்க்கினும் உயர்ந்தவர்களாவது ஒத்தவர்களாவது வேறெடுத்துச் சொல்லுதற்கு உண்டோ? (இல்லை),—அவருக்கு அரியது இது என யாதும் எஞ்ஞான்றும் இலை - அவர்களுக்கரியது இது வென்று யாதொருபொருளும் எந்நாளு மில்லை,—அளவு இல்லாத விரிவு உறும் முப் புவனத்தும் இல்லாத பொருளேனும் விரும்புவரேல் - அளவிடப்படாத விசாலம்பொருந்திய மூன்றுலகங்களிலு மில்லாத பொருளாயினும் அவர்கள் விரும்புவார்களாயின்,—பேசுங்கால் - சொல்லுமிடத்து,— பெரிதும் மகிழ்ந்து அருளுவதே எம்முடைய நல் நியமம் - மிகவும் சந்தோஷப்பட்டு அவர்கள் விரும்பியதைக் கொடுப்பதே நம்முடைய நல்ல நியமமாகும். எ அசை.

புரந்தாளு மெமக்குரிய வன்பருக்கு ளுத்தமனீ போற்றிக்கேட்ட, வரந்தாழ்வொன் றறத்தந்தோ மாதவர்வா னவர்முதலோர் மயக்குமாயை, யுரந்தாழ வக்கிரியிற் பச்சிமப் பொற் சிகரத்தி லுறைகின்றார்கள், பரந்தாம வங்கவர்தம் முடனிறைஞ்சி மன்றினடம் பார்த்து வாழ்வாய்.

(இ-ள்.) பரந்தாம - விஷ்ணுவே,—புரந்து ஆளும் எமக்குரிய அன்பருக்குள் நீ உத்தமன் - எம்மால் இரக்ஷித்து அடிமை கொள்ளப்பட்ட எம் முடைய அடியாருக்குள் நீ மேலானவன்,—நீ போற்றிக் கேட்ட வரம் ஒன்று தாழ்வு அறத் தந்தோம் - நீ நம்மைத் துதித்துக் கேட்ட வரம் ஒன்றையுங் குறைவில்லாம லுனக்குக் கொடுத்

தோம்,—மாதவர் வானவர் முதலோர் - முனிவர் தேவர் முதலானவ ர்கள்,—மாயை உரம் தாழ - தங்களைப்பற்றிய மாயையினது வலிமை கெடும்படி,—அக்கிரியின் பொன் பச்சிமசிகரத்தில் உறைகின்றார் கள் - அம்மலையினது பொன்மயமாகிய மேற்றிசைச் சிகரத்தில் வசி த்துக் கொண்டிருக்கின்றார்கள்,—அங்கு அவர் தம்முடன் மன்றின் நடம் பார்த்து இறைஞ்சி வாழ்வாய் - அவ்விடத்திற் போய் அவர்க ளோடு திருச்சிற்றம்பலத்திற் செய்யப்படும் நமது நிருத்தத்தைத் தரிசித்து வணங்கி வாழ்ந்துகொண்டிருக்கக் கடவாய். எ-று. (கக௨)

வடிவுவடி விறுதியிலா வின்பவுரு வாயுலக வாழ்க்கை யென்னே, நெடியநம துண்மைதனை நினைந்துநினைந் தனவரத நிறையானந்தப், படிவமணி யம்பலத்துட் பரமானந் தப்ப ரவை படிந்துமூழ்கி, யடிமுடிவு காணாத வானந்த தாண்ட வநின் றாடாநின்றோம்.

(இ-ள்.) வடிவு வடிவு இறுதி யிலா இன்ப உருவாய் - அழகிய உருவமும் அவ்வுருவ மழிதலு மில்லாத இன்பவடிவமாயுள்ள,— உலக வாழ்க்கை என்னே - பிரபஞ்ச வாழ்க்கையினால் வரும் பயன் யாது?—நெடிய நமது உண்மைதனை நினைந்து நினைந்து - பெருமை பொருந்திய நமது உண்மைக் குணங்களை எண்ணி எண்ணிப் பார் த்து,—அனவரதம் நிறை ஆனந்தப் படிவ மணி அம்பலத்துள் பர மானந்தப் பரவை படிந்து மூழ்கி - நாடோறும் நிறைந்த ஆனந்த வடிவமாகிய அழகிய திருச்சிற்றம்பலத்தி னிடத்துள்ள சிவானந்தக் கடலிலழுந்தி முழுகி,—அடி முடிவு காணாத ஆனந்த தாண்டவம் நின்று ஆடா நின்றோம் - முதலு முடிவு மறியப்படாத ஆனந்ததா ண்டவத்தை நிலைபெறும்படி செய்கின்றோம். எ - று. (ககரு)

எல்லையிலா னந்தநட மின்புறக்கண் டுருகியினி திருத்தி யந்தத், தில்லைநக ரிடத்துறைவோர் மனகுலங்க ளவிலக லயநோய்க, ளல்லன்மிக வருமச்ச மன்னவரா லிடுக்கலக புரி கள்கோறல், கல்லபுலி யாதியாய்வருபயங்கண் மருவினுநீ மாற்றுவாயால்.

(இ-ள்) எல்லை இல் ஆனந்த நடம் இன்பு உறக் கண்டு உருகி இனிது இருத்தி - (விஷ்ணுவே நீ நமது) அளவிடப்படாத ஆனந்த தாண்டவத்தை மகிழ்ச்சிபொருந்த தரிசித்து மனமுருகி இனிதாக வீற்றிருக்கக்கடவாய்,—அந்தத் தில்லை நகர் இடத்து உறைவோர் - அச்சிதம்பரஸ்தலத்தில் வசிப்பவர்களுக்கு,—மன ஆகுலங்கள் - மன

வருத்தங்கள்,—தீவினைகள் - பாவங்கள்,—தீய நோய்கள் - கொடியவியாதிகள்,—அல்லல் - துன்பங்கள்,—மிக வரும் அச்சம் - மிகவுமுண்டாகின்றபயம்,—மன்னவரால் இடு கலகம் - அரசர்களாலுண்டாகுங் கலகம்,—அரிகள் கோறல் - சத்துருச்களாற் கொல்லுதல்,—வல்ல புலி ஆதியாலே வருபயங்கள் - வலிமை பொருந்திய புலி முதகொடிய மிருகங்களாலுண்டாகு மச்சங்கள்,—மருவினும் - வந்தாலும்,—நீ மாற்றுவாய் - நீ அவைகளை நீக்கக்கடவாய். ஆல் அசை.()

கண்டிகைநீ றணிந்துநம தியல்பாடி யெம்மையே கருதி
யேற்ற, தொண்டுபுரி தொண்டருக்கோ ரிடையூறுண் டானு
லுந் தூயநேயங், கொண்டதனை யொழித்தந்தத் தலம்புரக்கு
மியல்புனக்குக் கொடுத்தோமென்று, ணண்டமெலாமுன்னாளி
ளன்னவனே புரந்தளிக்க வருளுமண்ணல்.

(இ-ள்.) முன் நாளில் அன்னவனே அண்டம் எலாம் புரந்து அளிக்க அருளும் அண்ணல் - முன்னொருநாளில் அந்த விஷ்ணுமூர்த்தியையே அண்டங்களெல்லாவற்றையுங் காத்து ரக்ஷிக்கும்படியான தொழிலைக்கொடுத்தருளிய நடேசப்பெருமான் (அவ்விஷ்ணுமூர்த்தியைப் பார்த்து).—கண்டிகை நீறு அணிந்து - உருத்திராக்ஷமாலையையும் விபூதியையுந் தரித்து,—நமது இயல் பாடி - நம்முடைய தன்மைகளை யெடுத்துப் பாடி,—எம்மையே கருதி - நம்மையேதியானித்து,—ஏற்ற தொண்டு புரி தொண்டருக்கு - நமக்கிசைந்த திருத்தொண்டுகளைச்செய்யு நமது அடியார்களுக்கு.—ஓர் இடையூறு உண்டானாலும் - ஒரு துன்பமுண்டானாலும்,—தூய நேயம் கொண்டு - பரிசுத்தம் பொருந்திய அன்புடனே,—அதனை ஒழித்து - நீ அதை நீக்கி,—அந்தத் தலம் புரக்கும் இயல்பு உனக்குக் கொடுத்தோம் என்றான் - அச்சிதம்பரஸ்தலத்தைக் காக்குந் தன்மையை உனக்குக் கொடுத்தோம் என்று திருவாய்மலர்ந்தருளினார். எ - று.

வே று.

அளவைக் கரியா னருள்செய் திட மால்
வளரற் பொடுமூ வலம்வந் தளவேன்
முளரிப் பதம்வைத் தெதிர்பன் முறைவெம்
பளகற்றிம் மாறு பணிந்து தொழா.

(இ-ள்.) அளவைக்கு அரியான் அருள் செய்திட - வேதாகமமுதலிய அளவைப் பிரமாணங்களா லளவிட்டறிதற்கரியவராகிய நடேசப்பெருமான் இவ்விதமாகத் திருவாய்மலர்ந்தருள,—மால் -

(அப்பொழுது) மகாவிஷ்ணுமூர்த்தியானவர்,—வள்ர் அற்பு ஒடு மூவலம் வந்து - தம் மனதினிடத்து வளருகின்ற அன்போடு மூன்றுமுறை பிரதக்ஷிணஞ் செய்து,—உள மேல் முளரிப்பதம் வைத்து - தம் மனதினிடத்தே (அந்நடேசப்பெருமானது) செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைப் பதித்துத் தியானித்து,—வெம் பளகு அற்றிடும் ஆறு எதிர் பன்முறை பணிந்து தொழா - கொடிய குற்றம் நீங்கும்படி சந்நிதானத்திற் பலமுறை நமஸ்கரித்து வணங்கி, எ - று. (௧௧௫)

விழியிற் பொழிநீர் வியன்மார் பகலம்
வழியப் புளகம் மருவச் செயலு
மழியக் களிவந் தடையத் தளர்நா
மொழிபெற் றருள்கூர் மொழியான் மொழிவான்.

(இ-ள்.) விழியில் பொழிநீர் வியன் மார்பகலம் வழிய - கண்களிலிருந்து பொழிகின்ற ஆனந்த பாஷ்பம் விசாலம் பொருந்திய மார்பினிடத் தொழுகவும்,—புளகம் மருவ - சரீரத்திற் புளகமுண்டாகவும்,—செயலும் அழிய - தற்செயல் நீங்கவும்,—களி வந்து அடைய - மகிழ்ச்சி யுண்டாகவும்,—நா மொழி தளர் பெற்று - நாவினாற் சொல்லுஞ் சொற்கள் குளறப் பெற்றும்,—அருள் கூர் மொழியான் மொழிவான் - கிருபை மிகுந்த சொல்லினால் விண்ணப்பஞ் செய்வார்; எ - று. (௧௧௬)

முன்னே புவனம் முழுதும் புரவென்
றுன்னே ரருளா லுரைசெய் துலகிற்
றன்னே ரவைசூழ் தலனுங் குலவும்
பொன்னே றனையாய் புரவென் றனையால்.

(இ-ள்.) பொன் குலவும் ஏறு அனையாய் - அழகுபொருந்திய ஆண் சிங்கம் போன்ற எமது பகவானே!—முன்னே - முன்னொரு நாளில்,—புவன முழுதும் புர என்று உன் எர் அருளால் உரை செய்து - சகல புவனங்களையுங் காக்கக்கடவாய் என்று தேவரீரது அழகிய திருவருளினால் திருவாய் மலர்ந்தருளி,—உலகில் தன் எர் அவை சூழ் தலனும் புர என்றனை - இவ்வுலகத்தின்கணுள்ள தனக்குத்தானே ஒப்பாகிய கனகசபையைச் சூழ்ந்திருக்கின்ற சிதம்பரஸ்தலத்தையுங் காக்கக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளினீர். எ-று. ஆல் அசை. (௧௧௭)

மலையஞ் சிகரத் தொளிர்மன் றிடையுன்
னிலயந் தனிகண் டடிநின் றனனித்
தலமெண் ணருமத் தலனங் கதெலா
மலைவொன் றறவெற் கருள்செய் தனையால்.

(இ-ள்.) மலை அம் சிகரத்து ஒளிர் மன்றிடை - அம்மலையினது அழகிய சிகரத்தில் விளங்கிக்கொண்டிருக்கின்ற கனகசபையினிடத்தே,—உன் தனி நிலயம் கண்டு அடி நின்றனன் - தேவரீரது ஒப்பில்லாத ஆலயத்தைத் தரிசித்துக்கொண்டு அதன் கீழேநின்றேன்,- இத்தலம் - இச்சிதம்பரஸ்தலமும்,—எண் அரும் அத்தலன் - அளவிடுதற்கரிய மற்றஸ்தலங்களும்,—அது எலாம் மலைவு ஒன்று அற எற்கு அருள் செய்தனை - ஆகிய அந்தஸ்தலங்களின் மகிமைகள் எல்லாவற்றையும் யாதொரு சந்தேகமுமில்லாமல் அடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளினீர். எ - று. அங்கு ஆல் அசைகள். (கககூ)

உன்போ லெனக் குடையா ரெவரோ
வென்போ லுனக் கினியா ரெவரோ
துன்போ டவிளங் கியதொண் டருணின்
னன்போ கையோடென்னி லடைந்த வர்யார்.

(இ-ள்.) உன் போல எனக்குடையார் எவர் - தேவரீரைப்போல் அடியேனை அடிமையாகவுடையவர் யாவரிருக்கின்றார்,—என்போல உனக்கு இனியார் எவர் - அடியேனைப்போல் தேவரீரிடத்து அன்புடையவர் யாவரிருக்கின்றார்,—துன்பு ஒட விளங்கியநின் தொண்டருள் - துன்பமானது நீங்கும்படி விளங்கிய தேவரீரது அடியார்களுள்,—அன்பு உவகை யோடு என்னில் அடைந்தவர் யார் - அன்போடும் மகிழ்ச்சியோடும் அடியேனைப் போலத் தேவரீரது திருவடியை அடைந்தவர் வேறு யாவர்? எ - று. (கஉ0)

என்னு வுரையா விருளாய் வெளியாய்
முன்னாய் நடுவாய் முடிவா யடியா
ருன்னு வுணர்வா முடையா னியல்பா
நன்னு மகவிற் றநயந் தனனால்.

(இ-ள்.) என்னு உரையா - என்று விண்ணப்பஞ் செய்து,—இருளாய் வெளியாய் முன்னாய் நடுவாய் முடிவாய் - இருளாயும் வெளியாயும் முதலாயும் நடுவாயும் முடிவாயும்,—அடியார் உன்னும் உணர்வாம் உடையான் - அடியார்களால் தியானிக்கப்படும் ஞானப்

பொருளாயுமுடைய நடேசப்பெருமானது,—இயல்பிராம் நல் நாமம் நவிற்ற நயந்தனன் - இயல்பாகிய நல்ல திருநாமங்களை யெடுத்துத் துதித்தற்கு விரும்பினர் விஷ்ணுமூர்த்தி. எ - று, ஆல் அசை. ()

தேவா திபர்தந் தேவே சரண
மூவா மலையாண் முதல்வா சரண
மேவா தவர்பான் மேவாய் சரணம்
பூவா ளியடும் புனிதா சரணம்.

(இ-ள்.) தேவ அதிபர் தம் தேவே சரணம் - தேவர்களுக்குத் தலைவர்களாகிய தேவர்களுடைய தேவனே உமக்கடைக்கலம்,—மூவா மலையாள் முதல்வா சரணம் - கெடுதலில்லாத பர்வதராஜகுமாரத்தியாகிய சிவகாமியம்மையாருடைய நாயகரே உமக்கடைக்கலம்,-மேவாதவர்பால் மேவாய் சரணம்-தேவரீரிடத்து வந்து சரணடையாதவரிடத்துச் செல்லாதவரே உமக்கடைக்கலம்,—பூவாளி அடும் புனிதா சரணம் - புட்ப பாணத்தையுடைய மன்மதனைக் கொன்றருளிய பரிசுத்தமுடையவரே உமக்கடைக்கலம். எ - று. (௧௨௨)

கருவே யுலகின் கண்ணே சரண
மருவே யுருவே யறிவா ரறிவின்
மருவே சடைமேன் மதியா யிமையோர்
திருவே மறையின் றெளிவே சரணம்.

(இ-ள்.) கருவே சரணம் - உலகத்துக்குக் கருவாயுள்ளவரே சரணம்,—உலகின் கண்ணே சரணம் - உலகத்துக்கு நேத்திரமாயுள்ளவரே சரணம்,—அருவே சரணம் - அருவமாயுள்ளவரே சரணம்,—உருவே சரணம் - உருவமாயுள்ளவரே சரணம்,—அறிவார் அறிவின் மருவே சரணம் - அறிவுடையவர்களுடைய அறிவினிடத்தே பொருந்தி யிருப்பவரே சரணம்,—சடைமேல் மதியாய் சரணம் - சடையின்மேல் சந்திரனைத் தரித்தவரே சரணம்,—இமையோர் திருவே சரணம் — தேவர்களுக்குச் செல்வமாயுள்ளவரே சரணம்,—மறையின் தெளிவே சரணம் - வேதத்தின் தெளிபொருளாயுள்ளவரே சரணம். எ - று. (௧௨௩)

எந்தாய் புரமூன் றெரிசெய் தருளத்
தந்தாய் சரணந் தலைவா சரண
நந்தா பரமா னந்தா சரணஞ்
சிந்தா மணியே சிவனே சரணம்.

(இ-ள்.) எந்தாய் சரணம் - எமது பிதாவே சரணம்,—புரம்மூன்று எரிசெய்தருளத் தந்தாய் சரணம் - திரிபுரத்தை எரித்தருளினவரே சரணம்,—தலைவா சரணம்-எப்பொருட்குந் தலைவரே சரணம்,-நந்தா பரம ஆனந்தா சரணம் - கெடுதலில்லாத மேலான ஆனந்தத்தையுடையவரே சரணம்,—சிந்தா மணியே சரணம் - சிந்தாமணி போன்றவரே சரணம்,—சிவனே சரணம்-சிவபெருமானே சரணம்.

அத்தா வனைவர்க் குமகிழ்ந் தருள்கூர்
சித்தா சரணஞ் சிவசம் புவெனு
முத்தா சரணம் முதல்வா சரணம்
வித்தாய் விளைவாய் விரிவாய் சரணம்.

(இ-ள்.) அத்தா சரணம் - பிதாவே சரணம், —அனைவர்க்கும் மகிழ்ந் தருள் கூர் சித்தா சரணம்- எல்லாரும் மகிழும்படி கிருபை மிகுந்த சித்தரூபங்கொண்டவரே சரணம்,—சிவ சம்பு என்னும் முத்தாசரணம் - சிவ சம்பு என்று சொல்லுகின்ற திருநாமத்தையுடைய மலமுத்தரே சரணம்,—முதல்வா சரணம் – முதல்வரே சரணம்,—வித்தாய் சரணம் - உலகங்களுக்கு வித்தாயுள்ளவரே சரணம்,—விளைவாய் சரணம் - அவ்வித்தினிடத்திருந்து விளைபொருளாயுள்ளவரே சரணம்,—விரிவாய் சரணம் - உலகங்களெவ்விடத்தும் வியாபித்திருப்பவரே சரணம். எ - று. (௧௨௫)

புகலற் றுணர்பொற் பொதுவென் றுணர்சிற்
கனத் துறைமா ககனச் சுடரா
மிகலற் றநடத் திறைவா சரண
நிகரற் றிலகு நிமலா சரணம்.

(இ-ள்.) புகல் அற்று உணர் பொன் பொது என்று உணர் சித்கனத்து உறை - வாக்குக்கெட்டாத மௌனநிலையினின்றறியத்தக்க கனகசபையென்று பெரியோர்கள் அறிகின்ற சிதம்பரத்தினிடத்தி லெழுந்தருளி யிராநின்ற,—மா ககனச் சுடர் ஆம் - பரமாகாச வொளியாகிய,—இகல் அற்ற நடத்து இறைவா சரணம்-மாறுபடாத திருநிருத்தத்தைச் செய்தருளா நின்ற தலைவரே சரணம்,—நிகர் அற்று இலகு நிமலா சரணம் - ஒப்பில்லாமல் விளங்குகின்ற மலமுத்தரே சரணம். எ - று. (௧௨௬)

ஆறூர் சடையா யமலா சரண
மீறுய் முதலா யெளிதா யரிதாய்
வேறா யுடனாய் விரிவாய் சரணந்
தேறா வுணர்வார் செயலே சரணம்.

(இ-ள்.) ஆறு ஆர் சடையாய் சரணம் - கங்கைபொருந்திய சடையையுடையவரே சரணம்,—அமலா சரணம் - மலமுத்தரே சரணம்,—ஈருய் முதலாய் எளிதாய் அரிதாய் வேருய் உடனுய் விரிவாய் சரணம் - அந்தமாயும் ஆதியாயும் யாவராலுந் தரிசித்தற் கெளியவராயும் அரியவராயும் எல்லாவற்றிற்கும் வேருயும் அவற்ருேடு சம்பந்தமுடையவராயும் எங்கும் வியாபித்திருப்பவராயுமுள்ளவரே சரணம்,—தேருர் உணர்வு ஆர் செயலே சரணம் - தெளியாதவர்களுடைய அறிவினிடத்தே பொருந்திய காரியசொரூபியே சரணம். எ - று. (௧௨௭)

குரவா பழையாய் குழகா சரணம்
பரவா தியர்தம் படிறே சரண
மரவா பரணு வடியே னையுநீ
புரவா யடியேன் றனைமுன் புகழா.

(இ-ள்.) குரவா சரணம் - ஆசாரியவடிவாயெழுந்தருளினவரே சரணம்,—பழையாய் சரணம் - அநாதியாயுள்ளவரே சரணம்,—குழகாய் சரணம் - குழகனென்னுந் திருநாமத்தையுடையவரே சரணம்,—பரவாதியர்தம் படிறே சரணம் - புறச்சமயவாதிகளுக்குப் பொய்ப்பொருளாயுள்ளவரே சரணம்,—அரவா பரணு சரணம் - சர்ப்பாபரணத்தையுடையவரே சரணம்,—அடி நீ அடியேனையும் புரவாய் என்று - சுவாமிகாள் தேவரீர் அடியேனையுங் காத்தருளும் என்று துதித்து,—அனை முன் புகழா - உலகமாதாவாகிய பார்வதிதேவியாருடைய சந்நிதானத்திலும் போய்த்துதித்து. எ - று. (௧௨௮)

அன்னை யென்பது அனை யென இடைக்குறையாய் வந்தது.

என்றின் னனபன் னியிறைஞ் சுதலுந்
துன்றுஞ் சுடர்மன் றுறுதூ யநடஞ்
சென்றன் பொடுகா ணுதிசேர் தியெனு
வன்றன் புறுமா றருள்செய் தனனால்.

(இ·ள்.) என்று இன்னன பன்னி இறைஞ்சுதலும் - என்று இவை போல்வனவாகிய பலதோத்திரங்களைச் சொல்லி விஷ்ணுமூர்த்தியானவர் வணங்கவும்,—துன்றும் சுடர் - நெருங்கிய சோதிசொரூபியாகிய சிவபெருமான்,—மன்று உறு தூய நடம் அன்பொடு சென்று காணுதி சேர்தி எனு - கனகசபையினிடத்தே பொருந்திய பரிசுத்தமாகிய நமது நிருத்தத்தை அன்போடு போய்த் தரிசித்து வரக்கடவாய் என்று,—அன்று அன்பு உறுமாறு அருள்செய்தனன் -

அப்பொழுது அன்பு பொருந்தும்படி திருவாய் மலர்ந்தருளினார். எ - று. ஆல் அசை. (௧௨௧)

விடையா னருளால் விடைபெற் றுவரைப்
புடையா யறவோர் புத்தேளிர் நலம்
படையா வரவந் தணிபைந் துளவத்
தொடையா னெழினன் னெறிதுன் னினனால்.

(இ-ள்.) அணி பைந் துளவத் தொடையான் - அழகிய பசிய துளபமாலையை யணிந்த விஷ்ணுமூர்த்தியானவர்,—விடையான் அருளால் விடை பெற்று - இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவருளால் அநுமதி பெற்றுக்கொண்டு,—வரைப்புடை ஆய் அறவோர் புத்தேளிர் நலம் படையா வர - அம்மலையினிடத்துள்ள சாஸ்திரங்களை ஆராய்கின்ற முனிவர்களுந் தேவர்களும் நல்ல சேனைகளாய் வர,—நல் நெறி துன்னினன் - நல்ல வழியிற் செல்லுவாராயினார். எ - று. ஆல் அசை. (௧௨௨)

தனதன் பொடுநற் றலமுந் நதியும்
வனமுங் கிரியும் மகிழ்வா லொருவிக்
கனகந் திகழ்மன் றுறுகண் ணகர்வா
யனகம் பெறுமா றணைகின் றனனால்.

(இ-ள்.) தனது அன்பொடு - தனது விருப்பத்தோடு,—நல் தலமும் நதியும் வனமும் கிரியும் மகிழ்வால் ஒருவி - நல்லஸ்தலங்களையும் நதிகளையும் காடுகளையும் மலைகளையுஞ் சந்தோஷத்தோடு கடந்து,—கனகம் திகழ் மன்று உறு கண் நகர்வாய் - பொற்பிரகாசம் பொருந்திய திருச்சிற்றம்பலத்தைத் தன்னிடத்துடைய சிதம்பரத்தினிடத்தே,—அனகம் பெறு மாறு அணைகின்றனன் - ஆணவமல நீங்கி மோக்ஷத்தை யடையும்படி வந்து சேர்ந்தார். எ-று. ஆல் அசை.

அடிநா டியவா னமரா திபரு
முடியா மறைதேர் முனிவோர் கிளையுங்
கடியார் துளவத் தொடைசேர் கலுழக்
கொடியான் வரவந் தெதிர்கொண் டனரால்.

(இ-ள்.) அடி நாடிய வான் அமராதிபரும் - (நடேசப்பெருமானுடைய) திருவடிகளைத் தேடுகின்ற மேன்மை பொருந்திய சுவர்க்க லோகவாசிகளாகிய தேவர்களும்,—முடியா மறை தேர் முனிவோர் கிளையும் - முடிவில்லாத வேதத்தை ஆராய்த்தக்க முனிவர்

கூட்டங்களும்,—கடி ஆர் துளவத் தொடை சேர் கலுழக்கொடியான் வர - வாசனை பொருந்திய துளபமாலையை யணிந்த கருடக் கொடியையுடைய விஷ்ணுமூர்த்தியானவர் சிதம்பரத்தினிடத்து வர,—வந்து எதிர் கொண்டனர் - தாங்கள் வந்து எதிர்கொண்டு அழைத்துக்கொண்டு போனார்கள். எ - று. (௩௯௨)

சீலத் தவர்சூழ் சிவகங் கைபடிந்
தாலத் தருநீ ழலமர்ந் துறையு
மூலப் பதிமுன் னவன்முன் னர்மகிழ்ந்
தேலப் பணிவுற் றெழிலோ டகலா.

(இ ள்.) சீலத்தவர் சூழ் சிவகங்கை படிந்து - (அவ்விஷ்ணுமூர்த்தியானவர்) பரிசுத்தர்களாகிய பெரியோர்கள் வசிக்கின்ற சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து,—ஆலத் தரு நீழல் அமர்ந்து உறையும் மூலப்பதி முன்னவன் முன்னர் - ஆலமரத்தி னிழலி லெழுந்தருளியிருக்குந் திருமூலட்டானேசுரருடைய சந்நிதானத்தில் வந்து,—மகிழ்ந்து ஏலப் பணிவுற்று - சந்தோஷத்தோடு பொருந்தும்படி நமஸ்கரித்து,—எழிலோடு அகலா - அழகோடு அவ்விடத்தைவிட்டு நீங்கி.

மண்டா வியமான் மறைமா முடிவொன்
றுண்டா மெனவோ தியவோ ரொளிவா
னண்டா திபர்சூ ழவைநின் றிலகக்
கண்டா னெதிர்கண் கள்களித் தனனால்.

(இ-ள்.) மண் தாவிய மால் - பூமியைத் தாண்டியளந்த விஷ்ணுமூர்த்தியானவர்,—மறை முடிவு ஒன்று உண்டாம் என ஓதிய ஓர் ஒளி - வேதத்தினது பெரிய முடிவு ஒன்று இருக்கின்றதென்று சொல்லிய ஒப்பில்லாத சோதி சொரூபராகிய நடேசமூர்த்தியானவர்,—வான் அண்டாதிபர் சூழ் அவை நின்று இலக எதிர்கண்டான் - பெருமை பொருந்திய தேவர்கள் முதலானவர்கள் சூழும்படி கனகசபையினிடத்து நின்று பிரகாசித்துக்கொண்டிருத்தலை எதிரே நின்று தரிசித்தவராய்,—கண்கள் களித்தனன் - நேத்திரானந்தத்தை யடைந்தார். எ - று. ஆல் அசை. (௩௯௪)

சண்டா னருளின் கடன்மா நடமுட்
கொண்டான் மனமும் விழியுங் குளிரத்
தண்டா வருளே தலைவா நிலைகூ
ரண்டா திபவென் றெதிர்நின் றறையா.

(இ-ள்.) அருளின் கடல் மா நடம் - கிருபாசமுத்திரமாகிய நடேசப்பெருமானது பெருமை பொருந்திய திருநிருத்தத்தை,—உட்கொண்டு - மனதிற் கொண்டு தியானித்து,—மனமும் விழியும் குளிரக் கண்டான் - மனமுங் கண்களுங் களிக்கும்படி தரிசித்தவராய்,—தண்டா அருளே தலைவா - நீங்காத கிருபைக்குத்தலைவரே!—நிலைகூர் அண்டாதிப - நிலைமைபொருந்திய அண்டங்களுக்குத்தலைவரே!—என்று எதிர் நின்று அறையா - என்றிந்தப்பிரகாரம் சந்நிதானத்தினின்று ஸ்தோத்திரஞ் செய்து. எ - று. (௩௬௫)

அன்பா லுருகா வவசம் பெருகா
வென்பா லருணல் கினையென் றுதொழா
முன்பா ரிமையோர் முனிவோ ருடன்மா
றென்பா லெதிர்நின் றுதிளைத் ததனல்.

(இ-ள்.) மால் - விஷ்ணுமூர்த்தியானவர்,—பார் - பூமியினிடத்தில்,—தென்பால் எதிர் - தென்றிசை நோக்கிய நடேசப்பெருமானது சந்நிதானத்தில்,—இமையோர் முனிவோருடன் நின்று திளைத்து - தேவர்களோடு முனிவர்களோடு நின்று நிருத்தானந்தத்தை யனுபவித்து,—அதனல் அன்பால் உருகா - அதனல் அன்போடு மனமுருகி,—அவசம் பெருகா - மூர்ச்சையடைந்து,—என்பால் அருள் நல்கினை என்று முன் தொழா - அடியேனுக்குக்கிருபையைப் பாலித்தருளினீரென்று சந்நிதானத்தில் வணங்கி.எ-று. ஆல் அசை.

கலையா லுறைவண் கதிர்சூ ழுலகி
னிலையா யயரம் பலநீள் பதிவா
யுலையா தொளிர்தன் னுருவா லுறைவ
னலையாழி விடா தமர்மா யவனே.

(இ-ள்.) அலை ஆழி விடாது அமர் மாயவனே-அலைகளையுடைய திருப்பாற் கடலினிடத்தே இடைவிடாது வீற்றிருக்கின்ற விஷ்ணுவே,—கலை உறை வண் கதிர் சூழ் உலகில் - கிரணங்கள் பொருந்திய வளப்பத்தையுடைய சூரியன் பிரதக்ஷிணஞ் செய்கின்ற இவ்வுலகத்தில்,—நிலையாய் அயர் அம்பல நீள் பதிவாய் - நிலைபெற்றுவிளங்காநின்ற திருச்சிற்றம்பலமென்று சொல்லப்பட்ட பெரிய சிதம்பரஸ்தலத்தினிடத்தில்,—உலையாது ஒளிர் தன் உருவால் உறைவன்- அழியாது விளங்குகின்ற தன் சுயரூபத்தோடு வீற்றிருப்பர். எ - று; ஏ அசை. (௩௬௭)

இதுமுன் னெருவர்க் குமிசைத் திலநின்
மூதிரன் பதுகண் டுமொழிந் தனமா

லதிகந் திகழ்வே தமளப் பிலவுட்
பொதிகின் றதருட் பெருகும் பொருளால்.

(இ-ள்.) யாம் இது முன் ஒருவர்க்கும் இசைத்திலம் - (சைமினியே) நாம் இதை முன்னொருவருக்குஞ் சொன்னோமில்லை,--முதிர் அன்பது கண்டு - உன்னிடத்துள்ள அன்பின் மேலீட்டை நாமறிந்து,—அதிகம் திகழ் வேதம் அளப்பு இலஉள் பொதிகின்றது அருள் பெருகும் பொருளால் மொழிந்தனம்-மேலாக விளங்குகின்ற வேதத்தினிடத்தில் அளவிடப்படாத உண்மை நிறைந்ததாகிய கிருபை மிகுந்த பொருள்களையறிந்த தன்மையினா லுனக்குச் சொன்னோம்.()

ஐயஞ் சிறி தில்லை யறைந் தனவுட்
கையிங் கிதுவே கதியெய் தமகிழ்ந்
துய்யும் பொழுதென் னவுரைத் தனனன்
மொய்யன் யருள்கூர் முனிபுங் கவனே.

(இ-ள்.) மொய் அன்பு அருள் கூர் முனி புங்கவனே - பொருந்திய அன்பும் அருளு மிகுந்திருக்கின்ற முனிசிரேஷ்டனே,—அறைந்தன உட்கை - எம்மாற் சொல்லப்பட்ட இவைகளை உன் மனதிற் கொள்ளக்கடவாய்,—மகிழ்ந்து - சந்தோஷித்து,—உய்யும் பொழுது- நீ கடைத்தேறுங்காலத்தில்,—இங்கு கதி எய்த இதுவே - இவ்விடத்து மோக்ஷமடையுமார்க்க மிதுவே யாகும்,—ஐயம் சிறிது இல்லை என்ன உரைத்தனன் - இதற்குச் சந்தேகங் கொஞ்சமுமில்லை என்று வியாசமுனிவர் சைமினிமுனிவருக்குச் சொல்லியருளினார். எ - று. ஆல் அசை. (௧௩௩)

திருச்சிற்றம்பலச்சருக்கமுற்றிற்று.

பாயிரம் உள்படச் சருக்கம் - அ - க்குத் திருவிருத்தம் ௬௬௫.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது.

# சமாதிச்சருக்கம்.

மாவுலா வியமார்ப னகமகிழத் திகழ்கயிலை மலையிருந்து,
தேவர்தே வருள்செய்த திருச்சிற்றம் பலத்துண்மை செப்ப
வென்றால், யாவரே வல்லாதி லறிந்தவா தொகுத்துமொழிந்
தப்பால் வேத, மேவுநா வியாதனட நினைந்துபர வசமடைந்த
வியப்புஞ் சொல்வாம்.

(இ-ள்.) மா உலாவிய மார்பன் அகம் மகிழ - சிரீதேவி பொருந்திய மார்பை யுடைய விஷ்ணுமூர்த்தியானவர் மன மகிழும்படி,— திகழ் கைலை மலை இருந்து - விளங்காநின்ற திருக்கைலாசமலையிலிருந்து;—தேவர் தேவு அருள் செய்த - தேவர்களுக்குத் தேவனாகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய,- திருச்சிற்றம்பலத்து உண்மை - திருச்சிற்றம்பலத்தினது மகிமையை,—செப்ப என்றால் - சொல்லவேண்டுமென்றால்,—யாவரே வல்லர் - எவர்களெடுத்துச் சொல்ல வல்லவர்கள்,—அதில் அறிந்த வா தொகுத்து மொழிந்து - (அங்ஙனமாயினும் அடியேன்) அதில் அறிந்தபடி ஒருவாறு தொகுத்துச் சொல்லி,—அப்பால் - அதன் பின்,—வேதம் மேவும் நா வியாதன் - வேதங்கள் பொருந்திய நாவையுடைய வியாசமுனிவர்,- நடம் நினைந்து பரவசம் அடைந்த வியப்பும் சொல்வாம் - நடேசப் பெருமானுடைய திருநிருத்தத்தைத் தியானித்துப் பரவசமடைந்த மேன்மையை எடுத்துச் சொல்வாம். எ - று. (க)

இன்னவகை சயிமினிமா முனிவனுக்கங் கருள்புரியு
மிந்து வேணி, முன்னவன தருளுடைய பராசரன்மா தவமை
ந்தய முனிவர் கோமான், றன்னிகராம் புண்டரிக புரப்பெ
ருமை நினைந்துள்ளந் தழையா நிற்கு, நன்னெடுநே யந்தன்
ஞ லாராமை மீக்கொள்ள நவிற்றுகின்றான்.

(இ-ள்.) இன்ன வகை மா சைமினி முனிவனுக்கு அங்கு அருள்புரியும் - இந்தப் பிரகாரம் பெருமை பொருந்திய சைமினிமுனிவருக்கு அவ்விடத்தில் திருவாய் மலர்ந்தருளிய,—இந்து வேணி முன்னவனது அருள் உடைய பராசரன் மா தவம் அனைய முனிவர் கோமான் - சந்திரனையணிந்த ஜடையையுடைய முதல்வராகிய சிவபெருமானது திருவருளைப்பெற்ற பராசரமுனிவருடைய பெரிய தபோபலம் போலப் பிறந்த புத்திரரும் முனிவர் பெருமானுமாகிய வியாசமுனிவர்,—தன் நிகர் ஆம் புண்டரிக புரப் பெருமை நினைந்து - தனக்குத் தானே ஒப்பாகிய புண்டரீக புரமென்று சொல்லப் பட்ட சிதம்பரத்தினது மகிமையைத் தியானித்து,—உள்ளம் தழை யாநிற்கும் நல் நெடும் நேயம் தன்னால் - மனதினிடத்தே செழித் தோங்குகின்ற மிக்க நல்ல விருப்பத்தோடு,—ஆராமை மீக் கொள்ள நவிற்றுகின்றான் - ஆராமையானது அதிகரிக்க அதனால், சொல்லு கின்றார். எ - று. (உ)

அற்புதமற் புத மந்தோ வந்தோவென் சொல்கேனிவ் வகிலத்துள்ளோர், விற்பொலியும் விளக்கதனைக் கைப்பிடித் தாழ் கூவலிலே வீழ்வ ரானற், சொற்பொலியுஞ் சுருதிசிவா கமம்புரா ணங்கண்டுந் துதிக்கக் கேட்டும், பொற்பொதுவி னியல்பறியா மூடரவர் விலங்கினத்தைப் போல்வ ரன்றே.

(இ-ள்.) இ அகிலத்து உள்ளோர்-இவ்வுலகத்திலுள்ளவர்கள்,—வில் பொலியும் விளக்கதனைக் கைப் பிடித்து ஆழ் கூவலிலே வீழ்வர் ஆனல் - ஒளியினாற் பிரகாசிக்கின்ற தீபத்தைக் கையிற் பிடித்துக் கொண்டு ஆழமாகிய கிணற்றில் விழுந்து விடுவர்களானல்,—என் சொல்கேன் - இவர்தன்மையை என்னசொல்லுவேன் (அது போல),—பொன் பொதுவின் இயல்பு - கனகசபையின் தன்மையை,—சொல் பொலியும் சுருதி சிவாகமம் புராணம் கண்டும் துதிக்கக் கேட்டும் - சொற்களால் விளங்குகின்ற வேதங்களும் சிவாகமங்களும் புராணங்களும் தரிசித்தலையும் ஸ்தோத்திரஞ் செய்தலையும், கேள்வியுற்றும்,—அறியா மூடர் - அறியாத மூடர்கள்,—அவர் விலங்கு இனத்தைப் போல்வர்-அவர்கள் மிருகஜாதியை ஒப்பாவார்கள்,—அந்தோ அந்தோ அற்புதம் அற்புதம் - ஐயோ, ஐயோ, இது ஆச்சரியம்! ஆச்சரியம்!!! எ - று. அன்று ஏ அசைகள். (௩)

மரங்கரஞ்சூ கரனுமலி யொட்டகமா தியகண்டு மண்ணோர் தில்லைப், பரங்கருணை யுருவாகிச் சிற்பரா னந்தநடம் பயிலா நின்ற, புரங்கதியின் பொருட்டாக நினைந்தடைந்து கேட்டுரு

காப் புன்மை கண்டிங், கிரங்கிடுமென் னுளமிந்த மானிடர்க ளெவ்வண்ண முய்வ ரென்றே.

(இ-ள்.) மரம் கரம் சூகரம் ஞமலி ஒட்டகம் ஆதிய கண்டும் - மரம் கழுதை பன்றி நாய் ஒட்டை முதலான ஓரறிவுமுதல் ஐயறிவு வரையுமுள்ள ஜெந்துக்கள் மோக்ஷமடைந்திருத்தலை அறிந்திருந்தும்,—மண்ணோர் - இப்பூமியினிடத்துள்ள மனிதர்கள் (ஆறறிவுடையர்களாயிருந்தும்),—தில்லைப் பரம் - தில்லைவனமாகிய சிதம்பரத்தின்கணெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமான்,—கருணை உருவாகிச் சித் பர ஆனந்த நடம் பயிலா நின்ற புரம் - திருவருள் வடிவாகி ஞானமயமாகிய மேலான ஆனந்த தாண்டவஞ் செய்தருளாநின்ற சிதம்பரத்தை,—கதியின் பொருட்டாக நினைந்து அடைந்து கேட்டு உருகாப் புன்மைகண்டு - மோக்ஷமடையும் பொருட்டுத்தியானித்து அந்த ஸ்தலத்தை யடைந்து (அதன்மகிமைகளைக்) கேட்டு மனமுருகாத அற்பத்தன்மையைப் பார்த்து,—எவ்வண்ணம் உய்வர் என்று இங்கு என் உளம் இரங்கிடும் - இவர்கள் எவ்விதம் கடைத்தேறுவர்களென்று இப்பொழுது என் மனம் வருந்துகின்றது. எ-று.

சாத்திரமெண் ணிலபயில்வர் மகங்களள விலபுரிவர் தவங்கள் செய்வர், தீர்த்தமவை யடைந்துகுடைந் திடுவர்க ளிந்நெறிதவறாச் செய்கை பூண்டு, நெத்திரமூன் றுடையபிரான் பொன்றாவு மன்றாட னீங்காதோங்கு, மாத்தலனிற் பெருமையறி யாரவர்க ளஞ்ஞானம் வரம்புண் டாமோ.

(இ-ள்.) எண்ணில சாத்திரம் பயில்வர் - அளவில்லாத சாஸ்திரங்களிற் பழகுகின்றவர்களும்,—அளவு இல மகங்கள் புரிவர் - அளவில்லாத யாகங்கள் செய்கின்றவர்களும்,—அளவு இல தவங்கள் செய்வர் - அளவில்லாத தவங்கள் செய்கின்றவர்களும்,—அளவில தீர்த்தம் அவை அடைந்து குடைந்திடுவர் - அளவில்லாத தீர்த்தங்களை யடைந்து ஸ்நானஞ் செய்கின்றவர்களும்,—இந் நெறி தவறாச் செய்கை பூண்டும் - இம்மார்க்கங்களிற் றவறாத நற்செய்கையையடைந்தும்,—நேத்திரம் மூன்று உடைய பிரான் பொன் தாவு மன்று ஆடல் நீங்காது ஓங்கும் - மூன்று கண்களையுடைய நடேசப்பெருமான் பொற்பிரகாசம் பொருந்திய கனகசபையினிடத்திற் செய்யப்படுந் திருநிருத்தமானது ஒழியாது விளங்குகின்ற,—மாத்தலனின் பெருமை அறியார் - மகத்துவம் பொருந்திய அச்சிதம்பரஸ்தலத்தின் பெருமையை அறியாதவர்கள்,—அவர்கள் அஞ்ஞா

ணம் வரம்பு உண்டாமோ - அவர்களுடைய அறியாமைக்கு எல்லையு ண்டாகுமோ? உண்டாகாது. எ - று. (௫)

பசையகன்ற நெஞ்சராய் வஞ்சராய்ப் படிறராய்ப் படு த்து நாயின், றசையருந்தித் திரிவோர் களளவாகப் பொற் பொதுவிற் றயங்கா நின்ற, விசைபுரிந்த நிலயத்தாள் கண்ட னரேல் வீடுறுதன் மெய்யேயந்தோ, திசையடைந்த வகலிட த்தோ ரீதறியா ரிதற்கினியாஞ் செய்வ தென்னே.

(இ-ள்.) பசை அகன்ற நெஞ்சராய் - அன்பில்லாத மனமுடை யராய்,—வஞ்சராய் - கபடராய்,—படிறராய்-பொய்யராய்,—நாயின் தசைபடுத்து அருந்தித் திரிவோர்கள் அளவாக - நாயின் மாமிசத் தைக் கொன்று புசித்து அலைந்து திரிபவர்களான கீழோர்களாக இருந்தாலும்,—பொன் பொதுவில் தயங்கா நின்ற இசை புரிந்த நிலயத்தாள் கண்டனரேல் - கனகசபையினிடத்தில் விளங்காநின்ற நடேசப்பெருமானது கீர்த்திபொருந்திய ஊன்றிய திருவடியைத் தரிசிப்பார்களாயின்,—வீடு உறுதல் மெய்யே - அவர்கள் மோக்ஷம டைதல் சத்தியமாகும்,—திசை அடைந்த அகல் இடத்தோர் ஈது அறியார் - அஷ்டதிக்குகள் பொருந்திய பரந்த பூமியிலுள்ளவர்கள் இதை அறியார்கள்;—அந்தோ இனியாம் செய்வது என்னே-ஐயோ இதற்கு இனி நாம் செய்வது யாதோ? அறியேன். எ - று. (௬)

குழுவுடைய கடவுளர்கோன் புடவிமுத லுதவுமலர்க் கோயில் கொண்டோன், றழுவுதிரு மறுமார்ப னிவர்செல்வந் தனிற்சிறிதுஞ் சாரா துள்ளம், வழுவையுரி போர்த்தாடு மன் றுடையான் றில்லையிற்புன் மலத்திற் றேன்றும், புழுவுறு மூப் பெருஞ்செல்வப் பேராசைப் பெருவெள்ளம் புலரா தன்றே.

(இ-ள்.) குழுவு உடைய கடவுளர் கோன் - கூட்டமாகவுடைய தேவர்களுக்கு அரசனாகிய தேவேந்திரனும்,—புடவி முதல் உதவு மலர்க் கோயில் கொண்டோன் - பூமி முதலாகிய உலகங்களெல்லா வற்றையுஞ் சிருஷ்டிக்கின்ற தாமரை மலரை யாலயமாகவுடைய பிரமதேவனும்,—திரு தழுவு மறு மார்பன் - மகாலட்சுமி தழுவுகி ன்ற மறுவையுடைய திருமார்பனாகிய விஷ்ணுமூர்த்தியும்,—இவர் - ஆகிய இவர்களுடைய,—செல்வம் தனிற் சிறிதும் உள்ளம் சாராது- சுவர்க்கபோகமுதலிய செல்வங்களிற் கொஞ்சமும் என் மனம் பொ ருந்தாது,—வழுவை உரி போர்த்து ஆடும் மன்று உடையான் தில்

லேயில் - யானைத்தோலை போர்த்துத் திருநிருத்தஞ் செய்தருளுகின்ற பொன்னம்பலவாணராகிய நடேசப்பெருமான் எழுந்தருளி யிருக்கின்ற தில்லைவனமாகிய சிதம்பரத்தில்,—புல் மலத்தில் தோன்றும் புழுவுறும் அப்பெரும் செல்வம் - கீழ்மையாகிய மலத்திற் பிறக்கின்ற புழுக்கள் அடையும் பெரிய செல்வத்தில் வைக்கப்பட்ட,—பேராசைப் பெருவெள்ளம் புலராது - பேராசையாகிய பெரியவெள்ளமானது என்னைவிட்டு நீங்காது. எ - று. (எ)

தருமமிகு மொழுங்குபொறை தவந்தானங் குணஞ்சீலஞ் சவுசங் கூர்மை, யருள்விரதங் கல்விதன மாசாரம் விச்சைத்துறை யாடற் சாதிப், பெருமைமக பூசைமிகப் படைத்தோர்களானாலும் பெண்ணோர் பாகக், கருணைநெடுங் கடலாடல் காணாரேற் பயனவற்றாற் காண்ப தென்னோ.

(இ-ள்) தருமம் - தருமங்களும்,—மிகும் ஒழுங்கு - மிக்க நீதியும்,—பொறை பொறுமையும்,—தவம் - தவமும்,—தானம் - கொடையும்,—குணம் - சற்குணமும்,—சீலம் - பரிசுத்தமும்,—சவுசம்- ஆசாரமும்,—கூர்மை - புத்திநுட்பமும்,—அருள் - கிருபையும்,—விரதம் - நோன்பும்,—கல்வி - வித்தையும்,—தனம் - செல்வமும்,- ஆசாரம் - நல்லொழுக்கமும்,—விச்சை - அறிவும்,—துறை - நல்வழியும்,—ஆடல் - வலிமையும்,—சாதிப் பெருமை - சாதியுயர்ச்சியும்,—மகபூசை - மகத்துவம் பொருந்திய சிவபூசையும்,—மிகப்படைத்தோர்கள் ஆனாலும் - மிகவும் உடையவர்களாயிருந்தாலும்,—பெண் ஓர் பாக நெடுங் கருணைக் கடல் ஆடல் காணாரேல் - உமாதேவியாரை ஓர் பாகத்திலுடைய நீண்ட கிருபாசமுத்திரமாகிய நடேசப்பெருமானது திருநிருத்தத்தைத் தரிசியார்களாயின்,—அவற்றால் காண்பது பயன் என் - மேற் சொல்லிய அப்புண்ணியங்களால் அடையக் கூடிய பிரயோசனம் யாது? (ஒன்றுமில்லை.) எ - று.

பண்டிதருங் கவிஞர்களும் பாக்கியரு முனிவர்களும் பாரின் மேன்மை, கொண்டவரும் பரமனரு ளுடையோரு மகிலாண்டக் குழுவைப் பெற்ற, துண்டமதி நுதல்காண வனவரத நிருத்தமிடுந் துணைத்தா டன்னைக், கண்டவரே காணாதோர் யாராயென் யாதாயென் கருதுங் காலே.

(இ-ள்.) அகில அண்டக் குழுவைப் பெற்ற துண்ட மதி நுதல் காண - உலகங்களையும் அண்டக் கூட்டங்களையும் பெற்றருளிய மூன்றாம்பிறைச்சந்திரனை யொத்த நெற்றியையுடைய சிவகாமியம்

மையார் தரிசிக்கும்படி,—அனவரத நிருத்தம் இடும் துணைத் தாள் தன்னைக் கண்டவரே - அனவரத தாண்டவஞ் செய்தருளிநின்ற நடேசப்பெருமானது இரண்டு திருவடிகளையுந் தரிசித்தவர்களே?—பண்டிதரும் கவிஞர்களும் பாக்கியரும் முனிவர்களும் பாரின்மேன்மை கொண்டவரும் பரன் அருள் உடையோரும் - வித்துவான்களும் சாஸ்திரமறிந்தவர்களும் செல்வமுடையவர்களும் முனிவர்களும் பூமியில் மேன்மையடைந்தவர்களும் சிவானுக்கிரக முடையவர்களும் ஆவார்கள்;—சருதுங்கால்-நினைக்குமிடத்து,—காணுதோர் யாராய் என் யாதாய் என் - தரிசியாதவர்கள் யாராயிருந்தாலென்ன? யாதாய் இருந்தால் என்ன? எ - று. (கூ)

மோகமுறு விடையமிகப் பொல்லாதென் றறிந்துமதின் முயங்குமாபோ, லாகமவே தங்களுடன் புராணமிரு திகள் புகழ்ந்து மறிவான் மிக்கோர், மாகநெடுங்கடவுளர்கள் வந்து பூசனைபுரிந்தும் வயங்கு மிந்து, சேகரன்றன் பொற்பொதுவி னியல்பறிந்து மடைந்துய்யார் சிறியோ ரந்தோ.

(இ-ள்.) மோகம் உறும் விடையம் மிகப் பொல்லாது என்று அறிந்தும் - மோகத்தைத் தரத்தக்க காமம் மிகவும் கெட்டது என்று அறிந்தும்,—அதில் முயங்கு மாபோல் - அக்காமத்திற் கிடந்து வருந்துகின்ற தன்மைபோல,—ஆகம வேதங்கள் உடன் புராணம் மிருதிகள் புகழ்ந்தும் - சிவாகமங்களும் வேதங்களும் புராணங்களும் ஸ்மிருதிகளும் துதித்தலையும்,—அறிவான் மிக்தோர் மாக நெடும் கடவுளர்கள் வந்து பூசனைபுரிந்தும் - அறிவான் மேம்பட்ட பெரியோர்களும் சுவர்க்கலோக வாசிகளாகிய பெரிய தேவர்களும் வந்து பூசை செய்தலையும்,—வயங்கும் இந்து சேகரன் தன் பொன் பொதுவின் இயல்பு அறிந்தும் - விளங்காநின்ற சந்திரசேகரனாகிய நடேசப் பெருமானது கனகசபையின் தன்மையை அறிந்திருந்தும்,—அடைந்து உய்யார் - அந்தஸ்தலத்தில் வந்து தரிசித்துக் கடைத்தேறு தவர்கள்,—அந்தோ சிறியோர் – ஐயோ அவர்கள் அற்பர்களாவார்கள். எ - று. (௧0)

தலங்கடனி லுத்தமமுந் தீர்த்தத்தி னுத்தமமுந் தகைமை நாளு, மிலங்குகட வுளர்தமக்கு ளுத்தமமு மோரிடத்திலிசைதல் கண்டுங், கலங்குமறி வினராய்மெய்க் கதிவிரும்பி வேறுதலங் கருதிமாய்வர், புலங்கடமை வென்றசை மினிவ வயனுஞ்ஞானம் புகலற் பாற்றே.

(இ-ள்) புலங்கள் தமை வென்ற ஜைமினிவ - பஞ்சேந்திரியங்களைச் செயித்த சைமினிமுனிவனே,—தலங்கள் தனில் உத்தமமும் - ஸ்தலங்களுக்குள் மேலான ஸ்தலமும்,—தீர்த்தத்தின் உத்தமமும் - தீர்த்தங்களுக்குள் மேலான தீர்த்தமும்,—நாளும் தகைமை இலங்கும் கடவுளர் தமக்குள் உத்தமமும் - எப்பொழுதுந் தகுதியோடு விளங்குகின்ற தேவர்களுக்குள் மேலான தேவனும்,—ஓரிடத்தில் இசைதல் கண்டும் - ஓரிடத்தில் பொருந்தியிருத்தலைப்பார்த்தும்,—கலங்கும் அறிவினராய் - மயங்குகின்ற புத்தியுடையவராய்,-மெய்க்கதி விரும்பி வேறு தலம் கருதி மாய்வர் - உண்மையாகிய மோக்ஷத்தை விரும்பி, வேறு ஸ்தலங்களை நினைத்து இறப்பர்கள் ;-அவர் அஞ்ஞானம் புகலற் பாற்றோ - அவர்களுடைய அறியாமை சொல்லுந்தன்மை யுடையதோ? எ - று. (௧௧)

பொன்னிவளந் தருநாடே நாடிந்தப் புவனத்துட் புகலு நாடு, தன்னிலருந் தவந்தானம் யாகமிக வும்பயனைத் தருவ வேதச், சென்னியுறை பரானந்தத் திருவுருவத் தொரு கடவு டென்பா னோக்கி, மின்னனைய கன்னியுடன் பொன்னவையி னின்றாடல் விளங்க லாலே.

(இ-ள்.) வேதச் சென்னி உறை பரம ஆனந்தத் திருவுருவத்து ஒரு கடவுள் - வேதசிரசில் வசியாநின்ற மேலாகிய மகிழ்ச்சியைத் தரத்தக்க திருவுருவத்தையுடைய ஒப்பில்லாத சிவபெருமான்,—தென் பால் நோக்கி - தென்திசையைப் பார்த்து,—மின் அனைய கன்னியுடன் - மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற சிவகாமியம்மையாரோடு,—பொன் அவையில் நின்று ஆடல் விளங்கலாலே - கனகசபையினின்று திருநிருத்தஞ் செய்து விளங்கிக்கொண் டிருத்தலால்,—இந்தப் புவனத்துள் பொன்னிவளம் தரும் நாடே நாடு - இவ்வுலகத்தில் காவிரியாற்றினால் வளப்பங்களைத் தருகின்ற சோழதேசமே புண்ணியதேசமாகும்,—புகல் அந் நாடு தன்னில் அரும் தவம் தானம் யாகம் மிகவும் பயனைத் தருவ - சொல்லப்படுகின்ற அச் சோழநாட்டில் செய்யப்படுகின்ற அரிய தவங்களும் தானங்களும் யாகங்களும் மிகுந்த பலனைத் தருவனவாம். எ - று. (௧௨)

எங்குநிறை பரசிவனைப் புகலுமிடத் தவனையொழிந் தியாவுங்கூறிப், பொங்குமறை யவற்குள்ள படிபகர வறியாது பொலியு முண்மை, தங்குபரா னந்தவறி வாயின்பச் சலதியாய்த் தயங்கு ஞான, மங்குலருட் டிருவடிவத் தலமதனைச் சுருதிகளால் வழுத்த லாமோ.

(இ-ள்.) பொங்கும் மறை - பொலிவு பொருந்திய வேதங்கள்,— எங்கும் நிறை பரசிவனைப் புகலு மிடத்து - எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற சிவபெருமானுடைய மகிமைகளைச் சொல்லுமிடத்து,— அவனை ஒழித்து யாவும் கூறி - அச்சிவபெருமானை நீங்கலாக மற்றத் (தேவர் முதலிய) எல்லாப் பொருள்களையு மெடுத்துச் சொல்லி,— அவற்கு பொலியும் உண்மை உள்ளபடி பகர அறியாது - அச்சிவபெருமானிடத்து விளங்காநின்ற உண்மைக் குணங்களைச் சொல்ல உள்ளபடியறியாது. (அங்ஙனமாயின்),— தங்கு பர ஆனந்த அறிவாய் இன்பச் சலதியாய்த் தயங்கும் ஞான மங்குல் திரு அருள் வடிவத் தலமதனை - பொருந்திய மேலான ஆனந்தத்தைத் தரத்தக்க ஞானமயமாய் ஆனந்தக் கடலாய் விளங்கும் ஞானமேசமாகிய சிவபெருமானது திருவருள் வடிவமாய் விளங்குகின்ற அச்சிதம்பரஸ்தலத்தின் மகிமையை,—சுருதிகளால் வழுத்தலாமோ-அவ்வேதங்களால் சொல்லமுடியுமோ? முடியாது. எ - று. (௧௩)

தருவாதி பசுவாதி மானிடர்க ளத்தலத்திற் றங்கி வாழ்வோர், பெருவாழ்வை யென்னென்கே னப்பெரிய நற்றலத்திற் பிரியா தோர்கண், மருவாருத் தமகமல வாவிபடி கின்றோர்கள் வானோர்க் கெய்தாத், திருவாளன் மன்றினடங் காண்போர்தாட் டுணைத்துகளென் சிரத்தின் மீதால்.

(இ-ள்.) அத்தலத்தில் தங்கி வாழ்வோர் - அச்சிதம்பரஸ்தலத்தில் இருந்து வாழ்கின்றவர்கள்,—தருவாதி பசுவாதி மானிடர்கள் - ஓரறிவுடைய விருக்ஷ முதலானவைகளாயிருந்தாலும், ஐயறிவுடைய பசுமுதலிய மிருகங்களாயிருந்தாலும், ஆறறிவுடைய மனிதர்களாயிருந்தாலும்,—பெருவாழ்வு என் என்கேன் - அவர்களது பெரிய வாழ்வை என்ன என்று எடுத்துச் சொல்லுவேன்;—அப் பெரிய நல் தலத்தில் பிரியாதோர்கள் - அந்தப் பொருமைபொருந்திய நல்ல ஸ்தலத்தைவிட்டு நீங்காதவர்களும்,—மருவு ஆர் உத்தம கமல வாவி படிகின்றோர்கள் - வாசனைபொருந்திய மேலாகிய புண்டரீகபொய்கையென்று சொல்லப்பட்ட சிவகங்கையில் ஸ்நானஞ்செய்கின்றவர்களும்,— வானோர்க்கு எய்தாத் திருவாளன் மன்றின் நடம் காண்போர் - தேவர்களுக்கும் எட்டாத நடேசப்பெருமான் கனகசபையினிடத்துச் செய்கின்ற திருநிருத்தத்தைத் தரிசிப்போர்களுமாகிய இவர்களது,— துணைத் தாள் துகள் என் சிரத்தின் மீது - இரண்டாகிய திருவடியிலுள்ள தூசிகள் என் சிரசின்மேல் அணியத்தக்கனவாம். எ - று. ஆல் அசை. (௧௪)

'கண்படைத்தும் படைத்திலர்கள் கனகசபைக் கடவுள் பதங் காணு தோர்கள், பண்படைத்த மறைதெரியும் பதஞ் சலியே நற்கண்கள் படைத்தோ னிப்பார், விண்படைத்த மல ரயனைத் திருமாலைப் படைத்தருளால் விளங்கா நின்ற, பெண் படைத்த வொருபாக னருள்படைத்த நடங்கண்டு பேண லாறே,

(இ-ள்.) கனகசபைக் கடவுள் பதம் காணுதோர்கள் கண்படைத்தும் படைத்திலர்கள் - கனகசபையினிடத்தே எழுந்தருளியிரா நின்ற நடேசப்பெருமானது திருவடிகளைத் தரிசியாதவர்கள் கண்க ளைப் பெற்றிருந்தும் அதனுலாகிய பிரயோசனத்தையடையார்கள்;-- பண் படைத்த மறைதெரியும் பதஞ்சலியே நற்கண்கள் படைத் தோன் - இசைபொருந்திய வேதங்களையறிந்த பதஞ்சலிமுனிவரே (அந்நடேசப்பெருமானது திருவடிகளைச் சதாகாலமுந் தரிசிக்கும்ப டியான பெருவாழ்வைப் பெற்றவராதலால் அவரே, நல்ல நேத்திர த்தைப் பெற்றவராவார் (ஆதலால்),—இப் பார் விண் படைத்த மலர் அயனைத் திருமாலைப் படைத்து விளங்க நின்ற - இப்பூமியை யும் சுவர்க்கத்தையும் சிருஷ்டித்த தாமரைமலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவனையும் விஷ்ணுமூர்த்தியையுஞ் சிருஷ்டித்து,—அருளால் விளங்காநின்ற பெண்படைத்த ஒருபாகன் அருள்படைத்த திரு நடம் கண்டு பேணல் ஆறு - கிருபையோடு விளங்காநின்ற சிவகாமி யம்மையார் பொருந்திய ஒருபாகத்தையுடைய நடேசப்பெருமானது கிருபைபொருந்திய திருநிருத்தத்தைத் தரிசித்து வணங்குதல்முறை மையாகும். எ - று. (கரு)

'கைபடைத்தோர் தரங்கமெறி கருங்கடனேர் பெரும் பிறப்பிற் கணக்கில் லாத, மெய்படைத்தோ ரென்னபயன் பெற்றனரந் தோமன்றின் மின்போ னின்ற, பொய்படைத்த மருங்குமைமுன் னடித்தபதந் தொழப்பணியப் புணர்த லாலே, பைபடைத்த பொற்சுடிகைப் பதஞ்சலிகை மெய்ப டைத்த பயன்பெற் ருனே.

(இ-ள்.) பை படைத்த பொன் சுடிகைப் பதஞ்சலி - படம்பொ ருந்திப பொன்மயமாகிய உச்சியையுடைய பதஞ்சலிமுனிவர்,— பொய் படைத்த மருங்கு உமை முன் நடித்த பதம் தொழப் பணி யப் புணர்தலால் - பொய்மை பொருந்திய இடையையுடைய சிவகா மியம்மையாருக்கு முன்னே திருநிருத்தஞ் செய்த நடேசப்பெருமா னது திருவடிகளை அஞ்சலிசெய்யவும்நமஸ்கரிக்கவும் பெறுதலால்,-

கை மெய் படைத்த பயன் பெற்ருன் - கைகளுஞ் சரீரமும் பெற்ற தனுலுண்டாகிய பிரயோசனத்தை யடைந்தார்,—தரங்கம் எறி கருங்கடல் நேர்பெரும் பிறப்பில் கணக்கில்லாத கை படைத்தோர் மெய்படைத்தோர் அந்தோ என்னபயன் பெற்றனர் - மற்ற அலைகளை வீசுகின்ற கரிய கடல் போன்ற பெரிய பிறப்பினிடத்தில் அளவில்லாத கைகளையும் சரீரங்களையும் பெற்றவர்கள் ஐயோ! என்ன பிரயோசனத்தைப் பெற்ருர்கள். எ - று. எ அசை. (௧௬)

சிறந்தவுல கங்களுக்குட் சிறந்தோரிற் சிறந்தோனுந் திரைநீர் வைப்பிற், பிறந்தபிறப் புதவுபயன் பெற்றேனும் பதஞ்சலியெம் பெருமா னன்றே, யறந்தருவா ளொருபா லின் றகமகிழ மன்ருடு மாடல்காண, மறந்தவர்புன் பிறப்பனைத்துங் களர்நிலத்து வித்தின்முளை மானுமன்றே.

(இ-ள்.) சிறந்த உலகங்களுக்குள் சிறந்தோரில் சிறந்தோனும் - சிறப்புப் பொருந்திய உலகங்களிடத்துள்ள மேலோரைப் பார்க்கிலுஞ் சிறந்தவனும்,—திரை நீர் வைப்பில் பிறந்த பிறப்பு உதவு பயன் பெற்றேனும் - அலைகளையுடைய சமுத்திரத்தாற் சூழப்பட்ட இப்பூவுலகத்திற் பிறந்த மானுடப் பிறவியினு லடையப்படும் பிரயோசனத்தை அடைந்தவனும்,—பதஞ்சலி எம்பெருமான் அன்றே-பதஞ்சலிமுனிவராகிய எமது பெருமானல்லவா,—அறம் தருவாள் ஒரு பால் நின்று அகம் மகிழ மன்று ஆடும் ஆடல் காண மறந்தவர் புல் பிறப்பு அனைத்தும் - முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்ப்பவளாகிய சிவகாமியம்மையார் ஒரு பக்கத்தினின்று மனமகிழும்படி கனகசபையிற் செய்கின்ற(நடேசப்பெருமானது)திருநிருத்தத்தைத் தரிசிக்க மறந்தவர்களுடைய கீழ்மையாகிய பிறவிகளெல்லாம்,—களர்நிலத்து வித்தின் முளை மானும்,—உவர்நிலத்தில் விதைக்கப்பட்ட விதையினது முளையை யொக்கும். எ-று. அன்று எ அசை.

விரதமுத னற்றவங்கள் வேதநூ லாராயும் விளக்க மோங்கப், பரவுபயன் படைத்தோனு மறைவழிநின் றப்பொருளின் பரிசேரர்ந் தோனு, முரமருவு திருவருளான் மெய்ஞ்ஞான முற்றேனு முண்மை நல்கும், வரமிலகு குருபான்ற னருளோனு முன்னநின்ற மாசி லாதோன்.

(இ-ள்) விரதம் முதல் நல் தவங்கள் வேத நூல் ஆராயும் விளக்கம் ஓங்கப் பரவு பயன் படைத் தோனும் - விரதங்கண் முதலாகிய நல்ல தவங்களும், வேதசாஸ்திரங்களை ஆராயத்தக்க ஞானப் பிரகாசமதிகரிக்க, அதனுல் மிகுந்த பிரயோசனத்தை யடைந்தவரும்,—

மறை வழி நின்று அப் பொருளின் பரிசு ஓர்ந்தோனும் - வேதமார்க்கத்திலே நின்று அதன் பொருளின் தன்மையை அறிந்தவரும்,— உரம் மருவு திருவருளான் மெய்ஞ் ஞானம் உற்றோனும் - வலிமை பொருந்திய (சிவபெருமானது) திருவருளால் உண்மைஞானத்தையுடையவரும்,—உண்மைநல்கும் வரம்இலகு குருபரன் தன்அருளோனும் - உண்மைப்பொருளை யுபதேசிக்கின்ற மேன்மை விளங்காநின்ற ஆசாரியருடைய திருவருளைப் பெற்றவரும்,—முன் நவின்ற மாசு இலா தோன் - முன்சொல்லிய குற்றமில்லாத பதஞ்சலிமுனிவரே யாவர். எ - று. (கஅ)

மறையருளும் பரனருளு மூமையருளும் பெருநலனும் வரம்பு காணு, நிறையருளு முடையவனப் பதஞ்சலியே யென்னென்று நினைந்தா யாகி, லிறைவன்மணி மன்றுட லெவ்வுலகத் தெவ்வுயிரு மெய்திக் கண்டு, குறைவகல முத்தி பெற வரங்கொண்டா னவன்பெருமை குறிக்கற் பாற்றே.

(இ-ள்.) மறை அருளும் பரன் அருளும் - வேதத்தைச் சொல்லியருளிய சிவபெருமானது திருவருளும்,—உமை அருளும் - உமாதேவியாருடைய திருவருளும்,—பெரு நலனும் - மிகுந்தநன்மையும்,—வரம்புகாணு நிறை அருளும் உடையவன் அப்பதஞ்சலியே - அளவிடப்படாத நிறைந்த திருவருளுமுடையவர் அப்பதஞ்சலி முனிவரே யாவர்,—என் என்று நினைந்தாய் ஆகில் - அவரை யெப்படிப்பட்டவரென்று நீ நினைப்பாயாகில்,—எவ்வுலகத்து எவ்வுயிரும் இறைவன் மணி மன்று ஆடல் எய்திக் கண்டு குறைவு அகல முத்தி பெற வரம் கொண்டான் - எந்தவுலகத்திலுமுள்ள சர்வான்மாக்களும் நடேசப்பெருமானது அழகிய கனகசபையினிடத்துச் செய்யப்படும் திருநிருத்தத்தைத் தரிசித்துக் குறைவு நீங்கி மோக்ஷத்தை யடையும்படியான வரத்தைப் பெற்றவர்,—அவன் பெருமை குறிக்கற் பாற்றே - அப்பதஞ்சலி முனிவருடைய பெருமையை யளவிட்டுச் சொல்லுந் தன்மையுடையதாமோ? (இல்லை.) எ - று. (க௯)

தொடர்வரிய தவம்புரிந்து கடவுளர்க ளுடனிதயந் தொறும்பு ணர்ந்து, விடலரிய பரன்பொதுவி னின்றாடல் கண்டுகந்த விளக்க மன்றிப், படருநெறி தருமந்தத் தலமதனிற் பதஞ்சலியெம் பகவன் முன்னாள், வடமொழியி னிலக்கணமாம் வியாகரணம் விரித்தறிஞர் மன்ன னானான்.

(இ-ள்.) எம் பதஞ்சலிப் பகவன் - எமது பதஞ்சலிபகவான்,— தொடர் அரிய தவம் புரிந்து - செய்தற்கருமையாகிய தவத்தைச்

செய்து,—கடவுளர்களுடன் இதயம் தொறும் புணர்ந்து - தேவர்களுடைய இருதயங்கள் தோறும் பொருந்தி,—பரன் விடல் அரிய பொதுவில் நின்று ஆடல் கண்டு உகந்த விளக்கம் அன்றி - நடேசப்பெருமான் கனகசபையினிடத்து நின்று செய்தருளிய திருநிருத்தத்தைத் தரிசித்து மகிழ்ச்சியடைந்த மேன்மையே அல்லாமல்,—படரும் நெறி தரும் அந்தத் தலமதனில் - (மோக்ஷத்தை) யடையும் மார்க்கத்தைக் கொடுக்கின்ற அச்சிதம்பரஸ்தலத்தில்,—முன்னாள் - முன்னொருநாளில்,—வடமொழியின் இலக்கணம் ஆம் வியாகரணம் விரித்து - வடமொழி இலக்கணமாகிய (பாணினீயமென்னும்)வியாகரணத்தை விரித்துச் சொல்லி,—அறிஞர் மன்னன் ஆனான் - புலவர்களுக்குத்தலைவராயினார். எ - று. (௨௦)

என்னென்றிங் குரைசெய்கேன் சைமினிவ வந்தோ வெவ்வுலகத் துள்ளுஞ், சொன்னின்ற பேரிவர்க்குட் புலிப்பதனே மிகப்பெரியோன் சுருதி யேத்தும், பொன்னின்ற சிதம்பரமன் னவன்பெயராற் பெரும்பற்றப் புலியூ ரென்று, மன்னின்ற தென்றாலங் கவனெனது தேசிகனும் வாழ்வு மாவான்.

(இ-ள்.) சைமினிவ - சைமினிமுனிவனே,—அந்தோ இங்கு என் என்று உரை செய்வேன் - ஐயோ! இப்பொழுது அப்பதஞ்சலி முனிவரது பெருமையை எப்படிப்பட்டது என்று யான் எடுத்துச் சொல்லுவேன்,—எ உலகத்துள்ளும் சொல் நின்றபேர் இவர்க்குள் - எவ்வுலகத்தாராலுந் துதிக்கப்படுகின்ற பெயரையுடைய பதஞ்சலி வியாக்கிரபாதரென்னுமிருவருள்,—புலிப்பதனேமிகப்பெரியோன் - வியாக்கிரபாதமுனிவரே மிக மேலானவர்,—(அது யாதுகாரணத்தாலெனில்) சுருதி எத்தும் பொன் நின்ற சிதம்பரம் அன்னவன் பெயரால் பெரும்பற்றப் புலியூர் என்று மன் நின்றது என்றால் - வேதங்களாற் றுதிக்கப்படுகின்ற பொற் பிரகாசம் பொருந்திய சிதம்பரமானது அவ்வியாக்கிரபாதமுனிவரது பெயரால் பெரும்பற்றப்புலியூரென்று நிலைபெற்றிருக்குமென்றால்,—அங்கு அவன் எனது தேசிகனும் வாழ்வும் ஆவான் - அப்பொழுது அவ்வியாக்கிரபாதமுனிவர் எனக்கு ஆசாரியராகவும் எனது செல்வமாகவும் ஆவார். எ - று. ()

மற்றையமைந் தர்ப்பேறு மொருபேறே வீங்கிவனை வயிற்றின் வாய்த்த, பொற்றொடியா டானன்றே நற்புதல்வர்ப் பேறுற்றாள் புகல்வ தென்யா, னற்றவமா தவன்பாதத் துகளுளது தலைமீதே நயந்து நேசந், துற்றவடன் றிருத்தாளென் கருத்தாலுங் கரத்தாலுந் தொழுகின் றேனால்.

(இ-ள்.) மற்றைய மைந்தர்ப் பேறும் ஒரு பேறே - (இவ்வியாக்கிரபாதமுனிவர் ஒழிந்த) மற்றைப் புத்திரப் பேறும் ஒரு பேறாகுமோ?—ஈங்கு இவனை வயிற்றில் வாய்த்த பொன்தொடியாள் தான் அன்றே நல் புதல்வர்ப் பேறு உற்றாள் - இவ்விடத்தில் இவ்வியாக்கிரபாத முனிவரைத் தன்வயிற்றிற் பிள்ளையாகப்பெற்ற பொன்னாற் செய்யப்பட்ட வளையலையணிந்த தாயல்லவோ? நல்ல புதல்வரைப் பெற்றவளாவாள்,—யான் புகல்வது என் - அடியேன் வேறு யாது சொல்வேன்,—நல் தவ மாதவன் பாதத்துகள் எனது தலை மீதே - நல்ல தவத்தையுடைய அவ்வியாக்கிரபாதமுனிவரது பாததூளிகள் என் சிரசின்மேலதாகும்,—நயந்து நேசமது உற்றவள்தன் திருத்தாள் என் கருத்தாலும் கரத்தாலும் தொழுகின்றேன் - (அதுவன்றி) அவ்வியாக்கிரபாதமுனிவரிடத்து விருப்பமுமன்பும் பொருந்திய தாயினுடைய திருவடிகளை அடியேனது மனத்தாலும் கைகளாலும் நமஸ்கரிக்கின்றேன். எ - று. ஆல் அசை.(உஉ)

பிள்ளையாவதுமவனே மற்றவனைப் பெறுதற்குப்பெருகு காதல், வள்ளைவார் குழையன்னை யெத்துணைமா தவஞ்செய்து வருந்தினளோ, கொள்ளைமா தவப்பேற்றி லெந்தமா தவப்பேறு கொடுத்ததோவான், வெள்ளைவாண் மதிவேணி யமலனுயர் திருவருளோ விரிக்கற் பாற்றே.

(இ-ள்.) பிள்ளையாவதும் அவனே - புத்திரரென்று சொல்லுந் தகுதியுடையவர் அவ்வியாக்கிரபாத முனிவரேயாவர்,—அவனைப் பெறுதற்குப் பெருகுகாதல் வள்ளை வார் குழை அன்னை எத்துணை மாதவம் செய்து வருந்தினளோ - அவ்வியாக்கிரபாதமுனிவரைப் பெறுதற்கு மிகுந்த விருப்பத்தையுடைய வள்ளையிலைபோன்ற நீண்ட காதுகளையுடைய தாயானவள் எவ்வளவு பெரிய தவத்தைச் செய்து வருந்தினளோ?—கொள்ளை மாதவப் பேற்றில் எந்த மாதவப் பேறு கொடுத்ததோ - மிகுதியாகிய பெரிய தவப்பேறுகளுள் எந்தப் பெரியதவத்தினது பிரயோசனம் (இப்புத்திரனைக்) கொடுத்ததோ?—வான் வெள்ளை வாள் மதி வேணி அமலன் உயர் திருவருளோ - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற வெண்ணிறம் பொருந்திய ஒளியையுடைய சந்திரனைத்தரித்த ஜடையையுடைய மலமுத்தராகிய சிவபெருமானது மேலான திருவருளோ?—விரிக்கற் பாற்றே - இன்னதென்று விரித்துச் சொல்லுந் தன்மையுடையதோ? (அறியேன்). எ-று. மற்று அசை. (உங)

இருவருணர்ந் தறிவரிய பரமசிவ னணிமன்றி னிடத்து வெற்பின், திருமகிழ நடிக்குநட முன்கண்ணாற் கண்டருளின் செல்வத் தோங்கிப், பொருவரிய பயனடைந்த வியாக்கிரபா தன்றன்னைப் போலவண்டத், தொருவருள ரென்றுரைக்க வெவருளரோ மாதவத்தா லுயர்வு பெற்றோய்.

(இ-ள்.) மா தவத்தால் உயர்வு பெற்றோய் - பெரியதவத்தினால் மேன்மையை யடைந்த சைமினியே,—இருவர் உணர்ந்து அறிவரிய பரம சிவன் — பிரமவிஷ்ணுக்களாகிய இருவர்களாலுந் தேடிக்காணுதற்கரிய சிவபெருமான்,—அணி மன்றின் இடத்து வெற்பின் திரு மகிழ நடிக்கும் முன் கண்ணால் கண்டு - அழகிய கனகசபையினிடத்தே மலைமகளாகிய சிவகாமியம்மையார் சந்தோஷிக்கும்படி செய்கின்ற திருநிருத்தத்தைச் சந்நிதானத்தினின்று கண்களாற் றரிசித்து,—அருளின் செல்வத்து ஓங்கி - திருவருட் செல்வத்தைப்பெற்று அதனாலுயர்வை யடைந்து,—பொருவு அரிய பயன் அடைந்த வியாக்கிரபாதன் தன்னைப் போல - உவமை சொல்லுதற்கரிய பிரயோசனத்தைப் பெற்ற வியாக்கிரபாதமுனிவரைப் போல,—அண்டத்து ஒருவர் உளர் என்று உரைக்க எவர் உளர் - இவ்வுலகத்தில் ஒருவர் இருக்கின்றாரென்று சொல்லுதற்கு வேறுயாவர் இருக்கின்றார். ஏ - று ஓ அசை. (உச)

ஆற்றரிய தவம்புரிந்தத் தலந்தன்னிற் புலிப்பாதத் தனகன் மன்றிற், றோற்றருநாட கங்கண்டு வாழ்ந்துதன தொல் குலத்தைத் தூய முத்தி, யேற்றினனங் கதுவன்றித் திருமூலத் தானத்து ளிமை யோர் நாதன், போற்றரிய திருவருளா லொருபுதல்வன் றனையுலகம் புகழப் பெற்றான்.

(இ ள்) புலிப்பாதத்து அனகன்-புலியினது பாதத்தையுடைய ஆணவமில்லாத வியாக்கிரபாத முனிவர்,—அத்தலம் தன்னில் ஆற்றரிய தவம் புரிந்து - அச்சிதம்பரஸ்தலத்தில் செய்தற்கருமையாகிய தவங்களைச் செய்து,—அகல் மன்றில் தோற்றரும் நாடகங் கண்டு வாழ்ந்து-விசாலம் பொருந்திய கனகசபையினிடத்தே காணுதற்கரிய திருநிருத்தத்தைத் தரிசித்துச் சிவானந்தப் பெருவாழ்வடைந்து,—தன் தொல் குலத்தைத் தூய முத்தி ஏற்றினன்-தன்னுடைய பழமை யாகிய வம்சத்தார்களைப் பரிசுத்தமாகிய மோக்ஷமடையும்படி செய்தருளினார்;—அது அன்றி - அதுவல்லாமல்,—திருமூலத் தானத்துள் இமையோர் நாதன் போற்றரிய திருவருளால் - திருமூலட்டானத்தி லெழுந்தருளியிருக்கும் தேவநாயகனாகிய சிவபெரு

மானது துதித்தற்கரிய திருவருளினால்,—உலகம் புகழ ஒரு புதல்வன் தனைப் பெற்றான் - உலகத்தார்கள் புகழத்தக்க ஒரு புத்திரனைப் பெற்றருளினார். எ - று. (௨௫)

அந்நெறியின் வருபுதல்வன் பெயருபமன் னியனென்ன வறைகோ மன்னோ, னின்னமுத நிகர்சுவைப்பால் வேண்டி யெதிர் நின்றழலு மிலங்குஞ் செய்ய, பின்னல்புற மசைய மணி மன்றினிடை யென்றுநடம் பேணுமீசன், பன்னரிய திருவருளாற் பாற்கடலங் கவன்மகிழ்ச்சி படைக்கவீந்தான்.

(இ-ள்.) அந்நெறியின் வரு புதல்வன் பெயர் உபமன்னியன் என்ன அறைகோம் - அவ்வாறு அவதரித்த புத்திரனுடைய பெயர் உபமன்னிய முனிவரென்று சொல்லுவோம்,—அன்னோன் இன் அமுதம் நிகர் சுவைப்பால் வேண்டி எதிர் அழலும் - அவ்வுபமன்னியமுனிவர் இனிய அமிர்தம் போன்ற சுவையையுடைய பால் உண்ணவிரும்பி திருமூலட்டானேசுரருடைய சந்நிதியினின்று அழவும்,- இலங்கும் செய்ய பின்னல் புறம் அசைய மணி மன்றின் இடை என்றும் நடம் பேணும் ஈசன் - விளங்காநின்ற சிவந்தஜடையானது பின்புறத்திற் கிடந்து அசையும்படி அழகிய கனகசபையினிடத்தே எப்பொழுதும் திருநிருத்தத்தை விரும்பிச் செய்கின்ற நடேசப்பெருமான்,—பன் அரிய திருவருளால் - துதித்தற்கரிய திருவருளால்,- அங்கு அவன் மகிழ்ச்சி படைக்க - அப்பொழுது அவ்வுபமன்னிய முனிவர் சந்தோஷத்தையடையும்படி,—பால் கடல் ஈந்தான் - திருப்பாற்கடலை வரவழைத்துக் கொடுத்தருளினார். எ - று. (௨௬)

வந்ததிருப் பாற்கடலை யுண்டுகளித் தானந்த மகிழ்ச்சி யெய்தி, விந்துவிலன் றிங்கிவன்பாற் றோற்றியதா மெனவறிஞர் வியப்ப மெய்த, வந்தமிலா வாகமங்க ளளவிலா வேதங்க ளனைத்துந் தூய, சிந்தைதெளி வுறவாய்ந்து பெருங்கல்விக் கடலென்னுஞ் சிறப்பான் மிக்கான்,

(இ-ள்.) வந்த திருப்பாற் கடலை உண்டு - (அவ்வுபமன்னிய முனிவர் சிவபெருமானது திருவருளால்) வந்த திருப்பாற்கடலையுண்டு,—களித்து - சந்தோஷமடைந்து,—விந்துவில் அன்று இங்கு இவன் பால் தோன்றியது ஆம் என அறிஞனர் வியப்பம்எய்த - குறிப்பினால் அப்பொழுது இவ்விடத்தில் இவரிடத்திருந்துண்டாகிய தாகுமென்று சான்றோர்கள் ஆச்சரியமடையும்படி,—அந்தம் இலா ஆகமங்கள் அளவு இலா வேதங்கள் அனைத்தும் - முடிவில்லாத

சிவாகமங்களும் அளவில்லாத வேதங்களுமாகிய எல்லா நூல்களை யும்,—தூய சிந்தை தெளிவு உற ஆய்ந்து - பரிசுத்தமாகிய மனந் தெளிவடையும்படி ஆராய்ந்து,—பெரும் கல்விக் கடல் என்னும் சிறப்பான் மிக்கான் - பெரிய கல்விக்கடலென்று சொல்லும்படி யான சிறப்பினால் மேம்பட்டவனாயினான். எ - று. (உஎ)

எதுமரபி லுதித்துலகுக் குருவாகித் துவரைநகர்க்கிறை வனாகு, மதுவிரியும் பசுந்துளப வாசுதே வன்கண்ணன் வண ங்கி யேத்தப், பதுமமல ரடிச்சிரத்துட் வைத்தவற்குச்சைவ நெறிப் புரிசு நல்கி, விதுமவுலி யிறையருளாற் புவனதே சிக னென்ன விளங்கா நின்றான்.

(இ-ள்.) உலகுக்கு உருவாகி எது மரபில் உதித்து - உலகத்தி னிடத்தே தோற்ற முடையவராய் எது குலத்திலே பிறந்து,—துவரை நகர்க்கு இறைவன் ஆகும் - துவாரகாபுரிக்கு அரசனாகி ன்ற,—மது விரியும் பசும் துளப வாசுதேவன் கண்ணன் வணங்கி ஏத்த - தேனொழுகுகின்ற பசிய துளபமாலையையணிந்த வாசுதேவ னென்னும் பெயரையுடைய கிருஷ்ணமூர்த்தியானவர் நமஸ்கரித் துத்தோத்திரஞ் செய்ய,—பதுமமலர் அடிச் சிரம் வைத்து - செந்தா மரைமலர்போன்ற திருவடிகளை அக்கிருஷ்ணமூர்த்தியினுடைய சிர சின்மேல் வைத்தலாகிய திருவடி தீக்ஷைசெய்து.—அவற்குச் சைவ நெறிப் பரிசும் நல்கி - அதன்பின் அக்கிருஷ்ணமூர்த்திக்குச் சைவ சமயமார்க்கத்திற்குரிய சிவதீக்ஷையையுஞ் செய்து,—விது மௌலி இறை அருளால் - சந்திரசேகரனாகிய சிவபெருமானது திருவரு ளால்,—புவன தேசிகன் என்ன விளங்காநின்றான் - உலக குருவெ ன்று சொல்லும்படி விளங்குகின்றார், எ - று. (உஅ)

பற்றிகந்த பரம்பரனைப் பற்றுமுப மன்னியன்றன் பரிசை யெம்மாற், சொற்றிடவென் றாலெளிதோ வீங்கிது போன் முன்னைவினைத் தொடரை யெல்லா, முற்றியபுண் டரிகபத முனிகுலத்து ளியாவோரு முனிவ ரானார்; மற்ற வர்தங் குலதெய்வ மாயினன்பொற் பொதுவுறையு மங்கை பாகன்.

(இ-ள்) பற்று இகந்த பரம்பரனைப் பற்றும் உபமன்னியன் தன் பரிசை - விருப்பில்லாத சிவபெருமானிடத்தே அன்புவைத்தொழு கும் உபமன்னிய முனிவரது தன்மையை,—எம்மால் சொற்றிட என்றால் எளிதோ - எம்மால் சொல்லவேண்டுமென்றால் எளிதா

கூமோ?—ஈங்கு இது போல் - இங்ஙனம் இது போல,—முன்னை வி னைத் தொடரை எல்லாம் முற்றிய புண்டரிகமுனிகுலத்துள் யாவோ ரும் முனிவர் ஆனார் - பழமையாகிய ஆகாமியம் பிராரத்துவம் சஞ் சித மென்னும் வினைசம்பந்தங்களெல்லாவற்றையும் கெடுத்த வியா க்கிரபாதமுனிவருடைய குலத்திற்பிறந்த யாவர்களும் முனிவர்களா னார்கள்,—பொன் பொது உறையும் மங்கை பாகன் அவர் தம் குல தெய்வம் ஆயினன் - கனகசபையினிடத்து எழுந்தருளி யிராநின்ற சிவகாமியம்மையாரை ஓர் பாகத்திலுடைய நடேசப்பெருமான் அவ ர்களுடைய குலதெய்வமாக விளங்குகின்றனர். எ - று. (உகூ)

புவனங்க டமக்குளிரு வோரொழியத் திருவருளோர் புகலு மன்னோர், தவமொன்று பதஞ்சலியுந் திகழ்வேங்கைத் தாளுடைய தலைமை யோனு, மிவர்கின்ற தமனியப்பே ரம் பலத்து ளிறைபார்வை யெய்தப் பெற்று, ரவரன்றே லப் பார்வை யார்பெற்று ரவர்க்குவமை யவரே யம்மா.

(இ-ள்.) புவனங்கள் தமக்குள் இருவோர் ஒழிய - இவ்வுலகங் களுக்குள் பதஞ்சலி வியாக்கிரபாதரென்னு மிருவர்கள் நீங்கலாக,— திருவருளோர் - திருவருளைப் பெற்றவர்கள் (எவர்களெனில்),— புகலும் அன்னோர் - சொல்லப்பட்ட அவ்விருவர்களேயாவார்கள்;— தவம் மூன்று பதஞ்சலியும் திகழ் வேங்கைத் தாளுடைய தலைமை யோனும் - தவம்பொருந்திய பதஞ்சலிமுனிவரும் விளங்குகின்ற வியாக்கிரபாதமுனிவரும்,—இவர் கின்ற தமனியப் பேர் அம்பலத் துள் இறை பார்வை எய்தப் பெற்றார் - உயர்ச்சி பொருந்திய பெரு மையையுடைய பொன்னம்பலத்தி லெழுந்தருளி யிராநின்ற நடே சப்பொருமானுடைய திருவருணோக்கமடையப் பெற்றவர்களாவார் கள்,—அவர்க்கு அவரே உவமை - (ஆதலால்) அவர்களுக்கு அவர் களே ஒப்பாவார்கள். எ - று. அம்மா வியப்பிடைச் சொல். (௩0)

இருவர்தவப் பெருமையினை யாருரைக்க வல்லார்க ளிவ ரேயன்றி, யருமறைதேர் நான்முகனுங் கலைமகளு மடலாழி யங்கை யோனுந், திருமகளுந் தில்லைமூ வாயிரமா முனிவோ ருந் தேவர் தம்முட், பெருகுதவ முடையோரு மன்றினடங் கண்டுயர்ந்த பெருமை யோர்கள்.

(இ-ள்.) இருவர் தவப் பெருமையினை யார் உரைக்க வல்லார் கள் - பதஞ்சலி வியாக்கிரபாதரென்னு மிரண்டு முனிவர்களுடைய தவத்தினது பெருமையை யாவர் எடுத்துச் சொல்லவல்லவர்கள்,—

இவரே அன்றி - இவ்விருவர்களுமே யல்லாமல்,—அருமறை தேர் நான்முகனும் - அருமையாகிய வேதத்தை அறிந்த நான்குமுகங்களை யுடைய பிரமதேவரும்,—கலைமகளும் - சரஸ்வதியும்,—அடல் ஆழி அங்கையோனும் - வலிமைபொருந்திய சக்கிராயுதத்தைத் தரித்த அழகிய கையையுடைய விஷ்ணுமூர்த்தியும்,—திருமகளும் - மகாலக்ஷ்மியும்,—மா தில்லை மூவாயிர முனிவோரும் - பெருமைபொருந்திய தில்லைமூவாயிரமுனிவர்களும்.—தேவர் தம்முள் பெருகு தவம் உடையோரும் - தேவர்களுக்குள்ளே மிகுந்த தவத்தையுடையோர்களுமாகிய இவர்கள்,—மன்றில் நடம் கண்டு உயர்ந்த பெருமை யோர்கள் - கனகசபையினிடத்தே (நடேசப்பெருமான் செய்தருளுகின்ற) திருநிருத்தத்தைத் தரிசித்து மேன்மையடைந்த பெரியோர்களாவார்கள். எ - று. (௩௧)

வேறு.

முன்ன வன்றிகழ் சிதம்பர மடைகின்ற முயற்சியு மவ்வெல்லை, தன்னி னேசமும் பெற்றனை யொப்பிலாச் சைமினி முனிவாநீ, யென்ன மாதவ முன்னரே செய்தனை யீரெழு புவனத்து, நின்னை யொப்பவர் யாவரோ நின்செய னிகழ்த்தலாம் படித்தன்றால்.

(இ-ள்.) ஒப்பு இல்லாச் சைமினி முனிவா - ஒப்பில்லாதசைமினிமுனியே!—நீ முன்னவன் திகழ் சிதம்பரம் அடைகின்ற முயற்சியும் - நீ முதல்வனாகிய நடேசப்பெருமான் விளங்கிக்கொண்டிருக்கின்ற சிதம்பரஸ்தலத்தை யடையவேண்டுமென்கின்ற முயற்சியும்,—அவ்வெல்லை தன்னில் நேசமும் பெற்றனை - அச்சிதம்பரத்தினது திருவெல்லையில் விருப்பமுங் கொண்டிருக்கின்றாய்,—என்ன மாதவம் முன்னரே செய்தனை - அவ்வாறுண்டாதற்கு நீ என்ன பெரியதவத்தை முன்னமே செய்தாய்,—ஈர் எழுபுவனத்தும் நின்னை ஒப்பவர் யாவரோ - பதினாலுலகங்களினும் உனக்கொப்பானவர் வேறு யாவர் இருக்கின்றார்,—நின் செயல் நிகழ்த்தலாம் படித்து அன்று - (ஆதலால்) உன்னுடைய செய்கை சொல்லுந் தன்மை யுடையதல்ல. எ - று. ஆல் அசை. (௩௨)

என்று கிட்டுமேர் சிவகங்கை மூழ்கியு மீசனையங் கீராற், றன்று மஞ்சனஞ் செய்துமூ லத்தலச் சுடரினைத் தொழுதுய்ந்துஞ், சென்று கண்டவா னவர்முதற் பல்லுயிர் திகழ்ந்த முத்தியி லெய்த, மன்றி னின்றசெஞ் சரோருகந் தொழுதுள மகிழ்ச்சி கூர்தரு மந்நாள்.

(இ-ள்.) சிவகங்கை மூழ்கியும் - சிவகங்கையில் ஸ்நானஞ்செய்தும்,—ஈசனை அந்நீரால் துன்றும் மஞ்சனம் செய்யவும் - சிவபெருமானுக்கு அத்தீர்த்தத்தால் பொருந்திய திருமஞ்சனம் ஆட்டவும்,—மூலத் தலச் சுடரினைத் தொழுது உய்ந்தும் - திருமூலட்டானத்தில் எழுந்தருளியிருக்கும் சோதிசொரூபராகிய சிவலிங்கப்பெருமானை வணங்கிக் கடைத்தேறவும்,—சென்று கண்ட வானவர் முதல் பல் உயிர் திகழ்ந்த முத்தியில் எய்த மன்றில் நின்ற செம் சரோருகம் தொழுது உளம் மகிழ்ச்சி கூர் தரும் அந்நாள் - சிதம்பரத்திற் போய்த் தரிசித்த தேவர்கள் முதலாகிய பலவகைப்பட்ட ஆன்மாக்களெல்லாம் விளங்காநின்ற மோக்ஷத்தை யடையும்படி கனகசபையினிடத்தில் நின்றருளிய நடேசப்பெருமானது செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி மனமகிழ்ச்சி மிகும்படியான அச்சுபகாலம் - என்று கிட்டுமோ - எப்பொழுது கிடைக்குமோ? எ - று. (௩௩)

ஒரு பரம் பொருண் மன்றிடைத் தோன்றிய வுருவமு
மொருபாலிற், கருவி ழிக்கலை மதிமுகக் கொடியனுள் வடிவ
மூங் காண்பேனோ, விருவர் செய்கையுஞ் செவ்வியுஞ் கண்
டுநா னிறைஞ்சினே னுமாகின், மருவு பாசம்விட் டகலமெய்ப்
பரானந்த வாரிதி யாவேனால்.

(இ-ள்.) ஒரு பரம் பொருள் மன்றிடைத் தோன்றிய உருவமும்-ஒப்பில்லாத பரம்பொருளாகிய சிவம் கனகசபையினிடத்தே தோன்றி விளங்காநின்ற திருவுருவத்தையும்,—ஒரு பாலில் கருவிழிக்கலை மதி முகக் கொடி அனுள் வடிவமும்-அச்சிவபெருமானுடைய ஒருபாகத்தில் விளங்குகின்ற கரிய கண்களையும் பூரணகலைகளையுடைய சந்திரன்போன்ற முகத்தையுமுடைய பூங்கொடிபோன்ற சிவகாமியம்மைபாருடைய திருவுருவத்தையும்,—காண் பேனோ - (எப்பொழுது) தரிசிப்பேனோ?—இருவர் செய்கையும் செவ்வியுங் கண்டு நான் இறைஞ்சினேன் ஆமாகின் - இவ்விருவர்களுடைய செய்கைகளையும் அழகையுந் தரிசித்து நான் வணங்குவேனாயின்,—மருவு பாசம் விட்டு அகல - அடியேனைப் பந்தித்திருக்கின்ற பாசமானது நீங்க,—மெய்ப் பரானந்த வாரிதி யாவேன் - உண்மையாகிய மேலான சிவானந்தக்கடலில் முழுகினவனாவேன். ஆல் அசை. அன்னாள் என்பது அனுள் என விகாரமாயிற்று.

ஒருவ ராலுமுற் றரும்பிறப் பிறப்பெனு முரகவாய்ப்
பட்டதந்தோ, வெருவு காமவெவ் விடத்தழ லான்மிக வெந்
தவே தனைதீரக், கருணை யாரமு தம்பொழி திருக்கடைக்

கண்களாற் பார்த்தன்பு, தருவ னேயரு ளம்பல மேவிய சங்கர னெனக்கன்பால்.

(இ-ள்.) அருள் அம்பலம் மேவிய சங்கரன் - திருவருள் மயமாகிய திருச்சிற்றம்பலத்தி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமான்,— ஒருவராலும் முற்றரும் பிறப்பு இறப்பு எனும் உரகப் படத்துவாய்- ஒருவராலு மொழித்தற்கரிய ஜனனமரணமென்று சொல்லப்பட்ட பாம்பினது படம்பொருந்திய வாயினிடத்துள்ள,—அந்தோ வெருவு காம வெவ் விடத்து அழலால் மிக வெந்த வேதனை தீர - ஐயோ அஞ்சத் தக்க காமமென்னுங் கொடிய விஷமாகிய அக்கினியால் வெந்த துன்பமானது நீங்க,—கருணை ஆர் அமுதம் பொழி திருக் கடைக் கண்களால் அன்பால் பார்த்து - கிருபையாகிய நிறைந்த அமிர்தத்தைப்பொழிகின்ற திருக்கடைக்கண்களால் அன்போடு பார்த்தருளி,—அன்பு தருவன் - அடியேனுக்குப் பத்தியுண்டாகும்படி செய்தருளுவன். எ - று. ஏ அசை. (௩௫)

கோடிசூரியர் காலைவந் துதித்தெனக் குலவிய பெருஞ் சோதி, நீடி யெய்தினர் வெம்பிறப் பிறப்பெனு நீங்கருந் தாபங்கள், சாடி யிந்துவின் குழுவெழு நிலவெனத் தட்பமீக் கொண்மன்று, ளாடி யூன்றிநின் றெடுத்தசெஞ் சரணநா னணைந்துகாண் குவதெந்நாள்.

(இ-ள்.) கோடி சூரியர் காலை வந்து உதித்தெனக் குலவிய பெரும் சோதி - கோடிசூரியர்கள் உதயகாலத்தில் வந்து உதயஞ் செய்தாற் போலப் பொருந்திய பெரிய சோதிசொரூபராகிய நடேசப்பெருமான்,—நீடி எய்தினர் நீங்கரும் பிறப்பு இறப்பு எனும் வெம் தாபங்கள் சாடி - மிகவும் தம்மிடத்து வந்து அடைந்தவர்களது ஜனனமரணமென்று சொல்லப்பட்ட கொடிய உஷ்ணங்களை அழித்து,—இந்துவின் குழு எழுநிலவு என தட்பம் மீக்கொள் மன்றுள் - சந்திர கூட்டத்தில் உண்டாகின்ற சந்திரிகையைப்போல் குளிர்ச்சியானது அதிகரிக்கின்ற கனகசபையினிடத்தில்,—ஆடி ஊன்றி நின்று எடுத்த செம் சரணம் - கிருத்தஞ்செய்து ஊன்றி நின்று தூக்கிய சிவந்த குஞ்சிதபாதத்தை,—நான் அணைந்து காண்குவது எந்நாள் - அடியேன் போய்த் தரிசிப்பது எக்காலம். எ - று.

முடிவி லாதவன் புலியதள் சாத்திமேல் முளைப்பிறை யெயிற்றுலச், சுடிகைவாளர வணிந்துவெம் பவக்கட லம்பி பொற்சுடர்வானும், படியு மீன்றவண் மனத்தெழு மகிழ்ச்சி

யாய்ப் படியிலா வழகெல்லாங், குடி புகுந்தன கடிதடங் கண்டுநான் குலவுநா ளெந்நாளோ.

(இ-ள்.) புலி அதள் சாத்தி - புலித்தோலை யுடுத்து,—மேல் முளைப் பிறை எயிற்று ஆலச் சுடிகை வாள் அரவு அணிந்து - மேலே தோன்றிய பிறைபோன்ற பற்களையும், விஷம்பொருந்திய உச்சியையும் உடைய ஒளிபொருந்திய சர்ப்பத்தையணிந்து,—வெம் பவக் கடல் அம்பி போல் சுடர் முடிவு இலாதவன் - கொடிய பிறவிக்கடலைக் கடத்தற்குத் தெப்பம் போல் விளங்குகின்ற முடிவில்லாத நடேசப்பெருமானையும்,—மனத்து எழு மகிழ்ச்சியாய்ப் படி இலா அழகு எல்லாம் குடிபுகுந்தன கடிதடம் - மனதினிடத்துண்டாகிய சந்தோஷமுடையதாய் ஒப்பில்லாத அழகுகளெல்லாங் குடிகொண்டதையொத்தநிதம்பத்தையுடைய,—வானும்படியும் ஈன்றவள் - விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் பெற்றருளிய சிவகாமியம்மையாரையும்,—நான் கண்டு குலவும் நாள் எந் நாளோ - அடியேன் தரிசித்து வாழுநாள் எந்நாளோ? (அறியேன்.) எ - று. (௩௭)

தக்க நீற்றணி நிலவெழ வெம்பணித் தலையரா பரணத்திற், செக்கர் மாமணி வெயிலெழச் சிறந்தமர் சோதிமாலிகை யோங்கத், தொக்கவெண்புரி நூலுமா ரங்களுந் துதைவுபெற் றெவருக்கு, மிக்க நாயகன் விளங்கிய மார்பமென் விழிகள் காண் டருங்கொல்லோ.

(இ-ள்) எவருக்கும் மிக்க நாயகன் - எல்லாரிலு மேம்பட்டவராகிய நடேசப்பெருமானது,—தக்க நீற்று அணி நிலவு எழ - தகுதி பொருந்திய திருநீற்றணிகை நிலவை வீசும்படியாகவும்—வெம் பணித் தலை அரா ஆபரணத்தில் செக்கர் மா மணி வெயில் எழ - கொடிய படம்பொருந்திய தலையையுடைய சர்ப்பாபரணத்திலுள்ள சிவந்த பெரிய இரத்தினங்கள் வெயிலை வீசும்படியாகவும்,—சிறந்து சோதி மாலிகை ஓங்க - சிறப்புப் பொருந்திய உருத்திராக்ஷமாலை பிரகாசிக்கும்படியாகவும்,—தொக்க வெள் புரி நூலும் ஆரங்களும் துதைவு பெற்று விளங்கிய மார்பம் - கூட்டமாகிய வெள்ளிய முப்புரிநூலும் மலர்மாலைகளும் நெருங்கப் பெற்று விளங்கும்படியாகவுமுள்ள திருமார்பை,—என் விழிகள் காண் தரும் கொல்லோ - அடியேனது கண்கள் (எப்பொழுது) தரிசிக்கப் பெறுமோ? எ - று.

ஒருகரந்துடி யொலியெழ வெரியய லொருகர முறயாரும், வருக வென்பபோ லொருகரம் வீசிய வனப்பு மீழுத,

வருள்சு ரந்தொரு கரமப யந்தர வணித்திரட் புயமோங்கக்,
கருணை யங்கட னின்றவந் நிலையையான் காணவென் றுளதாமோ.

(இ-ள்.) ஒரு கரம் துடி ஒலி எழ- ஒரு திருக்கரத்தில் உடுக்கொலி எழவும்,—அயல் ஒருகரம் எரி உற - பக்கத்திலுள்ள ஒருதிருக்கரத்தில் அக்கினி பொருந்தவும்,—ஒருகரம் யாரும் வருக என்ப போல் வீசிய வனப்பு உற - ஒருதிருக்கரம் யாவர்களும் வருக என்று அழைப்பனபோல வீசிய அழகு பொருந்தவும்,—ஒரு கரம் மாறுத அருள் சுரந்து அபயம் தர - ஒரு திருக்கரம் நீங்காத கிருபையைப் பாலித்து அபயத்தைக்கொடுக்கவும்,—அணித்திரள் புயம் ஓங்க - அழகிய திரண்ட திருப்புயங்கள் உயர்ந்திருக்கவும்,—கருணையங்கடல் நின்ற அந்நிலையை யான் காண என்று உளது ஆமோ - கிருபாசமுத்திரமாகிய நடேசப்பெருமானின்றருளிய அத்திருவோலக்க நிலையை அடியேன் தரிசிக்கும்படி எப்பொழுது கிடைக்குமோ? எ-று.

ஆளகண்டசங் கரபுரமெரிதர வாடகச்சிலை தாங்குந்,
தோளதனிவேடனை மாய்த்திடத் தொடர்ந்தகாலனைச் சாடுந்,
தாளகண்டருளெனச் சரணெனவிமையவர் கறுப்பேறுங்,
காளகண்டமுந் தரளமாலிகைகளுங் கண்டுநான் களிப்பேனே.

(இ-ள்.) ஆள் அகண்ட - தேவர்முதலியவர்களை யடிமைகொள்ளுகின்ற முழுமுதற்கடவுளே,—சங்கர-சுகத்தைச் செய்பவரே,—புரம் எரி தர ஆடகச் சிலை தாங்கும் தோள - திரிபுரமானது எரியும்படி (மகாமேருவாகிய)பொன்வில்லைத் தாங்குந் திருப்புயத்தை யுடையவரே,—தனி வேள் தனை மாய்த்திடத் தொடர்ந்த கண் - ஒப்பில்லாத மன்மதனை யழியும்படி எரித்த நெற்றிக்கண்ணையுடையவரே,—காலனைச் சாடும் தாள-இயமனையுதைத்த திருவடியையுடையவரே,—இமயவர் துயர் கண்டருள் என சரண் என - தேவர்கள் அடியேங்களுடைய துன்பத்தைப் பார்த்தருளுக என்றும், தேவரீரே அடியேங்களுக்குப் புகலிடம் என்றும் பிரார்த்திக்க,—கறுப்பு ஏறும் காளகண்டமும் - அதனால் கருநிறம் பொருந்திய காளகண்டத்தையும்,—தரள மாலிகைகளும் கண்டு - முத்துமாலைகளையுந் தரிசித்து,—நான் களிப்பேனே - நான்(எப்பொழுது)சந்தோஷத்தை யடைவேனே?

கண்ண என்பது கண் என கடைக்குறையாகவந்தது.

அண்டமீன் றவன்மேல் வைத்தபார்வையு மணிபணிக் குழைக்காதுந், துண்ட முங்குனி புருவமுட் நுதற்கணுந் தொடர்ந்து சென்றடைந் தோர்நெஞ், சுண்ட செங்கனி வாயும்வெண் முறுவலு முத்தம னுமையாள்கண், வண்டு சேரருண் மதுமுக வனசமு மகிழ்ந்து காண்குவ தெந்நாள்.

(இ-ள்.) உத்தமன் - மேலானவராகிய நடேசப்பெருமானது,- அண்டம் ஈன்றவள் மேல் வைத்த பார்வையும் - அண்டங்களெல்லாவற்றையும் பெற்றருளிய சிவகாமியம்மையார்மேல் வைத்த திருவருணோக்கத்தையும்,—அணி பணிக் குழைக் காதும் - அழகிய நாககுண்டலத்தை யணிந்த திருச் செவிகளையும்,—துண்டமும் - திருமூக்கையும்,—குனி புருவமும் - வளைவாகிய திருப்புருவங்களையும்,—நுதல் கணும் - நெற்றிக் கண்ணையும்,—தொடர்ந்து சென்று அடைந்தோர் நெஞ்சு உண்ட செம் கனி வாயும் - பின்றொடர்ந்து போய்ச் சேர்ந்த அடியார்களது மனதைக் கவலீகரித்துண்ட சிவந்த கொவ்வைக்கனிபோன்ற திருவாயையும்,—வெள் முறுவலும்-வெள்ளிய திருப்புன்முறுவலையும்,—உமையாள் கண் வண்டு சேர் அருள் மது முக வனசமும் - சிவகாமியம்மையாருடைய கண்களாகிய வண்டுகள் மொய்க்கின்ற கிருபையாகிய தேனொழுகுகின்ற திருமுகத்தாமரை மலரையும்,—மகிழ்ந்து காண்குவது எந்நாள் - அடியேன் சந்தோஷித்துத் தரிசிப்பது எக்காலம். எ - று. (௪௧)

கண்ணும் என்பது கணும் என்று இடைக்குறையாக வந்தது.

செழுந்த டப்பவ ளக்கிரி மேனியிற் சிறப்புறுஞ் செஞ்சோதிக், கொழுந்தெழுந் துசாய்ந் ததுவெனப் புறந்திகழ் குளிர்சடை முடிமீதே, விழுந்தெழுந் திரைக் கங்கைவெண் பிறையணி விளக்கமுங் கண்டங்கே, யழுந்து நேசமோ டிருகினான் மகிழ்தர வணையுநா ளணையாவோ.

(இ-ள்.) செழும் தடப் பவளக்கிரி மேனியில் - செழுமையாகிய பெரிய பவள மலைபோன்ற திருமேனியிலிருந்து,—சிறப்பு உறும் செம் சோதிக் கொழுந்து எழுந்து சாய்ந்தது என - சிறப்புப் பொருந்திய செவ்வொளியினது கொழுந்தானது மேலெழுந்து சாய்ந்ததுபோல,—புறம் திகழ் குளிர் சடை முடி மீது - பின்புறத்தில் விளங்காநின்ற குளிர்ச்சி பொருந்திய ஜடா முடியின் மேலே,—விழுந்து எழும் திரைக் கங்கை வெண் பிறை அணி விளக்கமும் கண்டு - படிந்து மேலெழும்பாநின்ற அலைகளையுடைய கங்கையையும் வெள்ளிய மூன்றாம்பிறைச் சந்திரனையுந் தரித்து விளங்கு

கின்றதையுந் தரிசித்து,—அங்கே அழுந்து நேசமோடு உருகி நான் மகிழ்சர அணையும் நாள் அணையாவோ - அங்கே பதிந்த அன்போடு மன முருகி நான் சந்தோஷமடையுங் காலம் உண்டாகாதோ? எ-று.

ஆத ரத்துட னிப்படிபன் முறை யறைந்தறைந்தழியாத, சோதி நாடக வுண்மையி னறிவுபோய்த் தோய்வு மாய்த்தற், போத மற்றொளிர் சிற்சிவ போதமாய்ப் பொலிவுகூ ரானந் தச், சீத சாகர மூழ்கிவே றறிந்திலன் றெய்வதே சிகனம்மா.

(இ-ள்.) தெய்வ தேசிகன் - தெய்வத்தன்மை பொருந்திய எனது ஆசாரியராகிய வியாசமுனிவர்,—ஆதரத்துடன் இப்படிப் பன்முறை அறைந்து அறைந்து - விருப்பத்தோடு இந்தப்பிரகாரம் பலமுறை துதித்துத் துதித்து,—சோதி நாடக உண்மையின் அறிவு போய்த் தோய்வுமாய் - சோதி சொரூபமாகிய நடேசப் பெருமானது திரு நிருத்தத்தின துண்மையினிடத்துப் புத்தியானது போயழுந்திய தாய்,—தற் போதம் அற்று - பசுபோத நீங்கி,—ஒளிர் சித் சிவபோத மாய் - விளங்காநின்ற ஞானத்தையுடைய சிவபோதமுடையவ ராய்,—பொலிவு கூர் சீத ஆனந்த சாகர மூழ்கி - பிரகாசம் பொரு ந்திய குளிர்ச்சியையுடைய சிவானந்தக் கடலிலழுந்தி,—வேறு அறிந் திலன்-வேறொன்று மறியாதவராய்ப் பரவசமடைந்தார். எ-று.

கலாதி நீங்கின குணங்களு மிரிந்தன கரணங்க டனிச் சாய்ந்த, புலாதி மாறின மொழிமுத லாயின புறங்கொடுத் தனவப்பா, னிலாவு கேவல மொருவிய திருவரு ணெறிதரப் பரமாகிக், குலாவு பூரணத் தொன்றியொன் றுததோர் குறிக் கரு நிலையானான்.

(இ-ள்.) கலாதி நீங்கின - கலை முதலியவைகள் நீங்கின,—குண ங்களும் இரிந்தன - முக்குணங்களுமுறிந்தன - தனிக் கரணங்கள் சாய்ந்த - ஒப்பற்ற அந்தக் கரணங்கள் அழிந்தன,—புலாதி மாறின - ஐம்புலாதிகள் மாறுபட்டன,—மொழி முதலாயின புறங் கொடுத் தன - வாக்கு முதலாகிய கர்மேந்திரியங்களும் புறங்காட்டியோ டின,—அப்பால் நிலாவு கேவலம் ஒருவிய - அதற்குமேல் விளங்கா நின்ற கேவல ஞானங்கள் நீங்கின,—திருவருள் நெறி தர - திருவ ருள் மார்க்கமுண்டாக,—பரம் ஆகிக் குலாவு பூரணத்து ஒன்றி - மேலானதாய்ப் பொருந்திய பரிபூரண வஸ்துவிற் கலந்து,—ஒன்று உதோர் குறிக்கு அரு நிலை ஆனான் - ஒன்றினும் பற்றப்படாததாயும் நினைக்கப்படாததாயுமுள்ள ஞான நிலையையுடையவராயினர் வியாச முனிவர். எ-று. (சஞ)

பொறிபு லாதிய தத்துவக் குறம்புகள் புறங்கொடுத் திரிந்தோட, நெறிதருஞ்சிவ ஞானநே யத்திடை நேயமோ டணைந்தென்றுங், குறிகுணம்பெறு வளவிலா வானந்தக் கோயில்கொண் டலைவின்றி, யறிவுவீற் றிருந்திட விருந்தான் றனையதி சயத்தொடுங் கண்டான்.

(இ-ள்.) தனை அதியசத்தொடுங் கண்டான் - தன்னை நிரதிசய வின்பத்தோடு அறிந்தவராகிய வியாச முனிவர்,—பொறி புல ஆதிய தத்துவக் குறம்புகள் புறம் கொடுத்து இரிந்து ஓட - ஐம்பொறி யைம்புலன் முதலிய தத்துவக் குறும்புகள் முதுகுகாட்டி முறிந்து ஓட,—நெறி தரும் சிவஞான நேயத்திடை நேயமோடு அணைந்து - மோக்ஷமார்க்கத்தைக் கொடுக்குஞ் சிவஞானமாகிய நேயத்தில் விருப்பமோடுசேர்ந்து,—என்றும் குறி குணம் பெறு அளவு இலா ஆனந்தக் கோயில் கொண்டு - எப்பொழுதும் தோற்றமுங் குணமுமில்லாத அளவிடப்படாத சிவானந்தத்தையே கோயிலாகக் கொண்டு,—அறிவு வீற்றிருந்திட அலைவு இன்றி இருந்தான் - (அக் கோயிலில்) ஞானமானது வீற்றிருக்கும்படி அசைவற்றிருந்தார். எ - று. (௪௪)

கண்ட கண்களு நெஞ்சமுங் களித்திடக் கைகுவித் தெதிர்நேயங், கொண்டு தேசிகன் மொழிபெறு மாசையாற் குறித்தொரு மொழிகூறு, தெண்ட ரத்தகு முகூர்த்தமொன் றகன்றபி னெழிற்சிவ மயமான, தண்டலில்குர வன்றனைப் போற்றினன் சைமினி யெனுமேலோன்.

(இ-ள்.) சைமினி எனும் மேலோன் - சைமினி முனிவரென்னும் பெரியோர்,—கண்டகண்களும் நெஞ்சமும் களித்திட - (வியாசமுனிவர் சமாதியிலிருத்தலைக்) கண்ட கண்களும் மனமுஞ் சந்தோஷத்தையடைய,—எதிர் கைகுவித்து - அவரெதிரே கைகளை யஞ்சலியாகக் குவித்து,—நேயம் கொண்டு - விருப்பமுற்று,—தேசிகன் மொழி பெறும் ஆசையால்,—ஆசாரியராகிய வியாசமுனிவருடைய உபதேசத்தைப் பெறவேண்டு மென்னும் விருப்பத்தால்,—குறித்து ஒருமொழி கூறாது எண்தரத்தகும் முகூர்த்தம் ஒன்று அகன்றபின் - அவரைத்தியானித்து யாதொரு வார்த்தையும் பேசாமல் எண்ணிக்கையைத் தரத் தக்க ஒரு முகூர்த்தகாலம் மௌனமாக இருந்து நீங்கியபின்,—எழில் சிவமயமான தண்டல் இல் குரவன் தனைப் போற்றினன் - அழகிய சிவமய மாகிய நீங்குதலில்லாத தனது ஆசாரியராகிய அவ்வியாசமுனிவரைத் தோத்திரஞ் செய்தார். எ - று. ()

எழுது சித்திரத் தீபமொத் திருந்தவ னிலகுமா முனி போற்றும், வழுவி லோசையால் விழித்துல சச்செயல் வந்துறு முணர்வோடுந், தழுதழுத்தெழு மொழியினாற் புளகமுந் தாழ் தடங் கண்ணீருந், தொழுதியற்றிய கையுமெய்க் கம்பமுந் தோன்றமுன் னுரைசெய்வான்.

(இ - ள்.) எழுது சித்திரத் தீபம் ஒத்து இருந்தவன் - எழுதப்பட்ட சித்திரதீபம்போல அசைவற்றுச் சமாதியிலிருந்த அவ்வியாச முனிவர்,—இலகு மாமுனி போற்றும் வழுவில் ஓசையால் - விளங்காநின்ற பெருமை பொருந்திய சைமினி முனிவர் தோத்திரஞ் செய்கின்ற குற்றமில்லாத சத்தத்தினால்,—விழித்து - (அவ்வியாச முனிவர் சமாதியினின்றும்) விழித்தெழுந்து,—உலகச் செயல்வந்து உறும் உணர்வு ஓடும் தழு தழுத்து எழும் மொழியினால் - பிரபஞ்ச செய்கைவந்து பொருந்து கின்ற அறிவுடனே தழுதழுத்துண்டாகா நின்ற வார்த்தையினால்,—புளகமும் தாழ்த் தடம் கண்ணீரும் தொழுது இயற்றிய கையும் மெய்க்கம்பமும் தோன்ற - மயிர்க்குச் செறிய ஒழுகுகின்ற விசாலம் பொருந்திய கண்களின்று முண்டாகிய ஆனந்த பாஷ்பமும் அஞ்சலியாகக் குவித்தகைகளும் சரீரநடுக்கமும் அச் சைமினிமுனிவருக்குண்டாக,—முன் உரைசெய்தான் - அவர்முன் இவ்வசனங்களைச் சொல்லியருளினார்.—எ - று. ()

கற்கு நூன்னெறி மாதவ வுணர்வருங் கலைமறைப் பொரு ணின்பா, னிற்க வோதினஞ் சிதம்பரங் கண்டவர் மூத்தியி னெறியோராற், சிற்கனந் திகழம்பல வாணனைச் சிறந்தநே யங்கூர, முற்க டுந்துயர் கடிந்துகண் டிலகிமெய்ம் முத்திபெற் றினிதுய்வாய்.

(இ - ள்.) நூல் நெறி கற்கும் மாதவ - சாஸ்திரங்களை முறைப்படி கற்கின்ற பெரிய தவத்தையுடைய சைமினியே,—உணர்வு அரும் கலைமறைப் பொருள் நின்பால் நிற்க ஓதினம் - அறிதற்கரிய சாஸ்திரங்களும் வேதத்தினது பொருளும் உன்னிடத்தில் நிலை பெற்றிருக்கும்படி நாம் முன்னே உபதேசித்திருக்கின்றோம்,—(அதுநிற்க),—சிதம்பரம் கண்டவர் முத்தியின் நெறியோர் - சிதம்பரத்தைத் தரிசித்தவர்கள் மோக்ஷமார்கத்தை யடைந்தவராவார்,—(ஆகையால்).—முன் கடும் துயர் கடிந்து-பிராரத்துவக் கொடுந்துன்பங்களை நீக்கி,—சித் கனம் திகழ் அம்பலவாணனைச் சிறந்த நேயம் கூரக் கண்டு - அச்சிதம்பரத்தில் விளங்காநின்றநடேசப்பெருமானை

மிருந்த அன்போடு தரிசித்து,—மெய்முத்தி பெற்று இலகி இனிது உய்வாய்-உண்மைபொருந்திய மோக்ஷத்தையடைந்து விளங்கி இன்பத்தோடிருந்து வாழக்கடவாய்,—எ - று. ஆல் அசை. (௩௮)

சுருதி நாயக னிடத்தென தன்பிவண் டோற்றுமிச் சருக்கத்தைக், கருதி யோதினர் சிதம்பரத் துறைபவர் கருதரும் பயன்சேர்வர், பொருவி லம்பலங் காண்குறு மாதரம் புணர்ப்பவர்க் கிடையூறு, மொருவி மாநடங் கண்டுகண் களித்துநன் குறுவரிவ் வுரையுண்மை.

(இ-ள்.) இவண் சுருதி நாயகன் இடத்து எனது அன்பு தோற்றும் இச்சருக்கத்தை - இப்பொழுது வேதநாயகனாகிய நடேசப்பெருமானிடத்து எனக்கு அன்புண்டாகத் தக்க இச்சமாதிச்சருக்கத்தை,—கருதி ஓதினர் - சிந்தித்துப் படித்தவர்கள்,—சிதம்பரத்து உறைபவர் கருதரும் பயன் பெறுவர் - சிதம்பரத்தில் வசிப்பவர்களடையத்தக்க நினைத்தற்கரிய பலனை அடைவார்கள்,—பொருவு இல் அம்பலம் காண்கு உறும் ஆதரம் புணர்ப்பவர்க்கு - ஒப்பில்லாத திருச்சிற்றம்பலத்தைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவர்களுக்கு,—இடையூறும் ஒருவி - துன்பங்களும் நீங்கி,—மா நடம் கண்டு கண் களித்து நன்கு உறுவர் - பெரிய திருநிருத்தத்தைத் தரிசித்துக் கண்கள் ஆனந்தத்தை யடைந்து நன்மையைப் பெறுவர்,—இவ் உரை உண்மை - இவ்வார்த்தை சத்தியமாகும்,எ-று.

நின்னை வேண்டின னாதலி னிவையெலா நிகழ்த்தினன் வேறொன்று, முன்ன லாதுகொள் பொன்னவைச் சிதம் பரத் தூடுசென் றடைவாயென், றின்ன நன்னெறி யினிதற வுரைத்தன னிறைவன தருடன்னான், முன்னருள்ளன பழமறை விளக்கிய முதன்மைகூர் முனிவேந்தன்.

(இ-ள்.) இறைவனது அருள் தன்னால்-நடேசப்பெருமானது திருவருளால்,—முன்னர் உள்ளன பழமறை விளக்கிய முனிவேந்தன் - முன்னமே உள்ளனவாகிய பழைய வேதங்களெல்லாவற்றையும் வகுத்து உலகத்தில் விளங்கும்படி செய்தருளிய முனிவர்பெருமானாகிய வியாசமுனிவர்,—நின்னை வேண்டினன் ஆதலின் - (சைமினிமுனிவரைப்பார்த்து சைமினியே யான்)உன்னிடத்தில் விருப்பமுடையவனாதலால்,—இவை எலாம் நிகழ்த்தினன் - இவ்விஷயங்களெல்லாவற்றையு முனக்குச் சொன்னேன்,—வேறு ஒன்றும் உன்னலாது கொள் - நீ வேறொன்றையுஞ் சிந்தியாமல் யான் சொல்லியதையே

சிந்திக்கக்கடவாய்,—சிதம்பரத்துப் பொன் அவை உளடு சென்று அடைவாய் என்று இன்ன நல்நெறி இனிது உற உரைத்தனன்-சிதம்பரத்தின்கணுள்ள கனகசபையினிடத்துப் போய்ச் சேரக்கடவாய் என்று இத்தன்மையாகிய நன்மார்க்கங்களெல்லாவற்றையு மின்பமுண்டாகும்படி யெடுத்துபதேசித்தருளினார். எ - று. (௩௦)

சமாதிச்சருக்கமுற்றிற்று.

பாயிரம் உள்படச் சருக்கம் - ௯ - க்குத் திருவிருத்தம் எகஒ.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

# துற்றெரிசனச்

# சருக்கம்.

அருமறை யிதுவென வதுவென வலைதர வயலொளி பரககனத், திருநட வடிவினை நினைதர மருவிய திருமுனி பரவசமுன், கருதரு நிலைசிறி துறைசெய்து மிகுகொலை, களவுறு மொருபுளினு, னிருவினை யெறிபவர் மருவிய சிவகதி யிடையடை நெறிபுகல்வாம்.

(இ-ள்.) அரு மறை இது என அது என அலை தர - அருமையாகிய வேதங்களானவை இதுவோ அதுவோ என மயங்கும்படி,— அயல் ஒளி பர ககனத் திரு நட வடிவினை நினைதர - பக்கத்திலொளியை வீசத்தக்க மேலான சிதம்பரத்தில் திருநிருத்தஞ் செய்தருளாநின்ற நடேசமூர்த்தியினது திருவுருவத்தைத் தியானிக்கும்படி,- மருவிய திருமுனி - பொருந்திய அழகிய வியாசமுனிவர்,—முன்

பரவசம் சரு தரு நிலை சிறிது உரை செய்தும் - முன்னே பரவசப்பட்டுச் சமாதியிலிருந்த நிலைத்தற்கரிய தன்மையைச் சிறிது எடுத்துச் சொன்னோம்,—மிகு கொலை களவு உறும் ஒரு புளிஞன் - மிகுந்த கொலையும் களவுமுடைய ஒரு வேடன்,—இரு வினை எறிபவர் மருவிய சிவகதி யிடை அடை நெறிபுகல்வாம் - இருவினைகளை நீக்கிய பெரியவர்கள் அடையத்தக்க நன்மைபொருந்திய மோக்ஷத்தையடைந்த சரித்திரத்தை இனி எடுத்துச் சொல்வாம்- எ - று. (க)

பொருபுலன் விலகிய வறிவுட னிலகிய புகழ்முனி புகலுதலும், வருமிரு வினையெறி நெறிதிகழ் திருவருண் மருவிய சைமினியுங், குருபர வருள்வடி வுடனுல கினிலெழு குணநெடு வரையனையா, யொருமைகொ டுனதுரை யமுதுகொ டறிவினி லுறுகுறை யொருவினனால்.

(இ-ள்) பொருபுலன் விலகிய அறிவுடன் இலகிய புகழ்முனி புகலுதலும் - மாறுபடுகின்ற ஐம்புலவாசையினின்று நீங்கிய அறிவோடு விளங்காநின்ற கீர்த்திபொருந்திய வியாசமுனிவர் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளவும்,—வரும் இருவினை எறி நெறி திகழ் சைமினியும் - தம்மைத் தொடர்ந்து வருகின்ற இருவினைகளையுஞ் செயித்துச் சன்மார்க்கத்துடன் விளங்குகின்ற சைமினிமுனிவரும்,—குருபர - குருபரனே,—அருள் வடிவுடன் உலகினில் எழு நெடு குணவரை அனையாய் - கிருபாரூபத்தோடு உலகத்திற் றோன்றிய பெரிய குணமலை போன்றவரே!—ஒருமை கொடு உனது உரை அமுது கொடு - ஒற்றுமைபொருந்திய தேவரீரது உபதேசமொழியாகிய அமிர்தத்தைக்கொண்டு,—அறிவினில் உறு குறை ஒருவினன் - எனது புத்தியிலுண்டாகின்ற குறைவுபாடாகிய சந்தேகவிபரீதங்களினின்று நீங்கினேன். எ - று. (உ)

மதுவிரி யிதழியு மதிபமு நதியமும் வளர்சடை முதன் முனிவன், முதுமுய லகனுடன் முரிதர நடமிடு முடிவறு முயர்கனகப், பொதுவினி னிலகிய பெருமைக ளளவில புகலவு மெனதிதைய, மதிசய முடனமை கிலதின மருளென வருண்முனி யருள்புரி வான்.

(இ-ள்.) முனிவன் - சைமினி முனிவரானவர்,—மதுவரி இதழியும் நதியமும் வளர் சடை முதல் - தேனொழுகப்பெற்ற கொன்றைப்பூமாலையையும் சந்திரனையும் கங்கையையும் தரித்து வளருகின்ற சடையையுடைய முதல்வராகிய நடேசப்பெருமானது,—முது

முயலகன் உடல் முரிதர நடம் இடும் முடிவு அறும் உயர் கனகப் பொதுவினில் இலகிய பெருமைகள் அளவு இல - பழமையாகிய முயலகனுடைய சரீரமானது முறியும்படி திருநிருத்தஞ் செய்தருளுகின்ற அளவற்ற உயர்ச்சிபொருந்திய கனகசபையினிடத்தில் விளங்கிய மகிமைகள் அளவில்லாதனவாயிருக்கின்ற,—எனது இதயம் அதிசயமுடன் புகலவும் அமைகில - என்னுடைய மனமானது ஆச்சரியத்தோடு இத்தன்மையதென்று சொல்ல அமையவில்லை(ஆதலின்;— அருள் என - அதனை அடியேனுக்கு அநுக்கிரகஞ் செய்தருளுக என்று பிரார்த்திக்க,—அருள் முனி அருள் புரிவான் - கிருபையையுடைய வியாசமுனிவர் திருவாய்மலர்ந்தருளுவார். எ - று.

மறுபுவி மருவின ரணிமையிலுறைபவர் மலமிரு வினையிருளைத், தெறுதரு தமனிய மிலகிய பொதுமலி திருநகரிடைமறையோ, ரறுபகை கடிதவ முனிவரருறைதர வணிமனை மடம்வனையா, வுறுகுறை சிறிதற வுதவினர் சிவபதமுவகையோ டுறுவர்களால்.

(இ-ள்.) மறு புவி மருவினர் - அச்சிதம்பரஸ்தலத்துக்கு அன்னிய தேசத்தி லிருப்பவர்களும்,—அணிமையில் உறைபவர் - அந்த ஸ்தலத்துக்குச் சமீபத்திலிருப்பவர்களும்,—மலம் இருவினை இருளைத் தெறுதரு தமனியம் இலகிய பொது மலி திருநகர் இடை மறையோர் - மும்மலங்களும் இருவினைகளுமாகிய இருளைத் தூரத்துகின்ற அழகிய சிதம்பரஸ்தலத்தில் வசிக்கின்ற பிராமணர்களும்,—அறுபகை கடி தவமுனிவரர் உறை தர - காம குரோத முதலிய அறுவகை உட்பகைகளை நீக்குகின்ற தவத்தை யுடைய முனிவர்களும் வசிக்க,—அணி மனை மடம் வனையா - அழகிய வீடுகளையும் மடங்களையும் கட்டுவித்து,—உறு குறை சிறிது அற உதவினர் - அவர்களைப் பொருந்திய குறைவு பாடுகள் கொஞ்சமும் இல்லாமல் உதவி செய்தவர்கள்,—உவகையோடு சிவபதம் உறுவர்கள் - சந்தோஷத்தோடு சிவபதவியை யடைவார்கள். எ - று. ஆல் அசை. (௪)

வித்தக முனிவர சத்திய மிதிலொரு மெய்க்கதை யுளதந்தேன், மைத்திரை விடமென விப்புவி யிடைவரு மற்றொரு விடமனையான், சித்திரவதையி லளப்பில வுயிர்பல செற்றதில் வருபொருளே, துய்த்துழ லறிவிலி பற்றறு னிவி பெயர் துற்றெரி சனன்வனே.

(இ-ள்.) வித்தக முனிவா - ஞானத்தையுடைய சைமினியே,- சத்தியம் - இது சத்தியமாகும்,—இதில் ஒரு மெய்க்கதை உளது அதுகேள் - இச்சிதம்பரஸ்தலத்தில் உண்மைபொருந்திய சரித்திரம் ஒன்றுண்டு அதை உனக்குச் சொல்லுகிறேன் நீ கேட்பாயாக,—மைத்திரை விடம் என இப்புவியிடை வரும் ஒரு விடம் அலையான்-கரிய சமுத்திரத்திற் றோன்றிய ஆலகாலத்தைப் போல இப்பூமியிணிடத்திற் றோன்றி வருகின்ற ஒப்பற்ற விஷத்தை யொத்தவன்,—சித்திரவதையில் அளப்பில பல உயிர் செற்று அதில்வரும் பொருளே துய்த்து உழல் அறிவிலி - துண்டந் துண்டமாக வெட்டிக் கொல்லுதலாகிய சித்திரவதையினால் அளவில்லாத பலவகைப்பட்ட ஆன்மாக்களைக் கொன்று அதனால் வரும் பொருளைக் கொண்டு சீவித்துத் திரியும் அறிவில்லாதவன்;—பற்று அருள் இலி - (உயிர்களிடத்து) அன்பு அருளும் மில்லாதவன்,—அவன் பெயர் துற்றெரிசனன் - அவனுடைய பெயர் துற்றெரிசனனென்று சொல்லுவார்கள். எ-று. மற்று ஏ அசைகள். (௫)

வனசரர் தங்குல னிடைவரு வஞ்சகன் வடவன லுங்கதிர்சூழ், தினகர னும்பய முறமிகு செந்தழல் சினவிய விந்தவனத், தனவர தங்கொலை வழிபறி வன்களவு வையின் மகிழ்ந்துயர்வோன், றனைநிக ருங்கொடு வினைவடி வங்கொடு தலனின டந்தனையோன்.

(இ-ள்.) வனசரர் தம் குலன் இடை வரு வஞ்சகன் - (அத்துற்றெரிசனன்) வேடர்களுடைய குலத்திற் பிறந்த வஞ்சகத்தன்மையையுடையவன்;—வடவனலும் கதிர் சூழ் தினகரனும் பயன் உற மிகு செந்தழல் சினவிய விந்த வனத்து - வடவாமுகாக்கினியும் கிரணங்கள் சூழப்பெற்ற சூரியனும் அச்சமடையும்படி மிகுந்த சிவந்த அக்கினியானது சுவாலித்தெரிகின்ற விந்த வனத்தில்,—அனவரதம் கொலை வழிபறி வன் களவு அவையின் மகிழ்ந்து உயர்வோன் - நாள்தோறும் கொலைசெய்தலும் வழிபறித்தலும் வலியகளவு செய்தலும் ஆகிய இவைகளாலுண்டாகுஞ் சந்தோஷத்தால் மேம்பட்டவன்,—தனை நிகரும் கொடுவினை வடிவம் கொடு தலனில் நடந்து அனையோன் - தனக்குத் தானே ஒப்பாகும் பாவங்களெல்லா மொருவடிவங்கொண்டு பூமியில் நடந்து வந்தால் போலத் திரிபவன்.(௬)

இடைநெறி வந்திவ ணெதிர்பவ ருண்டுகொ லெனவிவணின்றனன்முன், குடையு மிகுந்திரை நரையு முயங்கிய குனி

வெரி நந்தளரு, முடையு மவிழ்ந்தலை சிகையு மவிழ்ந்திட்டூ றுமிக னென்றுலையு நடையு மடைந்திடும் வயதினோ ரந்தண னட்டவை நடந்தனனால்.

(இ-ள்.) இவன் - இத்துற்றெரிசனன்,—நெறியிடை வந்து இவண் எதிர்பவர் உண்டு கொலென நின்றனன்,—மார்க்கத்தில் வந்து இவ்விடத்திலெதிரே வருபவர்களுண்டோவென்று நின்றான்,- முன் - அவனுக்கு முன்னே,—குடையும் மிகும் திரையும் நரையும் முயங்கிய குனிவெரிநும் தளரும் உடையும் அவிழ்ந்து அலை சிகையும் அவிழ்ந்து இடர் உறும் உலையும் நடையும் அடைந்திடும் வயதின் மிகன் என்று ஓர் அந்தணன் - கையில் ஒரு குடையும் மிக்க திரையையுடைய சரீரமும் நரைத்தமயிரும் தழுவிப்பிடிக்கும்படி வளைந்திருக்கின்ற கூனிய முதுகும் தளர்ந்து தொங்குகின்ற வஸ்திரமும் அவிழ்ந்து அலைகின்ற குடுமியும் கவிழ்ந்து துன்பமிகுந்து வருந்துகின்ற நடையும் பொருந்திய வயோதிகத்தன்மையை யுடைய மிகன் என்று சொல்லப்பட்ட பெயரையுடைய ஒரு பிராமணன்,—நடவை நடந்தனன் - அந்தமார்க்கத்தில் வந்தான்.எ-று ஆல் அசை.

வட்டை யெதிர்ந்த விருத்திக வந்தணன் மட்டில் பயங் கதுவக்,கட்டழல் சிந்த வெருட்டு கொடுங்கர கட்க மிலங்கியெ ழத், தொட்டகதங்கதுவக் கதுவத்தன் சொற்கொடெதிர்ந் துடனே, வெட்டுவ னென்றெதிர் கிட்டினன் வெந்திறன் மிக்க கொடுஞ் சவரன்.

(இ-ள்.) வெந்திறல் மிக்க கொடும் சவரன் - கொடிய வலிமை மிகுந்த பாவத்தொழிலைச் செய்கின்ற அவ்வேடன்,—வட்டை எதிர்ந்த விருத்திக அந்தணன் - அம்மார்க்கத்தி லெதிர்ப்பட்ட அவ் விருத்தப் பிராமணனுக்கு,—மட்டு இல் பயம் கதுவ - அளவில்லாத பயம் உண்டாகும்படி,—கண் தழல் சிந்த - கண்களிலிருந்து தீப்பொறிபறக்கவும்,—வெருட்டு கொடும் கரம் கட்கம் இலங்கி எழ - அச்சமுறுத்துகின்ற கொடிய கைகளில் வாளாயுதம் பிரகாசிக்கவும்,—தொட்ட கதம் கதுவ கதுவ - பிடித்த கோபமானது மிக அதிகரிக்கவும்,—தன் சொல் கொடு எதிர்ந்து உடனே வெட்டுவன் என்று எதிர்கிட்டினன் - தன் சொல்லைக்கொண்டு எதிர்த்து உடனே வெட்டு வேன் என்று அப்பிராமணனுக்கு எதிரே சமீபித்து வந்தான்.எ-று.

அந்தண னிங்கிவன் வந்தது கண்டன னஞ்சினன் விந்தவனம், வந்தன னந்தக னந்தம தந்தமும் வந்தது வந்ததெனா,

நொந்திரு கண்புனல் சிந்திட வெங்கடுநுங்கின னென்றிடவே ர், சிந்த வுடம்பு நடுங்கி விழுந்துயர் சிந்தை கலங்கினனால்.

(இ-ள்.) இங்கு இவன் வந்தது கண்டனன் அஞ்சினன் - இவ் விடத்தி லித் துற்றெரிசனன் வந்ததை அப்பிராமணன் பார்த்தவனு ய்ப் பயந்தான்,—அந்தகன் விந்த வனம் வந்தனன் - யமனானவன் இந்த விந்தவனத்தில் வந்துவிட்டான்,—நம் தமது அந்தமும் வந் தது வந்தது எனு நொந்து - நமக்கு முடிவுகாலம் வந்துவிட்டது வந்துவிட்டது என்று சொல்லி வருத்தமுற்று,—இருகண் புனல் சிந்திட - இரண்டு கண்களிலுமிருந்து நீர் சொரியவும்,—வெம் கடு நுங்கினன் என்றிட வேர் சிந்த - கொடிய விஷத்தைக் குடித்தவன் என்று சொல்லும்படி வேர்வை யொழுகவும்,—உடம்பு நடுங்கி விழு ந்து - சரீரம் நடுங்கி கீழேவிழுந்து,—உயர் சிந்தை கலங்கினன்-உயர் வாகிய தன்மனங் கலங்கினான். எ - று. ஆல் அசை. (சு)

தேவர்க டேவ விமாசல மேல்வரு தேனொரு பானுடை யாய், மூவரு மாய்முத லாய்முடி வாய்முடி யாமுத லாமுதல் வா, காவுதி யோவென வாய்வெரு வாவிறு காலமு மீதுகொ லோ, வாவ வெனாவுரை யாவுலை யாவெழு மாகுல மூழ்கின னால்.

(இ-ள்.) தேவர்கள் தேவ - தேவர்களுக்குத் தேவனே,—இமா சல்மேல் வரு தேன் ஒரு பாலுடையாய் - இமையமலையிற் பிறந்த தேன் போன்ற உமாதேவியாரை ஒருபாகத்திலுடையவரே,—மூவ ரும்ஆய் முதலாய் முடிவாய் முடியா முதல் ஆம் முதல்வா - மும்மூர் த்தியாயும் முதல்வராயும் முடிவாயும் முடிவில்லாத முதல்வராயு முள்ள முதல்வரே,—காவுதியோ என வாய் வெருவா - அடியேனைக் காத்தருளுவீரோ என்று சொல்லி வாய்விட்டழுது,—இறுகாலம் ஈது கொலோ ஆவ எனு உரையா - அடியேனுக்கு முடிவுகாலம் இதுதானோ அங்ஙனமாயினு மாகுக என்று சொல்லி,—உலையா எழும் ஆகுலம் மூழ்கினன் - நீங்காதுண்டாகின்ற துன்பத்தி லழுந் தினன். எ - று. ஆல் அசை. (௧0)

ஆருமிலேனினிவேடர்குலாதிபவா்வியைநீதருவா, யோர் பற வாள்கொடு மோதுதல் காதுத லோகொடிதேகொடிதாற், பாரிது காசிது தூசிவை யேயொரு பாரமி லேனருளக், கூரி வை நீசொடு போதமி யேனையொர்கோவிழையாதொழிவாய்

(இ-ள்.) வேடர் குலாதிப - வேடர்குலத்துக்கு அரசனே,—இனி ஆரும் இலேன் - யான் உன்னையன்றி வேறொரு துணையுமில்லேன்,—ஆவியை நீ தருவாய் - எனது பிராணனை நீ (எனக்குத்தானமாகக்)கொடுக்கவேண்டும்;—ஓர் மறவாள் சொரி காதுதல் மோதுதல் கொடிதே கொடிது ஆல் - நீ ஒரு கொலைத்தொழிலைச் செய்யாநின்ற வாளாயுதத்தைக் கொண்டு என்னைக் கோபித்து வெட்டுதல் மிகவும் கொடுமையாகும்; ஆதலால்,—பார் - நீபார்,—இது காசு இது தூசு - இது பணம் இது வஸ்திரம்,—இவையே -(என்னிடத்துள்ளவை)இவைகளே,—ஒரு பாரம் இலேன் - வேறொருசுமையும் என்னிடத்தில்லை,—அருளக் கூர் இவை நீ கொடு போ - நான் கொடுக்கின்ற மிகுந்த இவைகளை நீ கொண்டுபோ,—தமியேனை ஓர் கோள் இழையாது ஒழிவாய் - தனித்தவனாகிய எனக்கு ஓர் இடையூறுஞ் செய்யாமல் நீங்குவாயாக. எ - று. (௧௧)

பழிபிது நன்றல வருளரு ளென்றிரு பதமிசை சென்றுவிழா, விழிபுனல் சிந்திட மொழிக ளடர்ந்திட வெயர்வுமிகுந் திடநொந், தழிதரு நெஞ்சமொ டுலைதரு மந்தண னயர்வது கண்டுவிடா, திழிபு பெறுங்கொலை வனசரர் தம்பதி யிடர்கள் புரிந்திலனால்

(இ-ள்.) இது பழி - இது பழியாகும்,—நன்று அல - இது தருமமல்ல,—அருள் அருள் என்று இருபத மிசை சென்று விழ - நீகிருபைசெய்கிருபைசெய் யென்றுஅவன்காலின்மேலே போய்விழுந்து,-விழி புனல் சிந்திட - கண்ணீர் சொரிய,—மொழிகள் அடர்ந்திட - சொற்றடுமாற,—வெயர்வு மிகுந்திட - வெயர்வை யொழுக,—நொந்து - வருத்த முற்று,—அழிதரு நெஞ்சமொடு உலைதரும் அந்தணன் அயர்வது கண்டு-வருந்துகின்ற மனத்தோடு துன்பப்படுகின்ற பிராமணன் சோகிப்பதைப் பார்த்து,—விடாது இழிபு பெறும் கொலை வனசரர் தம்பதி இடர்கள் புரிந்திலன் - நீங்காமல் கீழ்மை பெற்ற கொலைத் தொழிலைச் செய்கின்ற வேடர்களுக் கரசனாகிய துற்றெரிசனன் அப்பிராமணனுக்கு யாதொரு துன்பமும் செய்திலன். எ - று. ஆல் அசை. (௧௨)

முன்ன ரியற்றிய நன்னர் வினைத்தொகை முன்ன ரடுத்திடலுந், தன்னியல் பற்றநுண் மன்னிவ னச்சரர் தம்மர பிற்கொடியோ, னுன்னைவ ருத்தில னுன்னை முடித்திட வுன்னில னச்சமொழிந், தின்ன றவிர்த்திட நின்னது கைப்பொரு ளென்வயி னுய்த்திடென்று.

(இ-ள்.) வனசரர் தம்மரபிற் கொடியோன் - வேடர்குலத்திற் பிறந்த கொடியோனாகிய துற்றெரிசனன் (அப்பிராமணனைப்பார்த்து),—முன்னர் இயற்றிய நன்னர் வினைத்தொகை முன்னர் அடுத்திடலும் - ஓபிராமணனே! நீ முன் செய்த நல்வினைக்கூட்டங்கள் எதிரே சமீபித்துவந்தபடியால்,—தன்னியல்பு அற்று அருள்மன்னி - எனக்குள்ள இயற்கைக்குணமாகியகொல்லுதலையொழித்துக்கிருபையைப் பொருந்தி,—உன்னை வருத்திலன் - உன்னை வருத்தப்படுத்திலன்,—உன்னை முடித்திட உன்னிலன் - உன்னைக் கொல்லவு நினைத்திலன்,—அச்சம் ஒழிந்து - என்னிடத்துள்ள பயத்தை ஒழித்து,—இன்னல் தவிர்த்திட - உன்னுடைய துன்பநீங்கும்படி,—நின்னது கைப்பொருள் என்வயின் உய்த்தி எனு - உன் கையிலிருக்கிற திரவியத்தை என்னிடத்திற் கொடு என்று சொல்ல. எ - று. (௧௩)

வேட னுரைத்த சொ லாரமு தத்துயிர் விடுதெ லற்றுடனே, யாடை முதற்பொருள் யாவையு மற்றவ னாசைதணித் தருள்வான், கோடி யெனப்பரி வோடு கொடுத் தொரு கோவண முற்புனையா, நாடு மகிழ்ச்சியி னானவனுக்கெதிர் நாகுழறிப் புகல்வான்

(இ-ள்.) வேடன் உரைத்த சொல் ஆரமுதத்து உயிர் விடுதல் அற்று - வேடனாகிய துற்றெரிசனன் சொல்லிய சொல்லாகிய நிறைந்த அமிர்தத்தினால் உயிர் நீங்குதல் ஒழிந்து,—உடனே ஆடை முதற் பொருள் யாவையும் - உடனே, வஸ்திரமுதலாகிய பொருள்களெல்லாவற்றையும்,—அவன் ஆசை தணித்தருள்வான் - அத் துற்றெரிசனனுடைய ஆசை நீங்கும்பொருட்டு,—கோடி எனப் பரிவோடு கொடுத்து - நீ இவைகளை எற்றுக்கொள் ளென்று அன்போடு கொடுத்து,—ஒருகோவணம் முன்புனையா - ஒரு கௌபீனத்தை முன்னே தரித்து,—நாடும் மகிழ்ச்சியினான் அவனுக்கு எதிர் நா குழறிப்புகல்வான் - ஆராயப்பட்ட சந்தோஷத்தோடு அவனெதிரே நாக் குளறிச் சொல்லுவா ராயினர். எ - று. (௧௪)

மாதிர முற்றிய பூதலனிற்றவ வாழ்வுபெறத் திரிவே, னாதீவன் விட்டொளிர்காய்கதிர் பட்டென தாகமிளைத் துலவா, வேதனை மிக்குழ லாவகை வெற்றிகொள் வேடர்குலத் தலைவா, காத லணிக்குடை யீதெனப்பல கா லும்வழுத் தினனால்.

(இ-ள்.) வெற்றி கொள் வேடர் குலத் தலைவா - வெற்றி பொருந்திய வேடர் குலத்துக்கு அரசனே,—மாதிரம் - அஷ்டதிக்குகளிலும்,—முற்றிய பூதலனில் - இப்பூமண்டல முற்றிலும்,—தவ வாழ்வு பெறத் திரிவேன் - தவ வாழ்க்கையை யடையும் பொருட்டுத் திரிந்து கொண்டுவருவேன்,—ஆதவன் விட்டு ஒளிர் காய் கதிர் பட்டு எனது ஆகம் இளைத்து உலவா வேதனை மிக்கு உழலாவகை - சூரியனால் விடப்பட்டுச் சுடுகின்ற கிரணங்கள்பட்டு என்னுடைய சரீரம் இளைத்து நீங்காத துன்பத்தினால் மிகவும் வருத்தப் படாதபடி,- காதல் அணிக்குடை ஈதி எனப் பலகாலும் வழுத்தினன் - விருப்பத்தோடு அழகிய குடையைக் கொடுக்கவேண்டும் என்று பலமுறையும் தோத்திரம் பண்ணினான்.—எ - று. (கரு)

வேதிய னின்றுரை யாடி வணங்கிட வேடர்க டந்தலைவ,
னாதப மும்பெரி தோர் துணை கண்டில மாகமெலிந் தடையும்,
பேதுற வஞ்சிய பூசுர னென்றருள் பேணிய ருங்குடைதன்,
போத நெகிழ்ந்துத வாநகை தந்திடர் போலவகன் றனனால்.

(இ-ள்.) வேதியன் நின்று உரை ஆடி வணங்கிட - அப்பிராமணன் அவ்விடத்தினின்று சொல்லிவணங்க,—வேடர்கள் தம் தலைவன் - அப்பொழுது வேடர்களுக்குத் தலைவனாகிய துற்றெரிசனன்,- ஆதபமும் பெரிது - வெய்யிலும் அதிகமாக இருக்கின்றது.—ஓர் துணை கண்டிலம் - யாதொரு துணையுமில்லை,—ஆகம் மெலிந்து அடையும் பேதுறவு அஞ்சிய பூசுரன் என்று - சரீரமெலிந்து வந்தடைந்து மதிமயக்கத்தினாற் பயந்திருக்கின்ற பிராமணனென்று நினைத்து,—அருள் பேணி - கிருபையை விரும்பி,—அரும் குடை தன் போதம் நெகிழ்ந்து உதவா - அருமையாகிய குடையைத் தன்மனம் இளகிக்கொடுக்க,—நகை தந்து - சிரித்து,—இடர் போல அகன்றனன் - தனக்குண்டாகிய துன்பம் நீங்கினாற்போல அவ்விடத்தை விட்டு நீங்கினான்.—எ - று. (கசு)

போன வரும் பொருண் மீளவும் வந்தது போல நினைந் துலையுந், தீனர கம்பயில் வோர்க ளிகந்துயர் தேவர்பதம் புகுவா, னனசிறந்தவி ழானமணைந்தன ராமென நெஞ்ச மகிழ்ந், தூனமி லந்தணன் வாரி நெடும்புவி யூடுதிரிந் தனனால்,

(இ-ள்.) ஊனம் இல் அந்தணன் - குற்றமில்லாத அப்பிராமணன்,—போன அரும் பொருள் மீளவும் வந்தது போல நினைந்து - கேட்டுப்போன அரிய பொருளானது திரும்பவும் தன்கையில் அகப்

பட்டது போல நினைந்து,—உலையும் நிரயம் பயில்வோர்கள் இகந்து-வருத்துகின்ற கொடிய நரகத்தில் வசிப்போர்கள் அதனினின்றும் நீங்கி,-உயர் தேவ பதம் புகுவான் ஆன சிறந்தவிமானம் அணைந்தனர் ஆம் என நெஞ்சம் மகிழ்ந்து - உயர்ச்சி பொருந்திய தேவ லோகத்தையடையும் படியாக உண்டான சிறப்புப் பொருந்திய தேவ விமானத்தை அடைந்தவரைப் போல மனமகிழ்ந்து,—வாரி நெடும் புவி ஊடு திரிந்தனன் - சமுத்திரத்தினாற் சூழப்பட்ட பெரிய பூமியினிடத்துத் திரிவானாயினான்.—எ. - று. ஆல் அசை. (௧௭)

அள்ளல் வயங்கிய வெள்ள நெடுங்கட லல்கிய வம்புவிமே, லெள்ளன் மிகுந்துயர் வெல்ல வுடன்றிரி யெவ்வமிலந்தணனுந், தள்ளருமிந்திய வல்வினை வென்றருள் சைவநெடுந் தவர்தம், முள்ள மிலங்கிய தில்லைவனந்தனை யொல்லை யடைந்தனனால்.

(இ-ள்.) அள்ளல் வயங்கிய வெள்ளம் நெடும் கடல் அல்கிய அம்புவிமேல் - குழம்பாகிய சேறு விளங்கிய வெள்ளத்தை யுடைய நீண்டகடலாற் சூழப்பட்ட அழகியபூமியிலே - எள்ளல் மிகும் துயர் வெல்ல உடன் திரி எவ்வம் இல் அந்தணனும் - இகழ்தலையுடைய மிகுந்த துன்பத்தை ஜெயிக்கும்படி உடனே பூப்பிர தக்ஷணஞ் செய்கின்ற குற்றமில்லாத அப்பிராமணனும்,—தள் அரும் இந்திய வல் வினை வென்று அருள் நெடும் சைவ தவர்தம் உள்ளம் இலங்கிய தில்லை வனந்தனை ஒல்லை அடைந்தனன் - நீக்குதற்கரிய இந்திரியங்களையும் வலிய வினைகளையும் ஜெயித்தருளிய பெரியசைவ முனிவர்களுடைய மனதில் விளங்கிக் கொண்டிருக்கின்ற தில்லைவனமென்னும் பெயரையுடைய சிதம்பரஸ்தலத்தில் விரைவாக வந்து சேர்ந்தார்.—எ - று. ஆல் அசை. (௧௮)

வேறு.

வந்தவேலையின் முன்னரே வயங்குசந் கண்டிகைசேர்
சந்தமாலையனீற்றணி தழைத்தொளிர் மெய்ய
னிந்தியங்களை வென்றவ னிறைவனுக் கன்பு
தந்த சிந்தையன் சைவநற் றபோதனி யொருவர்.

(இ-ள்) வந்த வேலையின் முன்னர் - அப்பிராமணன் அச்சிதம்பரத்தை யடையுங்காலத்துக்கு முன்னே,—வயங்கு சந்தம் சேர் கண்டிகை மாலையன் - விளங்காநின்ற அழகு பொருந்திய உருத்திராக்ஷமாலையை யுடையவனும்,—நீற்றணி தழைத்து ஒளிர்மெய்யன் -

விபூதியணிகையானது செழித்து விளங்காநின்ற சரீரத்தையுடைய வனும்,—இந்தியங்களை வென்றவன் - பஞ்சேந்திரியங்களையும் செயித்தவனும்,—இறைவனுக்கு அன்புதந்த சிந்தையன் - சிவபெருமானிடத்து அன்பு பொருந்திய மனத்தையுடையவனும்.—நல் சைவ தபோதனி ஒருவன் - நல்லசைவதபோதனனுமாகியஒருவன்.—எ-று.

சேய தேயத்தும் வருபவன் செங்கதிர்க் கடவுள்
காய நொந்ததி காயமும் பசியுமேற் கதுவப்
போய செவ்விகொ ளானனம் புலர்ச்சிகூர் நெஞ்ச
மாயநன்னிழ றேடிவெவ் வேட்கைகொண் டணைந்தான்.

(இ-ள்.) சேய தேயத்தும் வருபவன் - தூரதேசத்திலிருந்து வருபவன்,—செங்கதிர்க் கடவுள் காய நொந்த அதிகாயமும் - சூரியதேவன் தகிக்க அதனால் வருத்தமுற்ற பெரிய சரீரமும்,—பசியும் மேற்கதுவ போய செவ்வி கொள் ஆனனம் புலர்ச்சி கூர் நெஞ்சம் மாய - பசியும் அதிகரிக்கஅதனால் அழகு நீங்கிய முகமும் வருத்த மிகுந்த மனமும் அழிய,—நல்நிழல் தேடி வெவ்வேட்கை கொண்டு அணைந்தான் - நல்ல நிழலைத்தேடி மிக்க அபேக்ஷையோடுவந்து சேர்ந்தான்.—எ-று. (உ௦)

திருநகர்க் கெலாந் தலைமையாந் தில்லையெல் லையினில்
வரு தபோதனன் வருத் தமுன் கண்டரு மறையோன்
கருதி வந்தெதிர் வணங்கினன் கானவன் கொடுத்த
விருமை வண்குடை யெடுத்தவ னிழல்பெற விட்டான்.

(இ-ள்.) திரு நகர்க்கு எல்லாம் தலைமையாம் தில்லை எல்லையினில் வருதபோதனன் வருத்தம் முன் கண்டு - அழகிய சிவஸ்தலங்களெல்லா வற்றினுஞ் சிரேஷ்டம் பொருந்திய சிதம்பரத்தினது எல்லையில் வருகின்ற தபோதனருடைய வருத்தத்தை நேரேபார்த்து,—அருமறையோன் - (முன்னமே அவ்விடத்தில் வந்திருந்த) அரிய வேதத்தை யறிந்த அப்பிராமணன்,—கருதி வந்து எதிர்வணங்கினன் - அவரைத் தபோதனர் என்று நினைத்து நேரே நமஸ்கரித்தவராய்,—கானவன் கொடுத்த இருமை வண்குடை எடுத்து - முன்னே தனக்குத் தற்றெரிசனனாற் கொடுக்கப்பட்ட பெருமைபொருந்திய அழகிய குடையை எடுத்து,—அவன் நிழல் பெற இட்டான் - அத் தபோதனனுக்கு நிழலுண்டாகும்படி செய்தான். எ-று. (உ௧)

வேத வேதிய னிட்டகைக் குடைநிழல் விளங்க
மாத வம்புரி யோன்மன மகிழ்ந்துசென் றொளியாய்ப்

பாதகங்கெட மூழ்கினர் மகேசர்தம் பதஞ்சேர்
சீதசீகரம் பயில்சிவ கங்கையைச் சேர்ந்தான்.

(இ-ள்.) வேதவேதியன் இட்ட கைக்குடை நிழல் விளங்க - வேதத்தையறிந்த அப்பிராமணன் பிடித்துக்கொண்டிருக்கிற குடையின்நிழலானது பிரகாசிக்க,—மாதவம் பெரியோன் மனம் மகிழ்ந்து சென்று - பெரிய தவத்தையுடைய அப்பெரியவர் மனமகிழ்ச்சியோடுபோய்,—ஒளியாப் பாதகம் கெடமூழ்கினர் - மறையாத பாவங்கள் நீங்கும்படி ஸ்நானஞ்செய்தவர்கள்,—மகேசர் பதம் சேர் - சிவபதத்தை யடையதக்கதாகிய,—சீத சீகரம் பயில் சிவ கங்கையைச் சேர்ந்தான் - குளிர்ச்சிபொருந்திய அலைகளையுடைய சிவகங்கையையடைந்தார். எ - று. (உஉ)

சிறிது நாட்செல வனசரன் முடிந்துதில் லையினி
லறிவி னாலுயர் மாதவற் கந்தணன்றன்பாற்
பெறுமருங்குடை நிழற்றிய நல்வினைப் பெருக்கா
லுறு மருந்துய ரறச்சிவ பதத்துட னுற்றான்

(இ-ள்.) சிறிது நாள் செல - (இது இங்ஙனமாகச்) சில நாட்சென்றபின்,—வனசரன் முடிந்து - அத்தற்றெரிசன னென்னும் வேடனிறந்து,—தில்லை எல்லையினில் அறிவினால் உயர் மாதவற்கு - சிதம்பரத்தினது எல்லையில் அறிவினாலுயர்ந்த பெரிய தவத்தையுடைய அத்தபோதனருக்கு,—தன்பால் அந்தணன் பெறும் அரும் குடை நிழற்றிய நல்வினை - முன்னே தன்னிடத்தில் அப்பிராமணன் பெற்ற அரிய குடையினாலே நிழலைச்செய்த புண்ணியமேலீட்டினால்,—உறும் அரும் துயர் அற உடன் சிவபதத்து உற்றான் - தன்னைப்பொருந்திய அரிய துன்பமானது நீங்க உடனே சிவலோகத்தையடைந்தான் எ - று. (உ௩)

பொன்னின் வார்சடைப் புனிதனே பொருளெனக் கருதி
தன்னி லாநெறி யறிவுடைச் சைமினி முனிவ
னன்ன வேடுவன் சிவபதத் தானென வறைந்த
வின்ன வாசக முண்மையா முண்மையமென்றும்.

(இ-ள்.) பொன்னின் வார் சடைப் புனிதனே பொருள் எனக் கருதி தன்னில் ஆம் நெறி அறிவு உடைச்சைமினி முனிவ - பொற்பிரகாசம் பொருந்திய நீண்ட ஜடையையுடைய சிவபெருமானையே மெய்ப்பொருளென்று நினைத்துத்தன்னிடத்துண்டாகிய சன்மார்க்

சத்தையும் அறிவையு முடைய சைமினி முனிவனே,—அன்ன வேடுவன் சிவபதத்தான் என அறைந்த இன்னை வாசகம் என்றும் உண்மையாம் உண்மையாம் - அத் துற்றெரிசனன் என்று சொல்லப் பட்ட வேடன் சிவபதத்தை யடைந்தான் என்று சொல்லிய இவ்வசனம் எப்பொழுதும் சத்தியமாகும் சத்தியமாகும்.—எ - று. (உச)

சவரர் கோமகன் முன்கொடுஞ் சலதியே யனையா
னுவமை யொன்றறத் தீவினை புரியுமா லுடையோன்
சிவ னரும்புக ழறமொழி செவித்துணை புகாதோ
னவனி யற்றிடாப் பாவங்க ளகிலத்திலுளவோ.

(இ-ள்.) சவரர் கோமகன் - அவ்வேடர் களுக்கரசனாகிய துற்றெரிசனன்,—முன் கொடுஞ் சலதியே யனையான் - முற்பிறப்பிற் செய்த கொடிய பாவங்களை அளவு பார்க்கின் சமுத்திரத்தை ஒப்பானான்,—உவமை ஒன்று அறத் தீவினை புரியும் மால் உடையான் - ஒப்பில்லாத பாவங்களைச் செய்யும் மயக்கபுத்தியை யுடையவன்,—சிவன் அரும் புகழ் அறமொழி செவித்துணை புகாதோன்-சிவபெருமானுடைய அருமையாகிய கீர்த்தியை எடுத்துத் துதிக்கின்ற புண்ணிய வசனம் இரண்டு காதுகளினிடத்து நுழையப் பெறாதவன்,—அகிலத்தில் அவன் இயற்றிடாப் பாவங்கள் உளவோ - இப்பூமியில் அத்துற்றெரிசனன் செய்யாதபாவங்கள்உண்டோ?(இல்லை)—எ-று.

கவர்ந்த நன்குடை மனனறி யாதுகை கொடுப்ப
வுவந்த வந்தணன் றில்லையம் பதியினி லுண்மை
நிவந்த மாதவ னொருவற்கு நிழற்றிய பயனாற்
பவந்த ணந்திட வவன்சிவ பதத்தினை யடைந்தான்

(இ-ள்.) கவர்ந்த நல் குடை மனன் அறியாது கைகொடுப்ப - அத்துற்றெரிசனன் ஒருபிராமணனனிடத் திருந்து அபகரித்த நல்ல குடையை மனமறியாமல் அப்பிராமணன் கையில் மீட்டும் கொடுக்க,—உவந்த அந்தணன் - அதனாற் சந்தோஷமடைந்த அப்பிராமணன்,—தில்லை அம்பதியினில் - சிதம்பர ஸ்தலத்தில்,—உண்மை நிவந்த மாதவன் ஒருவற்கு நிழற்றிய பயனால் - உண்மை நிறைந்த பெரிய தவத்தையுடைய ஒரு தபோதனருக்கு நிழலைச் செய்வித்த புண்ணியபலத்தினால்,—பவம் தணந்திட - அவன் செய்தபாவங்கள் நீங்கிப்போக,—அவன் சிவ பதத்தினை அடைந்தான் - அத்துற்றெரிசனன் சிவபதவியை அடைந்தான்.—எ - று. (உரு)

கோதுநீக்கிய வம்பலம் நினைந்திலன் குறித்தோ
ரோதுமாறுகேட் டிலன்றில னுரைத்தில னதனான்
மாது கண்களி கொண்டிட மன்றினின் றாடும்
போது கண்டில னென்றுநீ புகலவேண் டாவால்

(இ-ள்.) கோது நீக்கிய அம்பலம் நினைந்திலன் - தன்னையடைந்தவர்களுடைய பாவமுதலிய குற்றங்களை நீக்கியதிருச்சிற்றம்பலத்தை அவன் மனதினாலுந் தியானித்திலன்,—குறித்தோர் ஓதும் ஆறு கேட்டிலன் - அவ்வாறு மனதினால் தியானித்தவர்கள் சொல்லுகின்ற மார்க்கத்தையுங்கேட்கிலன்,—அதனால் - அச்செய்கையால்,—மாது கண் களி கொண்டிட மன்றில் நின்று ஆடும் போது கண்டிலன் என்று நீ புகலவேண்டா - சிவகாமியம்மையார் கண்கள் களிப்பையடையும் கனகசபையினிடத்துநின்று திருநிருத்தஞ்செய்யும்போது தரிசித்திலன் என்று நீ சொல்லவேண்டாம்.— எ - று. ஆல் அசை.

தந்த பேரருட் சிதம்பரத் தலவிசே டத்தா
லந்த மில்பத மன்னதுற் றெரிசன னடைந்தான்
சிந்தை செய்வதும் புகழ்வதுஞ் சிரத்தினு லென்றும்
வந்தி செய்வது மந்நக ரன்றிமற் றுளவோ

(இ-ள்.) பேர் அருள்தந்த சிதம்பரத்தலவிசேடத்தால் - மிகுந்த கிருபையைப் பாலிக்கின்ற சிதம்பரஸ்தலத்தினது மகிமையினாலே,- அன்ன துற்றெரிசனன் அந்தம் இல் பதம் அடைந்தான் - அத்துற்றெரிசன னென்பவன் முடிவில்லாத சிவபதத்தை யடைந்தான்,—என்றும் சிந்தை செய்வதும் புகழ்வதும் சிரத்தினால் வந்தி செய்வதும் - எப்பொழுதும் தியானிக்கத் தக்கதும் துதிக்கத் தக்கதும் தலையினால் வணங்கத்தக்கதும்,—அந்நகர் அன்றி மற்று உளவோ அச்சிதம்பரஸ்தலமேயன்றி வேறுஸ்தலங்களிருக்கின்றனவோ? இல்லை. எ - று. ()

அறந்த யங்குமத் தலத்துமண் செங்கல்க ளற்றாற்
சிறந்த வேதியர்க் கெழின்மனை சிவஞெழிற் றெவையுந்
துறந்த நற்றவர்க் குறைமடந் தொடர்ந்தவன் பதனு
னிறம்பெறச் செய்துளோர் பய னிகழ்த்துதற் கரிதால்.

(இ-ள்.) அறம் தயங்கும் அத்தலத்து மண் செங்கல்கள் அவற்றால் - தருமம் விளங்கா நின்ற அச்சிதம்பரஸ்தலத்தில் மண் செங்கல்கள் முதலியவைகளால்,—சிறந்த வேதியர்க்கு எழில்மனை - சிறப்புப்பொருந்திய பிராமணர்களுக்கு அழகிய வீடுகளும்,—சிவன்

ஒழிந்த எவையும் துறந்த நல் தவர்க்கு உறை மடம் - சிவபெருமான் நீங்கலாக மற்றெல்லாவற்றையுந்துறந்த நல்ல முனிவர்கள் வசிக்கத்தக்க மடங்களும்,—தொடர்ந்த அன்பு அதனால் நிறம் பெற செய்துளோர் பயன் நிகழ்த்துதற்கு அரிது - அவர்களிடத்துத் தனக்குண்டாகிய அன்பினால் பிரகாசமுண்டாகும்படி செய்தவர்கள் அடையும் பிரயோசனத்தைச் சொல்லமுடியாது. எ - று. (உ௧)

அப்பெ ரும்பயன் மாலய ரறிவரோ வறியா
ரொப்பி கந்தருள் பரம்பர னுமைகரி வதனன்
செப்ப ருந்திறல் வேளிவ ரறிவரோ தெரியா
தப்ப யன்களு மிதுதனக் கேயுமோ வேயா.

(இ-ள்.) அப்பெரும்பயன் மால் அயர் அறிவரோ அறியார் - அந்தப் பெரியபுண்ணியத்தினது பிரயோசனத்தை விஷ்ணு பிரமாக்களறிவார்களோ? அறியார்கள்;—ஒப்பு இகந்த அருள் பரம் பரன் உமை கரி வதனன் செப்பரும் திறல் வேள் இவர் அறிவரோ - ஒப்பில்லாத கிருபையையுடைய சிவபெருமான் உமாதேவியார் யானை முகத்தையுடைய விநாயகக் கடவுள் சொல்லுதற்கரிய வலிமையையுடைய சுப்பிரமணியக் கடவுள் என்று சொல்லப்பட்டவர்கள் அறிவார்களோ?—தெரியாது - அறியமாட்டார்கள்;—எப்பயன்களும் இது தனக்கு ஏயுமோ ஏயா - எந்தப்பலன்களும் இப்புண்ணிய பலத்துக்கு ஒப்பாகப் பொருந்துமோ? பொருந்தமாட்டா. எ. று.

சூல பாணிபா லன்புடைச் சுருதியோர் தமக்கும்
ஞால மாயையை நீக்கிய நற்றவர் தமக்குங்
கோல மாமனை மடமன்பு கூடல ரேனுஞ்
சாலு மத்தலத் தமைத்தவர் பெறும்பயன் சாற்றில்.

(இ-ள்.) சூல பாணியன் பால் அன்பு உடைச் சுருதியோர் தமக்கும் - சூலாயுதத்தைத் தரித்த திருக்கரத்தையுடைய சிவபெருமானிடத்தே அன்பையுடைய வேதத்தையறிந்த பிராமணர்களுக்கும்,—ஞாலமாயையை நீக்கிய நல் தவர் தமக்கும் - பிரபஞ்சமாயையையொழித்தநல்லதவத்தையுடைய முனிவர்களுக்கும்,-அன்பு கூடலர் எனும் - அவர்கள் அன்பில்லாதவர்களாயிருந்தாலும்,—சாலும் அத்தலத்தில் - பொருந்திய அச்சிதம்பரஸ்தலத்தில்,—கோலம் மாமனை மடம் அமைத்தவர் பெறும் பயன் சாற்றில் - அழகிய பெரிய வீடுகளும் மடங்களும் கட்டுவித்தவர்கள் அடையும் பலத்தைச் சொல்லுமிடத்தில். எ - று. குளகம் (௩௧)

மனைமடத்திடை யெல்லையுண் மணறுக ளொன்றுக்
கனைய செய்தவர் சிவபதத் தாயிரங் கற்ப
முனைவர் போற்றிட வீற்றினி திருப்ப ரிம்முறையே
யினைய நற்பய னேற்றுவ விசைக்கு மாறென்னே.

((இ-ள்.) மனை மடத்து இடை எல்லை உள் மணல் துகள் ஒன்றுக்கு - அவ்வீடு மடம் என்னுமிவைகளுடைய எல்லையிலுள்ள மணலினது தூசி ஒன்றுக்கு,—அனைய செய்தவர் சிவபதத்து முனைவர் போற்றிட ஆயிரம் கற்பம் இனிது வீற்றிருப்பர் - அவைகளைச் செய்தவர் சிவலோகத்தில் முனிவர்கள் துதிக்கும்படி ஆயிரம் கற்பகாலம் இனிதாக வீற்றிருப்பார்கள்,—இம்முறையே இனைய நற்பயன் ஏற்றுவ - இந்தப் பிரகாரமே இப்படிப்பட்ட நல்ல புண்ணிய பலன் ஒன்றுக்கொன்று உயர்வனவாம்,—இசைக்குமாறு என் - அதனையெடுத்துச் சொல்லுவ தெப்படி? ஓ அசை. எ - று. (௩௨)

தேனலம்புதார்ச் செஞ்சடைத் தேவர்தே வுறைந்த
ஞான மாநில மாகிய சிதம்பர நகர்க்க
ணான வன்பினு மன்பிலா தாயினு மன்ன
தான முய்ப்பவர் சிதம்பரஞ் சாரதல்சத் தியமால்.

(இ-ள்.) தேன் அலம்பு தார் செஞ்சடைத் தேவர்தேவு உறைந்த மா ஞான நிலமாகிய சிதம்பர நகர்க்கண் ஆனவன் - வண்டுகள் ஒலிக்கின்ற மாலையைத் தரித்த சிவந்த ஜடையையுடைய தேவர்களுக்குத் தேவனாகிய நடேசப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற பெருமைபொருந்திய ஞானபூமியாகிய சிதம்பர ஸ்தலத்தின்கண் அடைந்தவன்,—பினும்-பின்பும்,—அன்பு இலாதாயினும்-அன்பில்லாதவனாயிருந்தாலும்,—அன்னதானம் உய்ப்பவர் - அவனுக்கு அன்னதானம் செய்பவர்கள்,—சிதம்பரம் சார்தல் சத்தியம் - சிதாகாசத்தையடைதல் சத்தியமாகும். எ - று. (௩௩)

அங்கி தங்கிய செங்கையோ னடியிணை மலர்மேற்
பொங்கு மன்புடைத் தவநெறிப் பூசுர னொருவன்
றுங்க மாநிலத் திருநகர்த் தூயதீர்த் தங்க
ளெங்கு நாடியு மிறைஞ்சியும் படிந்து மின் புறுவோன்.

(இ-ள்.) அங்கி தங்கிய செம் கையோன் அடியிணை மலர்மேல் பொங்கும் அன்பு உடைத் தவ நெறி பூசுரன் ஒருவன் - அக்கினி பொருந்திய சிவந்த திருக்கரத்தையுடைய சிவபெருமானது இரண்

ஆகிய திருவடித் தாவரைமலர்களின்மேல் மிகுந்த அன்புபூண்டோ ருருக் தவமார்க்கத்தையுடைய பிராமண னொருவன்,—துங்க மாநிலத் திருநகர்த் தூயதீர்த்தங்கள் எங்கும் நாடியும் இறைஞ்சியும் படிந்தும் இன்புறுவோன் - உயர்ச்சி பொருந்திய பெரிய பூமியினிடத்துள்ள அழகிய ஸ்தலங்களையும் பரிசுத்தமாகிய தீர்த்தங்களையும் தேடியும் நமஸ்கரித்தும் ஸ்நானஞ் செய்தும் சந்தோஷத்தையடைபவன். எ - று. (௬௪)

வேத நாயகன் வெளியினின் றாடுமந் நகர்க்கட்
காதல் கூரவந் தடுத்தனன் கனகமா மறுகிற்
பாதை வந்ததோ ரிளைப்பினாற் பளிங்கினா லிழைத்த
சோதி வேதிகை யணைந்துதன் வசமறத் துயின்றான்.

(இ-ள்.) வேதநாயகன் வெளியில் நின்று ஆடும் அந்நகர்க்கண் கனகமா மறுகில் காதல் கூர வந்து அடுத்தனன் - வேதநாயகனாகிய சிவபெருமான் ஞானாகாசத்தினிடத்தினின்றுந் திருநிருத்தஞ் செய்தருளாநின்ற ஸ்தலமாகிய சிதம்பரத்தினது பொற்பிரகாசம் பொருந்திய பெரிய திருவீதியினிடத்தில் விருப்பமிகும்படி வந்து சேர்ந்தான்,—பாதை வந்தது ஓர் இளைப்பினால்-வழிநடந்துவந்த இளைப்பினால்,—பளிங்கினால் இழைத்த சோதி வேதிகை அணைந்து - படிகத்தினாற் செய்யப்பட்ட ஒளிபொருந்திய மேடையையடைந்து,—தன்வசம் அறத் துயின்றான்-தன்வசமில்லாமல் நித்திரைசெய்தான்.

தோகை மாமயி னடமிடுஞ் சுடர்மனை யொன்றிற்
காக மொன்றுசென் றன்னத்தைக் கவர்ந்துடன் விரைந்து
போகு மெல்லையின் மிகுந்துயிற் பூசுர னாவிற்
பாக முற்றுமோ ரோதனப் பருக்கைவீழ்ந் ததுவால்.

(இ-ள்.) தோகை மா மயில் நடமிடும் சுடர் மனை ஒன்றில் - கலாபத்தையுடைய பெரிய மயில்கள் ஆடுகின்ற ஒளிபொருந்திய ஒரு வீட்டில்,—காகம் ஒன்று சென்று - ஒரு காகமானது போய்,—அன்னத்தைக் கவர்ந்து உடன் விரைந்து போகும் எல்லையில் - சோற்றைத் திருடிக்கொண்டு உடனே சீக்கிரம் பறந்துபோகும்போது,—மிகும் துயில் பூசுரன் நாவில் - மிகுந்த நித்திரைசெய்துகொண்டிருக்கின்ற அப்பிராமணன் வாயில்,—பாகம் முற்றும் ஓர் ஓதனப் பருக்கைவீழ்ந்தது - பதத்தோடு சமைக்கப்பட்ட ஒரு சோற்றுப் பருக்கை விழுந்தது. எ- று. ஆல் அசை. (௬௬)

அன்னம் வீழ்தலு மருந்துயில் வசத்தினு லறியான்
மின்னு நூனெறி வேதியன் விழுங்கின னம்ம
வென்ன சொல்லுகோ மீதறி யாதுசெய்காகம்
பன்னு மிப்பய னுற்சிவ பதமடைந் ததுவால்.

(இ-ள்) அன்னம் வீழ்தலும் - அச்சோற்றுப் பருக்கை வீழவும்,—மின்னும் நூல் நெறி வேதியன் - பிரகாசிக்கின்ற சாஸ்திர மார்க்கத்தை யறிந்த அப்பிராமணன்,—அருந் துயில் வசத்தினுல் அறியான் விழுங்கினன் - அரிய நித்திரைவசத்தினுல் அறியாதவனுய் (அப்பருக்கையை) விழுங்கிவிட்டான்,—இது அறியாது செய் காகம் - இதனைத் தெரியாமற்செய்த அக்காகம்,—பன்னும் இப்பயனுல் சிவபதம் அடைந்தது - சொல்லப்பட்ட இப்பலத்தினுல் சிவபதத்தை யடைந்தது;—அம்ம என்ன சொல்லுகோம் - அம்மம்ம! இதற்கென்ன சொல்லுவோம்!!! எ - று. ஆல் அசை. (௩௭)

முடிவி லாமறை முதல்வனை யுணர்ந்துகொண் டவனுக்
கடிமை யெய்திய தவத்தினர்க் கறுசுவை யடிசிற்
படியில் வாசநீர் மகிழ்ச்சியாற் பரிவினு லீய்ந்தோர்
நெடிய நற்பய னறிவனே வறிகில னிமலன்.

(இ-ள்.) முடிவு இலா மறை முதல்வனை உணர்ந்து கொண்டு - முடிவில்லாத வேதத்துக்குத் தலைவராகிய சிவபெருமானை யறிந்து கொண்டு,—அவனுக்கு அடிமை யெய்திய தவத்தினர்க்கு - அச்சிவபெருமானுக்கு அடிமையாக வடைந்த தவத்தினையுடைய அடியார்களுக்கு,—அறுசுவை அடிசில் - அறுசுவையோடு கூடிய சோற்றையும்,—படியில் வாசநீர் - ஒப்பில்லாத வாசனைபொருந்திய தாக நீர்த்தத்தையும்,—மகிழ்ச்சியால் பரிவினுல் ஈய்ந்தோர் - சந்தோஷத்தோடும் அன்போடும் கொடுத்தவர்களது,—நெடிய நல் பயன் - மிகுந்த நல்ல பயனை,—நிமலன் அறிவனே - மலமுத்தனுகிய சிவபெருமான் அறிவாரோ,—அறிகிலன் - அடியேன் அறியமாட்டேன். எ-று.

ஆயிரம் பெயர்க் கறுசுவை யடிசிலங் களித்த
மேய செல்வர்தம் பயனினு மிடியுடை யொருவ
னேய வாறொரு பிடியவிழ் தரும்பய னெய்துந்
தூயதெப் பதியினு முளதிது வென்பர் தூயோர்.

(இ-ள்.) அங்கு - அச்சிதம்பரஸ்தலத்தில்,—ஆயிரம் பேர்க்கு அறுசுவை அடிசில் அளித்த மேய செல்வர்தம் பயனினும் - ஆயிரம்

பெயர்களுக்கு அறுசுவையோடு கூடிய அன்னத்தைக் கொடுத்தற்குப் பொருந்திய செல்வர்களுடையும் பலத்தைப்பார்க்கினும்,—மிடியுடை ஒருவன் எய்வாறு ஒருபிடி அவிழ்தரும் பயன் எய்தும் - தரித்திரமுடைய ஒருவனுக்கு தன்னுலியன்றமட்டும்ஒருபிடிசோறு கொடுக்கும்பலன் மிக்கபலனைக் கொடுக்கும்,(அதனால்)—தூயோர் இது வெப்பதியினும்தூயது உளது என்பர் - பரிசுத்தமுடைய பெரியோர்கள் இச் சிதம்பரஸ்தலம் எந்தஸ்தலத்தினும் பரிசுத்தம் உள்ளது என்றுசொல்லுவார்கள். எ - று. (௩௯)

ஞான மங் குநின் றாடிய தில்லைமா நகர்க்க
ணான செல்வனோர் பிடியவி ழளித்தற்கு மற்றைத்
தான மீதொரு மிடியனெண் ணிலபல தான
மூன மொன்றறக் கொடுத்தலங் கொக்குமோ வொவ்வா.

(இ-ள்.) ஞானம் அங்கு நின்று ஆடியதில்லைமா நகர்க்கண் ஆன செல்வன் - ஞானரூபியாகியசிவம் அவ்விடத்தினின்று நிருத்தஞ் செய்யாநின்ற தில்லைவனமாகிய பெருமை பொருந்திய சிதம்பரஸ்தலத்தினிடத்தில் இருக்கின்ற செல்வன்,—ஓர் பிடி அவிழ் அளித்தற்கு - ஒருபிடிசோறு கொடுத்தற்கு,—மற்றைத் தானமீது - மற்றைஸ்தலத்தில்,—ஒரு மிடியன் - ஒருதரித்திரன்,—எண்ணில் பல் தானம் ஊனம் ஒன்று அறக் கொடுத்தல் அங்கு ஒக்குமோ - அளவில்லாத பலவகைப்பட்ட தானங்களை யாதொரு குறைவில்லாமல் கொடுத்தல் ஒப்பாகுமோ? ஒவ்வா - ஒப்பாகமாட்டா. எ - று. (௪0)

மாடை வெள்ளிகன் னிகைநில மரங்கரி பரிதே
ராடை யெள்ளு நெல் லகம்பசுக் குடைசெருப் பாதி
யோடை சூழ்புலி யூரிடத் துத்தமற் கருதும்
வேடை யந்தணர்க் குதவினோர் வியன்சிவ பதத்தோர்.

(இ-ள்.) ஓடை சூழ் புலியூரிடத்து உத்தமன் கருதும் வேட்டை அந்தணர்க்கு - நீரோடையாற் சூழப்பட்டசிதம்பரத்திலெழுந்தருளியிருக்கும் உத்தமனாகிய நடேசப்பெருமானைத் தியானிக்கும் அபேக்ஷையையுடையதில்லைவாழ்ந்தணர்களுக்கு,—மாடை வெள்ளி கன்னிகை மரம் கரி பரிதேர் ஆடை எள்ளு நெல் அகம் பசுக் குடை செருப்பு ஆதி உதவினோர் - பொன் வெள்ளி கன்னிகை விருக்ஷம் யானை குதிரை இரதம் வஸ்திரம் நிலம் நெல் வீடுபசு குடை பாதரக்ஷை முதலிய தானங்களைச் செய்தவர்,—வியன் சிவ பதத்தோர் - விசாலம் பொருந்திய சிவபதத்தையடைவார்கள். எ-று. (௪௧)

புவியு ளித்தலும் போனக மீதலுங் கரத்து
நவியி னேற்கெழு மகிழ்ச்சியா னற்றலந்தன்னிற்
கவினி லங்கநல் லடிசிலைக் கண்ணுதற் கருத்தி
யவியு மிந்தியர்க் களிப்பவ ரவர்சிவ மாவார்.

(இ-ள்.) புவி அளித்தலும் போனகம் ஈதலும்-பூதானம் செய்தலினும் அன்னதானம் செய்தலினும் பார்க்க,—கரத்துநவியினேற்கு மகிழ்ச்சியால் எழும் நற்றலந் தனில்-திருக்கரத்தில் மானையுடைய சிவபெருமான் சந்தோஷத்தோடு எழுந்தருளியிருக்கின்ற நல்ல சிதம்பர ஸ்தலத்தில்,—கவின் இலங்க நல் அடிசிலைக் கண்ணுதற்கு அருத்தி - அழகுவிளங்க நல்ல அன்னத்தைநெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானுக்கு நிவேதிப்பித்து,—அவியும் இந்தியர்க்கு அளிப்பவர் - ஞானேந்திரியங் கன்மேந்திரியங்களைக் கெடுத்தவர்களாகிய அடியார்களுக்குக் கொடுத்தவர்கள்,—அவர் சிவம் ஆவார் - அவர்கள் சிவமாந்தன்மைப் பெருப்பே றுடையவர்களாவார்கள். எ - று. ()

தண்டு குண்டிகை யாடைநீர் சந்தன மலர்கள்
கண்டி கைத்தொடை குடைசெருப் பரைக்குநாண் கலைத்
விண்ட லத்துமா றுறந்தருண் மெய்த்தவர்க் கன்பு [தோல்
கொண்டி வற்றினொன் றருள்பயன் சிவபதங் கொடுக்கும்.

(இ-ள்.) விண் தலத்து மால் துறந்தருள் மெய்த் தவர்க்கு-சுவர்க்கலோகத்தில் வைக்கப்பட்ட ஆசையை நீக்கிய உண்மையாகிய தவத்தையுடைய அடியார்களுக்கு,—அன்புகொண்டு- அன்போடு,--தண்டு குண்டிகை ஆடை நீர் சந்தனம் மலர்கள்கண்டிகைத்தொடை குடை செருப்பு அரைக்கு நாண் கலைத்தோல் இவற்றின் ஒன்று - தண்டு கமண்டலம் வஸ்திரம் தீர்த்தம் சந்தனம் புஷ்பம் உருத்திராக்ஷமாலை குடை பாதரக்ஷை அரைஞாண் மான்தோல் என்றுசொல்லப்பட்ட இவைகளிலொன்றை,—அருள் பயன் சிவபதம்கொடுக்கும்-கொடுத்தலினாலுண்டாகும் பயனைச்சிவபதவி கொடுக்கும்.எ-று.

மோத கங்களு மபூபமு முதலிய சுவைப்பா
லோத னத்துடன் விரும்பிய வுண்டியுந் தந்தச்
சோது நீக்கிட மண்ணுறக் கொம்பொடு மண்ணு
மீதன் மேயினர் சிவபத மெய்திவீற் றிருப்பார்.

(இ-ள்) மோதகங்களும் பூவமும் முதலிய - மோதகங்களும் பணிகாரம் முதலிய பலகாரங்களும்,—சுவைப்பால் ஓதனத்துடன்

விரும்பிய உண்டியும் - மதுரம் பொருந்திய பாலன்னத் தோடுவிரு ம்பப்பட்ட மற்ற உணவுகளும்,—தந்தக் சேர்து நீக்கிட மண்ணுற- பற்களிற் பொருந்திய அழுக்குகளை நீக்கும்படி கழுவுதற்கு,—கொம் போடு மண்ணும் ஈதல் மேயினர் - பற்கொம்போடு மண்ணுங் கொ டுத்தவர்கள்,—சிவபதம் எய்தி வீற்றிருப்பர் - சிவபதவியை யடை ந்து வீற்றிருப்பார்கள். எ - று. (சச)

சரத நல்கிய புனிதனீற் றருளுடைச் சைவ
விரத மெய்த்தவர்க் கன்பினு லுதவிய மேலோர்
பிரம கத்தியே முதலிய வினையெலாம் பெயர்ந்து
சுரர்ப ணிந்திடு முத்திதஞ் சூழலா குவரால்.

(இ-ள்.) சரதம் நல்கிய புனிதன் நீற்று அருளுடைச் சைவ விர தமெய்த்தவர்க்கு உண்மைஞானத்தைக் கொடுத்தருளிய பரிசுத்தரா கிய சிவபெருமானது திருநீற்றை யணிந்த கிருபை பொருந்திய சைவ விரதத்தை யுடையவர்களாகிய உண்மைபொருந்திய தவத் தையுடைய அடியார்களுக்கு,—அன்பினுல் உதவிய மேலோர் - அன்போடு கொடுத்த பெரியோர்கள்,—பிரமகத்தியே முதலிய வினை எலாம் பெயர்ந்து - பிரமகத்தி முதலாகிய பாவங்களெல்லா நீங்கி,- சுரர் பணிந்திடு முத்திதம் சூழல் ஆகுவர்-தேவர்கள் வணங்குகின்ற மோக்ஷத்தை யடைவார்கள். எ - று. (சரு)

சைவ நூன்முறை யெழுதினர் தக்கவா திரைநாட்
டெய்வ நாயகர்க் கன்புசெய் தெய்வமா தவர்தங்
கைவ ழங்கினர் கான்முடி யிருவருங் காணு
மெய்யர் வான்சிவ பூரண மேவனிச் சயமால்.

(இ-ள்.) சைவநூல் முறை எழுதினர் - சைவசாஸ்திர புத்தக ங்களை எழுதினவர்களும்,—தக்க ஆதிரை நாள் தெய்வ நாயகர்க்கு அன்பு செய்த மாதவர் தம் கை வழங்கினர் - தகுதிபொருந்திய திரு வாதிரை நட்க்ஷத்திரத்தில் தேவநாயகனாகிய சிவபெருமானிடத் துப் பத்திபூண்டொழுகுகின்ற பெரிய தவசிரேஷ்டர்களாகிய அடி யார்களது கையிற் கொடுத்தவர்களும்,—கால் முடி இருவரும் காணு மெய்யர் வான் சிவ பூரணம் மேவல் நிச்சயம் - திருவடியை யுந் திருமுடியையும் பிரமவிஷ்ணுக்களாகிய இருவர்களும் காண முடியாத திருமேனியையுடைய சிவபெருமானது பெரிய நன்மை பொருந்திய பரிபூரணதசையை அடைதல் நிச்சயமாகும். எ - று. ஆல் அசை. (சசு)

வேறு.

அருளுருவன் சைவநூ லெழுதுமா றலேகமினி தளித்த னன்னாண், டருதலெழுத் தாணியெழு தினர்க்குநிதி யுதவுதல ஞ்சனந்தான் பெய்த, றிருமுறையங் கவைவைத்துக் கொடுத் தல்கல கந்தனக்குச் சேமித்தீதல், பொருவருமிங் கிவற்றொ ன்றுபுரிபவர்கள் சிவபதத்துட் புகுவரன்றே.

(இ-ள்) அருளுருவன் சைவநூல் எழுதுமாறு அலேகம் இனிது அளித்தல் - திருவருளே திருமேனியாகவுடைய சிவபெருமானது சைவசாஸ்திரங்களை எழுதும்படி வெள்ளேட்டை இனிதாகக் கொடு த்தல்,—நல் நாண் தருதல் - நல்ல (திருமுறைகட்டத்தக்க) கயிறு கொடுத்தல்,—எழுத்தாணி உதவல் - அத்திருமுறை எழுத எழுத் தாணி கொடுத்தல்,—எழுதினர்க்கு நிதி உதவல் - அத்திருமுறை யெழுதினவர்களுக்குப் பொருள்கொடுத்தல்,—அஞ்சனம் பெய்தல்- அத்திருமுறைகளுக்கு மைபோடல்,—திருமுறை அங்கு அவை வைத்துக் கொடுத்தல்-அத்திருமுறைகளை அவ்விடத்து வைத்திருந் துகொடுத்தல்,—கலகம் தனக்குச்சேமித்துஈதல்-கலகத்தில் பாதுகா த்துக்கொடுத்தல்,—பொருவரும்இங்கு இவற்றின்ஒன்று புரிபவர்கள்- ஒப்பில்லாத இவைகளிலொன்று செய்பவர்கள்,—சிவபதத்துள்புகு வர்-சிவபதவியிற்சேர்வார்கள் எ-று. தான் அன்று எ அசைகள்.(௭௭)

சிவசிந்தை மறையவர்பாற் சிவலிங்க மாதானஞ் செலு த் தினோர்க, ணவமுந்து பரசிவத்தி னண்ணுவர்கள் சிவார்ச் சனை யெந்நாளும் பேணுந், தவமன்பு பெறுமன்பர்க் கங்கதற் கு வேண்டுவன தருக்கா லீந்தோ, ரவரன்றோ விமையவரு மடைவரிய சிவபதத்துக் கதிபராவர்

(இ-ள்.) சிவ சிந்தை மறையவர்பால் சிவலிங்க மாதானம் செலுத்தினோர்கள்-இச்சிதம்பரதிலுள்ள சிவத்தியானமுடைய பிரா மணர்களிடத்து பெரிய சிவலிங்கதானஞ் செய்தவர்கள்,—நவம் முந்து பரசிவத்துள் நண்ணுவர்கள் - பூமியினிடத்திருந்து முற்பட் டுப் போய் பரசிவத்தோடு இரண்டறப் பொருந்துவார்கள்,—எந்நா ளும் சிவார்ச்சனை பேணும் தவம் அன்பு பெறும் அன்பர்க்கு - எந்த நாளிலும் சிவபூசையை விரும்பிச் செய்யும் தவமும் பத்தியுமுடைய அடியார்களுக்கு,—அங்கு அதற்கு வேண்டுவன தருக்கால் ஈந்தோர்- அப்பொழுது அச்சிவபூசைக்கு வேண்டு முபகரணங்களைச் செருக் கோடு கொடுத்தவர்,—அவர் அன்றோ சிவபதத்துக்கு அதிபராவார் - அவர்களல்லவோ சிவபதத்துக்குத் தலைவராவார்கள். எ-று. (௭அ)

சுருதியவர் பெறுமாறு துவாரகாசக் கரமுந் தூய செம்பொற், குருமலியுந் திகழ்சாளக் கிராமமிவை யன்பினூற் கொடுத்து ளோர்கண், மருவிரியுந் துழாயலங்கற் செந்திருமால் பதமணுகி வாழ்ந்து ஞானத், திருவருளும் பொருவரிய சிவலோக மடைவி னிற்போய்ச் சேர்வ ரன்றே.

(இ-ள்.) சுருதியவர் பெறுமாறு அச்சிதம்பரத்திலுள்ள வேதத்தை யறிந்த பிராமணர்கள் பெறும்படி,—துவாரகா சக்கரமும் - துவாரகாசக்கரமும்,—செம்பொன் குரு மலியும் திகழ் சாளக்கிராமம் - செம்பொன்னிறமானது நிறைந்து பிரகாசிக்கின்ற சாலக்கிராமமும்,—இவை அன்பினூல் கொடுத்துளோர்கள் - இவைகளை அன்போடு தானஞ் செய்தவர்கள்,—மரு விரியும் துழாய் அலங்கல் செந்திருமால் பதம் அணுகி வாழ்ந்து - வாசனை விரியப்பெற்ற துளபமாலையணிந்த செவ்விய விஷ்ணுமூர்த்தியினது வைகுண்டபதவியை யடைந்து வாழ்ந்து,—ஞானத் திரு அருளும் பொருவு அரிய சிவலோகம் அடைவினில் போய்ச் சேர்வர் - ஞானச் செல்வத்தைக் கொடுக்கின்ற உவமை சொல்லுதற்கரிய சிவலோகத்திற் கிரமப்பிரகாரம் போய்ச் சேர்வார்கள். எ - று. (௬௧)

துவாரகா சக்கிரம் என்றது - துவாரகையில் கிருஷ்ணருடைய காலத்தில் வழங்கிவந்த ஓர் நாணகம்.

எம்பரமன் றனக்கன்பா மறையவர்க்குச் சிவநாபி யீய்ந்துளோர்க, ளம்பிகைதன் பதம்பெறுவ ரேதேனும் பரனடியார்க் கணுமட் டீய்ந்தோர், தம்பரிசி லுரைக்குமதென் னதனிலொரு பரமாணு நலத்துக் காதிச், செம்பதுமன் கற்பத்தி லொருகற்பஞ் சிவபதத்திற் சிறந்து வாழ்வார்

(இ-ள்.) எம்பரமன் தனக்கு அன்பாம் மறையவர்க்கு - சிதம்பரத்தின்கணுள்ள எமது சிவபெருமானுக்கு அன்புடையவர்களாகிய பிராமணர்களுக்கு,—சிவநாபி ஈய்ந்துளோர்கள் - சிவநாபியைக் கொடுத்தவர்கள்,—அம்பிகை தன் பதம் பெறுவர் - உமாதேவியாருடைய பதவியை யடைவார்கள்;—பரன் அடியார்க்கு ஏதேனும் அணு மட்டு ஈய்ந்தோர்தம் பரிசில் உரைக்கும் அது என்-சிவனடியார்களுக்கு யேதேனு மொருபொருளில் அணுவளவு கொடுத்தவர்களுடைய் தன்மையைச் சொல்லுவது என்னவெனில்,—அதனில் ஒரு பரமாணு நலத்துக்கு - அதிற் பதினுறிலொருபங்காகிய பரமாணு புண்ணியத்திற்கு,—ஆதிச் செம் பதுமன் கற்பத்தில் ஒரு

கற்பம் சிவபதத்திற் சிறந்து வாழ்வர் - முதல்வராகிய செந்தாமரை யாசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமகற்பங்களி லொரு கற்பகாலம் சிவபதவியில் சிறப்போடு வாழ்வார்கள். எ - று. (௫௦)

சிவசாபி என்றது பாணம்போலுள்ள பொருள்.

பொங்கியவன் பிலரேனு முளரேனும் புண்ணியகன் மங்
கட் கேற்ற,வங்கமுளதேனுமில தேனுமியற் றுவராகி லந்தக்
கன்மந், தங்குகுறை யிகந்துநிறை பூரணமா மவைமற்றைத்
தலத்துண் டாகா, துங்கமலி தவமுனிவ வெத்தலமு மிதற்
கொவ்வா சொல்லுங் காலே.

(இ-ள்.) துங்கமலி தவ முனிவ - உயர்ச்சிபொருந்திய தவத்தையுடைய சைமினிமுனிவனே;—பொங்கிய அன்பு இலரேனும் - மிகுந்த அன்பில்லாதவராயினும்,—உளர் எனும் - அன்புள்ள வராயினும்,—புண்ணியகன்மங்கட்கு ஏற்ற அங்கம் உளதேனும் இலதேனும் - புண்ணிய கன்மங்கட்கு இயைந்த சரீரமுடையராயினும் இல்லாதவராயினும்,—இயற்றுவராகில் - (இச்சிதம்பரத்தி லிருந்து தம்மாலியன்றமட்டும்) புண்ணியங்களைச் செய்வார்களாயின்,—அந்தக் கன்மம் தங்குகுறை இகந்து - அக்கர்மங்களிலேதேனும் குறைவுபாடுண்டாயின் அவைகளினின்று நீங்கி,—நிறை பூரணமாம் - நிறைந்த பரிபூரணமாகும்,—அவை மற்றைத் தலத்து உண்டாகா - அப்புண்ணியகர்மங்கள் பூரணமாக நிறைவேறுதல் மற்றைத் தலங்களிலுண்டாகமாட்டா? ஆதலின்,—சொல்லுங்கால் எத்தலமும் இதற்கு ஒவ்வா - சொல்லுமிடத்து எந்தஸ்தலமும் இச்சிதம்பரத்துக்கு ஒப்பாகமாட்டா. எ - று. (௫௧)

மன்றொளிரத் தலந்தன்னி லோமங்கள் விரதங்கண் மந்தி
ரங்க, டுன்றுநெறிச் சிவார்ச்சனைகண் முதலான வியற்றிவரு
ந் தூய மாந்தர்க், கொன்றனந்த மையமிலை தென்புலர்க்கா யு
றவோருக் குண்டி யீந்தான், முன்றகைய மூவகையிற் சுற்றமு
ம்போய்ச் சிவபதத்தின் முதல்வா ராவர்.

(இ-ள்) மன்று ஒளிர் அத்தலம் தன்னில் - திருச்சிற்றம்பலம் விளங்குகின்ற அச்சிதம்பரஸ்தலத்தில்,—துன்று நெறி ஓமங்கள் விரதங்கள் மந்திரங்கள் சிவார்ச்சனைகள் முதலான இயற்றி வரும் தூய மாந்தர்க்கு - பொருந்திய வேத சிவாகமங்களிற் கூறிய விதிப்படி ஓமங்கள் விரதங்கள் மந்திரங்கள் சிவபூசைகள் முதலியவைகளைச் செய்துவரும் பரிசுத்தமுடைய மனிதருக்கு,—ஒன்று அனந்தம்-

ஒன்று அனந்தமாகும்,—ஐயம் இலை - இதற்குச் சந்தேகமில்லை,— தென் புலர்க்கு ஆய் அறவோர்க்கு உண்டி ஈய்ந்தால் - பிதிரர்கள் பொருட்டுப் பிராமணர்களுக்குப் போசனஞ் செய்வித்தால்,—முன் தகைய மூவகையிற் சுற்றமும் சிவபதத்திற் போய் முதல்வராவார் - முன்னுள்ள தகுதிபொருந்திய பிதிர்வர்க்கம், பிதாமகிவர்க்கம், மாதுர்வர்க்கம் என்னும் மூவகைச் சுற்றத்தார்களும் அச்சிவலோகத் திற்போய்ச் சிவலோகததுக் கதிபராவார்கள். எ - று. (௫௨)

மற்றொருதே யந்தன்னின் மரணமடைந் தோர்தமக்கிம்
மன்று சூழப், பெற்றதலத் திடையடைந்து பிண்டவுத கக்கி
ரியை பேணி லிந்தப், பொற்றலததி லிறந்தவர்தம் பயனுளத
ன் னியதலத்துப் பொன்றி னோரன், புற்றருள்கொண் டத்த
லத்திற் புதைக்கில்வினை கெடமுத்தி யுறுவ ரன்றே.

(இ-ள்.) மற்று ஒரு தேயம் தன்னில் மரணம் அடைந்தோர் தமக்கு - அன்னிய தேசத்திலிறந்தவர்களுக்கு—இம் மன்று சூழப் பெற்ற தலத்திடை அடைந்து பிண்ட உதகக் கிரியை பேணில் - இக்கனகசபையாற் சூழப்பெற்ற இச்சிதம்பரஸ்தலத்தை யடைந்து பிண்டதர்ப்பண முதலிய கிரியைகளை விரும்பிச் செய்தால்,—இப் பொற்றலத்தில் இறந்தவர்கள் தம் பயன் உளது - இப்பொன்மயமாகிய சிதம்பரஸ்தலத்தில் இறந்தவர்களடையும் பலன் கிடைக்கும்,-- அன்னிய தலத்துப் பொன்றினோர் - வேறுஸ்தலத்திலிறந்தவர்கள்,- அன்பு உற்று அருள் கொண்டு அத்தலத்தில் புதைக்கில் - அன்புற்று கிருபையோடு அச்சிதம்பரஸ்தலத்தில் புதைத்தால்,—வினை கெட முத்தி உறுவர் - பாவநீங்க மோக்ஷத்தை யடைவர். எ - று.

எத்தலத்தி லிறந்தாலு மிறந்தவர்க்கா யந்தியேட்டியியை
ந்த வாகொண், டத்தலத்திற் புரிந்தக்கா லவர்கள்பர முத்தி
யினை யடைவர் முத்த, நத்துலவுஞ் சிவகங்கை மூழ்குங்கான்
மந்திரங் கணவிற்றுங் கான்மன், றுத்தமனைக் காணுங்கா லெ
வரைநினைந் தாலுமவ ருறுவர்முத்தி.

(இ-ள்.) எத் தலத்தில் இறந்தாலும் - எந்தஸ்தலத்தி லிறந்தாலும்,—இறந்தவர்க்காய் - அவ் விறந்தவர்கள் பொருட்டு,—இயைந்தவா கொண்டு அத்தலத்தில் அந்தியேட்டி புரிந்தக்கால் - தம்மாலியன்றவைகளைக்கொண்டு அச்சிதம்பரத்தில் அந்தியேட்டி செய்தால்,- அவர்கள் பர முத்தியினை அடைவர் - அவர்கள் மேலாகிய மோக்ஷத்தையுடைவர்கள்,—முத்த நத்து உலவும் சிவகங்கை மூழ்குங்கால்

முத்தும் பொருந்திய சங்குகள் ஊருகின்ற சிவகங்கையில் செய்கின்ற காலத்திலும்,—மந்திரங்கள் நவிற்றுங்கால் - ஜெபம் செய்கின்ற காலத்திலும்,—மன்று உத்தமனை காணும் கால்-கனகசபையி லெழுந்தருளியிருக்கும் நடேசப்பெருமானைத் தரிசிக்குங் காலத்திலும்,—எவரை நினைந்தாலும் அவர் முத்தி உறுவர் - எவர்களை நினைத்தாலு மவர்கள் மோக்ஷத்தை யடைவர்கள். எ - று.

பற்பலநன் னாக்கொண்டு பலகாலும் புகலினுப் பதியினுள்ள, நற்பெருமை தொலையுமோ வானாலுஞ் சுருக்கமா நவிற்றா கின்றேம், பொற்பொதுவிற் செங்கமலப் பொற்பாதங் கண்டோரப் புரியின் மாய்ந்தோர், ரற்புதமுத் திக்குரியர் மற்றொருநற் றலத்தில்லை யறிவான் மிக்கோய்.

(இ-ள்) அறிவால் மிக்கோய் - அறிவினால் மேம்பட்ட சைமினியே!—அப்பதியின் உள்ள நல் பெருமை பல் பல நல் நாக்கொண்டு பலகாலும் புகலினும் தொலையுமோ - அச்சிதம்பரத்திலுள்ள நல்ல மகிமைகளை அநேகநாவுகளால் பலமுறை எடுத்துச் சொல்லினும் அப்பெருமை சொல்ல முடியுமோ? (முடியாது);—ஆனாலும் சுருக்கமா நவிற்றுகின்றேம் - அங்ஙனமாயினும் அதனைச் சுருக்கமாகச் சொல்லுகின்றேம்,— பொன் பொதுவின் செங்கமலப் பொன் பாதங் கண்டோர் - கனகசபையி லெழுந்தருளியிருக்கும் நடேசப் பெருமானது செந்தாமரை மலர்போன்ற அழகிய திருவடிகளைத் தரிசிப்பவர்களும்,—அப்பதியின் மாய்ந்தோர் - அத்தலத்திலிறந்தவர்களும்,—அற்புத முத்திக்கு உரியர் - ஞானமயமாகிய மோக்ஷத்தையடைவர்கள்,—மற்று ஒரு நல் தலத்துஇல்லை - வேறொரு நல்ல ஸ்தலத்தில் (அது) இல்லை எ - று. (ருரு)

ஒருவருக்கு முரைத்ததிலை யத்தலத்திற் பெருமைவேறுணர்ந்தோ ரில்லை, யருமறையின் முடிவிலுள தந்தமறைமொழியறியு மதனை ஞானத், திருவுருவி லொருபாகம் பெண்ணுருவும் படைத்துடைய தேவதேவ, னருள்புரிய வறிந்துய்ர்ந்தேன் வேறென்றான் முனிவரயா னறிந்தே னல்லேன்.

(இ-ள்.) முனிவர - முனிசிரேஷ்டனாகிய சைமினியே!—அத்தலத்தின் பெருமை ஒருவருக்கும் உரைத்தது இலை - அச்சிதம்பர ஸ்தலத்தின் பெருமை வேறொருவருக்குஞ் சொன்னதில்லை,—வேறு உணர்ந்தோர் இல்லை-வேறே அதனை அறிந்தவர்களொருவருமில்லை,- அருமறையின் முடிவில் உள்ளது - (அது) அரிய வேதசிரசாகிய

உபநிடதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது,—அதனை அந்த மறை மொழி அறையும்-அப்பெருமையை அர்த்தவேதவாக்கியங்களேசொல் லும்;—ஞானத் திருவுருவில் ஒருபாகம் பெண் உருவம் படைத்து உடைய தேவ தேவன் அருள் புரிய அறிந்து உய்ந்தேன் - ஞானமய மாகிய திருமேனியிலொருபக்கம் பெண்ணுருவமாகவுடைய தேவ தேவனாகிய சிவபெருமான் (அடியேனுக்கு) அநுக்கிரகம் பண்ண (அதனால்) அடியேனறிந்துய்ந்தேன்,—யான் வேறொன்றான் அறிந் தேன் அல்லேன் - அடியேன் வேறொருவிதத்தாலறிந்தேனல்லேன்.

போதநெறி தருஞ்சுருதிப் புராணநெறி வல்லவர்க்குட் பொலிவு மிக்கோன், சூதமுனி வானெமக்கு மிறைவனுக்கு மன்புடைய தூய்மை கொண்டோ, னாதலினு ளவற்குரைத் தோ முள்ளபடி யாங்கவன்போ லறிவாரில்லை, நீதவறு வன்பு டையை யாதலினு னினக்குமிது நிகழ்த்தி னோமால்.

(இ-ள்.) போத நெறி தருஞ் சுருதிப் புராண நெறி வல்லவர்க் குள் பொலிவு மிக்கோன் சூதமுனிவரன் - ஞானமார்க்கத்தைத் தர த்தக்க வேதமார்க்கம் பௌராணிகமார்க்கங்களில் வல்லவர்களுக் குள் சிறப்பினால் மிகுந்தவன் சூத முனிவன்,—எமக்கும் இறைவ னுக்கும் அன்பு உடைய தூய்மை கொண்டோன் - அவன் எம்மிட த்திலும் சிவபெருமானிடத்திலும் அன்பு பொருந்திய பரிசுத்தமு டையவன்;—ஆதலின் உள்ளபடி அவர்க்கு உரைத்தோம் - ஆகை யால் உள்ள பிரகாரம் அவனுக்கு யாம் சொன்னோம்,—அவன் போல் அறிவார் இல்லை - அவனைப்போல அறியத்தக்கவர்களொரு வரு மில்லை,—நீ தவறு அன்புடையை - நீ நம்மிடத்து நீங்காத புத் தியுடையவன்.—ஆதலினால் நினக்கும் இது நிகழ்த்தினேம் - ஆகை யால் உனக்கும் இதைச் சொன்னோம். எ - று. (௩௪)

ஆதார மாறினுக்கு மயனின்ற பொருண்மன்று ளாடா நின்ற, பாதார விந்தமலர் கண்டவர்கண் முத்தரியான் பகர் ந்த வெல்லா, காதாதி கடந்தபர வருளிலோர்க் குருதநனை ண்ணி யன்னோர்க், கோதாதி முதலவன்மே லன்புடையோர் தமக்கென்று முரைத்தல் செய்வாய்.

(இ-ள்.) ஆதாரம் ஆறினுக்கும் அயல் நின்ற பொருள்-மூலாதா ரம் சுவாதிட்டானம் மணிபூரகம் விசுத்தி அநாகதம்ஆஞ்ஞைஎன்னு மாறுதாரங்களையுங் கடந்து நின்ற பொருளாகிய சிவபெருமானது,— மன்றுள் ஆடா நின்ற பாத அரவிந்தமலர் கண்டவர்கள் முத்தர்-கன

சபையினிடத்துத் திருநிருத்தஞ் செய்யாநின்ற திருவடித் தாமரை மலர்களைத்தரிசித்தவர் மலமுத்தவராவார்,—யான் பகர்ந்த எல்லாம் நாதாதி கடந்த பரன் அருளிலோர்க்கு உறாது - என்னாற் சொல்லப்பட்டவைகளெல்லா நாத முதலியவைகளைக் கடந்த சிவபெருமானுடைய திருவருளுடையைப் பெறாதவர்களுக்குப் பொருந்தாது;—அதனால்நண்ணி அன்னோர்க்கு ஓதாதி - ஆதலினால் நீபோய் அப்படிப்பட்டவர்களுக்குச் சொல்லாதிருக்கக்கடவாய்;—முதலவன்மேல் அன்புடையோர் தமக்கு என்றும் உரைத்தல் செய்வாய் - முதல்வனாகிய சிவபெருமானிடத்தில் அன்புடையவர்களுக்கு எப்பொழுதும் சொல்லக்கடவாய். எ - று. (௫அ)

## வே று.

ஈட்டும் வல்வினைத் தொகுதியா லந்தரா யெழிற்சிதம் பரத்துண்மை, காட்டு மாமறை யாகம புராணங்கள் கண்டுமன்னதுகாணார், கேட்டு மங்கது கேட்கிலர் மாயையின் கிளர்பெரு வசத்தானன், றுட்ட மற்றவர் மயக்குறு மயக்கையா நவிற்றலாம் படித்தன்றால்.

(இ-ள்.) ஈட்டும் வல்வினைத் தொகுதியால் அந்தராய் - முற்பிறப்பிற்செய்த கொடிய வினைக்கூட்டங்களால் கீழோர்களாய்,—எழில் சிதம்பரத்து உண்மை காட்டும் - அழகுபொருந்திய சிதம்பரத்தினது மகிமையைத்தெரிவிக்கின்ற,—மா மறை ஆகம புராணங்கள் கண்டும் - பெரியவேதாகம புராணங்களைக் கற்றறிந்தும்,—அன்னது காணார் - அதை அறியமாட்டார்கள்;—அங்கு அது கேட்டும் கேட்கிலர் - அப்பொழுது அவைகளைக் கேட்டறிந்தும் கேளாதவர்களாவார்கள்;—கிளர் பெரும் மாயையின் வசத்தால் நல் நாட்டம் அற்றவர் - விளங்காநின்ற பெரிய மாயையின் சம்பந்தத்தால் நல்ல ஞானக்கண்ணில்லாதவர்கள்,—மயக்குறும் மயக்கை யாம் நவிற்றலாம் படித்து அன்று - மயங்கிக்கிடக்கின்ற மயக்கத்தை நாம் சொல்லுந் தன்மையுடைத்தன்று. எ - று. ஆல் அசை, (௫௯)

மக்க டந்தையர் தாய்தமர் மனைவிபொன் மனைதரை யிடைச்சிந்தை, புக்க ழுந்தின ரென்னுரை கொள்வரோ புகன்றபல் பவந்தன்னிற், றக்க மாமறை மிருதியா கமநெறி தரித்திறை யிருதாண்மேன், மிக்க வன்பின ரிருசெவிக் கிவ்வுரை விளம்பரு மமிர்தாமால்.

(இ-ள்.) மக்கள் தந்தையர் தாய் தமர் மனைவி பொன் மனை தரை இடைச் சிந்தை புக்கழுந்தினர் - மக்கள் பிதா மாதா சுற்றத்தார் மனைவி பொன்வீடு பூமியாகிய இவைகளிடத்தே ஆசைவைத்து மன மழுந்திக்கிடந்தவர்கள்,— என் உரை கொள்வரோ - நம்மாற்சொல் லப்பட்டவைகளை யேற்றுக்கொள்வார்களோ? கொள்ளார்கள்;— புகன்ற பல் பவம் தன்னில் தக்க மா மறை மிருதி ஆகம நெறி தரித்து இறை இருதாள் மேல் மிக்க அன்பினர் இரு செவிக்கு - சொல்லப்பட்ட பலவகைப்பிறப்புகளிலும் தகுதிபொருந்திய பெரிய, வேதம் ஸ்மிருதி ஆகமங்கள் என்னும் இவைகளிற் கூறியமார்க்கங் களை யநுஷ்டித்துச் சிவபெருமானது இரண்டு திருவடிகளின்மேல் மிகுந்த அன்பினையுடையபெரியோர்களது இரண்டு காதுகளுக்கும்,— இவ்வுரை விளம்பு அரும் அமிர்து ஆம் - நம்மாற் சொல்லப்பட்ட இவ்வாக்கியங்கள் சொல்லுதற்கரிய அமிர்தமாகும். எ - று. (கூ0)

சொல்லு மாறினி யென்னைகொ லெண்ணிலாச் சுருதி கட் கணியான, தில்லைய ம்பலப் பெருமையை வல்லவா தெளி வுற வுரைத்தோம்யா, மில்லை யாயினு மறைமொழி யுணர்ந் தவ ரிறைதிரு வருடன்னா, னல்ல வாறென வினிதினி லறிந் தரு ணண்ணுவ ராமன்றே.

(இ-ள்) இனிச் சொல்லும் ஆறு என்னை கொல் - இனிச் சொல்லும் விதம்யாதோ?(ஒன்றுமில்லை),—எண் இலாச் சுருதி கட்கு அணி ஆன தில்லை அம்பலப் பெருமையை வல்லவா தெளிவு உற யாம் உரைத்தோம் இல்லை யாயினும் - அளவில்லாத வேதங்கட்கு ஆபரணமாகவிளங்குகின்ற தில்லைவனமாகிய சிதம்பரத்தின்கணுள்ள சிற்சபையின் மகிமையைத்தெரிந்தபிரகாரம் நாம் எடுத்துத்தெளிவு பொருந்தச் சொல்லாமலிருப்போமாயினும்,—மறை மொழி உணர்ந் தவர் - வேதவாக்கியங்களை அறிந்தவர்கள்,—இறை திரு அருள் தன் னால் - சிவபெருமானுடைய திருவருளினால்,—நல்ல ஆறு என இனிதி னில் அறிந்து அருள் நண்ணுவர் - மோக்ஷமடைதற்கு நல்வழி இதுவே என்று இனிமையோடு (அச்சிற்சபையின் மகிமையை) அறி ந்து திருவருளையடைவர்கள். எ - று. ஆம் அன்று ஏ அசைகள். (கூக)

யானு நான்முகத் தோருவனுந் திருவினுக் கிறைவனு மிமையோர்தங், கோனுந் தெய்வமா முனிவரு முலகருள் கொ டியிடை யொருபாகன், றானும் வந்தெதிர் சாற்றினு முணர்வ ரோ தகவிலாச் மணமுஞ்செந், தேனும் வீசிய பொழின்மலி தில்லையிற் றிகழ்பெரு மையையம்மா.

(இ-ள்.) தகவு இலார் - தகுதியில்லாத மூடர்கள்.—மணமும் செந்தேனும் வீசிய பொழில் மலி தில்லையில் திகழ் பெருமையை - வாசனையும் செவ்வியதேனு மொழுகுகின்ற சோலைகள் நிறைந்த தில்லையம்பலத்தில் விளங்குகின்ற மகிமையை,—யானும் நான்முகத்து ஒருவனும் திருவினுக்கு இறைவனும் இமையோர் தம் கோனும் தெய்வ மா முனிவரும் உலகு அருள் கொடி இடை ஒரு பாகன் தானும் - நாமும் நான்கு முகங்களையுடைய ஒப்பில்லாத பிரமதேவரும் மகா லட்சுமிக்கு நாயகராகிய மகாவிஷ்ணுமூர்த்தியும் தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும் தெய்வத்தன்மை பொருந்திய பெரிய முனிவர்களும் உலகங்களைப்பெற்றருளிய கொடிபோன்ற இடையையுடைய உமா தேவியாரை யொருபாகத்திலுடைய சிவபெருமானும்,—எதிர்வந்து சாற்றினும் - எதிரேவந்து (அச்சிதம்பரத்தின் மகிமையை) எடுத்துச்சொல்லினும்,—உணர்வரோ - அறிவார்களோ? அறியார்கள். எ. - று. (சுஉ)

தேட ருங்கதி ரம்பலத் தின்பமெய்ச் சின்மய வியோமத்தி, னாடல் கண்டவர்முத் தரே யென்றியா னறைந்தது நிறைவேதப், பாடன் மாதவ மறைமுடி வுள துவெம் பாசம்வீ சினர்வாழத், தாட ரும்பர மன்றிரு வாக்கினுற் சாற்றிய தாமன்றே.

(இ - ள்.) நிறை வேதப் பாடல் மாதவ - நிறைந்த வேதத்தை அத்தியயனம் செய்கின்ற மகாதவசிரேஷ்டராகிய சைமினியே, தேடு அரும் கதிர் அம்பலத்து மெய்ச் சின்மய இன்ப வியோமத்தின் ஆடல் கண்டவர் - தேடுதற்கரிய ஒளிபொருந்திய கனகசபையினிடத்தில் சச்சிதானந்தமயமாய் விளங்காநின்ற ஞானாகாசசொரூபியாகிய நடேசப்பெருமானது திருநிருத்தத்தைத் தரிசித்தவர்கள்,—முத்தரே என்று யான் அறைந்தது - சீவன் முத்தர்களேயாவாரென்று யான் சொல்லியது,—மறை முடிவு உளது - வேதசிரசாகிய உபநிடதங்களிற் சொல்லியிருக்கின்றது;—வெம் பாசம வீசினர் வாழத் தாள் தரும் பரமன் திருவாக்கினுற் சாற்றியது ஆம்- கொடியபாசங்களை நீக்கிய பெரியோர்கள் வாழும்படி தமது திருவடிப் பேற்றைத்தருகின்ற சிவபெருமானது திருவாக்கினுற் சொல்லியதாகும். எ - று. அன்று ஏ அசை. (சுரு)

வே று.

முன்னவனைக் கிருதயுகஞ் சிந்தித்தி யாகங்கண் முயன்றும் வேதஞ், சொன்னநெறி திரேதயுகத் தரிதென்று மகந்த

வங்க ளருளாற் செய்து, மின்னநெறி முடியாமற் றுவாபரத்தி லருச்சனைக ளிசைந்து முன்னந், துன்னுமரு வினையொழிந்து வீடடைவ ரெனச்சுருதி சொல்லு மன்றே.

(இ-ள்.) கிருதயுகம் முன்னவனைச் சிந்தித்து வேதஞ் சொன்ன நெறியாகங்கள் முயன்றும் - கிருத யுகத்தில் சிவபெருமானைச் சிந்தித்து வேதத்திற் சொல்லிய பிரகாரம் யாகங்கள் செய்தும்,—திரேதயுகத்து மகம் அரிது என்று தவங்கள் செய்தும் - திரேத யுகத்தில் யாகங்கள் செய்வதரிதென்று தவங்கள் செய்தும்,—துவாபரத்தில் இன்ன நெறி முடியாமல் அருச்சனைகள் இசைந்தும் - துவாபர யுகத்தில் யாகங்களுந் தவங்களும் முடிவு பெறு வென்று பூசைகள் செய்தும்,—முன்னம் துன்னும் அருவினை ஒழிந்து வீடு அடைவர் எனச் சுருதிசொல்லும் - முற்பிறப்பிற் பொருந்திய பாவங்கள்நீங்கிமோக்ஷமடைவர்களென்று வேதங்கள் சொல்லும். எ - று. அன்று எ அசை.

மலினவினை யாவுக்கு முறைவிடமாய் நெறிநீதி மாயத்தோற்றுங், கலியுகமா கியகாலத் தியாவோருங் காமாதிக் கடலின் வீழ்ந்து, மெலிபுமுணர் வினராகிப் பொல்லாத வாழ்க்கையினை விட்டு நீங்கி, யொலிகொண்மறை புகன்முத்தி யுறுதலரி தெனவுரைப்ப ருயர்ந் துளோர்கள்.

(இ-ள்.) மலின வினை யாவுக்கும் உறைவிடமாய் நீதி நெறி மாயத் தோற்றும் கலியுகமாகிய காலத்து- துஷ்டகிருத்தியங்க ளெல்லாவற்றிற்கும் இருப்பிடமாயும் நீதிமார்க்கங்கள் கெடும்படி யாயும் உண்டாகா நின்ற கலியுகத்தில்;—யாவோரும் காமாதிக் கடலில் வீழ்ந்து - யாவர்களும் காமமுதலிய பாவக்கடலில்வீழ்ந்தழுந்தி,—மெலியும் உணர்வினர் ஆகி - ஞானமில்லாத வர்களாய்,—பொல்லாதவாழ்க்கையினை விட்டு நீங்கி,—கேட்டைத்தருகின்ற பிரபஞ்ச வாழ்வை விட்டு நீங்கி,—ஒலிகொள் மறை புகல் முத்தி உறுதல் அரிது என உயர்ந்தோர் உரைப்பர் - இசை பொருந்திய வேதங்களிற் சொல்லிய மோக்ஷத்தை யடைதல் அரிதென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். எ - று. (௯௫)

இயம்புநெறி யெவ்வுகத்து மியற்றிஞே ரியற்றுதோர் யாவரேனு, மயங்குகொடும் பிறப்பிகந்து மாமுத்தி பெறுமாறு மன்று ணின்ற,புயங்கனட வடிவமுமத் தலவடிவு மாய்நின்றுன் புகர்மா மாய்த்த, வயம்புனையுந் திங்கண்முடிச் சங்கரன்வெரங் கரவணியும் வானோர்நாதன்.

(இ-ள்.) வம்பு புனையும் புகர் மா மாய்த்த திங்கள் முடிச் சங்கரன் - வெற்றி பொருந்திய புள்ளியையுடைய கயாசுர னென்னும் யானையை யுரித்துப் போர்த்திய சந்திரனைத் தரித்த திருமுடியையுடைய சங்கரனும்,—பொங்கு அரவு அணியும் வானோர் நாதன் - பொலிவு பொருந்திய சர்ப்பத்தை யணிந்த தேவநாயனு மாகிய சிவபெருமான்,—எவ்வுகத்தும் - எந்தயுகத்திலும்,—இயம்புநெறி - மேற்சொல்லிய பிரகாரம்,—இயற்றினோர் இயற்றாதோர் யாவரேனும் - (யாகங்கள் தவங்கள் பூசைகள்) செய்தவர்கள் செய்யாதவர்கள் என்னும் இவர்களில் யாவர்களாயிருந்தாலும்,—மயங்கு கொடும் பிறப்பு இதந்து மாமுத்திபெறு மாறு - மாறிமாறி வருகின்ற கொடிய பிறவிகளி னின்று நீங்கி பெருமை பொருந்திய மோக்ஷத்தை யடையும்படி,—மன்றுள் நின்ற புயங்க நடவடிவமும் அத்தல வடிவுமாய் நின்றான் - கனகசபையினிடத்தே நின்று செய்தருளாநின்ற புயங்க தாண்டவமும் அத்தாண்டவஞ் செய்தருளுதற் கிடமாகிய சிதம்பர வடிவமுமாய் நின்றருளினான். எ - று. (௬௬)

முத்தொழிலு முயன்றிடுவான் முக்குணத்தான் மூவடிவ முயங்கி யோங்கி, யத்தகைய் தொழிற்கயலாய் ஞானனந் தத்திரட்சி யாயெவர்க்கு, மெய்த்தகைய பதியாகி யருள்கூட விளங்கிநிறை விமலன் கண்டோர், சத்தியமுத் தியினடைய மன்றினடம் புரிந்தென்றுந் தயங்கா நின்றான்.

(இ-ள்.) முத்தொழிலும் முயன்றிடுவான் முக்குணத்தால் மூவடிவம் முயங்கி ஓங்கி- படைத்தல் காத்தல் அழித்தல் என்னு மூன்று தொழிலுஞ் செய்யும் பொருட்டுச் சத்துவம் இராசதம் தாமசம் என்னுமுக்குணங்களால் பிரமவிஷ்ணு ருத்திரன் என்னு மூன்றுருவங் கொண்டுயர்ந்து,—அத்தகைய தொழிற்கு அயலாய் - அத்தகுதி பொருந்திய முத்தொழிலுக்கு மப்பாலாய்,—ஞானனந்தத் திரட்சியாய் - சின்மயானந்தமயமாய்,—எவர்க்கும் மெய்த்தகைய் பதியாகி - எப்படிப்பட்டவர்களுக்கும் உண்மையாகிய பதியாகி,—அருள் கூட விளங்கி - கிருபை பொருந்தும்படி பிரகாசித்து,—நிறை விமலன் - எவ்விடங்களிலு நிறைந்திருக்கின்ற மலமுத்தராகிய சிவபெருமான்,—கண்டோர்சத்திய முத்தியின் அடைய - தரிசித்தவர்கள் உண்மையாக மோக்ஷத்தில் அடையும் பொருட்டு - மன்றில் நடம்புரிந்து என்றும் தயங்கா நின்றான் - கனகசபையினிடத்துத் திருநிருத்தம் செய்து எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றான். எ - று. (௬௭)

ஆருயிரின் பொருட்டன்றித் தொழிலுளவோ வாதித னக் கருளாநந்தப், பேருருவம் படைத்துடைய பேராட்டி யொருபாலிற் பிரியா தோங்கப், பாருருவாத் தனதுருவாம் பதியிலதி சயங்கொண்டு பழநூல் வேத,மோருருவ மெனப்பு கல வொளிபெற்ற களிநடங்கண் டுயர்வா யன்றே.

(இ-ள்.) ஆதி தனக்கு - முதல்வனாகிய அச்சிவபெருமானுக்கு,- ஆர் உயிரின் பொருட்டு அன்றித் தொழில் உளவோ - உலகத்தில் நிறைந்த ஆன்மாக்கள் பொருட்டல்லாமல் தொழில்கள் உண்டோ (இல்லை),—அருள் ஆனந்தப்பேர் உருவம் படைத்துடைய பேராட்டி ஒருபாலில் பிரியாது ஓங்க - கிருபையையும் சந்தோஷத்தையுமே பெரியதிருமேனியாகக் கொண்டருளிய எம்பிராட்டியாகிய சிவகாமி யம்மையார் ஒருபக்கத்தி னீங்காதோங்க,—பார் உருவா - பூமியி னிடத்தில் வடிவாகக் காணப்பட்ட,—தனது உருவாம் பதியில் - தனது வடிவமாக விளங்குகின்ற இச்சிதம்பரஸ்தலத்தில்,—அதிசயம் கொண்டு - ஆச்சரிய கரத்தோடு - பழநூல் வேதம் - பழைய சாஸ் திரமாகிய வேதங்கள்,—ஓர் உருவம் எனப் புகல - இது ஒப்பில்லாத திருவுருவமென்று சொல்லத்தக்க,—ஒளி பெற்ற - பிரகாசம் பொருந்திய,—களி நடம் கண்டு - (நடேச மூர்த்தியினது) ஆனந்த திருநிருத்தத்தைத் தரிசித்து,—உயர்வாய் - சைமினியே நீ மேன் மையை யடையக்கடவாய். எ - று. (௯அ)

செஞ்சடையும் பிறையுமிள முறுவல்வத னமுங்குறியுந் திகழ்கண்மூன்று, நஞ்சணிகண் டமுந்தோளு மார்புமெரி யகறுடிக்கை நலனும்வீசி, யஞ்சல்புரி கரமுமரை யும்புலியி னதளுமெடுத் தாண்டதாளுங், குஞ்சிதமு முயலகன்மேற் றிருத்தாளு முழுநீறுங் குலவியோங்க.

(இ-ள்.) செஞ்சடையும் - சிவந்த ஜடையும்,—பிறையும் - அதிற் பொருந்திய மூன்றாம்பிறையும்,—இளமுறுவல் வதனமும் - புன்சிரிப்புப் பொருந்திய திருமுகமும்,—குறியும் திகழ் கண் மூன்றும் - திருக்குறிப்பு விளங்காநின்ற மூன்று திருக்கண்களும்,— நஞ்சு அணி கண்டமும் - ஆலகாலம் பொருந்திய திருக்கண்டமும்,- தோளும் - திருப்புயங்களும்,—மார்பும் - திருமார்பும்,—எரி அகல் துடிக்கை நலனும் - அக்கினியும் உடுக்கையும் பொருந்திய திருக்க ரங்களினழகும், —வீசி அஞ்சல்புரி கரமும் - வீசிய திருக்கரமும் அபயதிருக்கரமும்,—அரையும்- திருவரையும்,—புலியின் அதளும் - அத்திருவரையிற் பொருந்திய புலித் தோலுடையும்,—எடுத்தாண்ட

தாளும்-தூக்கிய திருவடியும்,—குஞ்சிதமும்- அதிற்பொருந்தியமாலை யும்,—மூயலகன் மேல் திருத்தாளும் - முயலகன் மேற்பொருந்தி ஊன்றிய திருவடியும்,-முழு நீறும் - திருமேனி முழுதும் பூசிய திரு வெண்ணீறும்,-குலவி ஓங்க - பொருந்தி விளங்கவும். இது குளகம்.

எப்போதும் யாவர்க்கு மெவ்வரமு மீந்திடுவா னிறைவ னின்ற, வொப்போத வரிதாமத் திருவுருவங் கண்டுளமு முயி ருமூனு, மப்போதே யுருகுபர வசப்பேரா னந்தத்தி லரி தோ முத்தி, கைப்போதுங் கட்போதுந் திகழவிறைஞ் சிக்க ண்டு களிப்பா யன்றே.

(இ-ள்.) எப்போதும் யாவர்க்கும் எவ்வரமும் ஈந்திடுவான் - சதாகாலமும் சர்வான் மாக்களுக்கும் எல்லாவரங்களையுங்கொடுத்த ருளும்பொருட்டு,—இறைவன் - அச்சிவபெருமான்,—நின்ற - திரு நிருத்தஞ் செய்தற்காக நின்றருளிய,—ஒப்பு ஓத அரிதாம் அத்திரு உருவம் கண்டு - உவமை சொல்லுதற் கரிதாகிய அந்நடேசப் பெருமானது திருவுருவத்தைத் தரிசித்து,—உளமும் உயிரும் ஊனும் அப்போதே உருகு - மனமும் உயிரும் உடலமும் அப் பொழுதே உருகுகின்ற,—பரவசப் பேரானந்தத்தில் - பரவசமாகிய பேரானனந்தத்தை விட,—முத்தி அரிதோ - (சைமினியே) மோக்ஷ மடைதல் அருமையோ (இல்லை) கைப்போதும் கண்போதும் திகழ இறைஞ்சிக் கண்டு களிப்பாய் - (ஆதலினால்) கைகளாகிய தாமரை மலரும் கண்களாகிய தாமரைமலரும் பிரகாசமடையும்படி வணங்கி யும் தரிசித்துஞ் சந்தோஷிக்கக் கடவாய் எ - று. அன்று ஏ அசை.

எந்தயுக மாறுனு மெவ்வினையோ ராறுனும் யாவ ரேனுந், தந்தமதுவினைநீங்கிச் சிதம்பரங்கண் டவர்முத்தித் தலைவ ராவர், வந்தவரு வினைமாற்றி மற்றுள்ள யுகங்களிலெ வ்வழியி னுனு, மந்தமிலா வீடடைதற் கெளிதரிது கலியுகத் தினறிவான் மிக்கோய்.

(இ-ள்) அறிவான் மி கோய் அறிவினால் மேம்பட்டசைமி னியே!—எந்தயுகமாறுனும எவ்வினையோ ராறுனும் யாவரேனும் - எந்தயுகமாயினுனு எவ்வினையரா யிருந்தாலும் வேறியாவராயிருந்தா லும் - தம் தம் வினை நீங்கி - தாங்கள் தாங்கள் செய்தவினைகளினின் றுநீங்கி,—சிதம்பரம் கண்டவர் முத்தித் தலைவர் ஆவர் - சிதம்பரத் தைத்தரிசித்தவர்கள் மோக்ஷமடையத்தக்க சிரேஷ்டமுடையவர்

களாவார்கள்,-மற்றுள்ள யுகங்களில் வந்த அருவினை மாற்றி எவ்வழியினாலும் அந்தம் இலாவீடு அடைதற்கு எளிது (கலியுகமீங்கிய) மற்றையுகங்களில் தம்மைப் பந்தித்த அரியவினைகளை நீக்கி எவ்விதத்தாலும் மோக்ஷமடைதல் எளிதாகும்,—கலியுகத்தின் அரிது - கலியுகத்திலே (அவ்வாறு மோக்ஷமடைதல்) அரிதாகும். எ - று. (எக)

கொடியவினைக் கிருப்பிடமாய் மிக்கபயங் கரமாகிக் கூறற் கொண்ணுக், கடியகலி யுகத்துதிப்போ ருய்யுநெறி வேறுளவோ கணக்கி லாத, நெடிய வினை கடந்திடவு மரிதுசிதம் பரந்தன்னை நீங்கா தாதி, முடிவொருவு பதங்கண்டான் முடியாத வினைமுடித்து முத்தி சேர்வார்,

(இ-ள்.) கொடிய வினைக்கு இருப்பு இடமாய் - பாவங்களுக்கு இருப்பிடமாயும்,— மிக்க பயங்கரமாகி - மிகுந்த அச்சத்தைத் தரதக்கதாயும்,—கூறற்கு ஒண்ணு - சொல்லமுடியாத,—கடிய கலியுகத்து உதிப்போர் - கொடிய கலியுகத்திற் பிறப்பவர்கள்,—உய்யும் நெறி வேறு உளவோ - பிழைக்கும் மார்க்கம் வேறுண்டோ? (இல்லை),- கணக்கு இலாத நெடிய வினை கடந்திடவும் அரிது - அவர்கள் அளவிடப்படாத பெரிய வினைகளினின்று நீங்குதலுமருமை. (அதலின்),—சிதம்பரம் தன்னை நீங்காது - அவர்கள் சிதம்பரத்தைவிட்டு நீங்காமல்,—ஆதி முடிவு ஒரு பதம் கண்டால் - முதலுமுடிவுமில்லாத (நடேசப்பெருமானது) திருவடிகளைச் தரிசித்தால்,—முடியாத வினை முடித்து முத்திசேர்வர் - நீக்கமுடியாத பாவங்களை நீக்கி மோக்ஷமடைவார்கள். எ - று. (எஉ)

சதுமறைக ளகிலகலை தெரிந்தமறை யவன்மற்றைத்தலங்க டன்னிற், புதுமைபெறப் பரிமேதம் புரிபயனும் புண்டரிக புரமென் றோதப், பதியிடத்துப் பிறந்தணிய தொருபாலன் றுயில்பயனும் பார்க்கி லீதி, லதிகமுறு பயன்பாலன் றுயில்பயனே யத்தலமே யடைத னன்றால.

(இ-ள்) சது மறைகள் அகில கலை தெரிந்த மறையவன் - நான்கு வேதங்களையும் எல்லா சாஸ்திரங்களையுமறிந்த பிராமணன்,—மற்றைத் தலங்கள் தன்னில் புதுமை பெறப் பரிமேதம் புரிபயனும் - வேறு ஸ்தலங்களில் மிகுதியாக அஸ்வமேதஞ் செய்தலாலுண்டாகும் பலனையும்,—புண்டரிகபுரம் என்று ஓது அப்பதியிடத்து பிறந்து அணியது ஒரு பாலன் துயில் பயனும் பார்க்கில் - புண்டரீகபுரமென்று சொல்லப்பட்ட அச்சிதம்பரஸ்தலத்தில் அப்

பொழுது பிறந்த ஒருகுழந்தை நித்திரைசெய் பலனைப்புஞ்சீர்தூக்கிப் பார்க்குமிடத்து,—ஈதில் உறு பயன் பாலன் துயில் பயனே அதிகம் - இவைகளில் மிகுந்த பயன் யாதெனில் அக்குழந்தை நித்திரைசெய் பலனே அதிகமாகும்;—அந்தலமே யடைதல் நன்று - ஆதலின் அச்சிதம்பர ஸ்தலத்தையடைதலே நன்று. எ - று. ஆல் அசை. (எக)

புளகமுலை யொருபாகன் றிருவுருவாம் புண்டரிக புரத்துள் வைகி, யளவிறந்த தீவினைக ளறியாது புரிந்தாலு மன்றித் தங்க, ளுளமறியப் புரிந்தாலு மப்பதிநீங் காதென்றுமுறைவோ ராகில், வளர்கொடிய வினைப்பயனை யடையார்கள் சிவத்தடைவர் மதியான் மிக்கோய்,

(இ-ள்.) மதியான் மிக்கோய் - அறிவினால் மேம்பட்ட சைமினி முனியே! புளக முலை ஒருபாகன் திருவுருவு ஆம் புண்டரிக புரத்துள் வைகி - புளகம்பொருந்திய ஸ்தனங்களையுடைய சிவகாமியம்மையாரை யொருபாகத்திலுடைய நடேசப்பெருமானது திருவுருவமாகிய சிதம்பர ஸ்தலத்திலிருந்து,—அளவு இறந்த தீவினைகள் அறியாது புரிந்தாலும் - அளவில்லாப் பாவங்களை அறியாமற் செய்தாலும்,—அன்றி - அதுவல்லாமல்,—உளம் அறியப் புரிந்தாலும் -(அப்பாவங்களை) மனமறியச் செய்தாலும்,—அப்பதி நீங்காது என்றும் உறைவோர் ஆகில் - அச்சிதம்பர ஸ்தலத்தைவிட்டு நீங்காமல் எப்போதும் வசிப்பாராயின்,—வளர் கொடிய வினைப்பயனை அடையார்கள் - விர்த்தியாகின்ற கொடிய பாவபலனையடையமாட்டார்கள்;—சிவத்து அடைவர் - மோக்ஷத்தையடைவார்கள், எ-று.

ஆனந்தத் திருவுருவா மக்கங்கை தனைப்பார்த்தங் கமர்ந்து மிக்க, ஞானங்கொள் பதஞ்சலிமுன் வியாகரணம் புகலவருணல்கிக் கொன்றைத், தேனிந்து சடையண்ண லானந்த நடங்கண்டு சிவத்திற் பேதந், தானன்றி விளங்குபரை யுறைதில்லை யெனம்பிரியார் தகுதி மேலோர்.

(இ-ள்.) ஆனந்தத் திருவுருவு ஆம் அக் கங்கை தனைப் பார்த்து அங்கு அமர்ந்து - சிவானந்த வடிவாக விளங்குகின்ற அச்சிவகங்கையைப் பார்த்துக்கொண்டு அவ்விடத்திலெழுந்தருளியிருந்து,—மிக்க ஞானம் கொள் பதஞ்சலி முன் வியாகரணம் புகல அருள் நல்கி - மிகுந்த ஞானத்தையுடைய பதஞ்சலிமுனிவர் முதன்மை பொருந்திய பாணினீயமென்னும் வியாகரணத்தைச் சொல்லு

ம்படி திருவருள்செய்து,—தேன் உந்து கொன்றைச் சடை அண்ணல் ஆனந்த நடம் கண்டு - தேனொழுகுகின்ற கொன்றைப்பூ மாலையைத்தரித்த சடையையுடைய நடேசப்பெருமானுடைய ஆனந்த தாண்டவத்தைத் தரிசித்து,—தான் சிவத்திற் பேதம் அன்றி விளங்கு பரை உறை தில்லைவனம் பிரியார் - தான் சிவத்தோடு பேதமில்லாமல் விளங்குகின்ற சிவகாமி அம்மையார் எழுந்தருளியிருக்கின்ற தில்லைவனமாகிய சிதம்பரத்தைவிட்டு நீங்காதவர்கள். தகுதிமேலோர்- தகுதிபொருந்திய பெரியோர்களாவார்கள்.

இச்செய்யுளை தகுதிபொருந்திய பெரியோர்கள் சிதம்பரத்தை விட்டு நீங்கார்கள் என முன்பின்னுகமாற்றிப் பொருள் கூறினுமமையும்.

மந்திரமும் புகல்சகல வித்தைகளுந் தனதுதிரு வடிவ மான, வந்தமிலா வங்கவடா னிறைவுபெற விடைவிடா தமர்ந்துஞானந், தந்தருளி யுறைகின்ற வப்பதியிலப்பதிசூழ் தக்க தேயத்,தெந்தவழி யாலும் வருந் தியுமடைந்தோர் முத்திதனக் கிறைவராவார்.

(இ-ள்.) மந்திரமும் - மந்திரங்களும்,—புகல் சகல வித்தைகளும் - குறிக்கப்படுகின்ற சகல சாஸ்திரங்களும்,—தனது திருவடிவம் ஆன அந்தம் இலா அங்கவள் தான் - தனது திருவுருவாகக் கொண்டமுடிவில்லாத அச்சிவகாமி அம்மையார்,—நிறைவு பெற இடைவிடாது அமர்ந்து - பூரணமாக இடைவிடாமல் எழுந்தருளியிருந்து,—ஞானந் தந்தருளி உறைகின்ற அப்பதியில்- (சர்வான்மாக்களுக்கும்)ஞானோபதேசஞ் செய்துகொண்டு எழுந்தருளியிருக்கின்ற அச்சிதம்பரத்திலும்,—அப்பதிசூழ் தக்க தேயத்து - அச்சிதம்பரத்தைச் சூழ்ந்திருக்கின்ற ஸ்தலத்திலும்,—எந்த வழியாலும் வருந்தியும் அடைந்தோர் - எவ்விதத்தாலும் வருத்தமுற்று வந்துசேர்ந்தவர்கள்,—முத்தி தனக்கு இறைவர் ஆவார் - மோக்ஷத்தை அடைதற்கு அதிகாரிகளாவார்கள். எ - று. (எசு)

ஆதிநெறி மந்திரமே தனதுவடி வாய்மன்றத் தமர்ந்து ஞானச், சோதிதிக ழிறைவையோ டனவரத தாண்டவஞ்செய் துணைத்தா டன்னை, யோதுறுமெவ் வுயிரேனுங் கண்டபொழு தேமுத்தி யுறுவ தென்று, வீதிமறைத் திருமுனிவ ரேத்தவம் புரிவதற்கு நினைவ தென்னே.

(இ-ள்.) நீதி மறைத் திருமுனிவ - நீதியைச்சொல்லுகின்ற வேதங்களையறிந்த அழகிய சைமினிமுனியே! ஞானச் சோதி - ஞானச்சோதியாய் விளங்காநின்ற சிவம்,—ஆதி நெறி மந்திரமே தனது வடிவாய் - முதன்மையாகிய சன்மார்க்கத்தைத் தரத்தக்கதாகிய மந்திரங்களே தனது வடிவமாய்,—மன்றத்து அமர்ந்து - கனகசபையினிடத்தே யெழுந்தருளியிருந்து,—திகழ் அரிவை யோடு அனவரத தாண்டவஞ்செய் துணைத் தாள் தன்னை - விளங்காநின்ற சிவகாமியம்மையாரோடு நாடோறு மாநந்த தாண்டவம் செய்தருளாநின்ற இரண்டு திருவடிகளையும்,—ஓதுறும் எவ்வுயிரேனும் கண்ட பொழுதே முத்தி உறுவது என்றால் - சொல்லுகின்ற எவ்வகை ஆன்மாக்களாயிருந்தாலும் தரிசித்த உடனே மோக்ஷத்தை யடையும் என்று சொன்னால்,—வேறு தவம் புரிவதற்கு நினைவது என் - வேறே தவம் செய்ய எண்ணுவது என்ன காரணம்? எ - று ஓ அசை. (எஎ)

வேறு.

மிக்க நற்பய னின்ன விளம்பலு
மக்க ணத்தி லடிதொழு தன்பினாற்
செக்க ரஞ்சடைத் தேசிகன் றன்னெதிர்
தக்கஞானச் சைமினி கூறுவான்.

(இ-ள்) இன்ன மிக்க நல் பயன் விளம்பலும் - இத்தன்மையாகிய மேம்பட்ட நல்ல பலனை எடுத்து (வியாசமுனிவர்) சொல்லவும் - தக்க ஞானச் சைமினி - தகுதிபொருந்திய ஞானத்தையுடைய சைமினிமுனிவர்,—செக்கர் அம் சடைத் தேசிகன் தன் எதிர் - சிவந்த அழகிய ஜடையையுடைய தனதாசிரியராகிய வியாசமுனிவர் சந்நிதியில்,—அக்கணத்தில் அன்பினால் அடி தொழுது கூறுவான் - அப்பொழுதே அன்போடு அவர் திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்துச் சொல்லுவார். (எ - று.) (எஅ)

அடிக ளேமுடி வாதி யறிவரும்
படியி லாதப ராபர மானவெண்
பொடிநி லாவிய புண்ணிய மூர்த்திதன்
வடிவ மந்திர மென்றனை வாக்கினால்.

(இ-ள்.) அடிகளே - எனது பரமாசாரிய சுவாமிகாள்,—முடிவு ஆதி அறி வரும் - முடிவு முதலுமறிதற்கரிய,—படியிலா பராபரம் ஆன - ஒப்பில்லாத பராபரவஸ்துவாகிய,—வெள் பொடி நிலாவிய -

வெள்ளிய திருநீறுவிளங்குகின்ற,—புண்ணிய மூர்த்திதன் வடிவம் மந்திரம் என்றனை - புண்ணிய சொரூபியாகிய சிவபெருமானது திருவுருவமே மந்திரரூபமென்று திருவாய்மலர்ந்தருளினீர்,—வாக்கினால் - தேவரீரது திருவாக்கால். எ - று. (எகூ)

மந்தி ரந்தனு வான வழிகளு
மந்த மந்திர முமந்த மந்திர
பந்த மெய்திப் பரன்பொலி கின்றது
மெந்தை யேயருளாலின் றியம்புவாய்.

(இ-ள்.) எந்தையே - எமது பரமபிதாவே,—மந்திரம் தனு வான வழிகளும் - அச்சிவபெருமானுக்கு மந்திரமே திருமேனியான காரணங்களும்,—அந்த மந்திரமும் - அந்த மந்திரம் இன்னதென்பதும்,-பரன் அந்த மந்திர பந்தம் எய்திப் பொலிகின்றதும்,—அச்சிவபெருமான் அந்த மந்திரத்தினால் கட்டுப்பட்டு விளங்குகின்றதும்,—இன்று அருளால் இயம்புவாய் - இப்போழுது அடியேனுக்குக் கிருபையோடு திருவாய் மலர்ந்தருளுக. எ - று. (அ0)

ஏற்ற பக்குவ மெய்தின னாகினீ
சாற்று வாயெனத் தாழ்ந்தவன் சாற்றிய
கூற்றை நோக்கிக் குறிக்கரு மாதவத்
தாற்றல் சான்முனி யங்ங னறைகுவான்.

(இ-ள்.) ஏற்ற பக்குவம் எய்தினன் ஆகில் - (அடியேன் தேவரீருக்கு) மாணாக்கனாகப் பொருந்தும்பக்குவத்தை யடைந்தவனாகில்,—நீ சாற்றுவாய் எனத் தாழ்ந்து அவன்சாற்றிய கூற்றை நோக்கி - தேவரீர் அடியேனுக்கு உபதேசித்தருளுவீராக என்று வணங்கிய சைமினிமுனிவருடையவார்த்தையைஆலோசித்துப்பார்த்து,—குறிக்கும் ஆற்றல் சால் முனி - நினைத்தற்கரிய பெரிய தவவலிமை நிறைந்த வியாசமுனிவர்,—அங்ஙன் அறைகுவான் - அப்பொழுது திருவாய் மலர்ந்தருளுவார். எ - று. (அக)

எந்தை பாற்பெற் றிறைவிமுன் னீந்தனள்
கந்த னுக்கவன் கட்டுரைத் தானெறி
தந்த வாய்மைச் சன்றகும ரற்கெனக்
கந்த மில்லவ னன்பா லருளினன்.

(இ-ள்) இறைவி எந்தைபால் பெற்று - எப்பொருட்குந்தலைவியாகிய உமாதேவியார் எமது பரமபிதாவாகிய சிவபெருமானால் உப

தேசிக்கப்பெற்று,—கந்தனுக்கு ஈந்தனள் - (அவ்வுமாதேவியார்) சுப்பிரமணியக்கடவுளுக்கு உபதேசித்தருளினார்,—நெறிதந்த வாய்மைச் சனற்குமரற்கு அவன் கட்டுரைத்தான் - நல்மார்க்கத்தைப்போதிக்கின்ற உண்மையையுடைய சனற்குமாரமுனிவருக்கு அச்சுப்பிரமணியக்கடவுள் உபதேசித்தருளினார்,—அந்தம் இல்லவன் எனக்கு அன்பால் அருளினன் - முடிவில்லாதவராகிய அச்சனற்குமாரமுனிவர் அடியேனுக்கு அன்போடுபதேசித்தருளினார். எ - று. (அஉ)

நாட்டு மந்திர மேனியு நன்குறக்
கோட்டி யந்திரக் கொள்கையுங் கொள்கையைக்
காட்டு மங்கதின் காட்சியு மாட்சியால்
வாட்ட மொன்றிலா மந்தண மாகுமால்.

(இ-ள்.) நாட்டும் மந்திர மேனியும் - ஆராயத்தக்க மந்திர சொரூபமும்,—நன்குறக் கோட்டு இயந்திரக் கொள்கையும் - நன்மைபொருந்தும்படி எழுதப்படுகின்ற யந்திரத்தின்மகிமையும்,—கொள்கையைக்காட்டும் அதின் காட்சியும் - அம்மகிமையைக் காண்பிக்கின்ற அம்மந்திரத்தின் தோற்றமும்,—மாட்சியால் வாட்டம் ஒன்று இலா மந்தணம் ஆகும் - அம்மந்திரத்தின் பெருமையினால் குறைவொன்றுமில்லாமல் அது இரகசியமாக ஆலோசிக்கத்தக்கதாகும். எ - று. ஆல் அசை. (அங)

ஈந்த தேசிக னீங்கிது சேவைசெய்
தாய்ந்த நூல்க ளறைந்த குணத்தராய்
வாய்ந்த மாண வகற்கன்றி மாசிடைத்
தோய்ந்த பேர்க்சென் றுஞ் சொல்லலை யன்றியும்.

(இ-ள்.) ஈந்த தேசிகன் - இவ்வாறு சொல்லிய ஆசாரியராகிய வியாசமுனிவர் சைமினிமுனிவரைப் பார்த்து,—ஈங்கு இது - இப்பொழுது எம்மாற்சொல்லப்பட்ட இந்த இரகசியத்தை,—சேவை செய்து - வழிபாடுசெய்து,—ஆய்ந்த நூல்கள் அறைந்த குணத்தராய் - ஆராயப்பட்ட சாஸ்திரங்களிற் சொல்லிய சற்குணங்களையுடையவராய்,—ஆய்ந்த மாணவகற்கு அன்றி - ஆராய்ந்தெடுக்கப்பட்ட மாணுக்கனுக்கல்லாமல்,—மாசு இடைத் தோய்ந்த பேர்க்கு என்றும் சொல்லலை - குற்றங்களிற்பொருந்தியவர்களுக்கு எப்பொழுதுஞ் சொல்லாதிருக்கக்கடவாய்,—அன்றியும் - இதுவல்லாமலும்.

அறைந்த திப்பொருண் மாசற வாசய
மறைந்த விசார தாரணை யாமிது

சிறந்த தூயர் கடவார் திகழ்வுறப்
பிறந்த நற்பயன் பெற்றுடை யோர்கடாம்.

(இ-ள்.) அறைந்தது இப்பொருள் - சொல்லப்பட்டதாகிய இந்தப்பொருள்,—மாசற ஆகமம் அறைந்த ஈசனது ஆணையது ஆம் - குற்ற நீங்கும்படி ஆகமங்களைத் திருவாய் மலர்ந்தருளிய சிவ பெருமானது ஆஞ்ஞையாதாகும்,—சிறந்த தூயவர் இது கடவார் - சிறப்புப்பொருந்திய பரிசுத்தர்களாகிய பெரியோர்கள் இவ்வாஞ்ஞை யைக் கடந்து நடக்கமாட்டார்கள்.—திகழ் உறப் பிறந்த நல் பயன் பெற்று உடையோர்கள் - விளங்கும்படி பிறந்த இப்பிறப்பினாலா கிய நல்ல பலனையடைவார்கள். எ - று. தாம் அசை. (அ௬)

உற்ற பக்குவற் கோதாது பக்குவ
மற்ற வற்கரு ளன்பா லுணர்ச்சியைச்
சொற்ற தேசிகர் தேயுங் கலைமதி
முற்றுமாய முடிவது திண்ணமால்.

இ ள்.) அன்பால் உணர்ச்சியைச் சொற்ற தேசிகர் - அன் போடு ஞானத்தை உபதேசித்த ஆசாரியர்கள்,—உற்ற பக்குவர்க்கு - தன்னிடத்துவந்த பக்குவத்தையுடைய மாணாக்கர்களுக்கு உபதேசி யாமல்,—பக்குவம் அற்றவர்க்கு அருள் - பக்குவம் இல்லாத மாணாக் கர்களுக்கு உபதேசித்தால்,—தேயும் கலை மதி முற்றும் மாய முடி வது திண்ணம் - தேயும்படியான கலைகளையுடைய அபரபக்ஷத்துச் சந்திரன் நாளுக்குநாள் கலைகள்முழுதும் அழிவது நிச்சயம். (அது போல்) அபக்குவர்களுக்குபதேசித்த ஆசாரியருமழிவது நிச்சயம்.()

என்ன நன்னலத் தென்றன் குரவனுந்
தன்னி கர்க்குஞ்ச னற்கும ரன்பரிந்
துன்னை வேண்டி யுரைத்த திதுவென
முன்ன ரன்பின் மொழிந்த மொழியினால்.

(இ-ள்.) என்ன நல் நலத்து - என்னிடத்துள்ள என்ன நன்மை யினாலேயோ,— என் தன் குரவனும் தன் நிகர்க்கும் சனற்குமரன் - எனது ஆசாரியராகிய தனக்குத்தானே ஒப்பாகிய சனற்குமாரமுனி வர்,—இது என் முன்னம் அன்பின் மொழிந்த மொழியினால் - இச்சிதம்பரத்தின் மகிமை இதுவென்று முன்னமே அன்போடு எனக்குபதேசித்த உபதேசத்தால்,—பரிந்து உன்னை வேண்டி உரை த்தது - சைமினியே அன்புற்று உன்னை வேண்டியே இதனையான் உபதேசித்தேன். எ - று. (அஎ)

உன்கருத்னை யளவிட் டுணர்ந்திடா
தென்கருத் தைய மெய்திய தென்றுடன்
வன்க ருத்துரு மங்கையோர் பங்கனைத்
தன்க ருத்திற் றழுவி யிருந்தனன்.

(இ-ள்.) உன் கருத்தை அளவிட்டு உணர்ந்திடாது - உனது கருத்தை அளவிட்டறியாமல்,—என் கருத்து ஐயம் எய்தியது என்று - எனது மனம் சந்தேகம் அடைந்தது என்று,—உடன் - உடனே,—வன் கருத்து உரு மங்கையோர் பங்கனை தன் கருத்தில் தழுவி இருந்தனன் - கடினசித்தமில்லாத உமாதேவியாரை ஓர் பாகத்தில் வைத்திருக்கின்ற சிவபெருமானைத் தனது மனதில் தியானித்துக்கொண்டிருந்தார் வியாசமுனிவர். எ - று. (அஅ)

இன்ன வேலையின் வானிடத் தின்பமே
துன்னு சூதன் சைமினி தூயவர்
நின்னை யொப்பர் நிமலன் சிதம்பரந்
தன்னி லுண்மை தரிக்கவுங் கேட்கவும்.

(இ-ள்) இன்ன வேலையில் - இந்தப்பிரகாரம் வியாசமுனிவர் தியானத்திலிருக்கின்ற காலத்தில்,—வானிடத்தி - ஆகாயத்தில்,—நிமலன் சிதம்பரம் தன்னில் உண்மை தரிக்கவும் கேட்கவும் - மலமுத்தராகிய சிதம்பரத்தின் உண்மையான மகிமைகளைச் சிந்திப்பதற்கும் கேட்பதற்கும்,—இன்பமே துன்னு சூதன் - சிவானந்தத்தையே யநுபவித்துக் கொண்டிருக்கின்றசூதமுனிவரும்,-சைமினி--சைமினி முனிவரும்,—தூயவர் - பரிசுத்தமுடையவர்களாவார்கள்,— நின்னை ஒப்பர் - அவர்கள் உன்னை ஒப்பாவார்கள். எ - று. (அக)

நிலைகொண் ஞான நெறிபுனை மாதவ
வலைவி லிங்கிவர்க் கன்பா லறைதியென்
றலைவு நீங்கி யுவப்ப வெழுந்ததாற்
றலைமை மிக்கொள் சரீரமில் வாசகம்.

(இ-ள்.) நிலைகொள் ஞான நெறி புனை மாதவ - நிலைமைபொருந்திய ஞானமார்க்கத்தையுடைய பெரியதவத்தைச் செய்கின்ற வியாசமுனியே!- அலைவு இல் இவர்க்கு இங்கு அன்பால் அறைதி என்று - மனச்சஞ்சலமில்லாத இவ்விருவர்களுக்கு இவ்விடத்தில் அன்போடு

உபதேசிக்கக்கடவாயென்று,—தலைமை மிக் கொள் சரீரம் இல் வாசகம் - முதன்மையாகிய மேம்பாடுபொருந்திய அசரீரிவாக்கானது,—உலைவு நீங்கி உவப்ப எழுந்தது. - மனச்சஞ்சலநீங்கிச் சந்தோஷமுண்டாகும்படி எழுந்தது. எ - று. (கூ0)

அங்கண் வானத் தருண்மொழி கேட்டுட
னெங்க டேசிக னெங்களை நோக்கிமெய்ப்
பொங்கு நற்புள கம்பொலி வெய்திடத்
தங்கு மாதர மேற்கொளச் சாற்றுமால்.

(இ-ள்.) அம் கண் வானத்து அருண் மொழிகேட்டு - அழகிய இடத்தை யுடைய ஆகாயத்திற் றோன்றிய திருவருள் வாக்காகிய அசரீரியைக் கேட்டு,—உடன் - உடனே,—எங்கள் தேசிகன் எங்களை நோக்கி - எங்கள் ஆசாரியராகிய வியாசமுனிவர் எங்களைப் பார்த்து,—மெய்ப் பொங்கும் நல் புளகம் பொலிவு எய்திட - சரீரத்தில் விளங்குகின்ற நல்ல புளகங்கள் பிரகாசிக்கவும்,—தங்கும் ஆதரவு மேற்கொள - மனதிற்றங்கிய ஆசையானது அதிகரிக்கவும்,—சாற்றும் - சொல்லியருளுவார். எ - று. ஆல் அசை. (கூக)

சத்தி யங்கொள் சரீரமில் வாசக
நித்த நீணெறி நீங்கள் பெறவருள்
வைத்தெ ழுந்திட நீர்புரி மாதவ
மெத்து ணைத்தென யாவ ரியம்புவார்.

(இ-ள்.) சத்தியம் கொள் சரீரம் இல் வாசகம் - உண்மைபொருந்திய அசரீரிவாக்கானது,—நித்தன் நீள் நெறி நீங்கள் பெற - அழிவில்லாதவராகிய சிவபெருமானுடைய (கிருபையைப் பெறத்தக்க) நீண்ட சன்மார்க்கத்தை நீங்களடையும்படி,—அருள் வைத்து எழுந்திட - (அச்சிவபெருமான் உங்களிடத்திற்) கிருபைவைத்து (அவ்வசரீரி) வாக்குண்டாகும்படி,—நீர் புரி மாதவம் எத்துணைத்து என யாவர் இயம்புவார் - நீங்கள் செய்த பெரியதவம் எவ்வளவுடையதென்று யாவர் சொல்லுவார்கள். எ - று. (கூஉ)

பொன்பொ திந்த புனித னடந்தொழற்
கன்பு செய்தற் கருமையுண் டாகுமா
லின்ப மென்று மிசைந்திட வெண்ணினீர்
முன்பு மாதவ மென்ன முயுன்றனிர்

(இ-ள்.) பொன் பொதிந்த புனிதன் நடம் தொழற்கு - பொன் போல் பொதியத்தக்க பரிசுத்தராகிய நடேசப்பெருமானது திருநிருத்தத்தை வணங்குதற்கும்,—அன்பு செய்தற்கு - பத்தி பண்ணுதற்கும்,—அருமை உண்டாகும் மால் இன்பம் - அருமையாக உண்டாகத்தக்க பெரிய இன்பத்தை,—என்றும் மிசைந்திட எண்ணினீர் - எப்பொழுதும் அனுபவிக்கும்படி நினைத்தீர்கள்;—முன்பு என்ன மாதவம் முயன்றனிர்-(அவ்வாறுண்டாகுதற்கு) முற்பிறப்பில் என்ன பெரிய தவத்தைச் செய்தீர். எ - று. (கூகூ)

மற்றென் வாசக மாணுக்க ராயுமைப்
பெற்ற வென்னிற் பெரியவர் யார்வினை
செற்ற மாண வகர்ப்பெறத் தேசிக
ருற்ற மாதவஞ் செய்தா லுளதரோ.

(இ-ள்.) மற்று என் வாசகம் - (யான்) வேறு என்ன சொல்லப்போகின்றேன்,—மாணுக்கராய் பெற்ற என்னில் - உங்களை நான் சீடர்களாகப் பெற்றவென்னைப் பார்க்கினும்,—பெரியவர் யார் - பெரியவர் யாவர்,—வினை செற்ற மாணவகர்ப் பெற - தீவினைகளினின்று நீங்கிய மாணுக்கர்களைப் பெறுதற்கு,—தேசிகர் உற்ற மாதவம் செய்தால் உளது - ஆசாரியர்கள் பொருந்திய பெரிய தவத்தைச் செய்தால் கிடைக்கும். எ - று. அரோ அசை. (கூஎ)

அத்த னின்றினி தாடுஞ் சிதம்பர
வித்தை யாய்ந்து விளங்கினர் யாவரு
முத்தி யெய்துவ மூவுல கத்துள்ளு
மித்த கைப்பொரு டன்னை யிசைத்திலம்.

(இ-ள்.) அத்தன் நின்று இனிது ஆடும் சிதம்பர வித்தை ஆய்ந்து விளங்கினர் யாவரும் முத்தி எய்துவர் - பிதாவாகிய சிவபெருமான் நிலைபெற்றெழுந்தருளியிருந்து இனிதாகத் திருநிருத்தஞ் செய்தருளாநின்ற சிதம்பரத்தினது புராணத்தை ஆராய்ந் தறிந்து அதனால் மேன்மையடைந்தவர்கள் யாவரும் மோக்ஷத்தை அடைவீர்கள்,—மூவுலகத்துள்ளும் இத் தகைப் பொருள் தன்னை இசைத்திலம் - சுவர்க்க மத்திய பாதள மென்னு மூன்றுலகத்திலும் இத்தகு இபொருந்திய இரகசியப் பொருளை (ஒருவருக்கும்) உபதேசித்தோம் இல்லை. எ - று. (கூஅ)

மாறு நீக்கிய மாணுக்க ரின்மையிற்
கூறி னேமிலை கோதையோர் பாகனுக்
கேறு மன்பினிர் நீவி ரிதுதனைத்
தேறு மின்னெனச் செப்புதன் மேயினுன்.

(இ-ள்.) மாறு நீக்கிய மாணுக்கர் இன்மையில் கூறினேம் இல்லை - மாணுக்கரிலக்கணங்களுக்குப் பகைமையாகிய குற்றங்களை நீக்கிய மாணுக்கர்கள் வாய்க்காமையால் நாம் (இச்சிதம்பரத்தினது இரகசியப் பொருளை யுபதேசித்தோமில்லை,—நீவிர் - நீங்களிருவரும்,—கோதை ஓர்பாகனுக்கு ஏறும் அன்பினிர் - உமாதேவியாரை யோர்பாகத்திலுடைய சிவபெருமானிடத்தே பொருந்திய பக்தியுடையவர்கள்(ஆதலால்),- இது தனைத்தேறுமின் எனச் செப்புதல் மேயினுன் - இச்சிதம்பர இரகசியப்பொருளைக்கேட்டுத் தேர்ச்சியை யடையுங்களென்று (வியாச முனிவர்) சொல்லியருளினுர்.

இந்த வெல்லை மலைநாட் டிடத்தினும்
வந்த தெய்வ வடமொழி யின்படிச்
செந்த மிழ்த்தொடை நூற்பாற் றெரித்தன
முந்து மற்றதும் வந்தான் மொழிதுமால்.

(இ-ள்.) இந்த எல்லை - இச்சிதம்பர புராணத்தினது ஒன்பது சருக்கம் வரையில்,—மலைநாட்டு இடத்திலும் வந்ததெய்வ வடமொழியின் படி - மலையாள தேசத்திலிருந்து கிடைத்த தெய்வத்தன்மை பொருந்திய ஸம்ஸ்கிருதபாஷையிற் சொல்லிய பிரகாரம்,—செந்தமிழ் - செவ்விய தமிழ்ப் பாஷையினுல்,— தொடைநூல் பால் தெரித்தனம் - கொடுக்கப்பட்ட செய்யுள் வகையாற் சொல்லினேம்,—முந்தும் மற்றதும் வந்தால் மொழிதும் - இதற்கு முன்னுள்ள சரித்திரங்களும் பின்னுள்ள சரித்திரங்களும் கிடைக்குமாயின் மேலுஞ் சொல்லுவோம், எ - று. (௧௭)

தாவி லாமறைச் சைவந் தழைத்திடக்
காவல் வேந்துடன் காசினி வாழ்ந்திடத்
தேவர் தேவன் றிருவுரு வாகிய
மூவர் பாடலிம் மூவுல கோங்கவே.

(இ-ள்.) தாவு இலா மறைச் சைவந் தழைத்திட - கெடுதலில்லாத வேதங்களிற் சொல்லிய சைவ சமயமானது செழித் தோங்

வும், - காவல் வேந்து உடன் காசினி வாழ்ந்திட - உலகத்தைக்காக்கின்ற அரசனும் அவனாலாளப்பட்ட உலகங்களும் வாழவும், — தேவர் தேவன் திருஉருவு ஆகிய மூவர்பாடல் இம்மூவுலகு ஓங்ுக - தேவர்களுக்குத் தேவனாகிய சிவபெருமானுடைய திருமேனியாக விளங்குகின்ற (திருஞான சம்பந்த மூர்த்தி முதலிய சைவசமயாசாரியார்களாகிய) மூவர்களது திருவாக்காகிய தேவாரப் பதிகங்கள் இந்த சுவர்க்க மத்திய பாதளங்கள் என்னு மூன்றுலங்களினும் உயர்ந்து விளங்கக்கடவன. எ - று. (௯அ)

துற்றெரிசனச்சருக்கமுற்றிற்று.

பாயிரம் உள்பட சருக்கம் - ௧0 - க்குத் திருவிருத்தம் அ௯௩.

---

சிதம்பரபுராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

